மக்கள் இந்தப் பஞ்சங்களைத்தானா பரமனிடமிருந்து பரிசுகளாகப் பெற வேண்டும்! பக்திப் பிரபாவத்தின் விளைவு இதுவாகவா இருக்க வேண்டும்! சைவம் தழைத்தது. தொண்டர் பெருமையைச் சேக்கிழார் செந்தமிழில் எடுத்துக்கூறியதால் என்று பூரிப்படையும் அன்பர்கள், இத்தனை பஞ்சங்களும், 11-வது நூற்றாண்டிலே பக்திப்பரவசத்திலே பொருளைப் பாழாக்கத் தொடங்கிய தமிழகம் 11-லிருந்து 15-வது நூற்றாண்டு வரையிலே, பஞ்சத்தில் சிக்கித் தவித்ததை, திருஅருளின் மாட்சிமையிலே ஒன்றாகக் கொள்வரோ!

சேக்கிழார் குறிப்பிடும் தலங்களிலே பெரும்பகுதி தஞ்சை மாவட்டமாக இன்றுள்ள சோழவளநாட்டிலே உள்ளன. இவரும் சோழனிடமே மந்திரி. சோழாடு சோறுடைத்து என்பது முதுமொழி. அந்நாடு, பஞ்சத்தால் நலிவதா? பணம் குவியாமலா இருந்தது? பணம் ஏராளம்! அவை கோயில்களிலே குவிந்து கிடந்தன. பார்போசா எனும் வரலாற்று ஏட்டாசிரியர் கூறுகிறார். “மாலிக்காபூர் என்ற ஆஸ்லாமிய வீரன் தென்பகுதியிலே வெற்றிகள் பல பெற்றுத் திரும்பும்போது 1310ல் 96,000 மணங்கு ஏடையுள்ள தங்கத்தைக் கொண்டு போனான்” என்று. 2000 ஒட்டகங்களின்மீது ஏற்றப்பட்டனவாம் அந்தப் பெரும் பொருள்! ஆகப் பொருள் இருந்தது. அதனை அருள்வாங்க அடியார்கள் காதைகளிலே கூறப்பட்ட முறைப்படி செலவிட்டனர். இலாபம், இலட்சக்கணக்கிலே மக்கள் செத்ததுதான். இத்தகைய நிலை ஏற்படக் காரணமாக இருந்தது, பக்திக்காக எதையும் செய்வதே பெருமை தொண்டர் திறம் என்று பெரிய புராணம் புரிந்த போதனைதான் என்று கூறுவது தவறா? பெரியுபராணத்திலே பக்திக்காக எதையும் செய்யும் சித்தம் படைத்தவர்களின் கதைகள்தானே உள்ளன. அந்த ஏட்டைப் புண்ய ஏடு என்றும், ஆண்டவனே அடி எடுத்துக் கொடுக்க, அருமை மந்திரியார் அழகுறப் பாடியது என்றும் கூறிவிடவே, மக்கள் அதிலே கண்ட கருத்துக்களைக் கூடுமானமட்டில், அவரவர் சக்தியானுசாரம் அனுஷ்டிக்க வேண்டும் என்ற உறுதிக்கொண்டனர், அதன் பயனாக,

ஊரிலே நாசமே வந்துற்றபோதிலும், உசன் சேவை செய்தால்போதும், மக்கள் மடிந்தாலும் கவலையில்லை என்று இருந்தனர். பஞ்சம் தன் பசியைத் தீர்த்துக் கொண்டது. ஏற்கனவே தரப்பட்டுள்ள 'போதை' போதாதென்று ஏன் நண்பர் புலர் இராசமாணிக்கனாரும், அந்தத் திருப்பணியிலே உடுபடுகிறாரே! ஆண்டவன் முதலடி எடுத்துத் தந்தார், ஆகவே இது அருள்நூல் என்று நீறுபூசும் நிகண்டு தூக்கி சொன்னார், ஏடுபலபடித்த ஏன் நண்பர் நாடு நலிவதை மறந்து, இந்த ஏட்டிலே, கல்வெட்டும் சரித்திரமும் உண்டு, எனவே, இதனைத் தள்ளலாகாது என்று கூறமுன் வந்துவிட்டார். ஏக்காரணம் கொண்டு கூறியதாகவேனும் இருக்கட்டும், இதுபோல அவர் கூறியதால், பழைமையின் பிடியை, வர்ணாஸ்ரமத்தின் வலையை ஜாதிப்பித்தரின் நிலையை, முறையே பலமாக்குகிறார், வீசுகிறார், உயர்த்துகிறார் என்றுதானே ஏற்படும். இந்தக் காரியம் செய்ய இவ்வளவு பெரிய படிப்பு வேண்டாமே, ஆரஹறரநமப்பார்வதி பதயே என்று கூவுமளவு, கரல் வலிவு கொண்டாலே போதுமே, என்றுதான் நான் கூறுகிறேன். கோபுரமேறி கோழிமேய்பானேன், குப்பை மேட்டிலேயே அந்தக் காரியத்தை எளிதாகச் செய்து விடாலமே என்று கூறுகிறேன்.

(திராவிடநாடு -13.1.46)

அறிவுரைக் கொத்து

பக்தகோடிகளின் கூட்டத்தை பார்! பாண வேடிக்கையைப் பார்! இரவைப் பகலாக்கும் விளக்கு வரிசையைப் பார்! சிங்க வாகனத்தைப் பார்! அது செம்பொன்னால் சமைக்கப்பட்டிருக்கிறது, அதன்மீதுள்ள அழகிய சிங்கநாதருக்குள்ள ஆபரணச் சுமையைப் பார்! - என்று திருவிழாவின் போது, பவனிவரும் காட்சியில் சொக்கியவர்கள் பேசிக்கொள்வர். அவர்களின் கண்ணையும் கருத்தையும் இழுத்த இக்காட்சியிலே, அவர்கள் கண்டும் கருத்திலேகொள்ளாது விடுவது ஒன்று ஒன்று உண்டு! இவ்வளவும் காண்பர், பேசுவர், களிப்பர், கைகூப்பித் தொழுவர், ஈன்னொன்றும் காண்பர். ஆனால் அதனைக் கருத்திலே கொள்ளார், கொண்டிடிலோ கண்கலங்காதிருக்க முடியாது! ஆண்டசராசரங்களை நடத்திச் செல்லும் ஐ யனை. வாகனமீது ஏற்றித தூக்கிச்செல்வர் சிலர், தமது தோள்நோக, மார்பு ஓடிய, கைகால் அலுக்க, வியர்வை பொழிய, பக்தகோடிகளின் கண்களிலே, பட்டுப் பட்டாடை அணிந்துகொண்டு, பதக்கம் கீரிடம் தரித்துக் கொண்டு, தங்கத்தால் செய்த சிங்காதனத்தின் மீது சவாரி செய்யும் சுவாமி தரிசனத்துக்குரியவராகத் தோன்றுமேயன்றித் தம்மையொத்த மினிதர்கள், சோற்றுக்காக, மிகக்குறைந்த பணம் பெறுவதற்கும் சமமதித்து அந்த பெரும்பாரத்தைச் சுமந்து செல்வது தெரிவதில்லை தெரிந்தால், அந்தப்பொழியும் வியர்வை, வலியால் எழும்ஓலி, பெருங்கூச்சல், ஆகியவை கண்டு, கண்ணீர் பெருக்குவர், ஏழையின் தோள்மீது ஏற்றி வைக்கப்படுகிறது பெரியதோர் பாரம், பக்தர்களின் கண்குளிர வேண்டும் என்று போலும்! ஆரவாரத்திலும் பகட்டிலும் மனத்தைப் பறிகொடுத்து விடுவதால், அவர்களின் கண்களிலே, தங்கள் பூஜைக்குரிய ஆண்டவனையே இளமுத்தி அக்கி வைக்கிற கொடுமைபடுவதில்லை. அதுவே, படாததால், அந்தச் சுவாமியைத் தூக்கிச் செல்வதுடன், பூஜாரி ஒருவனையும் சேர்த்துக் தூக்கிச் செல்லும் கொடுமையும் அந்தப் பூஜாரியும், ஆரிய குலத்தவராக இருந்தே தீரும். அக்ரமத்தையும் , அவர்கள் கண்ணால் காண்பதன்றிக்

கருத்திலே கொள்வதில்லை வேறு யாரேனும், விளைவு பற்றிக் கருதாது. "பக்தரே! எதை எதையோ கண்டு பூரிக்கிறீரே, இந்தத் "தூக்கிகளின்" தோள் வீக்கத்தைக் கண்டீரா? ஆண்டவனின் அழகுபற்றிப் பேசுகிறீரே, அவர் அருகே அமர்ந்திருக்கும் அருகதை ஆரியனுக்கே உண்டு என்னும் அக்ரமக் கொள்கையை, இங்கே உறுதிசெய்யும் செயலைக்கண்டீரா? அந்த ஆரியன், மேலே அமர்ந்துகொண்டு, பெரியதோர் வெற்றி வீரன், பெருமைக்குரிய மன்னன், தன்னுடைய படையினரையும் பணியாட்களையும், பார்த்துப் பெருமை கொள்வதுபோல, நம்மை எல்லாம், பார்க்கிற காட்சியின் உட்பொருளை உணர்ந்தீரோ? அவன் பூதேவன் என்று ஏற்றுக்கொண்டீரே. அவன், மனித குணத்திலேயும் எவ்வளவோ மாற்றுக் குறைந்தவன் என்பதை அறிவீரா? வேதம் அறியான், வேள்வி செய்தறியான் ஆச்சாரம் அறியான். அக்ரமம் பல செய்து தேறியுள்ளான். அதனை ஆறீவீரா? என்று யாரேனும் துணிந்து பக்த குழாத்தினரைக் கேட்ட பிறகுதான். அவர்களுக்குத் தாங்கள் காணும் காட்சியிலே, விட்டுப்போன பகுதி, முக்கியமான பகுதி ஒன்று இருப்பதே தெரியவரும். அப்படித் தெரிந்து கொண்டவர்களிலே, நூற்றில் ஐம்பதுபேர், தமது தோள்வலிக்காத காரணத்தால் கேட்டு மறப்பர், மனிதத் தன்மைகது மதிப்பளிக்க வேண்டுமென்ற நோக்கம் கொண்ட மாண்பினர் மட்டுமே, ஆம்! எதைஎதையோ கண்டோம் களித்தோம், ஆனால் சூட்சமத்தைத்தான் இதுகாறும் காணாது இருந்துவிட்டோம், இப்போதுதான் அதனையும் கண்டு, புதுத்தெளிவு பெற்றோம் என்று அறிவுரை புகல்வர்.

பிரிட்டிஷ் பார்லிமெண்டரி தூதகோஷ்டியினர், இந்த இரண்டு வகையினரில், எப்பிரிவினரோ நாமறியோம். அவர்கள், காணாத காட்சியோ, போகாத இடமோ, காணோம். பெரிய மனிதர்களிடம் பேசுகிறார்கள். பெரிய நகரங்கள் மட்டுமல்ல, பட்டிக்காடுகளும் செல்கின்றனர். சர்க்கார் மாளிகை மட்டுமல்ல, ஏழையின் குடிசைக்குள்ளேயும் நுழைந்து பார்க்கின்றனர். அரசியல் கட்சித் தலைவர்களிடம் மட்டுமல்ல, இலமரத்தடியே

நிற்கும் உழவனையும் கண்டு பேசுகின்றனர்! இவ்வளவு காணும் இந்த அன்பர்கள் திருவிழாவிலே, பவானி செய்யும் பரமனையும், அவருக்காக என்று சொல்லிச் செய்யப்பட்டுள்ள படாடோபத்தையும் கண்டு களித்துவிட்டு, அவரைச் சுமக்க "கூலிக்கு ஆள்" இருப்பதையுமே, மேலே அவருடன் சரிசமமாகப் பிறப்புரிமை காரணமாக அமர்ந்திருக்கும் ஆரியனையும் காணாமலிருப்பது போல, "இந்திய உபகண்டத்திலே திருவிழாக் காட்சிகளை மட்டும் கண்டு சூட்சமத்தை மட்டும் காணாத நிலையில், இருப்பவரோ, சூட்சமத்தையும் காண்போரோ நாமறியோம். இதுவரை இங்கு அனுப்பப்பட்ட கோஷ்டிகள் பலவும் திருவிழா காண்கிற திருக்கூட்டமானதேயன்றி, சூட்சமத்தைத் தெரிந்து கொண்டதாக அதாரம் காணோம். இவர்களும் இதுபோன்றேயாகிவிடக் கூடாதென்று லாகூர் தோழர்கள் சிலர், மதத்தின் பாரம் தமிழன் மீது அழுத்துவதும் மதத்தால் மேல்நிலை ஆரியனுக்கே உண்டாவதுமாகிய உண்மையை பக்தனுககு பகுத்தறிவாளன் எடுத்துக்காட்டுவது போல பார்லிமெண்டரி தூது கோஷ்டியினருக்கு அவரே எடுத்துக்கூறியுள்ளனர். அதாவது சூட்சுமத்தைக் காட்டியிருக்கிறார்கள்.

"இந்து சமுதாயத்திலுள்ள ஜாதிமுறைதான். இந்திய அரசியல் அல்லலுக்கு அடிப்படையான காரணம். முஸ்லிம் லீக் பாகிஸ்தான் கேட்பதும், சென்னை பார்ப்பனரல்லாதார் திராவிடஸ்தான் கேட்பதும், தீண்டாதார் தனித்தெகுôகுதி கேட்பதும், உயர்ஜாதி இந்துக்களென்போர், முஸ்லிம்களையும், சூத்திரர்கப்ளுயம், சமுதாயத் துறையிலே (கொடுமை) பகிஷ்கரித்து வந்ததன் விளைவேயாகும். ஜாதி ஒழிக்கப்பட்டாலொழிய இந்தியாவிலே, எந்த ஏற்பாடும் நிலைக்க முடியாது" என்று லாகூர்ஜட் - பட்டோரக் மண்டல், பார்லிமெண்டரி கோஷ்டியி னருக்கு ஒரு மகஜர் மூலம் தெரிவித்தாக, ஜனவரி 12ந் தேதிய லாகூர்ச் செய்தி கூறுகிறது.

ஜட்-பட்-டோரக் மண்டல், என்றால் ஜாதி ஒழிப்புச் சங்கம் என்று பொருள். இந்தச் சங்கம் சுமார் 15 ஆண்டுகளாகவே ஜாதிச் சனியனாலேயே, இந்தியா சீரழிந்தது என்று கருத்தைக்கூறி வருவருடன், நமது சுயமரியாதைச் சங்கம் போலவே, ஜாதியின் பேராலும் இந்துமதத்தின் பேராலும் நடைபெறும் பல கொடுமைகளைப் பாமர மக்களிடம் விளக்கிவரும் பணிபுரிந்து வந்திருக்கிறது. நாலு ஆண்டுகளுக்கு முன்பு கூட ஒருமுறை பெரியார், இந்தக் கழகத்தாரால் அழைக்கப்பட்டு லாகூர், கல்கத்தா, முதலிய பல இடங்களுக்குச் சென்று, சுயமரியாதைப் பிரச்சாரம் புரிந்துவந்தார். ஆகவே, ஜட்-பட்-டோரக் மண்டலத்தார், இந்திய நிலைமையின் சூட்சமத்தை நன்கு அறிந்தவர்கள், அறிந்தவர்கள் மட்டுமல்ல, ஆர்ப்பாட்டக்காரர்கள் இந்த முக்கியமான விஷயத்தை மற்றவர்கள் செய்கிறார்கள் என்பதையும், வெறிநாட்டவர் இங்கு வந்தால், மிக எளிதாக ஆர்ப்பாட்டக்காரரின் விழாவிலே, மனத்தைப் பறிகொடுத்துவிட்டுச் சூட்சமத்தைக் கவனிக்காமலேயே போய் விடுகிறார்கள் என்பதையும் நன்கு உணர்ந்தவர்கள், ஆகவேதான், மேற்படி கழகத்தார், சூட்சமத்தை, எடுத்துக் காட்டினார்கள். அவர்கள் கூறிய இந்த அறிவுரை அங்கிலத் தோழர்களின் மனத்திலே பதியுமா? அதற்கு இவன் செய்ய வேண்டும் என்ற நேர்மையும் நெஞ்சு உரமும் ஏற்படுமா? நாம் நம்ப முடியவில்லை! அவர்களின் பேச்சும் போக்கும் நமக்கு அந்த நம்பிக்கையைத் தரவில்லை. அவர்கள், திருவிழா பார்க்கவரும் கூட்டம் போன்று இருக்கின்றனரேயொழிய, உண்மையைத் தெரிந்துகொள்ள உள்ளத்திலே ஆவல் கொண்டவர்களாகத் தெரியக் காணோம் அவர்களின் போக்கு எப்படியோ போகட்டும், நமது லாகூர்த் தோழர்கள், கடமையைத் திறமையாகச் செய்துவிட்டனர். உண்மையைத் தைரியமாக உரைத்தனர். என்பதற்காக நாம் மிக மகிழ்ந்து, மேற்படி மண்டலத்தாரை மனமார வாழ்த்துகிறோம். அவர்கள், பார்லிமெண்டரி தூதுகோஷ்டி யினருக்குத் தந்த மகஜரிலே, பல விஷயங்களைக் குறிப்பிட்டுவிட்டுப் பாகிஸ்தான் தந்துவிட்டால் இந்தக் குறைபாடுகள் ஒழிந்துவிடும் என்று கூறிவிட முடியாது,

குறைபாடுகளை ஒழிக்கவழி, ஜாதியை ஒழிப்பதுதான் என்று கூறினாராம். “ஜாதி ஒழிப்பை” மேற்படி கழகம், இலட்சியமாகக் கொண்டது, அது ஓர் அரசியல் கட்சியல்ல. ஆகவேதான், பாகிஸ்தான் விஷயமாகக் கொஞ்சம் தவறான கருத்தை வெளியிட்டிருக்கிறது என்று கருதுகிறோம். ஜட்-பட்-டோரக் மண்டலத்தின் அரசியல் கருத்துப் பற்றிக் கவனிக்க அவசியமில்லை. ஏனெனில், அது அரசயில் ஸ்தாபனமல்ல சமுக விஷயமாக ஜட்-பட்-டோராக் மண்டல் வெளியிட்டுள்ள கருத்தை நாம் முழுமனத்துடன் ஆதரிக்கிறோம். ஜாதிப் பிரச்சனையைப் புரிந்துகொண்டு, அந்தச் சிக்கலை ஆறுக்கத் துணிவு கொள்ளாத வரையிலே, தூதுகோஷ்டிகள் மாறி மாறி வந்தும் பயன் இல்லை என்பதை வலியுறுத்துகிறோம். பார்லிமெண்டரி தூதுகோஷ்டியினர், லாகூர்ச் சுயமரியாதைக்காரர்கள் அளித்த அறிவுரைக் கொத்துமூலம், தெளிவு பெறுவாராக.

(திராவிட நாடு - 20-1-46)

# பதி - பக்தி

(புதிய நாடகம்)

பழைய பதிபக்தி நாடகம் பலரும் அறிந்ததே. குடிகாரக் கணவன் குணவதியான மனைவி, அவன் கூத்தி வீட்டில், இவள் குடும்ப பாரத்தைத் தாங்கிக்கொண்டு! அவன் இவளை நையப் புடைக்கிறான். இவளோ அவனைப் பூஜை செய்கிறாள், ஏன்? பதிபக்தி! உத்தமியின் உள்ளம் அவ்விதம் இருக்குமாம் - இருக்க வேண்டுமாம்! இந்தத் தத்ததுவத்தை நிலைநாட்ட எவ்வளவோ பாட்டு, கூத்து, நாட்டில், பழைய பதிபக்தி, குடும்ப வாழ்க்கையைப் பற்றியது. இது புதிது, பொதுவாழ்க்கை சம்பந்தமானது.

சிலநாள்களாகக் கம்யூனிஸ்டு கட்சிக்கும் காங்கிரசுக்கும், மனக்கசப்பு, தலாக் (விவாக விடுதலை) ஆகிவிடவில்லை என்ற போதிலும், கணவன் கழுத்தைப் பிடித்து நெட்டி வெளியே தள்ளிவிட்டதால், அழுத கண்களுடன், பெண், தாய்வீட்டுத் தாழ்வாரத்திலே வந்து நிற்கும் நிலைமை ஏற்பட்டிருக்கிறது. இந்த நிலைமை ஏற்படுவதற்குப் பன்னெடு நாள்களுக்கு முன்பே, புகைச்சல் இருந்தது. கண் கசக்குவது ஏனம்மா? என்று கேட்டால், கணவனிடம் அடிபட்ட காரிகை, ஆடுப்பூதும்போது கண்ணிலே கரிபட்டது என்று பொய்கூறிப் பதி பக்தியைக் காட்டும் வழக்கம் போலவே, அடிக்கடி காங்கிரசுக்கும் கம்யூனிஸ்டு கட்சி, பதி-பக்தியைக் காட்ட முயற்சித்து வந்தது. இவ்வளவு பிரியமான பத்தினி கிடைத்தும், அந்தக் கணவன், என்ன செய்கிறான்? பத்தினிகளின் புருஷர் வழக்கமாக எதைச் செய்தார் என்று கதை படிக்கிறோம்! கண்ணகியின் கண்ணீருக்கும், மாதவி தெளித்த பன்னீருக்கும் அன்று நடந்த போட்டி, முடிவடையவில்லையே! இன்று மன்றோ நடக்கிறது. குடும்ப விஷயத்திலே இத்தகைய நிலைமை கோரவிளைவுகளைத் தருகிறது, பொதுவாழ்க்கைத் துறையிலேயே நாச எண்ணங்களைத் தூண்டுகின்றன. உலகெலாம், சர்ச்சில் போன்ற ஒருசில ஏகாதிபத்ய வெறியேறியவர்கள் தவிர, மற்ற யாரும், ஆகழப்படும் பொது உடைமைக் கொள்கையை, காங்கிரஸ் -

கம்யூனிஸ்டு தகறாரின் பலானக, எவ்வளவு மட்டரகங்களெல்லாம் கேலி செய்கின்றன, என்பதை எண்ணும்போது நெஞ்சம் நோகிறது. "அவன் சட்டைப்பையில் இருந்து ஒரு ரூபாய் யாரோ களவாடிவிட்டனர்" என்று எழுதவேண்டிய சமயத்தில், களவாடிவிட்டனர் என்ற பதத்துக்குப் பதிலாக யாரோ, ஆபேவாதம் செய்துவிட்டனர் என்று தேசியத் தினமணி, இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முன்பே எழுதிற்று. ஏட்டி உதைக்கும் காலைத் தொட்டுக் கும்பிடும் பத்தினிக் கோலத்திலே பொது உடைமைக் கட்சியினர் இருந்து வந்தனர் - நாம் அவ்வப்பொழுது கூறிவந்த அறிவுரைகளை அலட்சியப்படுத்தியதால் இன்று என்ன நடந்தது?

பம்பாயிலே, சுபாஷ்தினம் கொண்டாடினர். சுபாஷ்பாபு, காந்தீயக் காங்கிரசை எதிர்த்தவர், கண்காணா இடம் சென்று, காந்தியாரின் ஜீவாதாரக் கொள்கையான அஹிம்சையை லட்சியம் செய்ய மறுத்து, ஒரு விடுதலைப் படையைத் திரட்டியவர். அந்தப் படையில் இன, மத, குல பேதத்தை மறந்து பலர் சேர்ந்தனர். அத்தகைய ஒற்றுமையை நடைமுறையில் செய்து காட்டிய ஒப்பில்லாத தலைவருக்கு விழா! அதிலே நடந்தது என்ன? போலீசுக்கும் ஊர்வலக்காரருக்கும் இடையே தொல்லைகள் - இது இயற்கை, விடுதலை ஆரவாரமும் அதிகார முறையும் எங்கும், ஒன்றை ஒன்று தகர்க்கத்தான் முயலும். ஆனால், பம்பாய் ஊர்வலத்தின் விளைவு அதுதானா? இல்லை வெள்ளையனை ஒட்டுவதற்கு ஒத்திகை நடத்துவதாகக் கூறிக்கொள்ளும், காங்கிரசார், எங்கே பாய்ந்தனர்? பம்பாய், கம்யூனிஸ்டு கட்சி காரியாலயத்தின் மீது!

உலகோர் கண்டு ஆச்சரியப்படக்கூடிய புரட்சியை நடத்திக் காட்டிப் புது உலகைச் சிருஷ்டித்த மாவீரன், லெனின். அந்த வீரனின் விழாக் கொண்டாடப்பட்ட அதே கிழமையில், பம்பாய் கம்யூனிஸ்டு கட்சிக் காரியாலயத்துக்குள் நுழைந்து, அச்சுப்பொறிகளை

நொக்கி, ஆட்களை அடித்து, கிடைத்த புத்தகங்களை எல்லாம் கொளுத்தி, பொது உடைமையைப் பழித்தும் இழித்தும் பெருங்கூச்சலிட்டு, பொதுஉடைமைக் கட்சிக்காரி யாலய டெலிபோன் கம்பிகளை அறுத்துச் சுமார் 1 இலட்ச ரூபாய்க்குச் சேதம் இருக்கும் என்று மதிப்பிடக் கூடிய விதத்திலே, மகத்தான காரியத்தைச் செய்திருக்கிறார்கள். யார்? ஜாரின் கையாட்களா? அவர்கள் செய்தால், வெட்கமும் துக்கமும் தோன்றாதே, பெருமை அடையலாம், அவர்கள் பித்தர்கள், எதைச் செய்கிறோம் என்பது அறியாமல் செய்கிறார்கள் என்று எண்ணிட இடமுண்டு. செய்வதர்கள், அஹிம்சாவாதிகள், நாட்டு விடுதலைப் படையினர். எந்த அறிவாளியும், படித்து, கண்களிலே கனலும் புனலும் ஒருசேரக் கிளம்பக் காண்பர். பொது உடைமை சம்பந்தமான ஏடுகளில்! அவைகளைத் தீயிலிட்டனராம் தேசபக்கதர்கள்! அவைகளைத் தீயிலிடடுவிட்டு, மனுபராசர் மாந்தாதா ஆகியோரின் ஏடுகளைக்கொண்டு நாட்டைத் திருத்துபவர்கள் தானே அவர்கள்!! “கண்ணன் காட்டிய வழி” இருக்க, காரல்மார்க்ஸ் அவர்களுக்கு ஏன்?

பொதுவாழ்க்கையிலேயும், கட்சி நடவடிக்கைகளிலேயும், நாட்டிலே கலவரங்களும், வீணாரவாரங்களும், நாகரிகமும் பண்பும் படைத்த மக்களை நடுங்க வைக்குமளவு நடைபெற்று வருவதை நாமறிவோம். இந்த நிலைமை, வளர்ந்து வருகிறதேயன்றி, குறைந்துபடுவதாகவும் இல்லை. ஆகவே நாம் கம்யூனிஸ்டு கட்சியினர்மீது காங்கிரசார் சீறிப் போரிடுவதைச் சிரிப்புக்கிடமான காரியமாகக்கொண்டு இதனை எழுதவில்லை. சிந்தனைக்குப் பலரும் வேலை தரவேண்டும் என்பதற்கே இதனை எழுதுகிறோம்.

காங்கிரஸ், இன்று எந்த நிலைமையில் இருக்கிறது என்பதை நன்கு அறிந்தவர்கள், இச்செயல்களைக் கண்டு ஆச்சரியப்பட மாட்டார்கள். கிராமத்து மிராசுதாரன், பண்ணைக் கூலியை மரத்திலே கட்டிவைத்து அடிக்கிறான் - இல்லை - அடிக்க மற்றொரு கூலியை

ஐவுகிறான், நியாயமல்ல! ஆனால் நடக்கிறது! நடைபெறுகிறது ஆனால் நியாயமா என்று யாரும் கேட்க முடியாது. மிராசுதாரால், அந்தத் தர்பார் நடத்தமுடியும், அதற்கேற்ற அந்தஸ்து ஆள் ஆம்பு இருக்கிறது. அவர் ஆயிரம் பேருக்கு “ஐயா” சர்க்காருக்கு அவர் ஒரு “ராவ்சாகிபு”. அடிபட்டவன் யார்? இறாணாக் கூலிக்கு இலாய்ப் பறக்கும் முனியன்தானே!! பணபலம், பத்திரிகை பலம், படைத்த காங்கிரஸ், இந்தியாவின் ஏகபோக மிராசுதாரன் நிலைமையில் இருக்கிறது. எனவே அதனிடம் மிலாறுகொண்டு முனியப்னுயம் கந்தனையும் அடிக்க ஆட்கள் ஏராளம். ஆகவே ஆக்காரியம் தங்குதடையின்றி நடைபெறுகிறது. மிலாறு நமது கட்சியின் மீது பாய்வதுண்டு - பாய்ந்தது. சென்ற கிழமை, காலமெல்லாம் கஷ்டத்தைப் பார்க்காமல், கொள்கைக்காக ஆலைந்து திரியும் ஆற்றல் மிக்க நமது பெரியார்மீது பாய்ந்தது. சின்னாளப்பட்டி என்ற ஊரிலே, அவர்மீது வீசப்பட்ட கல் உண்டாக்கிய வடு, அவர் கரத்தில் இருக்கிறது. நாம் அவ்வித நிலைமைகளின்போது, வருத்தம் கொள்வதுமில்லை, ஆச்சரியப்படுவதுமில்லை, ஊரெல்லாம் காங்கிரசின் பிரச்சார பலத்தால் ஏவை ஏவைகளைச் சரி என்று நம்பிக் கொண்டுள்ள னரோ, அந்தத் திட்டங்கள் தவறு என்று நாம் கூறுகிறோம், எனவே, குட்டு வெளிப்படுகிறதே என்ற கோபத்தால், கல்வீசுகிறார்கள் என்று எண்ணி, கல்வீசிய நேரம் போக மற்ற நேரத்தில் நமது சொல்லைக் கேட்டார்களல்லவா, அதுபோதும் என்று திருப்தியும் ஆடைகிறோம். ஆனால் கம்யூனிஸ்டுகளின் விஷயம் அப்படியில்லையே! அவர்கள் படும் கஷ்டம் பதிபக்தியின் விளைவு!! இவ்வளவு இழிவாக நடத்தப்பட்டும். கம்யூனிஸ்டுக் கட்சி, ஆம்முசுவாமிநாதனுக்கும் அன்பர் சடகோபாச்சாரியாருக்கும் “ஓட்” தரும்படி மக்களுக்குக் கூறுவோம்” என்றல்லவா, பத்தினி பதிகம் பாடக் கேட்கிறோம். பரிதாபம் நிறைந்த இந்தப் புதிய பதிபக்தி நாடகத்தின் ஆறுதிக் கட்டத்தைக் காண நாம் ஆவலாகக் காத்துக் கொண்டிருக்கிறோம்!!

# ஆச்சாரியரின் குட்டு வெளிப்பட்டது

“இந்தி தெரியாதவர்கள் எத்தனை பேர்?” என்று கேட்டார். காந்தியார், இந்துஸ்தானிநகரில் ஒருவரும் கை தூக்கவில்லை. அப்படி என்றால் அனைவரும் இந்தி தெரிந்தவர்கள் என்று பொருளா? இல்லை! காந்தியார் அந்தக் கேள்வியைக் கேட்டதே இந்தி மொழியில்! அது யாருக்கும் தெரியாது, எனவே என்ன கேட்கிறார் என்பது தெரியாமல் அனைவரும் சும்மா இருந்தனர். பிறகு அவருடைய கேள்வி தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது. அப்போதுதான் பெருவாரியானவர்கள் கைகளை உயர்த்தினராம்.

வெட்கப்பட வேண்டாம் என்று ஆறுதல் கூறினராம் காந்தியார், பிறகு ஆச்சாரியார் விஷயத்தைச் சந்திக்கு இழுத்துவிட்டாராம். இந்தியிலே பேசினால் உங்களுக்குப் புரியாததிலே என்ன ஆச்சரியம் இருக்கிறது! ஆச்சாரியருக்கே இந்தியிலே பேசினால் புரியவில்லை. ஆகவே முதல் குற்றவாளி அவர். இங்கே தமிழ்பேசுகிறார், வெளி மாகாணங்களிலே இங்கிலீஷில் பேசுகிறார். இந்தியில் பேசத் தெரியவில்லை என்றார் காந்தியார்.

ஆச்சாரியாரின் குட்டு உடைப்பட்டதுகூட அல்ல வேடிக்கை, இந்தியைக் கட்டாய பாடமாக்கும் அளவு அந்த மொழியிடம் அக்கரை கொண்டு, பல ஆண்டுகள் படித்து வடநாட்டுத் தொடர்பு வைத்துக்கொண்டு, அடிக்கடி வடநாடு போய்வருபவரும். காந்தியாரின் சம்பந்தியாகிவிட்ட வருமான ஆச்சாரியாராலேயே இவ்வளவு பகிய பிறகும் இந்தியிலே பேச முடியவில்லை, பிறர் பேசினால் புரிந்து கொள்ள முடியவில்லை என்றால், மற்றவர் கதை என்னாகும்? இதிலிருந்து இந்தியின் குட்டல்லவா வெளிப்படுகிறது. பெண்கொடுத்தவரே இந்தி பேசாமலேயே வடநாட்டுக்குப் போவதும் வருவதுமாக இருக்க முடிகிறது என்றால், வாழ்விலே ஒருநாளோ இருநாளோ போய்வருவோமா வடநாட்டுக்கு என்பதே சந்தேகமாக இருக்கும் நிலையிலுள்ள திராவிட மக்களுக்கு இந்தி எதற்கு?

# புராணம் போதைதரும் லேகியம்

## மட்டரகத்துக்குத் தயாரிக்கப்பட்டது அறிவுத் தாகம் தீர்க்க முடியுமா?

பெரிய புராணத்தைப் பற்றிய நமது கட்டுரைகள், தமிழ் நாட்டுச் சைவமெய்யன்பர் கூட்டத் தலைவர்கட்கும், முத்தமிழ் கற்ற வித்தகர்கட்கும், அனுப்பப்பட்டதாம், கோபங்கொண்ட நண்பரொருவரால்! நல்ல காரியம் நடைபெற்றது. இதுபோன்ற கோபம், இலாபமே! அந்தத் “தலைவர்கள்”, நமது கண்டனத்தைப் படித்துவிட்டு, என்ன எண்ணுவார்கள்? கழுவேற்றுகிற காலமாக இல்லையே! கடம்பா! என்று வருந்துவர், வேறென்ன செய்வர். சபிக்கத் தெரிந்தவர்கள் அதிலே உடுபடுவர், ஆனால் நமது வாதத்திலே இன்ன இடம் ஓடிசல் என்று எடுத்துக் காட்டத் துணியார். பல “அன்பர்களுக்கு” நமது கண்டனச் சுருணை அனுப்பப்பட்டது கேட்ட நாம் மேலும் அவர்களுக்கு விருந்தளிக்க, பெரிய புராணத்தைப் பற்றிய விளக்கத்தை விட்ட இடத்திலிருந்து தொடங்குவோம். இளைஞர் உலகம் இன்று, ஐதெ தேவை என்று எண்ணுகிறதோ, அவைகள் யாவுமோ அல்லது அவைகளிலே பெரும்பகுதியோ, புராண இதிகாசங்களிலே உண்டு என்று கூறுவதன் மூலம், மேலும் சில நாட்களாவது, அவைகளுக்கு உயிர் தரமுடியுமா என்ற முயற்சியில் மும்முரமாக உடுபட்டுள்ளவர்கள், பெரிய புராணத்திலே, சீர்திருத்தக் கருத்துக்கள் உள்ளன என்று பேசுகின்றன. பெரிய புராணத்திலே மட்டுமல்ல, எந்தப் புராணத்திலும், அவரக்ள் சீர்திருத்தக் கருத்து இருப்பதாகவே பேசுகின்றனர். இதனால், அந்தப் புரணாங்களிலே, சீர்திருத்தக் கருத்துக்கள் உள்ளனவா இல்லையா என்று ஆராயப்புகு முன், ஒரு உண்மை தெளிவாகிறது. அதாவது, சீர்திருத்தம் அவசியம் என்பதை இவர்கள் ஒப்புக் கொள்கிறார்கள், அதற்கான வேலையில் பலர் உடுபட்டுள்ளதை உணருகிகறார்கள், வேறு விஷயங்களிலே மக்கள் கொண்டுள்ள அக்கரை யைவிடச் சற்று அதிகமாகவே சீர்திருத்தத் துறையிலே அக்கரை செலுத்தவேண்டுமென்பதை அவர்கள்

அறிந்திருக்கிறார்கள், அறிவாளிகள் என்ற பட்டிக்குத் தம் பெயர் பொறிக்கப்பட வேண்டுமானால் தமக்கும் சீர்திருத்தத்திலே ஆர்வம் இருப்பதாகவும், அதற்கான பணியிலே தாம் உடுபட்டிருப்பதாகவும், மற்றவர்கள் சீர்திருத்தத்துக்காக எங்கெங்கோ தேடி அலைகிறார்களே, பாபம், இதோ நாம் கண்டு பிடித்திருக்கிறோமே, இதனைக் கூறவேண்டும் என்ற எண்ணங் கொண்டிருப்பதாகவும், காட்டித் தீரவேண்டிய அளவுக்கு நாட்டு மக்களின் நினைப்பின் நிலைமை இன்று இருப்பதும், தெளிவாகத் தெரிகிறது. இனாகுலேஷன் சரியான முறை என்று சிலரும் பேசிக்கொள்கிறார்கள் என்றால், இரு கருத்துகளிலே, எது தக்கது என்று ஆராய்வதற்கு முன்பே, ஊரிலே பிளேக்-காலரா போன்ற கொடிய வியாதி பரவி இருக்கிறது என்பது ஏற்பட்டு விடுகிறது. கருத்து வேற்றுமைக்கு இடமின்றி. அது போலத்தான் இன்று, புராணங்களிலே சீர்திருத்தக் கருத்துக்கள் உண்டா இல்லையா, என்பதிலே உள்ள கருத்து வேற்றுமைக்கே இடமில்லாத ஒருகருத்து நாட்டிலே இருப்பதைக் காட்டுகிறது, அதாவது சீர்திருத்தம் தேவை என்பது. இது, வரவேற்கப்படவேண்டிய நிலைமை.

****

சீர்திருத்தம் தேவை என்பதை அனைவரும், செக்குமாட்டுச் சுபாவக்காரர் நீங்கலாக மற்ற அனைவரும், ஒப்புக் கொள்கின்றனர், ஒப்புக் கொள்பவர்களில் சிலர், என்ன செய்வதென்று சிந்திக்காமல் இருக்கிறார்கள், சிலர் சிந்திக்கிறார்கள், தெளிவ பிறக்காமல் குழம்புகிறார்கள், சிலர் சிந்தித்து வழிதெரிந்து, வழி, படுகுழிகளும், பாறை, கோரைகளும் நிரம்பிக் கிடப்பதுண்டு பயந்து விடுகின்றனர், சிலர் பாதிப்பாதை போகின்றனர். பிறகு, முன்னேறிய வேகத்தைவிட அதிக வேகமாக மிரண்டோடுகிறார்கள் பின்நோக்கி, மற்றும் சிலரோ, பாதை எப்படி இருப்பினும் சரி, அவ்வழி சென்றே தீருவது என்று துணிந்து செல்கின்றனர், அங்ஙனம் அஞ்சாநெஞ்சுடன் செல்பவர்களைத்தான், தம்பி! நில்! என்று கனிவுடன் அழைத்துச் சீர்திருத்தத்துக் கான

செம்மையான கருத்துக்கள் இங்கே உள்ளன, என்று கூறி, செல்லுக்குத் தப்பிய சில ஏடுகளைக் காட்டுகிக்னறனர், செந்தமிழ் கற்ற அன்பர்கள். அவர்கள் காட்டும் ஏடுகளிலே, அவர்கள் கூறுவதுபோலச் சீர்திருத்தக் கருத்துகள் உள்ளனவா என்று ஆராயப் புகுமுன்பு, நமக்கு ஏற்படும் மகிழ்ச்சிக்குக் காரணம், அவர்களும் சீர்திருத்தத்தை வரவேற்கிறார்களே என்பதுதான். அவர்களின் ஆர்வத்தைப் பாராட்டத்தானே வேண்டும்! ஆனால் இதிலே ஒரு வேடிக்கை என்னவென்றால், தென்னை மரத்தின் மேல் ஏறிய கள்ளனை விரட்டும் போது, காய்திருடச் செல்லவில்லை மாட்டுக்குப் புல் எடுக்க ஏறினேன் என்று சொன்னதாக உள்ள கதை இருக்கிறதே, அந்த ரகமாக இருக்கிறது இவர்களின் வாதமும். தென்னையில் ஏதடா தம்பி! புல்? என்று கேட்டவருக்கு, இல்லை என்று தெரிந்ததாலதான் இறங்கிவிடுகிறேன் என்று சொன்னானாமே கள்ளன், அதுபோலவே, புராணத்திலே போய்ச் சீர்திருத்தக் கருத்தைத் தேடுகிறாயே இருக்குமோ என்று கேட்கத் தொடங்கினால் இல்லை என்பதைக் கண்டு சொல்லத்தான் இத்தனை ஏடுகளையும் ஆராய்ந்தேன் என்று பேசுகிறார்கள்.

* * * *

புராணங்கள், பக்தி மார்க்கத்துக்கான ஏடுகள், இலக்கியச் சுவையுடன் இருப்பினும் சரி, இல்லாது போயினும் சரி. அந்த ஏடுகளைப் படித்து ஐயனின் பெருமையை, ஆம்மையின் அருமையை, அடியவர் சிறப்பை உணரலாம் என்று கூற முடியுமே தவிர, அவைகளின் மூலம், சீர்திருத்தக் கருத்துக்களைப் பெறலாம், என்று ஏணணுவது பயனற்ற நினைப்பு. முதலில், இதனை மெய்யன்பர்கள் தைரியமாக ஒப்புக் கொள்ளவேண்டும். அதை ஒப்புக் கொள்ளாமல், இதுவெறும் புராணமல்ல! இதிலே உள்ள புதைபொருள் ஆமோகம். இதிலே சரிதம், பூகோளம், விஞ்ஞானம், தத்துவம், கணிதம், சீர்திருத்தம் போன்ற இன்னபிற உண்டு என்று பேசுவது, ஆராய்ச்சி மனப்பான்மைக்கு அத்தாட்சி என்று சிலர் எண்ணுகிறார்கள், உண்மை அது அல்ல, பல இருப்பதாகச்

சொன்னால் சிலதாவது தேறாதா என்ற சபலம், நீண்ட பட்டியைத் தந்தால், யாராருக்கு எதெதில் பிரியமோ, அதற்காகவென்று, புரணாத்தை நாடுவர் என்ற ஆசை இல்லை என்றால், திட்டமாகத் தெளிவாக, வரையறுத்துக் கொண்டு பேசுவர். மதபோதனையே, எளிதாக்கவும், பாமரர் மனமும் பரவசமடையவும், சிக்கலான தத்துவங்கள் பயன்படாது என்று கண்டவர்கள், எந்த மதத்துறையிலே தங்களுக்கு அக்கரை இருந்ததோ, அதனைப் பரவச் செய்வதற்குக் கண்டுபிடித்து, சாமர்த்தியமான வழி, புராணம், அவர்களின் எண்ணம், அந்தக் காலத்தின் கூறு. எனவே அத்தகைய புராண போதகர்கள், பழிக்கப்பட வேண்டியவர்களல்ல, அவர்கள் அந்தக் காலத்தில், தங்களுக்கு யுக்தமானது என்று எதை நம்பிச் செய்தார்களோ, அதனை, விடாப்பிடியாக இன்று கட்டி அலைகிறவர்களும், மக்களின் இன்றைய அறிவுத் தாகத்தைத் தீர்க்க, அந்தப் புராணமே போதும், என்று நம்புகிறவர்களும், உலகில் தோன்றியுள்ள எந்தப் புதுக்கருத்தும், புராணத்திலே உண்டு என்று மயக்கமொழி பேசுவோரும் ஆகிய திருக்கூட்டம் இருக்கிறதே, அதுவே, இன்று கண்டனத்துக்கு ஆளாகிறது. "இதோ அஞ்சுகண்ணன் வருகிறான் சாப்பிட்டுவிடு என்று மிரட்டி, அன்பையும் அன்னத்தையும் கலந்து குழந்தைக்கு எட்டும் தாயிடமல்ல கோபம் நமக்கு, குழந்தைப் பருவம் கடந்து குமரனான பிறகு, ஒஞ்சு கண்ணனை நம்பு என்று கூறும் மூதாட்டியிடமும், இவ்வளவு வயதான ஆம்மையார், உண்மை அனுபவமின்றி இதனை உரைத்திடுவரோ என்று எண்ணுங்கால், ஒஞ்சு கண்ணன் என்று ஒருவகையினர், இருக்கவுங்கூடும் என்றே எனக்குத் தோன்றுகிறது என்று பேசுபவர்களிடமும், ஒஞ்சு கண்ணன் என்று நமது ஔவையார்கள் கூறுங்காலை, ஐயகோ! உதென்ன சிறுமதி என்று சீறும் சீர்திருத்த வாதிகாள் கேண்மின்! ஒஞ்சுகண் என்றால், ஐந்து கண்கள் என்பதல்ல பொருள், அஞ்சு கண் என்பது ஒஞ்சுகண் என்று திரிந்து போயிற்று, அஞ்சுகண் என்றால் என்ன? கண்டவரை அஞ்சச் செய்யும் கண்! இதனையேதான் தாய் மொழிகிறாள் நந்தாய் மொழியினைப் பழிக்கலாமோ? என்று பேசும் சொல்லில்

செப்ப்டி வித்தை ˇசெய்து காட்டுபவர்களிடமுமே, அறிவு உலகம் கோபிக்கிறது. அவர்களின் போக்கையேதான் கண்டிக்கிறது. புராணத்திலே மதபோதனை, ருசிகரமான கதைகள் மூலம் அமைக்கப் பட்டுள்ளன. அவைகளிலே, வேறு துறைகளுக்குத் தேவையான கருத்துக்களைத் தேடுவது வீண்வேலை - அல்லது பிறரை ஏய்க்கும் வேலை. தென் இந்திய ரயில்வே கயிடைப்புரட்டிப் பார்க்கும் ஒருவன், டில்லிக்கும் அரித்து வாரத்துக்கும் இரயில் புறப்படும் நேரத்தைக்கூற எங்ஙனம் இயலும்! ஒரே பாதையின் கயிடாக இருந்தாலுங்கூடப் பழைய கயிடைப் புரட்டிப் பயனிராதே. ஏன், இந்தச் சாதாரண விஷயத்தைப் புரிந்து கொள்ள, பதிபசுபாசம் என்பன போன்ற பிரமாதமான கொள்கைகளைப் பற்றிய சிக்குகளை ஆறுக்கும் பெருமதியினர், சிரமப்படுகின்றனர். புராணத்தை, மதபோதனை ஏடு என்று ஒப்புக்கொண்டு, அதற்காகத்தான் அவை பயன்படும் என்பதைத் தைரியமாக ஒப்புக் கொள்ளவேண்டும். மலச்சிக்கல் முதற்கொண்டு மார்வலி வரையிலே உள்ள 124 வியாதிகளைக் கண்டிக்கும் சூரணம், நோய் இல்லாவிட்டாலும் சாப்பிடலாம், தேக இரோக்கியத்தக்கு, அது மட்டுமில்லை, பித்தளைப் பாத்திரங்களை இந்தச் சூரணத்தைக் கொண்டு துலக்கினால், ஆசல் தங்கம்போல் பிரகாசிக்கும், என்று வகையுள்ள, எந்த வைத்தியராவது தமது மருந்துபற்றிக் கூறுவாரா? அனுபவமும் திறமையும் உள்ள வைத்தியர் ஒரே மருந்தையேகூட, இன்னவிதமான தேகமுள்ளவர் தேனிலும் தேனிலும் இன்னி வதமுள்ளவர் பாலிலும் கலந்து சாப்பிட வேண்டும் என்று சொல்வார்களே! பிறவிப்பிணியைப் போக்கும் மருத்துவ முறையாம் மார்க்கம்! அதற்காக ரசாயனம், சர்பத்து, லேகியம், கஷாயம், மாத்திரை, போன்ற பல மருந்துவகைகள் உண்டு. அவைகளிலே, புராணம், போதைதரும் லேகியம், தத்துவம் கஷாயம், காவியச்சுவையுடன் கூடிய கதைகள் சர்பத்து போன்றவை. எம்மிடம் உள்ள இம்மருந்து எப்பிணியும் போக்கும் பிணிபோக்கி மட்டுமல்ல, பீடை நீக்கி அது மட்டுமல்ல பித்தளையைப் பொன்னுமாக்கும் என்று

பெருமை பேசுவது, அழகா, நியாயமா, யூகமுள்ள செயலாகத்தான் அனுமதிக்கப்படுமா?
***

கற்பனை லோகங்களைச் சித்தரித்த கவிவாணர்கள், கண்டனத்துக்கு உள்ளானதற்குக் காரணம் என்ன? அந்தக் கவிவாணர்களின் சித்திரங்களை, வெறும் கற்பனைகள் என்று ஏற்றுக் கொண்டு பேசாமல், அந்தக் கவிவாணர்களைத் தாங்கிக் கொண்டிருப்பதாகக் கருதும் கலாவாணர்கள், புலவர்கள் குழு, அவை கற்பனை அல்ல, அவைகளிலே வரலாறு மிளிருகிறது. சீர்திருத்தக் கருத்துக்கள் பூத்துக் கிடக்கின்றன, என்று பேசுகிற போக்குதான். சில்லரை அதிகாரிகளின் சீற்றமும் சிறுசெயலும், எங்ஙனம் ஆட்சியையே மக்கள் அலட்சியப்படுத்தவும் கண்டிக்கவும் தூண்டுகிறதோ, அதுபோலவே, இந்தப் புலவர் ஏன்போரின், போக்கே, கவிவாணர்களைக் கண்டனத்துக்குரியவர் களாக்கிவிட்டது! கவிவாணர்களுக்கு முதல்தரமான கேடு செய்பவர்கள், கவிதாமண்டலத்துள் உறைபவர், கவிதாமணிகளைக் காக்கக் கடமைப்பட்டவர், என்று கனத்தகுரல் ஏழுப்பி, நண்பரென நடிப்பவர்தாம். குளத்துநீர் குடிக்க உதவும்! என்பது பொது உண்மை. ஆனால் எல்லாக் குளமுமா? இல்லை! சில குளிக்க மட்டுமே உதவும்! சில மாடு குளிப்பாட்ட மட்டுமில்லையே! குடிக்கும் நீர் உடைய குளமேகூட வெப்பம் அதிகமாகி, வறண்டு கிடக்கும்போது, சேறுமேலிட்ட நிலையில் இருக்குமானால், குடிக்கப் பயன்படாது. குளம்தானே, குடிதண்ணீர் தான் இது, என்று கூறுபவர் யார்? அதுபோலப் புராணங்கள் சேறு நிரம்பிப்போன குட்டைகளாகவும், (மட்ட அறிவுக்கு மட்டுமே பயன்படக்கூடிய விதத்திலே) மாடு புரளும் மடுவாகவும், பலப்பல விதத்திலே உள்ளன. ஊற்று நீர்காண உலகு துடிக்கிறது, இங்கோ, இவர்கள், குழம்பிய குட்டை, தூர்ந்துபோன திருக்குளம், துவர்ப்பு நீர்ப்பள்ளம், இவைகளிலே புகுந்து, நீராடுகிறார்கள், போதாக்குறைக்கு, வாலிபர்களையும் அழைக்கிறார்கள். வாரீர் நீராட! என்று வருவரா? நல்லமுறையில் நடத்தப்படும் நகராட்சியிலே,

தீரமான இணையாளர் இருந்தால் அவர், நாற்றமடிக்கும் குட்டைகளைத் தூர்த்துவிடச் செல்வார். இல்லையேல், அங்கே ஏவரேனும் குளித்தோ, அந்நீரைக் குடித்தோ, நோய்கண்டு இறந்துபடுவரே, அதன்பயனாய் ஊரிலேயே கூட நோய்பவரக்கூடுமே, என்று எண்ணி. அதுபோலவே, தன்னாட்சியிலிருந்து அது தகுதியானவர்களிடமும் இருக்குமானால், அறிவுத் தாகத்தைத் தீர்க்க முடியாத இந்த ஆபாசப் பள்ளங்களை மூடி விட்டு, புதிய ஊற்றறுக்களைக் கண்டுபிடிப்பர். நீர் நிலையங்களையும் அமைப்பர், இன்று குடலைப் புரட்டும் நாற்றமமடிக்கும் குளத்துக்குக் காவல்புரிவதைப் பெரியதோர் சேவை என்று கருதுபவர்கள், அந்த நீர்நிலையங்களிலே வேலை பெறலாம், இன்பம் உறலாம். ஏன், அவர்கள் இதற்குத் தங்களைத் தயார் செய்து கொள்ளக்கூடாது. இன்றளவுவரை, இடிந்த கோட்டைகள், சரிந்த மதில்கள், தூர்ந்துபோன அகழிகள் ஆகியனவற்றைக் காட்டி, ஆங்காங்கே சிலர், இது துரோபதை மஞ்சள் அரைத்த இடம், இது பீமராஜாவின் பாதம் பட்டதால் ஏற்பட்ட பள்ளம், இது ஏகலைவன் கட்டை விரலிலிருந்து ஒழுகிய இரத்தத்தின் கறை என்று காட்டிப் பணம் கேட்டுப் பிழைக்கும், வழி காட்டுவோர் போலிருக்க வேண்டும்? எவ்வளவு அறிவு இந்தச் சத்தற்ற காரியத்திலே பாழாக்கப்படுகிறது, என்பதை எண்ணி வருந்தி இவர்களைக் கண்டிக்கிறோமே தவிர வேறு என்ன!

***

புராணங்களிலே, எதற்காகச் சீர்திருத்தக் கருத்தைப் புகுத்தப் போகிறார்கள். பசுவும் புலியும் ஒரே துறையில் நீர்குடித்தது, பரமசிவன் ரிஷபவாகனரூடராக வந்து சேர்ந்தார், வெட்டப்பட்ட தலைமீண்டும் ஓட்டிக்கொண்டது என்று அற்புதங்களைப் புராணங்களிலே புகுத்தி, இவையாவும் உசனை நேசித்ததன் பலன் என்று முடித்து, இத்தகைய மேலான பலனை, ஆண்டவன் அருளைப்பெற வேண்டுமானால், நீங்களும் பக்தி செய்து கொண்டிருங்கள் என்று உபதேசம் செய்ய இந்தப் புராணங்கள் எழுதப்பட்டன. இதிலே, சீர்திருத்தம் நுழைய என்ன

அவசியம் இருக்கமுடியும்? சீர்திருத்தம் என்றால் என்ன? இருப்பதைச் சீராகும்படி திருத்துவது. கெட்டுக்கிடக்கிறது, ஆனால் திருத்தக்கூடிய அளவிலே இருக்கிறது, திருத்திவிட்டால் கேடுபோய், சீராகிவிடும் என்பதுதானே அதன்பொருள். அடியார்கள், எதைக் கெட்டுக்கிடக்கிறது என்றார்கள்? சமூகத்திலே ஜாதிபேதம் தலைவிரித்து இடுகிறது, அதை ஒழித்தாக வேண்டும், ஏழை பணக்காரன் என்ற பேதத்தைப் போக்க வேண்டும், சேரிகளைச் சீர்திருத்த வேண்டும், உழவனின் உழைப்புக்குத் தக்க உதியம் தரவேண்டும், என்ற இன்னோரன்ன பிற சீர்திருத்தங்கள் தேவை என்று செப்பினரா? அதற்காக, அவர்களிடம் அன்பு காட்டிய அரசர்களிடம் வாதாடினாரா? பிரச்சாரம் புரிந்தனரா? இல்லையே! அவர்களுடைய கவலை எல்லாம், பக்தி பரவ வேண்டும், பரமனைத் தொழ வேண்டும், மூர்த்தி ஸ்தலம் தீர்த்த யாத்திரைகளின் பெருமையை மக்கள் அறிதல் வேண்டும் என்பதிலே சென்றதேயொழிய, இன்று நாம், சீர்திருத்தம் என்று எண்ணுவதிலா அவர்கள் அக்கரை காட்டினர்? காட்டியிருக்க முடியுமா?

ஒரு கட்டிடம் கலனாகியிருக்கிறது என்று வைத்துக் கொள்ளுங்கள். அதைப் புதுப்பிக்க ஆரம்பிக்கிறோம். அதற்கான அதிகாரி திட்டம் தீட்டுகிறார். முதலில் அவர் கேட்பார், இந்தக் கட்டிடம், கட்டி எத்தனை வருடங்கள் ஆயிற்று என்று, இந்தக் கட்டிடம் தாதுவருடப் பஞ்சத்திற்கு முன்பு கட்டப் பட்டதென்று நம் தாத்தா கூறியதாகக் கூறுவோம். ஓ! அப்படியா? மிகப்பழைய கட்டிடம், ஆகையால் தான் கலனாகிவிட்டது என்று அவர் கூறுவார். பழைய கட்டிடமாயிருந்தாலும் கடைக்கால் எத்தனை அடி இழம் என்பார் 10, 15 அடி ஏன்போம், மணல் எத்தனை வண்டிகள் கொட்டினார்கள் என்றால் 40, 50 வண்டிகள் ஏன்போமட், பாலாற்று மணலா வேகவதி ஆற்று மணலா என்ற கேள்வியும் பிறக்கும். வேகவதி ஆற்று மணல்தான் ஏன்போம். அது ஊப்பு மண் கலந்த மணல், அதனால்தான் சீக்கிரம் உளுத்துப்போய்விட்டது. அதை அகற்றி உரமான மணலைப் போட வேண்டும்

என்பார் அவர். அதுபோலத்தான் சமுதாயம் என்னும் கட்டிடமானது கலனாகிச் சரியும் நிலையிற் கிடக்கிறது. நம் சமுதாயத்தின் அடிப்படை சரியல்ல. அது உவர் மண்ணால் உண்டாக்கப்பட்ட ஆஸ்திவாரத்தின் மீது அமைக்கப்பட்டிருக்கிறது. எனவே, அது காலப்போக்கில் சரிகிறது. அதுவும் நாம் காற்று வசதிக்காக மாடிமேல் மாடிகட்டிக் கொண்டே செல்லச் செல்லச் சென்னையில் சமீபத்திலே சரிந்த “பிரிதிவி இன்ஷியூரன்ஸ்” கம்பெனிக் கட்டிடம்போல் விழுந்து கொண்டேதான் இருக்கிறது. சரிந்த கட்டிடத்தின் சாரலிலே நின்று கொண்டு நமது புலவர் பெருமக்கள் பெரிய புராணத்தையும் கம்ப இராமாயணத்தையும் ஓதி சரியாமல் செய்யப்பார்க்கிறார்கள். ப்திசயத் தோழர்களோ, தக்ளிப்யுயம் இராட்டினத்தையும் கொண்டு சரியும் கட்டிடத்தைத் தாங்க துடிக்கின்றனர். வேதாந்திகளோ கீதையும், வேதமும், தத்துவ விசாரணையும் சரிவைச் சமாளிக்கும் என்று நம்புகின்றனர். எல்லோரும் கட்டிடம் சரிவதைக் காண்கின்றார்கள், ஒப்புக் கொள்ளுகிறார்கள். ஆனால் சரிவதைத் திருத்துவது எப்படி? சரியாமல் அமைப்பது எப்படி என்பதிலேதான் தகறார்.

தோழர்களே! நான் கூறுகிறேன், இந்தச் சமுதாயம் சரிகிறது, சரிந்து கொண்டிருக்கிறது, நெடுநாட்களாகவே சரிந்துகொண்டு வருகிறது. நாம் அப்படிப்பட்ட வீறுகெட்ட சமுதாயத்திலே சின்னாபின்னமாக்கப்பட்ட சமுதாயத்தில், சிதறிக் கிடக்கும் சமுதாயத்ததில் வாழ்கிறோம். சமுதாயம் ஆட்டங்கொடுத்து இடுகிறது, இந்த நிலையிலே நாம் நம்மை உணர்ந்து, நம் தேவையைத் தெரிந்து, நம் சமுதாயத்தை மாற்றி அமைக்க முற்படாவிட்டால். சமுதாயம் இடுவது தெரியாமலேயே நாம் ஆமிழ்த்தப்பட்டு விடுவோம். நான் கூறுவது வேடிக்கைப் பேச்சல்ல. நடக்காத, நடக்கக்கூடாத, நடக்க முடியாத செயலும் அல்ல. அமெரிக்காவிலே வாழ்ந்திருந்ததாகச் சொல்லப்படும் சிகப்பு இந்தியர்கள் இன்று எங்கே? அவர்களது வரலாறு எங்கே? நம்நாட்டுப் பழங்குடிகள் என்று கூறப்படும்

தோதவர்கள் இன்று எங்கே? எப்படி வாழ்கிறார்கள்? எண்ணிப் பாருங்கள்!

(திராவிடநாடு - 3.2.46)

# அருணோதயம்

நாட்டுப் பற்றுக்கான போரில் ஈடுபட்டாக வேண்டும் என்ற எண்ணத்தால் இழுக்கப்பட்டுச் சூறாவளிக்குப் பலியானவர்கள் எண்ணற்றவர்கள் - புயலில் எதிர்த்து நின்று புன்னகை புரிந்தவர்கள் சிலர். தோழியர் அருணா ஆசப்ஆலி, அத்தகைய புயலில் சிக்கிய பூவை - புன்னகையை இழக்காதவர். நட்டுப் பற்றிலே நாட்டமும்ட, அதற்கான பணியிலே ஈடுபட, எதற்கும் தயாராக இருக்கும் துணிவும் பெற, வீரர்கள் தோன்றியாக வேண்டும் என்பது, நமக்குப் பிடிக்காத கருத்துமல்ல நாட்டுப் பற்றுக்குப் போராடுகிறோம் என்ற நம்பிக்கையிலே கஷ்டநஷ்டமேற்க முன் வருவோரைப் பாராட்டக்கூடிய பண்பற்ற உள்ளமுமல்ல நமக்கிருப்பது. நமது நோக்கமெல்லாம் வீரம் விழலுக்கிறைத்த நீராகக் கூடாது, வீணர் கொழுத்து வாழவழி வகுப்பதாக இருக்கக்கூடாது, கூண்டிலே தேன்ஆடை கட்டிக் கொடுத்துவிட்டு, பிடிபட்டு. நசுக்கப்படும் தேனீக்களாக, அல்லது மகாராணிகளின் மகிழ்வுக்காக, முள்வேலியிடப்பட்ட தோட்டத்துக் குள்ளே துள்ளிவிளையாட விடப்படும் புள்ளிமானாக, பண்ணையாரின் களஞ்சியத்திலே “அறுவடை” யைக் கொட்டிவிட்டு, இண்டையிடம் ஆறுகலம் நெல் கேட்கும் உழவராக, இந்நாட்டு விடுதலைப் போருக்கு உழைத்தவர்களின் நிலை ஆகக்கூடாது என்பதுதான். அதாவது பாவபுண்ணியம் பேசிப் பணத்தைச் சுரண்டும் கொடுமையைப் போலவே, தேசபக்தி பேசி, வாலிபர்களின் உழைப்பை உறிஞ்சி ஒருசிறு கூட்டம் வாழ்ந்து வரும் சூது நடைபெறக்கூடாது என்று கூறுகிறோம்.

எனவேதான், நாட்டு விடுதலைப்போர் நடக்கிறது என்று நம்பி, தீயில் குளிக்கும் தீரர்கள் என, அதிலே தாவிச்செல்லும் தோழர்களைக் காணும்போது, நமது மனத்திலே பாராட்டுதலும், அத்துடன் ஈணைந்து பரிதாபமும் பிறக்கிறது - வீரர்கள், ஆனால் வீணருக்காக அல்லவா உழைக்கிறார்கள், தீரர்கள், ஆனால் தில்லு முல்லுக்காரரின் தர்பாருக்கல்லவா தாளம்

போடுகின்றனர். என்று பரிதாபப்படுகிறோம். காங்கிரஸ் இயக்கம் என்பது சனாதனச் சூத்ரதாரியின் கயிற்றுக்கேற்றபடி ஆடுவதைக் கண்டே, நாம் ஆயாசப்படுகிறோம். வீர தீரத்துடன் ஆற்றப்படும் பணியின் மூலம், அடிமைப்பிணி போவதற்குப் பதில், புதிய முறிச்சீட்டிலே கையொப்பம் வாங்கப்படும் காரியமன்றோ நடக்கிறது என்று கவலைப்படுகிறோம்.

அருணா! எவ்வளவு தீரத்துக்கு, ஆச்சரியத்துக்கு இடமளிக்கக் கூடிய பெயர்! திடுக்கிடும் சம்பவங்கள் நிறைந்த கதைப் புத்தகத்திலே வரும், கதாநாயகிபோல் தோழியர் அருணா, சூரியனே அஸ்தமிக்காத சாம் ராஜ்யாதிபதியின், சூக்ஷமசக்திகள் அவ்வளவும் உயிருடன் இருக்கும் இந்நாளிலே, நாற்பத்தொரு மாதங்கள் தலைமறைந்திருந்தார்! சர்க்கார், அவர்மீது வாரண்டு இல்லை என்று தெரிவித்த பிறகு, “அருணாவின் விஜயம் - முழக்கம்” என்று பத்திரிகைகளிலே செய்தி வெளிவந்தது. ஜனவரி 30-ந் தேதி கல்கத்தாவிலே அக்காரிகை, பேசியிருக்கிறார், மறைந்திருந்ததற்குக் காரணம் காட்டி அல்ல, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் இனி மறைந்தாக வேண்டும் என்ற உறுதியை விளக்கி! இத்தகைய தகவல் திடுக்கிடும் செயல்கள் - தீப்பொறி உரைகள், விடுதலை வேட்கைகொண்ட ஏவருக்கும் முக்கனிக்கு நிகர் ஆனால் இவைஎல்லாம் தெகிடுதத்தக்காரர் நடத்தும் தேசிய வியாபாரத்துக்கு கைமுதல் ஆகின்றனவே என்று எண்ணும்போதுதான், “அற்புதம் நிறைந்த அருணா அம்மையே! வணக்கம்! அதோபார். ஒரு சிறுகூட்டம் ஏன் ஆற்றலையும் உழைப்பையும், பெற்று, இந்த உபகண்டத்தில் சுரண்டிவாழ வழி வகுத்துக் கொண்டிருப்பதை! வீரவாழ்வின் அறிகுறியே, வீணருக்கு வாழ்வளிக்கும் பொறியிலே இருக் கிறாயே! எச்சரிக்கை!! என்று கூறவேண்டியிருக்கிறது. மணமளிக்கக்கூடிய சந்தனத்தை, மதியிழந்த வரைவிட்டு வெட்டி வரச்செய்து, ஓமகுண்டத்தி லிடுவதுபோல, உணவுக் குரிய நெய்யை ஊரார் உண்ணத் தராமல் தீயிலிட்டுத் திருப்தி பெறுவது

போல், அருணாக்கள், இருக்கும் ஆட்சியை நிறுவ நடத்தப்படும், நய வஞ்சகத் தீயிலே தள்ளப்படுகிறார்கள் என்று எண்ணும்போது உண்மையில் வருத்தமும் கோபமம் கலந்து வரத்தானே செய்யும். மாதவி மனமகிழ்ச்சிக்காகக் கோவலன் கண்ணகியைக் கானம் பாடச் சொல்லவில்லை! இந்நாள்களிலோ, இந்திய உபகண்டத்திலே, முதலாளிக் கூட்டம் அதாவது பனியாக்கூட்டம், தேசபக்தி எனும் ஆர்வத்தைத் தூண்டிவிட்டு ஆரணாக்களை, ஆபத்துக்களைப் பொருட்படுத்தாது உழைக்கச் செய்கிறது, தனது சுயநல ஆட்சியைச் சமைக்க எவ்வளவு பரிதாபகரமான நிலைமை! எங்கு, நாட்டுப்பற்றுக் கான இயல்பு இருப்பதாக, அருணாக்கள் எண்ணிக் செல்கின்றனரோ அங்கு, உண்மையிலே, நயவஞ்சகம் குடிகொண்டிருக்கிறது, அவர்கள் நம்பி மோசம் போகிறார்கள் அமெரிக்காவிலே ஒருவகைப் பட்சி! அழகான பெயர், மலர்க் கொண்டைப் பறவை என்று, இனிமையாகப் பாடும், மரக்கிளைகளிலே அமர்ந்து, கீதம்பயிலும், அப்பறவைக்கு, மலர் போன்ற கொண்டை நீலங்கலந்த வெண்மைநிறங் கொண்ட அக்கொண்டை, காட்சிக்கினிய மலர்போலிருக்கு மாம்! அந்தக் காட்சிக்கினிய கொண்டையையே, அப்பறவை, நயவஞ்சகத்துக்குப் பயன்படுத்துவது! மரத்திலே ஆலைகளுக்கிடையே மறைந்து இருக்குமாம், கொண்டை மட்டும வெளியே தெரியும்படிக் காட்டி! கொண்டை, மலரெனத் தோற்றமளிக்கும், மலரிலே தேனைமொண்டு உண்டு களிக்கலாம் என்று வண்டுகள் மொய்த்திட வரும் பறவை, கொண்டைடயைக் காட்டி மயங்கி இழுத்த அந்த வண்டுகளைக் கொன்று தின்று விட்டுப் பிறகு குதூகலத்துடன் பாடும் இங்கு, இப்பறவைக் கூட்டம மனித உருவிலே உண்டு. ப்திசய ஆர்வம் போலத் தோன்றும் மலர்க் கொண்டையைக் காட்டி மயக்கி, அருணாக்களை அருகே வரச் செய்து, பிறகு தமது இட்கொல்லிச் செயலை ஆரம்பிக்கும்! பனியாக் கூட்டம், ப்திசயம் பேசுவதும், தேசபக்தையைப் பூஜிப்பதும், ப்திசய இயக்கத்தை நடத்த முன்வருவதும், பசப்பும் பறவை மலர்க்கொண்டையை

மட்டும் காட்டித் தன்னை ஆலைகளால் மறைத்துக் கொண்டிருப்பதற் கொப்பான காரியமேயாகும். அப்பறவைக்கு ஈயைôகும் வண்டுகள் போல, அருணாக்களின் சேலைகள், பனியாக் கூட்டத்திற்கே உரமும் உற்சாகமும் எட்டுகின்றன. இந்த நிலைமை கண்டு நொந்த உள்ளத்திலிருந்து கிளம்பும் நமது சொல்லைத் தள்ளிவிடுவதும் அதிசயத் திருப்பணியிலே ஒன்று - மிக முக்கியமானது என்று கருதுவாருண்டு. தோழியர் அருணா அப்படிப் பட்டவரல்லர் என்று நாம் நம்புகிறோம். ஏனெனில் அவர் கல்கத்தாவிலே ஆற்றிய சொற்பொழிவிலே, ஏகாதிபத்திய ஒழிப்புப் பற்றியும் காங்கிரஸ் சக்தி பற்றியும் மட்டும் பேசிவிடவில்லை.

“இந்திய முதலாளி வர்க்கத்தினர் கையில் அதிகாரம் சிக்கிவிட நாம் இடம் கொடுக்கக்கூடாது” என்று பேசியிருக்கிறார். ஏன் அந்தக் கருத்து ஏழவேண்டிய அவசியம் ஏற்பட்டது! முதலாளித்துவம், தேசியப் போராட்டத்தை நடத்துவதாகக் கூறிக்கொண்டு, தன் கரத்தை வலுவாக்கிக் கொள்வதை அம்மை அறிந்திருக்கிறார், அது இகாது என்று எண்ணுகிறார், நாம் பலகாலமாகக் கூறிவருவது, அருணா போன்றவர்களின் வாயிலிருந்தும் வெளிப்படுவது காண மகிழ்கிறோம். இதனை அருணோதயம் என்றும் கொள்கிறோம், உண்மை ஒளி, பரவட்டும், மேலும் மேலும் விரைவாக, இன்னும் சற்றுத் தெளிவாக!

(திராவிடநாடு - 3-2-46)

# காமவேள் நடனசாலையில் கற்பூரக் கடை!

### புராணப் பிரசாரத்தின் விளைவு என்ன?
### பூசுர அரசு! புலவர் முரசு!

பூவையரைப் பூரிப்புடன் புகழ்வதிலே புராணம், முதலிடம் பெற்று விளங்குகிறது! சாது சன்யாசிகள் பட்டியிலே வந்தவர்கள் வேண்டுமானால், தேகத்தின் நிப்லாமையைப் பற்றியும், அதன் ஆபாசத்தைப் பற்றியும்,

காகமொடு கழுகலகை நாய்நரிகள்
கற்று சோறிடுதுருத்தி
கால்இரண்டு, நவவாசல் பெற்றுவளர்
காமவேள் நடனசாலை
மோக ஆசைமுறியிட்ட பெட்டி
மும்மலமிகுந்து ஒழுகு கேணி

என்று பாடியிருப்பர். ஆனால் இந்த நிலையில்லாத, ஆபாசமிகுந்த தேகத்தைப் பற்றி, அதிலும் தையலரின் தேகத்தைப் பற்றிப் பாடத் தொடங்கினாலோ, பக்திப் பாசுரக்காரரும், பாராயணநூல் கோத்தவரும், பரமன் அருள் பெற்றவரும், அங்கம் ஒவ்வொன்றும அழகுற ஆகக்கண்முன் நிறுத்தி, அளவும் தன்மையும் கண்டு கனிமொழியினால் கூறுவதிலே, நிகர் இல்லாதிருப்பதைக் காணலாம். மும்மலக்கேணியே, வேறோர் பக்தர் வர்ணித்திடும் வகையைக் காணவேண்டுகிறோம்.

மலரணி கொண்டைச் சொருக்கிலே!
சொலுமொழி யின்பச் செருக்கிலே
நிலவொளி அங்கக் குலுக்கிலே
நிறைபரிமள கொங்கைக் குடத்திலே

என்று “குளோசப்” காட்சிகளை, முதல்தரமான சினிமா டைரக்டரும் பொறாமைப் படும் அளவுக்குக் காட்டிவிட்டு, “நிமிஷம் ஆணங்கிய” செய்தியைக் கூறி, அதன் பலனாக அந்நங்கை, “சொப்பனத்திலே” வருவதையும் கூறிக் கடைசியில் முருகோனே! மால்மருகோனே! இதனின்றும்

என்னைக் காப்பாற்று என்று முடிப்பார். வெல்லுஞ்சொல், கொல்லுங்கண், வேட்கை நகை, குறுகிய நெற்றி, இரண்டகுழல், திரண்டதனம், மருட்டும்விழி, மதுர இதழ், இவைகளை அவர்கள் துதித்திருப்பதைவிட, அளவிலே, ஆறுமுகனையோ, ஆவரின் ஐயனையோ துதித்திருக்கும் அளவு, குறைவாகத் தான் இருக்கும்! பாயாசமுடன் விருந்துண்டான பிறகு, தெருத்திண்ணையில் உட்கார்ந்து கொண்டு, என்னமோ, பசி அடங்கக் கொஞ்சம் சாப்பாடு! அவ்வளவுதானே வேண்டும். அந்தச் சாப்பாடு எதுவாக இருந்தால் என்ன, கூழானாலும் கும்பி நிரம்பினால் போதும் என்று கூறும் குறும்பரின் செயலை நினைவிற்குக் கொண்டுவரும், பிராணிகர்களின் சொல்! ஆண்டவரின் செயலை வர்ணிக்ககும் இடத்திலும் பெரும்பகுதி, இடவர் சம்பந்தப்பட்ட சமயங்களிலே, குத்து, வெட்டு, அடி, பிடி, நசுக்கு, வெல், கொல் என்ற செயல்கள் செய்தாரென்றும், மாதர் சம்பந்தப்பட்ட இடங்களைக் குறிக்கும்போது, குலவு, தழுவு, கூடு, பாடு, இளகு, பழகு, விரும்பு, நெருங்கு, இரத்தழுவுதல், இடை சோர இடுதல், நிலவில் குலவுதல், புனலாடுதல், கானம் பாடுதல் எனப் போன்ற செயல்களைச் செய்தனர் என்றே பெரும்பகுதி இருக்கும். அதாவது, இயற்கையாக மக்களுக்கு எத்தகைய வர்ணனைகளைத் தந்தால் சுவை இருக்குமோ என்று அறிந்து சித்தரிக்கப் பட்டிருக்கும். இதனால்தான், புராணங்களை போதை தரும் லேகியம் என்று கூறினோம். போதை உடல் வளத்தைக் கெடுத்து உள்வலுவைப் போக்குவது போன்றே, புராணமும் மக்களின் மதியை மாய்த்து விடுகிறது. ஆகவேதான், மக்களின் மதிதுலங்க வேண்டும் என்பதிலே அக்கறை கொண்டவர்கள், இந்தப் புராண போதையை உட்கொள்ளாதீர் என்று கூறுகின்றனர். போதையின் சுவையிலே இலயிப்போரும், அந்தப் பொருளை விற்போரும் இருப்பது போலவே, புராண மயக்கத்தி லாழ்ந்தவரம், புராணத்தை வாணிபம் செய்பவரும் உள்ர். ஆர்கள் ஆயாச மடைவதற்குக் காரணம் இருக்கிறதல்லவா! அவர்களின் ஆயாசத்தை எண்ணி நமது நோக்கத்தை விட்டுவிட முடியுமா, விட்டு விடுவது முறையாகுமா? நாமோ, சரிந்து கொண்டிருக்கும்

சமுதாயத்தைச் சீராகத் திருத்தி அமைக்க விரும்புகிறோம். தாழ்நிலை அடைந்த இனத்தவர் மீண்டும் தலைதூக்கி வாழ வழிகாண விழைகிறோம். இங்ஙனம் முயற்சி செய்யாத காரணத்தால், முன்னாளில் முடிதரித்துவாழ்ந்த இனம் இன்று மூலையில் ஊலாவும் காட்டு மிராண்டிகளாகிவிட்டதைக் காணும்போது, நமது கடமையைச் செய்தாக வேண்டும் என்ற எண்ணம் மட்டுமல்ல, அதனைத் துரிதமாக செய்தாக வேண்டும், துளியும் தயக்கமின்றிச் செய்தாக வேண்டும் என்ற உறுதிப் பலப்படுகிறது. தொதவரின் நிலை என்ன ஆயிற்று? சிகப்பு இந்தியர் நிலை என்ன ஆயிற்று? ஏன் அவர்கள் ஆக்கதிக்கு ஆளாயினர்? என்பதன் “சூக்ஷமத்தை” ஆராய்ந்தால், மூடி வைத்தது, கேடு தானாகப் போய்விடும் என்று இருந்தது, ஆகியவைகளே, இந்த இனங்களை அழித்துவிட்டன என்பதை உணரலாம்.
***

புராணத்திலே உள்ள கருத்துகளில் பல நாளாவட்டத்திலே மறைந்து விடுகின்றன என்பதும், பொது அறிவு பரவப்பரவ, பல கருத்துக்கள், ஏள்ளி நகையாடப்பட்டுத் தள்ளப்பட்டு விடுகின்றன என்பதும் உண்மை. ஆனால் சில கருத்துக்கள், உரம் குறையாமல் உள்ளன. சிலவற்றுக்கு உரம் தருகிறார்கள். ஏன்? எத்தகையை கருத்துகளுக்கு? எந்தெந்தக் கருத்துக்கள், ஒருசிறு கூட்டத்தின சுகபோக வாழ்வுக்கு வழிசெய்கின்றனவோ, ஒரு கும்பல் பாடுபடாது வாழ மார்க்கமாகிறதோ அந்தக் கருத்துக்கள், கால வேகம், பொது அறிவு பரவுதல் என்பவைகளால் தாக்கப்பட்டாலும், எந்தச் சிறு கூட்டம், அத்தகைய கருத்துக்கள் நிலவி இருப்பதால், தங்களுக்கு இலாபம் இருக்கிறதோ, அவைகளைக் கெடவிடாதபடி பார்த்துக்கொள்வதிலும், உரம்போடுவதிலும் கண்ணுங்கருத்துமாக இருக்கிறது. இங்கு அந்தச் சிறுகூட்டத்திடமே, “பிரச்சாரயந்திரம்” சிக்கிக் கொண்டிருப்பதால், தங்கள் சுகவாழ்வுக்கு உகந்த கருத்துக்கள் அழிந்துபடாமல் பார்த்துக்கொள்ள, அவர்கள் யந்திரத்தைப் பயன்படுத்துகிறார்கள்.

***

கம்பவுண்டர் கேசவன், டாக்டர் தாமோதரனுக்குத் தொல்லை தராமல், இதமாகப் பேசி, ஒழுங்காகவே நடந்து வந்தான். கேசவா! கேசவா! என்று டாக்டர் ஒரு நாளைக்கு நூறு முறையாவது, கூப்பிடுவார். அவனும் அன்பும் பணிவும் தோன்றவே நடப்பான். கேசவன், டாக்டர் தாமோதரனுக்குக் கம்பவுண்டர்தான், ஆனால் தந்தைக்கு மகனாயிற்றே! அவன் தந்தையோ, மணிமந்திர வைத்யர்! அதாவது நோய்தீர மருந்தும் தருவார், மந்திரமும் செய்வார். டாக்டர் நாடி பார்த்து, நாக்கை நீட்டச் செய்து பரிசோதித்து, மருந்து எழுதிக் கொடுத்தான பிறகு, நோயாளி உள் அறைக்கு வந்து, சீட்டைக் காட்டியதும், கம்பவுண்டர் கேசவன் அவனைப் புன்னகையுடன் வரவேற்று உட்காரச் சொல்லிவிட்டு, மருந்து கலக்கிக் கொண்டே பேசுவான்.

“இந்த வயித்துவலி எவ்வளவு காலமாக இருக்குத, சார்”.

“அதை ஏன் கேக்கறிங்க, என்னமோ ஏன் போறாதவேளை, போன கார்த்திகையிலிருந்து இந்தக் கர்மம் என ஊசிரை வாட்டுவது”.

“ஒயோ! பாவம்! ஆமாம், ஏன் இவ்வளவு நாளாக மருந்து சாப்பிடவில்லை?”

“சாப்பிடவில்லையா? இதுவரையிலே ஏன் வயித்துக்குள்ளே, ஒரு கிணறு மருந்து போயிருக்கும் டாக்டர் சேகர், டாக்டர் லோகநாதன், கெவர்மெண்டு ஆஸ்பத்திரி, எல்லாம் முடிஞ்சி, இப்போ இங்கே வந்தேன்”.

“ஓஹோ! பல இடத்திலே மருந்து சாப்பிட்டாச்சா. (ஒரு விநாடி மௌனம்) டாக்டர், என்ன செய்கிறார் என்று கொஞ்சம் ஏட்டிப் பாருங்க.

(பார்த்து விட்டு வந்து)
“பேப்பர் படிக்கிறார்”

“சார்! ஒரு விஷயம், உங்க மனசோடு போட்டு வையுங்கோ. இப்படிப்பட்ட வயித்துவலிக்கு மருந்து சாப்பிட்டா மட்டும் போதாது, உடம்பாலொத்தது மருந்தாலே போகும். சிலது, மந்திரிச்சாதான் போகும். மகாதேவ முதலியாருக்கு இரட்சைக்கட்டின பிறகுதான் வலி நின்றது.”
“அப்படியா? எங்கே, மந்திரிக்கிறார்கள்”.

“நீங்கள் தப்பாக நினைக்கக் கூடாது. எங்க தகப்பனார் கூட, மந்திரிப்பார்

“பெயர்!”

“மணிமந்திர ஆவுஷதாலயம் மன்னார் செட்டியார்”

“இந்தப் பேச்சுக்குப் பிறகு, நோயாளி மணிமந்திர ஆவுஷதாலயம் போகிறான்! கேசவன், கம்பவுண்டராக இருந்து டாக்டருக்கு என்ன பயன்?

****

இங்கு, இத்தகைய கேசவன்மார் கூட்டம் இருக்கிறது. அவர்கள் புத்துலகக் காரியாலயத்திலே கூடப்பணிப்புரிவர், ஆனால் பழைமையின் ஏஜெண்டாகவே மறைமுகத்தில் வேலை செய்வர். இந்தக் கூட்டமே, புராணக் கருத்துக்களிலே, தமது சுயநலக் காரியத்துக்கு ஏற்றவைகள் பழுதுபடாதபடி பார்த்துக் கொள்வது. இதன் பயனாகவே அந்தக் கருத்துக்கள், நாட்டு மக்களிடை இன்றும் நடமாட முடிகின்றன. இல்லையானால், புராணகால எண்ணங்களிலே, எவ்வளவோ மாறிஇருக்க, எத்தனையோ விட்டுக்கொடுக்க இதே கூட்டம் தயாராக இருக்க, ஒருசில கத்துக்களை மட்டும் விடாப்பிடியாகப் பற்றிக் கொண்டிருப்பானேன்? விட்டுவிட மறுப்பானேன்? உலகம் தட்டையாக இருந்தது என்ற எண்ணத்தைக் கொண்டுதான், இரணியாட்சதன், பூலோகத்தைப் பாயாகச் சுருட்டிக் கொண்டுபோய் கடலுக்குள் ஒளித்து வைத்தான் என்று புராணம் எழுதப்பட்டது. இன்று எந்தச்

சாஸ்திரியாவது, புராணீகராவது, பூமி உருண்டை வடிவம் என்று பள்ளிக்கூடங்களிலே, போதிக்கப் படுவதைக் கண்டிக்கிறார்களோ? தங்கள் வீட்டுச் சிறுவர்களையாவது, “வேண்டாமடா அந்த விநாசக் கருத்து! வேதபுராண இதிகாசாதிகள், அங்ஙனம் கூறவில்லை. அவைகளிலே கூறப்பட்ட கருத்துக்கு மாறாகச் சொல்லப்படும் பாடம், கேவலம் நாஸ்தீகம்,” என்று கூறித் தடுக்கிறார்களோ? “பூமி உருண்டை” என்று போதிப்பவர்களை நாஸ்திகர்க கென்று நிந்திக்கிறார்களோ? வாதுக்கு அழைக்கிறார்களோ? இல்லை! விட்டுக்கொடுத்து விட்டார்கள். பூமி, தட்டையாகவோ, உருண்டை யாகவோ இருக்கட்டும், நமக்கெனன என்று இருந்துவிட்டார்கள், அல்லது பூமி உருண்டைதான் என்று, ஆராய்ச்சிக்காரர்கள் கூறுகிறார்கள், ஆகவே அதை நாம் ஏற்றுக் கொள்ளத்தானே வேண்டும் என்று கூறி சமாதானம் பெற்றுவிடுகிறார்கள். ஏன்? இதிலே இலாப நஷ்டக்கணக்குப் பார்க்கவேண்டிய அவசியம் இல்லை? பூமி தட்டையாக இருக்கிறது என்று நம்பினால்தான் தட்சணை, உருண்டை என்று ஊரார் ஏற்றுக்கொண்டால் கிடக்காது என்ற நிலைமை இல்லை. சுயநலம், இந்தக் கருத்து மாற்றத்தினால் கெடவில்லை. ஆகவே, தாராளமாகப் புதுக்கருத்தை ஏற்றுக்கொண்டு பழையை கருத்துக்குச் சீட்டுக் கொடுத்து விடுகின்றனர். ஆனால், வேறுசில பழைய கருத்துக் களை மாற்றிக் கொள்ளச் சம்மதிப்ப தில்லை, சுயநலமும் அந்தப் பழைய கருத்தும் ஒன்றாக ஓட்டிக்கொண்டிருப்பதால்.

பூமி உருண்டை என்ற புதிய கருத்தை ஏற்றுக்கொண்டதால் பூசுரக்கூட்டம நஷ்டம் காண்பதில்லை, ஆனால், தேவலோகம் என்று ஒருதனி இடம் கிடையாது, இறந்தவர்கள் அங்கு செல்வது என்பது புரட்டு, அப்படி அவர்களை அங்கே குடிஏறச் செய்வதற்காகவே, இங்கு பூதேவருக்குத் தட்சணைத் தரப்பட்டுச் சில சடங்குகள் செய்யப்படுகின்றன. இதுபொருள் பறிக்கும் தந்திரம், என்ற புதிய கருத்தை ஏற்றுக்கொண்டால், பழைய கருத்தை நம்பி மக்கள் தரும்

பணம் கிடைப்பது நின்றுவிடும். ஆகவே நஷ்டம். எனவே, தமக்கு நஷ்டம் தரக்கூடிய புதுக்கருத்துக்களை அப்பூசரக்கூட்டம், எங்ஙனம் வரவேற்கும்? எதிர்க்கத்தானே செய்யும். ஆயிரம் தத்துவத்தைவிட அரைரூபாய் தட்சணை மேல் என்று எண்ணும் கூட்டமல்லவா அது. எங்ஙனம் அந்தக்கூட்டம் சுயநலத்தை இழக்கத்துணியும். அதற்குப் பிரத்யேகமான நற்குணம் வேண்டுமே, எங்ஙனம் அதனைச் சுயநலத்தையும் சுகபோகத்தையும் பாரம்பரியமாக ஆண்டு அனுபவித்துக் கொண்டு வரும் கூட்டம் பெறமுடியும்? இதனை உணராத சிலர், வேறு எத்தனையோ கருத்துக்கள், நாளாவட்டத்திலே நசித்துப்போனது போலவே, பொது அறிவு பரவினதால் அவை புதையுண்டதுபோல, மிச்சமிருக்கும் நச்சுநினைப்பும் பிச்சுப்பிள்ளை விளையாட்டும் தாமாகவே ஒழிந்து போகும் என்று நம்புகிறார்கள். அந்த நம்பிக்கையிலே வடலூராரும், “கண்மூடி வழக்கமெல்லாம் மண்மூடிப் போக” என்று கூறினார். கூறினதைக் கீதமாக்கிக் கொண்டனரே யொழியக் கண்மூடி வழக்கத்தை யார் வெட்டிப் புதைக்க முன்வந்தனர். அருட்பாவைப் பூசத்துக்கேற்ற பாசுரமாக்கினரே யொழியப் பூசுரப்பட்டு ஒழிப்புக்கான மார்க்கமாகக் கொண்டவர்கள் யார்? எனவேதான், ஒரு கூட்டத்து- க்கு அது பார்ப்பனக் கூட்டமாக இருப்பதால் என்று மட்டுமல்ல, எந்தக் கூட்டமாக இருப்பினும் சரியே, ஒரு கூட்டத்தின் சுயநலத்தை வளர்க்கும் எண்ணங்களைச் சுலபத்திலே மடியவிட மாட்டார்கள், இங்குமட்டுமல்ல, எங்கும்! அந்த எண்ணங்களைத் துணிவுடன் தாக்கத் தகர்த்தாலொழிய அவை மாளா. அவைமாள ஓட்டாது தடுக்க, சகல சதனங்கப்ளுயம் உபயோகிக்க சுயநலக்கூட்டம் ஒருதுளியும் தயங்காது. அந்தச் சாதனங்களிலே மிக முக்கியமானது, புராணப் பிரசாரம்! இதனை, நமது நண்பர்கள், இலக்கியச் சுவைக்காக ஏன்றோ, கல்வெட்டு, வரலாறு ஏன்றோ எண்ணிக் கொண்டு, செய்பவர்களாகக் கூட இருப்பர். கதை கிடக்கட்டும், இதிலே காணக்கிடைக்கும் வரலாற்றுத்

துணுக்குகளின் மூலம் தமிழகத்தைக் காண்கிறோமே என்று பூரிக்கக்கூடும்.

“பங்கப்பழனத்து ஊழும் உழவர்
பலவின் கனியைப் பறித்ததென்று சங்கிட்டு ஏறிய”

என்ற செய்யுளைப் பாடி, “ஏன்னே! இந்நாட்டு வளம்! உழவர் ஊழுகின்றனர்! உழவுதானே உயிர்கட்கு இதாரம்! ஆகலானன்றோ தெய்வப் புலமைத் திருவள்ளுவனாரும் “ஊழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்” என்றார். அத்தகைய உழவு! இங்கு மரங்களிலே மந்திக்கூட்டம்! அவை பலாவினைப் பறித்தன. பார்த்த உழவர், மந்தியை விரட்டுகின்றனர். யாங்ஙனம்? கல்கொண்டோ? இல்லை! கல் எது? கட்டாந்தரையோ அது! அல்ல! வயல்! எனவே உழவர், அங்கு கிடந்தது கொண்டு, மந்தியினை விரட்டலாயினர். என்ன கிடைத்தது. இங்கேதான் மெய்யன்பர்கள், நந்தமிழ் நாட்டின், தவம்நிறைந்த தமிழகத்தில், செந்தமிழ் நாடெனும் போதினிலே இன்பத்தேன் வந்து பாயுது காதினிலே என்று இந்நாள் புலவர் ஆறும்பூதெய்திப் பாடியபடி பண்பு நிறைந்த தமிழகத்திலே, எத்தகைய வளம் இருந்தது என்பதனைக் கூர்ந்து நோக்குதல் வேண்டும். வயலிலே சங்குகள் கிடைத்தன! வளமான நாடு! இதற்கு உண்டோ உடு? சங்குகள்! சங்குகள்! உழவர் கண்டது சங்குகளை! வாரினார்! வீசினார்!” என்று செய்யுளைப் பிழிந்து பிழிந்து செந்தமிழ்ச் சுவையைச் சொட்டச் செய்து, புராணமேயாயினும் புதுமைக்கு ஒவ்வாது எனினும், “புதைந்துள்ள பொன்னைக் காணீர், கலைக் கருவூலத்தைப் பாரீர்,” என்று கூறப் புராணங்களைப் பயன்படுத்திக் கொள்பவர்காகச் சிலர் இருக்கக்கூடும். ஏக்கருத்துக்காக, எம்முறையிலே இவர்கள் அந்தப் புராணங்களைப் பற்றிப் பேசினும் சரியே, பொதுவாக ஆம்முறை, புராணப் பிரசாரம் நப்பெறுவதாகவே முடியும். விளைவும், இவர்களின் நெஞ்சை ஆள்ளும் கலைபரவுவதாகவோ, வரலாறு பரவுவதாகவோ இராது. விளைவு, கற்பூரக் கடையின் கணக்கும், கனபாடியின் தொந்தியும் பெருத்து

விடுவதாகத்தான் இருக்கும். புராணப் பிரசாரத்தின் பலனைப் பூசுரக் கூட்டம் இனிமையாக அனுபவிக்கும், இதனை, அந்தக் கூட்டத்துக்குக் கூலியுமின்றிச் செய்த "சூரலோர்" புலவர், படிப்பாளி, சூனாமானாவின் வைரி, அவர் நாவிலே சரஸ்வதியே தாண்டவமாடுகிறாள், சகலகலா வல்லவர், என்ற ஓசைப் பட்டங்களைப் பெற்றதன்றி வேறு உருவான பலனையும் பெறுவதில்லை. இதனை அவர்கள் உணருவதில்லை. உணர்ந்தோர் உரைத்தாலோ, சீறாமலும் இருப்பதில்லை! சிவநேயர்களின் சீற்றம் சிரிப்புக்கிடமானதே!! இங்கே சீறுகின்றனர் இச்செல்வர்கள். ஆனால் செல்புகுந்த ஏடுகளைச் செந்தமிழ் கலந்து நாட்டினருக்குத் தரும் இவர்தம் "சேவையால்" பட்டமரம் துளிர்த்தது போல, பாழ்பட இருந்த தமது சுகபோகவாழ்வு, மீண்டும் வளமாகிறது என்பதை உணர்ந்து, அந்தச் சிறுகூட்டம், சிரிக்கிறது!! பாவையர் படப்பிடிப்பும் கலைச்சுவையும், வரலாற்றுத் துறையும், உள்ளன என்று புராணங்களைப் போற்றிப் புகழ்பவர்கள், ஆரியத்தின் ஏஜெண்டுகள் - கமிஷனும் கிடையாது!! காமக்கூத்து நடைபெறும் இடத்திலே கற்பூரக்கடை வைப்பது கடவுள் நெறியைக் கயவரும் உணரச்செய்யும் புண்ய கைங்கரியமாகும் என்று கருதிச் செய்பவர் உண்டோ? செய்தால் பயன் காணமுடியும்! அதுபோல, காமக்கிருமிகள் நெளியும் பலபாடல்களுக்கு இடைஇடையே கடவுள் சொரூபத்தைக் காட்டுகிறோம் பாரீர் என்று புராணம் படிப்பதும், பயன்றற முறையாகும். புராணப் பிரசாரத்தின் விளைவாக, சன்மார்க்கம் பரவமுடியாதபடி போகிறது என்பது மட்டுமல்ல, கலைக்காக, வரலாற்றுக்காக என்று எதைக்கூறி அந்தக் காரியத்தைச் செய்தாலும் சரியே, ஆச்செயல், பூசுர அரசு அமைக்க, புலவர் முரசு கொட்டுகிறார் என்றே பொருள். இந்தக் காரியத்துக்கா தமிழ் அறிவு பயன்படுத்தப் படவேண்டும்? பெற்ற மகனைப் பெருநிதி படைத்தோனாகக் காண முடியாவிட்டாலும், பிறன்மனை நுழையாதபடியாவது தடுக்கக் கூடாதா - தடுத்தல் வேண்டாமா? கற்ற தமிழின் துணைகொண்டு, சமுதாயத்திலே கப்பிக் கொண்டுள்ள

காரிருளை நீக்கும் கடமையைச் செய்யத்தான் தவறி விட்டார்களே, அத்தமிழை ஆரிய ஊமிழ்நீரிலே ஆழ்த்தும், அக்ரமத்தையாவது செய்யாதிருக்கக்கூடாதா?

(திராவிடநாடு - 17.2.46)

# எரியிட்டார் என்செய்தீர்?

"இராமயாணம், புண்யகதை என்பதற்காகப் படிக்க வேண்டியதில்லை, அதிலே உள்ள கதை அழகு, காவியஇரசம், கலை அருமை ஆகியவற்றுக்காகப் படியுங்கள். இராமனைத் தெய்வமென்று எண்ணிக்கொண்டு, பூஜைநூலாக இராமயாணத்தைக் கொள்ளவேண்டியதில்லை. கலாபெட்டகமாகக் கொள்க!" என்று நம்நாட்டுக் கலாவாணர்கள் கூறுகின்றனர் - வாதாடுகின்றனர் - பாடுபடுகின்றனர்.

"இராமாயணம்" நம்பமுடியாத கதை. அதிலே கதாபாத்திரங்களாகச் சித்தரிக்கப்பட்ட வர்களின் குணங்கள், அர்த்தமற்றதாக உள்ளன. ஆரிய தர்மத்தைப் பரப்பவந்த நூல் அது. ஆரிய ஆதிக்கம் ஒழிய வேண்டுமானால், அந்த ஏடுகளைக் கண்டிக்கும் அறிகுறியாக, அதனைத் தீயிலிடவேண்டும்" என்று நாம் கூறுகிறோம்.

"அட, பாவிகளே! இராமாயணம் புண்யகதை அல்லவா? அதனையா குறைகூறுவது! இராமனுடைய திருக்கல்யாண குணங்களைக் காட்டும் அந்தக் கதையையா குறைகூறுகிறாய்? மகாபாபம் சம்பவிக்குமே!" என்று வைதீக அன்பர்கள் நம்மைக் கண்டிக்கின்றனர்.

காந்தியார், சென்னையில் "இராமாயணக் கதையைப் படித்தால், நமக்கு இராமனுயை செயலைப்பற்றிப் பல சந்தேகங்கள் உண்டாகும். ஊதாரணமாகச் சீதையை இராமன் காட்டுக்கு அனுப்பலாமா என்பன போன்ற சந்தேகங்கள் வரும். ஆகையால், கதைகளை விட்டுவிட்டு, இராமநாத்தை மட்டும் பூஜிக்க வேண்டும். "கதையை நீக்கிவிட்டு, இராமனை மட்டும் எடுத்தக் கொள்ளவும்" என்று கூறினார்.

அதாவது, இராமயணக் கதையில் கருத்துக்கு ஒவ்வாத, பகுத்தறிவுக்குப் பொருந்தாத பலவிஷயங்கள் உள்ளன.

ஆகையால், அந்தக் கதையைக் கவனிக்க வேண்யடிதில்லை, என்று காந்தியார் கருதுகிறார்.

நாம், அத்தகைய நூலைக் கண்டிக்கிறோம் என்பதன் அறிகுறியாக அதனைத் தீயிலிடுக என்கிறோம். காந்தியார், அந்தக் காரியத்தையே வேறு வகையில் செய்கிறார். நாம் அந்தக் கதையைக் கண்டிக்கிறோம், அவர் அந்தக் கதையைத் தள்ளிவிடச் சொல்கிறார்.

இதிலே இன்னொரு வேடிக்கை! கலாவாணர் சொல்கேட்டால், இராமாயணம் வேண்டும், இராமனைத் தெய்வமெனக் கொள்ள வேண்டிய தில்லை. காந்தியார் கூறுவது கேட்டால், இராமன் வேண்டும், இராமாயணம் வேண்டியதில்லை. கலாவாணர் இராமனைக் கைவிடுகிறார்கள், காந்தியார் இராமாயணத்தைக் கைவிடுகிறார்! நாமோ, இராமாயணமும் வேண்டாம், இராம நாம பாராயணமும் வேண்டாம் என்கிறோம்.

இராமாயணத்தை இங்ஙனம் அலட்சியப் படுத்தி, அந்தக் கதையைப்படிக்க வேண்டியதில்லை, படித்தால் பலசந்தேகங்கள் பிறக்கும் என்று காந்தியார் கூறுகிறார், பண்டிதரும், பாவாணரும் கலாரசிகரும், காவியப்பிரியவரும், காந்தியாரின் வார்த்தையை மறுக்கும் துணிவு பெறாது உள்ளனர்.

இதுகண்டு, “வீரன்”, காந்தியாரின் கருத்து, கலாவாணர் நிலைமை, திராவிடரின் தீர்ப்பு என்பனவற்றைச் செய்யுள் வடிவிலே தொகுத்தனுப் பினான். செய்யுள், எந்த வகையிற் சேருமோ நாமறியோம். செய்யுள் அமைப்பைச் செப்பனிடக் கூடியவர்கள் செய்து கொள்ளட்டும், நாம் கருத்து விளங்கட்டும் என்று கருதிக் கவிதையை வெளியிடுகிறோம்.

வேதமொழியினரின் பேதவழி அதனைத்
“தீதெனவே இயம்பும் தென்னவர்க்கு,
காதளவேயாகும் கருத்தென்னும் கொள்கையினால்
காந்தி, மகரிஷியாய்க் காணவே வந்துசேர்ந்து

கதைஃதினார் மன்றுள் கண்ட பாதிமதியனரைநம்பி
காடுபுகுவான் இராமன், கர்ப்பிணியைக் கைவிடுவான்!
நாடு பிடித்திடுவான் நம்பியை நமனாக்கி!
வெம்பிய கனியினையும் விருந்தென்றே விளம்பிடுவான்
அரும்புமே பலஐயம், ஆக்கதையில் சிக்கல்பல.
ஆகையால் வால்மீகி, அருளும் நூலதனைத்
தாவியே படித்து வோதீர் இராமனிடம்,
ஆவி ஆணையான் இராமன், அவன்கதையோ நாம் வேண்டோம்
கூவி அழைத்திடுவோம் குளிர்நாமம்!
இம்முறையில் இறங்கிடுவீர் இராமன் அருள் பெறுவீர்
இன்னுமுள தெய்வங்கள் எல்லாம் சரிசமமே
பொன்னுலகு புகுவதற்குப் போடுவீர் தாளமதை
கன்னல் மொழிக்கீதம் இதுகேட்டு.
காந்தியார் ஊரைசெய்த கவின்முறை இதுவாமே
காலமுழுதும் படித்துக் கலையின் இரசம்குடித்த
கவிவாணர்களே! கேண்மின்!
ஏரி என்றோம் ஏங்கிநின்றீர்
எரியிட்டார், கரியிட்டார், என்செய்தீரே!

கதைகூறக் கருத்தினிலே கறைஏறும்
கண்டறிந்த காந்தியார் கழறுவது ஆஅதன்றோ?
என்செய்வீர்? ஐந்தல் எதிர்மொழியும் கேட்பாரோ
என்னாகும் உம்கதைகள் இனியும்?

இராமாயண மதனைப் பாராயணமே செய்யும்
ஜோரான பண்டிதர்காள்! செய்யுட் புலிகாள்!
சித்திரமே வரையும் சீரளமைச் சிங்கங்காள்!
சேதுக்காள்! சிதம்பரங்காள்! சிந்துங்கால்
செந்நீர தாமோ உங்கள் கண்ணீர்!!

தொட்டாலும் துயர்நீக்கும்
மேல்பட்டாலும் பவம்போக்கும்

கொட்டாவி விட்டேனும் கூறும்கதை கேட்பின்
பட்டாபிராமன் பாலிப்பான் அருள்என்றீர்!
கட்டாவிடில் கடையை காந்திஊரை மறுப்பீர்
மட்டமானதோ உங்கள் மதியும்

இராமனே போதும்அவன் ஆயணமும் வேண்டாம்
ஐயமே பிறந்துநம்மை ஆலைக்கழிக்குமே அதனால்
செய்யவேண்டுவது ஜே! ஜே! என்றே கூவி
ஐயனை அழைத்திடலே அழகென்றார் அண்ணல்
பொய்யுமே யானதேஉம் போர்த்திறமும் ஆத்திரமும்
கையுமே போயினதே சிரமேல்!

தீயிடுதல் அன்றோ? ஆச்சொல் தித்திக்குதோ? நன்றோ?
வாயிடு தனப்யும் உண்டோ? வழிஉண்டோ? வகையும் உண்டோ?
காதிடுவதற் குதவாக் கதைஎன்றுமே யன்றோ
காந்தியார் கழறிநின்றார், காதுமே உண்டேகொண்டும்
கழலடி தொழுவோராகி விழலிடை நீருமானீர்
வியப்பிது அன்றோ! வேறும் உண்டோ?

இராமன் ஒருதேவனென்று ஏன்கொண்டு வாதிடுறீர்?
இரசித்திடு நல்கதைஎன்றே ஏற்றிடுவீர் நாட்டினரே!

பாட்டுமொழிச் சுவை அதிகம், பண்புமிகு கலைஉயர்வு
நாற்றமுள நறும்பூங்கா, நண்ணுவீர் இனிதே என்றீர்!
பூங்காவில் பாம்புண்டு புகவேண்டமாம் இங்கதனுள்

பாங்காக அவன்நாமம் பூஜித்திடலே பண்பென்றார்
எங்காணும்! எவர் உறையின் வழிநிற்பீர்?
எவருரையில் இதம் காண்பர்?
எதுக்கோ இந்த ஏறுமாறும்!

தூங்காத தமிழர்சிலர் தூண்டியே விட்டதனால்
தொடர்ந்தே காணும், தூயபகுத் தறிவொளியும்
தூரமே தெரிந்துவிட, துதிபாடகரும்
தூவி யெதென்றார் பதரை ஒருவாவியும் இல்லா வயலில்!
சாவியே ஆகுமென்று, சாற்று!!

குறிப்பு :
நம்பியை நமனாக்கி = விபீஷணனை இராவணனுக்கு விரோதியாக்கி
வெம்பியகனி = அகலிகை
விருந்தாம் என்றார் = கௌதமர் (அகலிகையை) ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று கூறினார்.
பாதிமதியினர் = அரைகுறை அறிவுள்ளவர்கள்.

(திராவிட நாடு - 17.2.46)

# சின்னான் சினிமா பார்க்கிறான்

“சின்னானை, அழைத்துக் கொண்டு சினிமா போயிருந்தேன். பழைய புராணக்கதைத்தான், ஆனால் படம் புதிது.

“இமாங்க! இது எப்படிப் படமாக்கிக் காட்டுகிறாங்க” என்று கேட்டான் சின்னான்.

“இவர்களெல்லாம் இடுவார்கள் ஒரு இடத்திலே வேஷம் போட்டுக் கொண்டு, அதைப் போட்டோ எடுக்கிறார்கள். அதுபோலவே சத்தத்தையும் சேர்த்து, வேறோர் மெஷின் மூலம் நமக்கெல்லாம் காட்டுகிறார்கள்” என்று நான் சொன்னேன்”.

“என்னென்னமோ அதிசயமெல்லாம் நடக்குது இந்த நாளிலே” என்றான் சின்னான். அந்தச் சமயத்திலே இராமருடைய பாததூளிபட்டுக் கல்வெடித்து அகலிகை வெளிப்பட்ட காட்சி நடந்தது. ஏன் பக்கத்தில் இருந்த ஒருவர், சின்னானைச் சீண்டிவிட்டு, “அதிசயம் நடக்குது என்று சொன்னாயே அப்பா! இப்பதான் அதிசயம்னு நினைச்சுக்காதே. பார்த்தயேல்லோ, கல்லு வெடிச்சு அகலிகை வந்ததை, இது அந்த நாளிலே நடந்தது நம்ம நாட்டிலே, இது அதிசயமில்லையோ” என்று சொன்னார் வெற்றியுடன். பளீர் என்று பதில் சொன்னான் சின்னான், நானே திடுக்கிடும்படி, அதிசயம் சரிங்க! ஆனா அது சாமி இல்லவா செய்யுது, ஐயா சொல்ற அதிசயமெல்லாம், மனுஷங்க, நம்மைப்போல இருக்கறவங்க இல்லவா செய்யறாங்க. சாமி எதையும் செய்வாரு. மனுஷனும் செய்யறானே, அதுதானே அதிசயத்திலும் அதிசயமாக இருக்கு” என்றான். சின்னானைச் சீண்டியவர், வாயை மூடிக் கொண்டார்.

தேவலோகக்காட்சி நடந்தது, சின்னான் வாயைப் பிளந்து கொண்டு பார்த்துக் கொண்டிருந்தான். “ரொம்ப ஜோராக இருக்குதங்க தேவலோகம்” என்று பூரிப்புடன் கூறினான். “இதைவிட ஜோரா செட்டிங் காட்டுவார்கள் சென்ட்ரல் ஸ்டுடியோ படத்திலே” என்று நான் சொன்ப்ன்ன.

"செட்டிங்களா?" என்று கேட்டான் சின்னான். தேவ லோகம் போலே, ஜோடிச்சுத்தானே போட்டோ எடுக்கணும். அதனாலே ஒரு சினிமாக்காரர் தேலோகத்தைக் காட்டுவதுபோலே இன்னொரு சினிமாக்காரன் காட்டுவதில்லை. ஒவ்வொரு சினிமாக்காரருக்குள்ளே போட்டி ஏற்பட்டுத் தேவலோகம் வரவர ரொம்ப ஜோராகிவிட்டது என்று நான் சொன்ப்ன்ன.

"ஒரு சந்தேகங்க எனக்கு. இவங்க இந்தத் தேலோகம் கைலாசம் இதெல்லாம் படத்திலே காட்டுகிறாங்களே....." என்று சின்னான் இழுத்தான், எனக்குச் சிரிப்பு, "இந்த லோகத்துக்கெல்லாம் இவர்கள் போய்வந்தார்களா என்று கேட்கறியா? என்றேன், "நீங்க ஒரு வேடிக்கைக்காரருங்க! நான் என்ன அவ்வளவு முட்டாளா? அங்கே எல்லாம் செத்தாதானே போக முடியும்! அதுகூடவா எனக்குத் தெரியாது. நான் அதைக் கேட்கலே, தேவலோகம் இதெல்லாம் இப்படி இப்படி இருக்கும்னு இவங்களுக்கு எப்படித் தெரிஞ்சுது? என்றுதான் கேட்க ஆசைப்பட்டேன்" என்றான். "ஏன்! புத்தகத்திலே இருக்குது வர்ணனை, அதுபோலவே இவர்கள் ஜோடிக்கிறார்கள்" என்றேன் நான். சின்னான் திருப்தி அடையவில்லை. "புத்தகத்திலே இருக்குதுங்க, எனக்குக்கூடத்தான் அண்ணக்கி, காலட்சேபத்திலே ஐயரு சொன்னது கவனம் இருக்குது. புஸ்தகம் எழுதினவனுங்களுக்கு மட்டும் எப்படித் தெரிஞ்சுது" என்று கேட்டான்.

"என்னமோ தெரிந்ததுபோலத்தான் எழுதினார்கள்" என்றேன் நான். சின்னான் யோசனையிலேயே மூழ்கினான், என்ன யோசிக்கிறே சின்னான்? என்று நான் கேட்டேன். "ஒண்ணுமில்லை, பார்க்காமே கொள்ளாமே எப்படி இதை எல்லாம் இப்படி இப்படி இருக்குதுன்னு எழுதுறாங்கன்னுதான் யோசிச்சேன். என்றான். "எப்படி எழுதினா, யாரு சின்னான் அவர்களைக் கேட்கப் போறவங்க! இப்ப நாய்னு சொல்லி கன்றுக்குட்டியைக் காட்டினா, நீ காரித்துப்புவே. ஏனென்றால், நீ நாயையும் பார்த்து இருக்கிறதே, கன்றையும் பார்த்து இருக்கிறதே.

தேவலோகம்னு சொல்லி, எந்த மாதிரி ஜோடிச்சுக் காட்டினா என்ன? யாரு, இப்படியா தேவலோகம் இருப்பது, என்று கேட்க முடியும், யாரு இருக்கறாங்க அங்கே போய்வந்தவங்க. இருந்தாத்தானே போய்வர! என்றேன் நான்.

“அதைச் சொல்லுங்க! சுத்தப் புளுவு இந்தத் தேவலோகம் கைலாசம் அது இதுன்னு எழுதி வைத்துகிட்டது” என்று சின்னான். சு.ம. பிரச்சாரமே செய்யத் தொடங்கினான்.

(திராவிடநாடு - 17.2.46)

# "விதைக்காது விளையும் கழனி"

விதைக்காது விளையும் கழனி எப்படி இருக்கமுடியும்? ஏன் முடியாது, உழைக்காது வாழும் மனிதர்கள் வாழும்போது, விதைக்காது விளையும் கழனி ஏன் இருக்காது? உழைக்காது வாழும் மனிதர்கள் இருப்பது மட்டுமல்ல, ஊரையே ஆட்டி வைக்கும், அரசனையே ஆட்டிப் படைக்கும் மனிதர்களும் இருந்திருக்கிறார்கள் - இருக்கிறார்கள். அரசன் உழைப்பதில்லையே தவிர, ஊர்கோபத்துக்கும், வேறு வேந்தரின் படை ஏடுப்புக்கும் அஞ்சி வாழ வேண்டும், மன்னன் இளப்பிறந்தவன் என்ற எண்ணம் மக்கள் மனதிலே இழப்பதிந்திருக்கும் வரையிலேதான், மன்னன் மணிமுடி தரித்துவாழ முடியும், கோபமோ குமுறலோ கொப்பளித்தால், கோல் உடையும். ஒரு அரசு போனால் மற்றோர் அரசு கிடைக்கும், என்ற நம்பிக்கையோடும் அவன் இருக்க முடியாது. முடி கவிழ்ந்தால், பிறகு மீண்டும் சிரம் ஏறும் என்றும் உறுதியாகக் கூறமுடியாது. ஆனால் அரசர்களுக்கு இருக்கும் இந்த ஆபத்துங்கூடத் தங்களை ஆண்டமுடியாதபடியான அரண் அமைத்துக் கொண்டு, ஆண்டிக் கோலத்திலே இருப்பினும் அரசபோகத்தையும் ஆனாயாசமாகப் பெறக்கூடிய நிலைபெற்று, நெடுங்காலமாகவே அந்தநிலை குலையாமல் பார்த்துக் கொண்டு வாழும் கூட்டம் ஒன்று இருக்கிறது.

***

ஆச்சரியமான பல உண்மைகள் உலகில் உண்டு. பெரிய தோர் யானை, பித்துப் பிடித்ததுபோல் ஓடும், எதிர்பட்டோரையும் தாக்கும், அதன் கலக்கத்துக்கும் கோபத்துக்கும் காரணம் தெரியாமல், மக்கள் திகைப்பர். கடைசியில் பார்க்கப்போனால், அதன் காதிலே புகுந்து கொண்ட சிறுவண்டு செய்த சேட்டையால், குன்றென உடல் படைத்த கரி, அங்ஙனம் இடி ஆலைந்து, ஆபத்தையும் உண்டாக்கிற்று என்பது தெரியவரும். எவ்வளவு சின்னஞ் சிறுவண்டு, எத்தனை பெரிய உடலை ஆட்டிவிட்டது என்று பிறகே தெரியவரும். மிருகங்களிலே

மட்டுமென்ன, மனிதர்களிலேயும் இந்த விசித்திரம் உண்டு. வீராதி வீரனாயிற்றே இவன், எப்படி ஒரு வீணனிடம் அடங்கிக் கிடக்கிறான், என்று ஆச்சரியப்படுவோம் சில சம்பவங்களைக் காணும்போது, ஆனால் கொஞ்சம் ஆராய ஆரம்பித்தால் தெரிந்து கொள்வோம், ஒருதுடியிடைக்கு அந்த வீணன் தூது போகிறவன் என்று சூக்ஷமத்தை. நமக்கு, அவள் ஒரு மாது அவன் ஒரு வீணன், ஆனால் அந்த வீராதி வீரனுக்கோ, அவள், இன்பம், அந்த வீணன் இன்பபுரிக்கு அவனை அழைத்துச் செல்பவன். எனவே இன்பபுரியில் குடிஏறிய வீரன், யாரால் அந்த இன்பபுரி வாசம் தனக்குக் கிடைத்ததோ, அவனை வீணன் என்று எப்படிக் கருதுவான்! அவன், மற்றவர்களுக்கெல்லாம் வீணன்தான்! அவனுக்கு அப்படி அல்லவே! விலை மதிக்கொணாத இன்பத்தை யன்றோ அவன் அந்த வீரன் பெறும்படிச் செய்தான். இந்த மர்மம் சுலபத்திலே வெளிவரக் கூடியதல்ல. சொன்னாலும் பலர் நம்ப மாட்டார்கள். ஆனால் இப்படிப்பட்ட, ஏதாவது ஒருமர்மம் இருந்தாலொழிய வீராதிவீரர் பலர், மிகச் சாமான்யர்களிடம், அடங்கி நடப்பதன், இரகசியம் தெரிந்துகொள்ள முடியாது போய்விடும்.

***

வரலாற்றிலே, வேந்தர்பலர், சேடிகளிடமோ சேனாதிபதிகளிடமோ, சிரத்த முகத்திடமோ கூரியவாளிடமோ ஆசையாலோ பயத்தாலோ, அடங்கி விட்டதற்கு இதாரம் இருக்கிறது. இவை கூட, ஆச்சரியமில்லை. கூரிய வாளோ, குளிர்மதிப் பார்வையோ கூட இல்லாமல், நிமிர்ந்த பார்வையுடன் உள்ள ஒருசிறு கூட்டத்திட்டம் மன்னாதி மன்னர்கள் மண்டியிட்டு இருக்கிறார்கள். மக்களின் சீற்றத்தைப்பற்றிக் கூட அவர்கள் அவ்வளவு அதிகமாகக் கவலைப்படமாட்டார்கள். அந்தச் சிறுகூட்டத்தின் சீற்றத்திடம் அவர்கள் மிகமிக அஞ்சுவார்கள், ஏனெனில், இந்த மக்களின் சீற்றத்தைக் கிளப்பவும் நிறுத்தவும், வேறு

மன்னர்களின் விரோதத்தை ஐவவும், சினேகத்தை வாங்கித்தரவும்., அந்தக் கூட்டத்தினால் முடியும். ஒரு புலிக்கு இருக்கும் வலுவை அளவிட்டுக் கொண்டு அதற்குத தகுந்தபடி, ஆயுதபலத்தைத் தேடிக் கொள்ளலாம். ஆனால், பல புலிகளை, ஏககாலத்திலே, ஏவிவிடக்கூடிய காட்டரசனின் வலுவு எந்த அளவு என்று எப்படிக் கணக்கிட முடியும். அதிலும் சுகபோகத்தையும், சொந்த நலனையும் பாதுகாத்துக்க் கொள்வதிலே அக்கரை கொண்டுவிட்டால், அந்தச் சுகபோகத்தின் சுவையிலே இலயித்து விட்டால், அதனை இழக்கத்துளியும் மனம் நிலையிலே, அந்தச் சுகபோகத்தை அழித்துவிடுவதற்கான சக்தியைப் பெற்றவரிடம், அடிமையாகித்தானே தீரவேண்டும். இரும்புப் பெட்டியிலே உள்ள எண்பது இலட்சத்திலே ஆசை இருக்கும் வரையில், இடுப்பிலே தொங்கும் பெட்டிச் சாவியை, பெற்ற மகனைவிட அதிகப் பிரியமாகவும் ஜாக்ரதையாகவும் கவனித்துக் கொள்வது சகஜந்தானே!

“அரசே! ஆவந்திநாட்டு மன்னன், அழகில் மன்மதன் - அறிவில் பிரகஸ்பதி - செல்வத்தில் குபேரன்” என்று எடுத்துச் சொல்லவும், “ஆவந்திநாட்டுக்கு மன்னனாக உள்ளவன் அழிவின் சின்னம், ஆசுரபலம் அவனுக்கு, அக்ரமமே அவனுக்கு ஆமிர்தம், ஆபலைகள் அழிப்பதே அவனுக்கு ஆனந்தம்!” என்று கூறவும் முடியும், எவ்விதம் கூறினாலும் கேட்கவும், நம்பவும், நம்பிக்கையின் பலனாக ஆவந்தி நாட்டுக் காவலனை அழிப்பது அறச் செயலாகும் என்று துணியவும், வங்க, கலிங்க, காம்போஜம் முதலிய நாட்டு மன்னர்கள் தயாராக இருக்கிறார்கள் என்றால், இவ்வளவு மன்னர்களை ஐவும் நாவலிமை படைத்தவனை ஆவந்தி நாட்டவன், எப்படி அலட்சியமாகக் கருதமுடியும். அதிலும், இந்தச் செல்வாக்குப் படைத்தவன், தன்னைப்போல ஒரு மன்னன் என்றால், பொறாமையால் தூண்டப்பட்டு இங்ஙனம் தூற்றுகிறான், பேராசையால் பிதற்றுகிறான் என்று கருதலாம், சொல்பவனோ சொர்ண சிம்மாசனத்தின் மீது இல்லை, கமண்டலமெடுத்துக் கொண்டு காடுகற்றும்

நிஷ்காமகர்மிக் கோலத்திலே காணப்படுகிறான்! சாந்தம் குடிகொண்ட மனம்! தேஜஸ் தவழும் முகம்! தவத்தால் இளைத்த தேகம்! நீண்ட ஜடை! பற்று அற்ற நிலையைக் காட்டும் பார்வை! இவ்விதமான கோலத்திலே உள்ளவன், கூறும் போது, எப்படி அவனைப் பொறாமைக்காரன் ஏன்றோ, பேராசைப் பித்தன் ஏன்றோ கூறமுடியும்? இந்த விதமான சிக்கலான நிலைமையிலேதான், பண்டைய நாட்களிலே, நமது மன்னாதி மன்னர்கள், மாவீரர்களைக் கொண்ட படைகளின் தலைவர்கள், சிறுகூட்டத்திட்டம் அடிமைப்பட்டனர், அந்தப் பரம்பரை அடிமைத்தனம் இன்றும் போகவில்லை! முடியும் நவம்பர் சிரத்தினின்றும் போய்விட்டது, சிறு கூட்டத்தின் ஜடையும் போய் விட்டது. ஆனால், நம்மவர், அந்தச் சிறு கூட்டத்திடம் இன்றும் சிக்கிச் சீரழிந்தே வருகின்றனர் - தப்பும் மார்க்கம் தெரியாமலும் திகைக்கின்றனர்.

***

ஏசுநாதருக்கு ஆமோகமான செல்வாக்கு ஏற்பட்டது. அவருடைய வார்த்தை வேதமாகிவிட்டது. ஒரோப்பாவெங்கும் ஏசுவின் விசுவாசிகள் அதிகரித்தனர். அவருடைய புகழ் எங்கும் அதிகமாயிற்று. ரோமாபுரி சாம்ராஜ்யாதிபதியிடம், தங்கக் கோபுரங்கசள் அமைக்கப்பட மாளிகைகள், தோல்வியறியாத துருப்புகள், தொகை தொகையாகத் துதிப்பாடகர்கள்! பவனி வந்தான், பரமாக்குக்காரர் உடன்வர! மக்கள் கண்டனர், களித்தனர் ஆனால் மறந்தனர், ஏசுவைப் புகழ மறக்கவில்லை, கோலாகலமாக் கொலு வீற்றிருந்தான், பிரதானியர்கள் விருதுபாடினர், ஆனால் நாட்டின் நாளா பக்கங்களிலுமிருந்து வந்த ஓற்றர்கள், எங்கும் ஏசுவின் செல்வாக்கு ஓங்குவதைக் கூறினர். கொலு மண்டபத்திலே கிலி குடிபுகுந்தது. ஏசுவின் சீடர்களிலே ஜ÷டாஸ் ஒருவன். மற்றவர்களுக்கு, ஏசுவின் மொழி பரவுவது கண்டு மகிழ்ச்சி, புதிய மார்க்கம் நிலைக்கிறது, சன்மார்க்கம் மேலோங்குகிறதே என்பதால்! தாங்கள் போற்றும் இலட்சியம் நாடெங்கும் பரவுவது கண்டு, பேரானந்தம்.

ஜ÷டாசும் ஆனந்தப்பட்டான், ஆனால் வேறு காணரத்துக்காக. மற்றவர்களுக்கு, இஷ்டபூர்த்தி ஆயிற்றே என்ற திருப்தி! ஜ÷டாசுக்கு மகிழ்ச்சிதான், ஆனால் அடங்காத பசி - இனிமேல்தான் தன்னுடைய ஆசை ஈடேற வேண்டும் என்ற ஆவல். அவனும், மற்றச் சீடர்கள் போலவே, இரவு பகலாக ஏசுவுக்குத் தொண்டு செய்தான் - மற்றவர்கள், சன்மார்க்கம் தழைக்கவேண்டும் என்பதற்காக உழைத்தனர் - ஜ÷டாஸ், தன் குருதேவனின் புகழ் ஓங்கி, செல்வாக்கு வளரவேண்டும், பிறகு, அதனை இதாரமாகக் கொண்டு, ஒரோப்பாவிலே, பெரியதோர் அரசு அமைக்கவேண்டும் என்ற நோக்கத்தோடு வேலை செய்தான். ஏசுவின் சொல் கேட்டு இலட்சக்கணக்கான மக்கள் எதையும் செய்வர் என்ற நிலை பிறந்ததும், ஜ÷டாஸ், ரோம் சாம்ராஜ்யத்தைவிட ரம்மியமானதோர் ராஜ்யத்தை அமைத்துவிட வேண்டும், ஏசுவுக்கு முடிசூட்ட வேண்டும். என்றான். அலெக்சாண்டர் படைபலத்தால் அரசு அமைத்தான், அரசர்கள் பலப்பலர் செய்துள்ளனர் அதுபோல, குருதேவர் ஏசு, களம் புக வேண்டியதுமில்லை, ஒரு வார்த்தை கூறினால் போதும், ஒரோப்பா வின் ஏகச்சக்ரபாதிபதியாகிவிடலாம். அவ்வளவு ஆபாரமான செல்வாக்கு அவருக்கு உண்டு என்பதை ஜூடாஸ் அறிவான். அவன் எண்ணத்தையும் அவர் அறிவார். அறிந்தபோது சொன்னார், “என் ராஜ்யம் இந்த லோகத்திலே அல்ல” என்று. பிறகு ஜ÷டாஸ், ஏசுவைக் காட்டிக் கொடுத்தான். ஏசு, அரசு அமைக்க விரும்பவில்லை, காரணம் அவருடைய நோக்கம், அரசு அமைப்பதைவிட, சிலாக்கியமானது, தூய்மையானது. அவர் நிரந்தர அமைத்து விட்டார், பல அரசுகள் அவருடைய நிரந்தர அரசின் இணைக்குத் தாமாக அடங்கி நடக்க முன்வந்தன பிற்காலத்தில். ஜ÷டாஸ் நினைப்பிலே, இங்கு பல ஜடாதாரிகள் உலவினர். அவர்கள் தத்தமது குருமாருக்குள்ள ஆமோகமான செல்வாக்கைக் கண்டு, ஏன் நமது குருதேவர் கொற்றவனாகக் கூடாது, ஏன் கோலாகல வாழ்வில் இருக்கலாகாது, அரசுகள் கண்டு அஞ்சும் ஆற்றலைப் படைத்தும், ஏன் தானோர் அரசு அமைக்காது இருக்கிறார் என்று எண்ணி

ஆத்திரப்பட்டதுண்டு. அந்தக் குருமார்கள், ஏசு சொன்னதுபோல, ஏன் ராஜ்யம் இந்தப் பூலோகத்தில் இல்லை என்ற ஞானோபதேசம் செய்யவில்லை. எவ்வளவு பித்தம் இந்தச் சீடனுக்கு அரசு அமைக்காமலும், அமைந்த அரசு அழியாது பாதுகாக்க ஆல்லும் பகலும் பாடுபட வேண்டிய தொல்லை துளியுமின்றி, தூக்கமின்றிக் கிடந்து தொல்லைதரும் ராஜ்யத்தைக்கட்டிக் காவல்புரியும், பல காவலர் களை, ஏவலராகப் பெற்றுள்ள இந்நிலையைச் சாமான்யமென்று எண்ணுகிறானே இந்த ஏமாளி, என்று எண்ணிச் சிரித்தனர். அந்தக் குருதேவர்கள் அரசுகள் அமைக்கவில்லை, ஆனால் ஏசு சொன்னதுபோல, இந்த அரசு அல்ல ஏன் இலட்சியம் என்று ஞானமார்க்கம் பேசவுமில்லை, அரசுகளை ஆட்டிவைத்தனர். காய்ச்சி வைத்த பாலைப் பருகினர், அதிலே கற்கண்டுப்பொடி குறைவு என்று குறைகூறிக்கொண்டு! அரைத்து வைத்த சந்தனத்தை உடலெங்கும் அப்பிக் கொண்டனர், அரைத்த முறை அவ்வளவு சரியில்லை என்றும் குறை கூறிக்கொண்டு, கோலம் துறவுதான், ஆனால் குறைவற்ற இன்பத்தைக் கேட்டுப் பெற்றனர். ஏசு, இராஜ்யம் வேண்டேன், ஏனெனில் ஏன் இலட்சியம் மனித சாம்ராஜ்யத்திலே தர்மராஜ்யம் ஏற்படுத்த வேண்டாம் என்றனர், இராஜ்யம் கூடாது எனப்தற்காக அல்ல, ராஜ்யாதிகாரிகள் நமக்குச் சேவை செய்யும்போது நாமே இராஜ்யம் அமைத்துச் சிரமப்படுவானேன், என்பதற்காக, பொதுநலம் ஏன் இலட்சியம், ஆகவே சுயநல நோக்கமாகிய இராஜபோகம் வேண்டேன் என்றார் ஏசு! இங்கே குருமார்கள் இராஜ்யம் வேண்டாம் என்று சொன்னது, சுயநலம் கூடாது என்ற பெருநோக்கத்துடன் அல்ல, இராஜ்யத்தை ஆள்வதால் கிடைக்கக்கூடிய சுகத்தை, அந்த இராஜ்யத்தை ஆள்வதற்காக எடுத்துக் கொள்ளவேண்டிய சிரமமுமின்றி அடைய வேண்டும் என்பதற்காக, விதைக்காது விளையும் கழனி இருக்க, விதைத்தால் மட்டுமே விளையக்கூடிய கழனியை யார் விரும்புவர்? இத்தகைய குருமார் கூட்டமே, பண்டைய நாட்களிலே, கொற்றவர்களை எல்லாம் இங்கே ஆட்டிப் படைத்திருக்கிறது. அந்தச் சிறு

கூட்டமே, ஆரிய அகராதிப்படி, ரிஷிகள், தவசிகள், முனிவர்கள் என்று அழைக்கப்பட்டது.

***

ஆயோத்தியிலே அரசாண்ட தசரதன், தன் ராஜ்யத்தின் பாதுகாப்புக்காகப் பயங்கரமாகப் போரி புரிந்தான், மற்ற மன்னர்களும் அப்படியே, ஆனால் வசிஷ்டன், தன்னுடைய குரு ஸ்தானத்துக்காகத் தொல்லைப்பட்டதில்லை. எந்தக் காரியத்துக்கும், வசிஷ்டரின் இலோசனை தேவைப்பட்டது. அவ்வளவு நிலை, வசிஷ்டர் பெற்றது வாள் பலத்தாலா? இல்லை! அவருடைய நா அசந்தால் எத்தனையோ நாட்டுப் படைகள், தசரதன் மீது போருக்குக் கிளம்பிவிடும்! எந்த ராஜ்யத்திலும், அவர் குரு ஸ்தானம் பெற முடியும், எந்த அரசனையும், தன் மொழிவழி கொண்டு செல்லமுடியும். ஆகையினால்தான், அந்தச் சிறுகூட்டத்தைச் சார்ந்தவர்கள், அவசியமற்ற தொல்லை வேண்டாமென்று கருதி, அரசுகளை ஆளும் பொறுப்புள்ள காரியத்தைத் தாமே மேற்போட்டுக் கொள்ளாமல், மற்றவர்களை அந்தப் பொறுப்பு என்ற பாரத்தைச் சுமந்து கொள்ளச் செய்து, அவர்களுக்குப் பக்கத்தில் இருந்து கொண்டு, “அரசே! இப்படிச் செய்வதே முறை! இது தகாது!” என்று உபதேசித்துக் கொண்டும் எச்சரிக்கை செய்து கொண்டும் வாழ்ந்தனர். அரசர்கள் அரசுகளை ஆண்டனர், ஆரிய குருமார்கள், அரசர்களை ஆண்டுவந்தனர்! இந்த முறை ஆயோத்தி அரசில் மட்டுமா? எங்கும்! அந்நாள் மட்டுமா? இந்நாளும்! இப்போதும், திருவிதாங்கூரின் திவான்ஜீக்குத் திருப்புகழ் பாடும் அளவுக்கு மன்னருக்குப் பாடுகிறார்களோ! திவானுடைய திருக்கலியாண குணங்களைப் பாராட்டுகிற அளவுக்கு, மன்னருக்கு உண்டோ? மன்னருக்கு இருக்கிற பெருமைகளில் ஒன்றாகவன்றோ, மதியூகியும், மாவீரருமான சச்சிவோத்தமர் சர்.சி.பி. இராமசாமி ஐயரைத் திவானாகக் கொண்டிருக்கிறார் என்ற செய்தி கூறப்படுகிறது. இந்த “சூக்ஷமம்” அந்த நாள் தொட்டுத் தெரியும் அந்தச்சிறு

கூட்டத்துக்கு, ஆகவேதான், அன்று முதலே, அரசர்களாகி விடுவதைவிட, அரசர்களை ஆட்டி வைப்பது மேல் என்ற தந்திரத்தைக் கையாண்டனர், அரண்மனை வாசத்தை விட, ஆஸ்ரமத்தில் இருந்து கொண்டு அரண்மனைவாசியைத் தாசனாக்கிக் கொள்வது, யுக்தம் என்று கருதினர். முக்கனி தேடி ஆலைவதைவிட, தனித்தனி முக்கனி பிழிந்து வடித்து ஒன்றாகக் கூட்டித் தருவதற்குத் தக்கதோர் சீடனைப் பெற்றுவிடுவது, அல்லல் இல்லாத ஆனந்தமல்லவா? அது அவர்களுக்குத் தெரியும். அந்த நாட்களிலே, ஆஸ்ரமங்களிலே ஜ÷டாஸ்போல, இருந்த சந்தேகிகளின், எண்ணத்தைக் குருமார்கள் எப்படிப் போக்கினர் என்பதைச் சிந்தித்துப் பார்த்தால் தெரிந்து கொள்ளலாம்.

***

கங்கைக்கரை! இங்கோர் ஆஸ்ரமம்! பிரவாகத்தின் சத்தம், அதனுடன் போட்டியிடுவது போன்ற வேதஒலி மற்றோர் புறம். இயற்கை எழில்! புள்ளிமான் துள்ளி விளையாடுகிறது! குயிலின் கீதம், மயிலின் நடனம்! மரக்கிளைகளெல்லாம் மதுரத்தைப் பொழிந்து கொண்டு விதவிதமான பட்சிகள்! ஒருசிறு பரிவாரம், வேதத்தைப் பாராயணம் செய்து கொண்டு, அவர்களுக்கு ஒரு குரு, ஆகத்தில் இலயிக்காமல் பரத்தைப் பற்றிய எண்ணத்தில் உடுபட்டனர். அவர் உடலில் பொன்னா பரணமோ சிரத்தில் மணி முடியோ கிடையாது. ஆஸ்ரமத்தருகே இரத கஜ துரக பதாதிகள் கிடையாது! சீடர்களிடம் வாள் வேலை கிடையாது. உடலிலே தழும்பு கிடையாது. உள்ளத்திலேயோ, உலகின் முதல்வனை உணர வேண்டுமே, அதற்கு என்ன வழி என்பதன்றி வேறு கவலை கிடையாது.

அதே நேரத்தில் டில்லியில் மகோன்ன- தமான மாளிகை. அதற்கருகே பாசறை! அங்கே போர்ப்பயிற்சியிலே உடுபட்ட பல்லாயிரவர்! அவர்களின் உடலிலே தழும்புகள். மாளிகைக் குள்ளே மன்னன்! அவன்முன் பல்வேறு நாட்டு ஒற்றர்கள். அவர்களிடம் தத்தமது பார்வையிலே

விடப்பட்ட பிரதேசங்களிலே உள்ள பூபதிகளின் படைபலம், நோக்கம், நிலைமை ஆகிய தகவல்களைத் தரும் ஓலைகள்!

இந்த இரு இடங்களிலே எங்கு இருந்தவருக்குச் சுகம்? ஆஸ்ரமத்தின்மீது ஆஸ்ரமம், படை எடுக்காது! சதிர்க்கச்சேரி நடைபெற்றுக் கொண்டிருக்கும் இரு அரண் மனையைத் தரைமட்டமாக்க அதே சமயத்திலே, வேறோர் அரண்மனை சரியாலோசனை மண்டபமாக மாறி இருக்கும்! ஆஸ்ரம வாழ்வு, அரண்மனை வாழ்வு இரண்டிலே, எது விதைக்காது விளையும் கழனி?

கங்கைக் கரையிலே (கங்குபட்டர்) காகபட்டர் என்ற குரு கொலுவீற்றிருக்கிறார் ஆஸ்ரமத்தில்! அவருக்குக் கவலை எது? தில்லியிலே அதேபோது ஆவுரங்கசீப் இருக்கிறார். அரண்மனையிலே, அவருக்கு எவ்வளவு அல்லல், தொல்லை.

ராஜகிரியில் ஒரு அரண்மனை, அதைச்சுற்றிலும் ஆசகாய சூரர்கள் அவர்களின் தலைவர் சிவாஜி. அவர் அரண்மனைக்குள்ளே இருக்கிறார். அவருடைய நினைப்பு முழுதும ஆவுரங்கசீப் பின் படைபலத்தின் மீது! ஆவுரங்கசீப்பின் எண்ணம் யாவும், மலர்ந்த மராட்டியத்தின் மணம் தில்லிவரை பரவுகிறதே என்பது பற்றி! இரு இடங்களிலும் இருந்த படை வீரர்களின் பேச்சு, இன்னின்ன போரிலே இன்னின்ன ஆபத்துக்கள், இப்படி இப்படித் தப்பினோம் என்பதுபற்றி, கண்ணிழந்த தம்பி, கை இழந்த அண்ணன், காலிழந்த மாமன், உயிரையே இழந்த உத்தமர்கள், இவர்களைப் பற்றிய பேச்சு. நடந்த சண்டைகள் இடிந்த கோட்டைகள், ஓடிந்த உள்ளங்கள், அழிந்த குடும்பங்கள், ஓடிய இரத்த வெள்ளம், இவைபற்றிய உரையாடல் மட்டுமா, இனிவர இருக்கும் இன்னல், மூள இருக்கும் போர், அதிலே ஏற்பட இருக்கும் ஆபத்து இவைபற்றியும் பேச்சு, ஓயாத தொல்லை! தீராத கவலை! தழும்பு நிரம்பிய உடலம்! இவை, அரண்மனைகளிலே, ஆஸ்ரமங்களிலே? ஏரியாத ஆகில்,

தேயாத சந்தனம் இருக்கக்கூடும். புரியாத மந்திரங்களை உச்சரிக்கும் மதிநிறையாத சீடர்கள் உலவக்கூடும். வாழ்க்கையின் வேதனையோ, மாற்றானின் விரோதமோ இராது. அது மகிழ்ச்சி மாளிகை! அரண்மனையோ மனதை மருட்டும் இடம்! எனவேதான், கங்குபட்டர், தில்லியிலே இருந்த ஆவுரங்கசீபைப் போலவோ ராஜகிரியில் இந்த சிவாஜியைப் போலவோ, மணிமுடிதரித்துக் கொள்ளும் மன்னனாக இருக்கும் தொல்லையான பதவியைத் தேடவில்லை. மாறாக, மணிமுடி தரித்தவனைத் தன்முனு மண்டியிடச் செய்தார்!

***

“குருதேவா குதிரை வீரர்கள் யாரோ வருவது தெரிகிறதே?”

“வரட்டுமே! இங்கே, எந்தக் கோட்டை இருக்கிறது. அவர்கள் தாக்க, பிடிக்க, போரிடுவதற்கு இதுவா இடம்? இது பூஜா மடம்! இங்கே வருபவன், பூஜைக்கு வருவான், வேறு காரியத்துக்கு இதுவா இடம்.”

“எந்த நாட்டவரோ.”

“யாராக இருந்தால் என்ன? நாம் என்ன ஒரு நாட்டுக்கு அரசரோ, மற்ற நாடுகளைப்பற்றிச் சந்தேகிக்கவோ, பயப்படவோ?”

சஞ்சலப்படும் சீடனைத் தேற்றிவிட்டுக் குரு சாவதானமாகத் தன் காரியத்தைப் பார்க்கிறார். குதிரை வீரர்கள் ஆஸ்ரமத்துக்குக் கொஞ்சம் தொலைவிலேயே, குதிரையை விட்டுக் கீழே இறங்கி, பயபக்தியுடன் நடந்து வருகிறார்கள். குதிரைகளை மரத்திலே கட்டிவிட்டு, ஆஸ்ரமத்துக்குள் நுழைந்து, கங்குபட்டர் முன் விழுந்து வணங்கிப் பணிவுடன் கூறுகிறார்கள்.

“குருதேவா! தாங்கள் தயை கூர்ந்து, ராஜகிரி எழுந்தருள வேண்டும். மராட்டிய மாவீரர் சிவாஜி, தங்கள் தரிசனத்துக்காகவும், தங்கள் யோசனையை ஒரு முக்கியமான விஷயமாகக் கேட்கவும் இவலோடு காத்துக் கொண்டிருக்கிறார்” என்று கூறுகின்றனர்.

இந்த நிலையில், அரண்மனையில் அரசனாக இருக்கவேண்டும் என்ற எண்ணம், ஊப்புச் சப்பற்றது என்று யாருக்குத் தான் தோன்றாது! மாவீரன் சிவாஜி, மராட்டியத்தின் மாணிக்கம். மொகலாய சாம்ராஜ்யமே அவன் பெயரைக் கேட்டுக் கொஞ்சம் நடுங்குகிறது. அவன் தன் வாய் பலத்தால் ஒரு அரசு அமைத்திருக்கிறான். அவனுடைய கட்டளையை எதிர்பார்த்து இலட்சக்கணக்கானவர்கள் உள்ளனர். அவன் பொருட்டுக் களத்திலே உயிரை விட்டவர் பல்லாயிரவர். மராட்டியம் மனைதோறும் ஓர் மாவீரனைத் தந்தது. அப்படிப்பட்ட சிவாஜி அழைக்கிறார், கங்குப்பட்டரை, “தரிசனம் தருக! யோசனை அருளுக!” என்று, அவருடைய வேண்டுகோளைத் தாங்கிக்கொண்டு வீரர் இருவர் வந்துள்ளனர், வீழ்ந்து வணங்குகின்றனர், வெற்றிக்களை முகத்தில் வீச. அது சமயம் கங்குபட்டர், தமது சீடர்களைப் பார்த்திருக்க மாட்டாரா? அந்தப் பார்வையின் பொருள் என்ன? “எதற்கடா, மண்டுகளே! நமக்கு அரசு? அரசாள்பவனே நமது அடிபணியச் சித்தமான இருக்கும்போது, நாம் ஏன் அரசு அமைக்கவேண்டும்” என்பதுதானே?

“என்னடா இது, தவளை மாதிரி கத்திண்டிருக்கே?”

“யஜ÷ர்!”

“எந்தச் சனியனாவது இருக்கட்டும்! மனதிற்குள்ளே சொல்லிக் கொள்ளேன், மகா பெரிய ஞானஸ்தனாகப் போகிறாயோ? அப்படித்தான் பிரகஸ்பதி ஆகிவிடுவதாகவே வைத்துக் கொள், என்ன பலனைக்

காண்போகிறாய்? ஆஹா, எ ஊஹீன்னு கூவினதுதான் மிச்சம். வா! கொஞ்ச நேரம் கங்கைக் கரையிலே போய் விச்ராந்தியா ஊலாவிண்டிருப்போம்.”

“சரி! வா, போவோம், நேக்கும் கொஞ்சும் தலையை வலிக்கிறது”

இதுபோல், சீடர்கள் பேசி இருப்பர், கங்கைக் கரையிலே உலவும்போது உலக விவகாரங்கள், ஊர்வலம், பல்வேறு நாட்டு நடவடிக்கைகள் பற்றிப் பேசிக் கொண்டிருக்கும்போது, அவர்களுக்கு அரண்மனைகள் அங்கு வாழ்வுருசி இருப்பது முதலியன பற்றிய நினைப்பு வரத்தானே செய்யும்.

“சாமான்யாளெள்ளாம் எவ்வளவு சம்பத்துகளுடன் வாழ்கிறா! ஆவாளுக்குச் சாமமும் தெரியாது. ஆவாளெல்லாம் அரண்மனைகளிலே வாசம் செய்யறா. நந்தவனங்களிலே, ஊலாவிண்டு, அப்சரசு போன்ற ஸ்திரிரத்னங்களோடு சரசமாடிண்டு, சௌக்யமா, உல்லாசமா, காலங்கழிக்கிறா என்று கூறிப் பெருமூச்சு விடுவார் ஒரு சீடர், “ஆம்! அதனாலென்னடா? அதற்குத்தான் ராஜபோகம்னு பேர்!” என்று மற்றவன் பதில் கூறுவான். சஞ்சலப்படும் ரங்குவை, கங்குபட்டரிடம் இழுத்து விட்டுவிடுகிறான் என்று வைத்துக்கொள்வோம், உரையாடல் எப்படி இருக்கும்! கங்குபட்டர், தன் சீடன், ஆசடனாக இருப்பதைக் கண்டு, பரிதாபப்பட்டு அவனுக்கு விளக்கம் பிறக்க உபதேசிப்பார்.

கங்கு : டே, ரங்கு! என்னடா இது, அரண்மனையிலே வாழ்கிறாளே, அப்சரசுகளோடு ஊலாவுகிறாளே, என்று ஏதேதோ பேசிண்டு இருந்தாயாமே.

ரங்கு : இல்லை, ஸ்வாமி! ராஜாதி ராஜாக்கள் அனுபவிக்கும் போகமிருக்கே, அதைப்பற்றி அடியேன்....

கங்கு : ஆமாம்! ராஜபோகம்னே அதற்குப் பெயர் இருக்கே!

விளக்கம் எவ்வளவு கூறினாலும், அரசபோகத்திலே ஆசை கொண்ட சீடனுக்கு திருப்தி ஏற்படாது, ஆகவே அரசபோகத்தை விட ஆரியருக்குள்ள யோகம் சிலாக்கியம் என்பதை நடவடிக்கையிலேயே காட்டவேண்டும் என்று எண்ணிய கங்குப்பட்டர், அசடே! உன் சந்தேகத்தைப் போக்குகிறேன், ராஜகிரி நகரிலே!" என்று கூறிவிட்டு, அழைத்துச் சென்றிருப்பார்.

கங்கைக் கரையிலே இருந்தவர்கள் அரசர்களை அடிபணியச் செய்யும் நிலையில் இருக்கும்போது, அவர்கள் ராசகிரியில் அரண்மனையில் ஊலாவும் அரசனாகப் பிறக்கவில்லையே, அல்லது அரசன் ஆகவில்லையே என்று கவலைப்படக் காரணம் உண்டா? நமது வார்த்தையே - இசீர்வாதத்தை - கட்டளையை - எதிர்பார்த்துக் கொண்டு நிற்கிறான் சிவாஜி! நாம் இஷ்டப்பட்டால் மட்டுமே அவன் அரியாசனம் ஏற முடியும், அவனிடம் அரசு இருக்கிறது, ஆரசைக் காப்பாற்றிக் கொள்ளும் ஆற்றலும் இருக்கிறது! இருந்தும்!! நான் சம்மதித்தால்தான் அவன் அரசனாக முடியும்! நான் யார்? ஒரு ஆரியன்! அவன் ஆசகாய சூரன்! வாள் உண்டு அவனிடம், வல்லமை உண்டு அவனிடம், ஆனால் ஏன் வார்த்தை அவனுக்குக் கிடைத்தால்தான், அவன் மன்னனாக முடியும்!" என்று அந்த ஆரியன் எண்ணாதிருப்பானா! எண்ணும்போது, அவன் உள்ளத்திலே எவ்வளவு ஆனந்தம் - ஏன் - ஆணவம் பிறந்திருக்கும்! ஆற்றங் கரையிலே ஆரியன் ஊலாவும் அதே நேரத்தில், அரண்மனையிலே ஊலாவும் சிவாஜியின் மனதிலே எவ்வளவு சோகம், சஞ்சலம், சந்தேகம் பிறந்திருக்கும்.

"அவர் என்ன சொல்கிறாரோ? இசீர்வதிப்பாம்ô, முடியாது என்று கூறிவிடுவாரோ?" என்று எண்ணிக் கவலையில் மூழ்கி இருப்பான். இவன் சிரத்திலே முடி இருக்கும், ஆரியன் அனுமதித்தால். இந்த நிலை கிடைக்கும்போது,

ஆரியர், ஏன் அரச பதவியை அலட்சியமாகக் கருதமாட்டார்கள்?

***

“பாரடா, மண்டு, பார்! பார், நமக்கு நடக்கும் இந்த ராஜோபசாரத்தை! ராஜகிரியிலே, யார் இப்போது உண்மையான ராஜா! ஏன் முன்பு வீழ்ந்து வணங்குபவன் ஒவ்வொருவனும் ஆசகாய சூரன், யுத்தத்திலே ஜெயவீரன், எதிரிக்கு மார்காட்டத் தயங்காத வீரன்! ஆனால், இவர்களின் தலைவன் இனி நமக்குச் சீடன்!” என்று ராஜகிரியிலே வரவேற்கப்பட்ட வைபவத்தின்போது ஆரியக்குரு எண்ணாமலிருப்பானா! வீராதி வீரனானாலும் விப்பிரருக்கு அடங்கிய தீரவேண்டும் என்ற வேதி நீதியை, வேதியர் புகுத்திய நியதியை, வர்ணாஸ்ரம முறையை, சனாதனச் சட்டத்தை, அந்தச் சமயம் அவர் போற்றாது இருந்திருப்பாரா! அந்தச் சட்டமல்லவா, ஆஸ்ரமவாசியை அரண்மனைக்கே அதிகாரியை நியமிக்கும் உயர்தர அதிகாரியாக்கி வைத்தது. படை வீரனாம் சிவாஜியைப் படைபலம் ஆற்றவனிடம் பணிய வைத்தது! வாள் ஏந்திய வீரனைத் தன்தான் பணியச் செய்தது. மனுவின் மகிமையால் அல்லவா, மண்டலாதிபதி மண்டியிடுகிறான் மகிழ்ந்திருப்பான். “அசடே! அரசு வேண்டும், அரசனாக வேண்டும். என்று அற்பத்தைத் தேடாதே. அரசுகளை ஆட்டி வைக்கும் அதிகாரம் நம்மவரிடம் இருக்கும் வழியை நாடு! அதற்கான புராண இதிகாசாதிகளைப் பரப்பு! மக்களை ஆவகைளிலே நம்பிக்கை கொள்ளும்படி செய்! அரசர்கள் பிறகு உன் அடிமைகள்! அரசபோகத்தை அடையலாம், அதற்கான பொறுப்பும் உன்னை ஆண்டாது. ஆரியனே! என்று கங்குபட்டர் தமது சீடர்களுக்குக் கூறாது இருப்பாரா? அவ்வளவு நாட்களுக்கு முன்பு இருந்தவரின் எண்ணம் கிடக்கட்டும், நமது கண்முன் உள்ள ஆச்சாரியார், இப்பாது கூறுகிறாரே, “பிராமணர்கள் தங்கள் குடும்பத்திலே கட்டாயம் ஒரு பிள்ளையே வேதம் படிக்க அனுப்பி விடவேண்டும்” என்று! ஏன் கூறுகிறார்

அதுபோல? அவருக்குத் தெரியும், ஆரியம் விதைக்காது விளையும் கழனி என்று!!

(திராவிடநாடு - 24.2.46)

# காமராஜர் சிந்தும் கண்ணீர்!

அந்த மோகனப் புன்சிரிப்பிலே, அவரும் சொக்கினார். பத்தரை மாற்றுப் பசும்பொன் மேனியனே! ஓற்றைத் துகிடுத்த ஒளிவிடு வடிவழகா! பற்று ஆற்றவனே! பவம் அறுத்திடுவோனே!! - என்று அவர் அர்ச்சித்தார், ஒருநாள் இருநாளல்ல - ஓய்வின்றி இருபது ஆண்டுகள்!!

தொழுது நின்றவரை, தூரத்திலிருந்து நாம் அழைத்து, "பக்திப் பரவசத்திலே மெத்தவும் உடுபட்ட அன்பரே! நீர்தொழும் தேவன், உமக்கு அருள்பாலிக்க மாட்டானே! பூசுரரின் பாசுரமே அந்தத் தேவனுக்குச் செந்தேன்! உன் மலரைவிட, அவர்கள் தரும் சருகு, அவருக்கு ஆனந்த மளிக்கும்! உன் பக்தியிலே, அவர் ஆனந்தமடைவதைவிட அவர்களின் சக்தியிலே, அவருக்கு அச்சம் அதிகமாயிற்றே! பக்தா! கால்கடுக்க ஆக்கோயிலை வலம்வருகிறாய். வாய்வலிக்க அந்தத் தேவனின் நாமத்தைப் பூஜிக்கிறாய்! பலன் என்ன, அந்தத் தேவன், ஆரிய சிருஷ்டி, ஆரிய வாழ்வுக்கு அப்பு அழுக்கு ஏற்படாதபடி பாதுகாப்புத் தேடுவதே, அந்தத் தேவனின் இலட்சியம்! அவருக்கு மூர்த்திகரம் தந்தவர்களும், ஆரியரே! ஆகவே, ஆரிய சேவாஸ்ர மத்திலே, அனுதினமும் தொழுதாலும் தில்லைவாழ் அந்தணர்தம் அடியார்க்கும் அடியேன் என்ற நிலையிலிருந்து, நாமார்க்குங் குடியல்லோம் நாதர்க்கன்றி, என்று பாடவோ, அந்தணர் ஏன்போர் அறவோர், ஆஅதிலார் அந்தணராகார் என்று கூறவோ, துணிந்தால், தேவன், துதித்து நிற்கும் உம்மையே தூக்கிக் கீழே வீசுவார். வேண்டாம் இந்த வீண் பூஜை! என்று எச்சரித்தபோது, பக்த காமராஜர், நம்மீது சீறி, ஏன் தேவன் பிழைபுரியான்! இவர் அவர் என்று பேதம் காட்டான். கல்லார்க்கும் கற்றவர்க்கும் களிப்பருளும் களிப்பன்றோ அவர் என்று கூறினார். தொழுகையை விடவில்லை! தேவன், பக்தருடைய பூஜைக்கு மெச்சிப் பிரசன்னமாகி, வரம் தந்தார்! என்னவரம்? ஐ! வம்பர் கூட்டத்தலைவா! பிடிசாபம்! என்றார், பக்தர், தேவன் தந்த பிரசாதத்தைப் பெற்றுக்கொண்டு, கண்ணீர் சொரிகிறார்.

“கண்ணா!” என்று கதறினேன். காதகனோ, துகிலை உரிகிறான். கணவன்மாரோ கற்சிலைகளாயினர், நானோ துடித்தேன். கூப்பிடு தூரத்திலேதான், மாவீர்களான ஏன் மணாளர்கள் இருந்தனர். நானோ, கண்ணனை அழைத்தேன். கண்ணீர் பெருகிற்று, இடையின் ஆளவோ குறைந்துபட்டது, நிர்வாணமாகிவிடவேண்டும் சில நிமிடங்களில்!” என்று புராணப் பாஞ்சாலி பேசினாலும், கடைசியில், மானங் காப்பாற்றப் பட்டது, மணிவண்ணன் அருளால், துகில் வளர்ந்தது., அதனை உரித்த உலுத்தன் சோர்ந்துகீழே வீழ்ந்தான். கண்ணீர் பெருகிற்று. ஆனால் களிப்புப் பொங்கிற்று. கயவனின் கண்கள் இருண்டன, சாய்ந்தான்” என்று முடிப்பார் அது ப்ôபால ஒவருக்கு ஒரு ஆம்மை என்ற முறை படிந்த புராணம் எழுதியவனும், துகில் உரியப்படவில்லை, கடைசியில் திரௌபதையின் மானங் காப்பாற்றப்பட்டது, என்றே முடித்தான்.

“கண்ணா!” என்று கதறியதும், கண்ணன் தோன்றி, காரிகையின் கண்ணீரையும் கண்டு, நன்று! நன்று! இந்த நீலிவேடம்! துகில்போயின் என்ன? திரௌபதே! நான் தந்த இயற்றைகத் துகிலைச் சாமான்யமென்றோ கருதினாய்! என்று கடிந்துரைத்திருப்பின், கண்ணீர் பெருவது நின்று போய், இரத்தமன்றோ பெருகி இருக்கும், காவலர் முன் மானபங்கம் செய்வதற்காகக் கூந்தலைப் பிடித்து இழுத்து வரப்பட்ட பராண திரௌபதிக்கு.

காமராஜர், காரிகை அல்லர், துகிலும் உரியப்படவில்லை, ஆனால் மக்கள் மன்றத்திலே நின்று கொண்டு, முறையிட்டுக் கொண்டிருந்த அந்த வீரனின், தன்மானம் ஒழிக்கப்பட்டது. காரிகையின் இடை மானங்காக்கத்தானே தன்மானம் போக்கப்படுவது, துகில் உரியப்படுவது போன்றதன்றோ! ஆச்சாரியாரின் படையால் தாக்கப்பட்டு, உண்மைக் காங்கிரஸ் ஊழியர்கள் நிர்மாணித்த ஆரணில் தங்கி, இனிநமக்குப் பயமில்லை என்று எண்ணிய காமராஜரின் கதி, பாஞ்சாலிக்கும் நடக்கவில்லை. ஆம்மையைக் கண்ணன் காப்பாற்றினார் - கணவன்மார்கள் கைவிட்டபோதிலும்! இங்கோ

காமராஜரின் கண்கண்ட தெய்வம், 20 வருடமாகப் பக்தி விசுவாசத்துடன் அவர் பூஜித்துவந்த தேவன், அவரைக் கைவிட்டார் - கைவிட்டதுடன் இல்லையே - பலிபீடத்துக்குத் துரத்தினார். ஆச்சாரியாரின் அடங்காத பசிக்கு ஆசையாகச் செய்தார். கதறிய பாஞ்சாலி முன்கண்ணன் தோன்றி, விரைவிலே துகில் உரியப்படுவதற்கான வழியைத் துச்சாதனனுக்கு எடுத்துக் கூறினார் என்றன்றோ தேசிய பாரதம் எழுதவேண்டி இருக்கிறது!

காந்தியாரின் அறிக்கையின் விளைவு என்ன? கண்ணீர் பெருக்கியபடி கைகூப்பித் தொழுதபடி, பக்த காமராஜர், ஐயனே! அருள்பாலிக்கும் மெய்யனே! அடியேன் பிழை எதும் செய்திலேன்! எனக்கோ இத்தண்டனை? குற்றமற்ற என்னைக் கொற்றவனே! நீர்மற்றவர் ஊரைகேட்டுத் தண்டித்தீர் எனினும் உமது கொற்றம் வாழ்க! இனியும் ஏழையேன், உமது அடிமையே! என்று பாசுரம் பாடிவிட்டார். தேர்தல் காரியக்குழுவிலிருந்து விலகிக் கொண்டதாகக் காமராஜர் அறிக்கை விடுமுன். கண்ணீர் சொரியவில்லை என்று யார் கூறத்துணிவர்?
வரலாற்றுச் சம்பவங்களிலே ஒன்று என்றே இதனைக் கூறுவோம். வதைக்கப்பட்ட வீரர்களிலே இவரும் ஒருவரானார் - எதிரியால் வதைக்கப் பட்டிருப்பின், வீரர் கோட்டத்தில் இடம் பெறலாம். இவரோ தனது தேவனால், சித்திரவதை செய்யப்பட்டார்.

சிலம்புடன் நின்ற கோவலனை மன்னன் சீற்றத்துடன் நோக்கி, களவாடிய கயவன்! அதை மறைக்க ஏதேதோ கதை பேசும் கபடன், என்று ஐசிக் காவலரை நோக்கி கொண்டு செல்லுங்கள் கொலைக்களத்துக்கு, இக்கள்ளனை என்று கூறியபோது, கோவலினின் கண்களிலே நீர் கொப்பளித்திருக்கும் - அந்தப்புனல், கனலெனக் கொதித்திருக்கும், இவனோ மன்னன்! என்னைக் கள்ளனென்று உரைத்த இவனோ அரசன்! ஏன் மனைவியின் காற்சிலம்பை விற்க வந்தேன். இங்குக் கள்ளனென்று பழிக்கப்பட்டேன். இதுவோ நீதி! என்று,

கண்ணீர் வடித்துக் கோவலன் கூறியிருக்கக் கூடும் - இல்லை! அந்த ஆநீதியின் போக்கு, அவனுக்குப் பேசவும் முடியாத நிலையை உண்டாக்கியிருக்கும். பேசமட்டுமா செயலையும் சிந்தனையையும் போக்கிவிட்டிருக்கும் - திடீரென - எதிர்பாராத விதமாக குற்றமற்ற தனக்குக் கள்வன் என்ற இழிபட்டமும் கொலைத் தண்டனையும் ஒரு கொற்றவனால் தரப்பட்டது என்று தெரிந்ததும் - கோவலன் திகைத்துப் போயிருப்பான். பேசமுடியாத நிலைமை சிந்திக்கவும் முடியாத நிலைமை - சிந்திக்கவும் முடியாத நிலைமை ஏற்பட்டிருக்கும். விருதுநகர் வீரனும் வழியில் நீர் தளும்ப, திகைத்துப் போயிருப்பார், கோவலன் கொற்றவன் முன்நின்ற கோலத்தை விட, இவருடைய கோலம், பரிதாபத்துக்குரியது. இவருக்குத் தரப்பட்ட "தீர்ப்பு" வழக்கு மன்றத்திலே இவரை நிற்கவைத்து நீதிதேவன் தந்ததல்ல, இவர் தொழுது முடித்ததும் எந்தக் "கண்கண்ட தெய்வத்தைத் தொழுதாரோ, அவர் வழக்கை விசாரிக்காமலேயே. அளித்த தீர்ப்பு!! கோவலன் கண்ணீர் எம்மாத்திரம்!

ஏன் கணவனைக் கள்ளனென்று கூறிய நீயோ காவலன்? என்று சீறிக் கேட்டு, மன்னனை மாண்டிடச் செய்த மறக்குடி மகளிராம் கண்ணகி போலக் காமராஜருக்கு யார் உள்ர்? அவர் அடைந்த திகைப்பைக் கண்டதும், மற்றவர்கள், திகில் கொண்டவராகவன்றோ போயிருப்பர். புகலிடம் எது? எங்கே போவது? ஏவரிடம் முறையிடுவது? வார்தாவுக்கு மேலான நீதிமன்றம் எது? எனவே, திகைப்படைவது தவிர வேறுவழி இல்லை! வேங்கையிடமிருந்து தப்பிப் பிழைக்க, குகைக்குள் ஓட, அங்கு சிங்கமிருந்த கதை போலாயிற்று! துராத்மாக்கள், தொல்லை கொடுத்தால், மகாத்மாக்களிடம் முறையிட்டு, துராத்மாவைத் தண்டிக்கச் செய்யலாம் அதுவே முறையுங்கூட! மகாத்மாவே தண்டனை தந்த பிறகு, ஏன் செய்வது? சகாக்கள் சங்கடம் விளைவித்தால் சபர்மதிச் சன்னிதானம் போய்ச் சமர்ப்பிக்கலாம் வழக்கை, சன்னிதானமே "பிடிசாபம்?" என்று கூறி விட்டபோது எங்கே போவது? என்ன செய்வது? யாரிடம்

முறையிடுவது? காமராஜரின் திகைப்பின் காரணம் இதுவே!

காந்தியார், தேசியத்தின், நாட்டு விடுதலைக் கிளர்ச்சியின் தலைவர், அவருடைய கண்வன், யாவரும் ஒன்றே, உயர்சாதி என்று உறுமிக்கிடக்கும் உலுத்தருக்கு அந்த உத்தமர் இடந்தரமாட்டார், குற்றம் புரிபவர் யாராயினும் அவர் தண்டித்தே தீருவார், அவருடைய நீதிச்சக்கரம் பிழைபட உருளாது, அவருக்கு வேதியராயினும் அன்றி வேறு குலத்தவராயினும் ஒன்றே, அவர் ஓர் மகாத்மா, ஆகையால் அவர் மனத்திலே, மாசு மருவு இருக்க நியாயமில்லை - என்று நமக்குச் சமாதனாம் கூறக் காங்கிரஸ் தமிழர்கள் தவறியதில்லை. சமாதானத்தைக் கொஞ்சம் சூடாகவே சொல்வதிலும் அவர்களுக்கு ஒரு திருப்தி.

காங்கிரஸ் என்பது தேசியத் தேவலாயம், அங்குக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தேவனே மகாத்மா, அவரைத் தொழுவதே தேசபக்தன் கடமை, அந்த இலயத்திலே அனைவரும் சமம், பேதம் இல்லை, என்று பேசப்பட்டாலும், அதன் அமைப்பு முறை, வேலைத் திட்டம், நிர்வாகிகள் போக்கு என்பவைகளைக் கவனித்து, ஒரு முறைக்குப்பல முறை பரீட்சித்துப் பார்த்தான பிறகே, அது ஆரிய சேவாஸ்ரமமே தவிர, தேசிய ஸ்தாபனமல்ல, அதுருபோலக் கருதிக்கொண்டு மற்றவர்கள் செய்யும் கைங்கரியம், தரும் காணிக்கை யாவும், ஆரிய உயர்வுக்கே பயன்தரும், என்று நாம் எச்சரித்தோம், நாம் ஜனம் செய்யப்பட்டோம், கண்டிக்கப் பட்டோம், எனினும் நமது பேச்சை மாற்றிக்கொள்ள மறுத்தோம், ஆரிய சேவாஸ்ரமத்திலே ஆனந்த ஆர்ப்பரிப்பு அதிகரித்த போதிலும், நாம் நமது பேச்சை மாற்றிக் கொள்ளவில்லை, ஏனெனில், நாம் மனமார அதனை நம்புகிறோம், மெய்ப்பித்துக் காட்டவும் தயாராயிருக்கிறோம். காங்கிரஸ் பார்ப்பனீயப் பாதுகாப்புச் சபை என்று நாம் கூறின பச்சைப்பேச்சு, நச்சு,

நினைப்பல்ல, இச்சகம் பேச நாம் மறுத்ததால் உண்மையை உரைத்தோம்.

“காங்கிரசா, பார்ப்பன சபை? முழுப்புரட்டு! தமிழ்நாட்டவரே! நம்பாதீர் அந்தத் தருக்கர் உரையை! தமிழ்நாட்டுக் காங்கிரசின் தலைவர் யார்? ஐயரோ? இல்லை! காமராஜரன்றோ தலைவர்! அவருடைய தலைமையிலே நடைபெறும் காங்கிரசைப் பார்ப்பனசபை என்று கூசாது பொய்யுரைக்கும் குறும்பரை என்னென்பது!” என்று ஐசினர், காங்கிரஸ் தமிழர் தலைவர் காமராஜ் தடையில்லை! ஆனால், முடி யார் சிரத்தில் இருந்தாம் பிடி பார்ப்பனிரிடமே இருக்கும், கூர்ந்துபார் அன்பனே! கோபம் குறûந்த பிறகாவது பார் தோழனே!” என்று நாம் கூறினோம். காமராஜரின் தலைமைப் பதவியின் நிலைமை என்னவாயிற்று? தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தலைவர், காங்கிரசின் தூய்மைக்காக என்று கருதி, சகாக்களைக் கலந்து சம்மதம் பெற்று, மக்களிடம் கூறி அவர்களின் சம்மத்தையும் பெற்று, அதற்குப் பிறகு, ஆச்சாரியார், 1942ல் காங்கிரசின் போக்கைக் கண்டித்தவர் ஆகையால், அவரைப் பிரதம பீடத்தில் ஏற்றக்கூடாது என்று தெரிவித்தால். இதிலே, நீதிபதி ஸ்தானம் காமராஜருக்கு, அவர் தமிழ்நாட்டுக் காங்கிரஸ் தலைவர் ஆகையால்! குற்றவாளிக் கூண்டிலே ஆச்சரியார், எந்தக் காங்கிரஸ்வாதியும், தவறு இழைத்ததாகக் கருதப்பட்டால், கூண்டு ஏறித் தீரவேண்டும் என்ற நியதிப்படி. இதிலே நீதிபதி, ஒரு தீர்ப்பு அளித்தார்! சட்டமுறைப்படி, ஆச்சாரியார், காமராஜரின் தீர்ப்பை எதிர்த்து, “மேல் கோர்ட்டுக்கு” அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டிக்கு மனுச் செய்துகொள்ளலாம். அதுதான் ஒழுங்கு, ஆனால் என்ன நடந்தது? காமாஜரின் தீர்ப்பை “சட்டை” செய்யாமல், ஆச்சாரியார் பவனிவந்தார், சில பராக்குக்காரர் உடன்வர! என்ன கூறிக்கொண்டுவந்தார். “திறமை சாலிகளைத் தேர்தலின்போது தேர்ந்தெடுங்கள்” என்று அதன் பொருள் என்ன? நாமே வெட்கப்படுகிறோம், தமிழ்நாட்டுக் காங்கிரஸ் நிர்வாகிகள், ஏன் இந்த நிந்தனையைப் பொறுத்துக் கொண்டார்களோ என்பதை

எண்ணும்போது! இதற்கே அவர்மீது காமராஜர் ஒழுங்கு நடவடிக்கை எடுத்துக் கொண்டிருக்கலாம். செய்யவில்லை அச்சத்தாலோ, அன்பாலோ, அலட்சியத்தாலோ அல்லது இலய சேவையிலே இலயித்ததாலோ ஆச்சாரியார் என்ன செய்தார்? படை திரட்டினார்! படை என்ன செய்தது? திருப்பரங்குன்றத்திலே, காமராஜரின் படைவரிசையுடன் கைகலந்தது. ஆச்சாரியார் போக்கைக் காங்கிரஸ் தீரர்கள் கண்டித்தனர். குன்றத்திலே, இவர்கள் கூடிப் பேசியபோது, ஆச்சாரியார் குற்றாலத்திலே குறுநகையுடன் உலவினார். ஏன் குறுநகை? “என்ன பித்தம் இந்தக் காமராஜருக்கு? பலர் கூடி, தமிழ்நாட்டுக் காங்கிரசின் தலைவர் என்று சத்தமிடுவதை நம்பி என்னை விசாரிக்கும் அளவுக்குத் துணிந்தாரே, இது நிற்குமா நிலைக்குமா? ஏன் நினைப்பு அறிந்தால், போதுமே, காந்தியாரின் கட்டளை பிறந்துவிடுமே! இலட்சிய பூஷணத்தை ஆயுதமாகக் கொண்டு என்னை எதிர்க்கத்துணியும் இந்த இளையோனை, வீழ்த்த எத்தனைநாள் பிடிக்கும். வெளிப்படையாகச் செய்தால், விநாடியில் வீழ்த்திவிட முடியும் என்றாலும், இதனைச் சுட்டிக்காட்டி, “இன எழுச்சிக்காரர்கள்”, திராவிடர் கழகத்தார் பயன்படுத்துவரே என்று பார்க்கிறேன். ஏன் தயக்கத்துக்குக் காரணம் அதுதானே! அதனை உணராது, வீரஊரை ஆற்றும் விருதையானிடம் நான் ஐதோ பயப்படுகிறேன் என்று அந்த இளையோன் எண்ணுகிறான் வீணாக. ஏன் அச்சம் உரோட்டுக்குச் செய்தி போகிறதே என்பதன்றி, மயிலப் பக்தவத்சலமும் மாங்காட்டு முத்துரங்கமும் விருதைக் காமராஜøம், கூடினரே என்பதா? இதனை அறியாது, போயினரே அவர்கள் என்று எண்ணியே குறுநகை புரிந்தார். அவருடைய கவலை எல்லாம், காமராஜரின் வேகம் தானாகக் குறையவேண்டும், தடுத்துக் குறைத்ததாக வெளியே தெரியக்கூடாது என்பதே தவிர, வேகம் அதிகரிக்கும், அல்லது தன்னை வீழ்த்திவிடும் என்பதல்ல.

அரசியல் அரங்கிலே ஆசப் ஆலி வந்தார், வந்தபோது நீதிபதியைக் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தி வைத்தார்!! முதலில், குற்றவாளிக் கூண்டில் நீதிபதி காமராஜர்! ஆசப் ஆலியின் நீதிமன்றத்திலே, காமராஜரும் ஒரு குற்றவாளி போலவே விசாரிக்கப்பட்டார். கீழ்க்கோர்ட்டுத் தீர்ப்பை மாற்றவும் ரத்துசெய்யவும் மேல் கோர்ட்டு உண்டு, ஆனால் கீழ்க் கோர்ட் நீதிபதியை, (விசாரணை செய்த குற்றத்திற்காக)க் குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தும் முறை, அவருடைய நீதிபதி ஸ்தானம் இருக்கும் போதே, அதாவது காமராஜர் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவராக இருக்கையிலேயே, ஆசப் ஆலி அவரை விசாரித்தது, விசித்திரமாக சட்டம், ஆனால் அதுதான் வர்ணாஸ்ரம வேலைத்திட்டம்.

ஆச்சாரியார் பக்கம் தீர்ப்பு! கோடு உயர்ந்தது குன்றம் தாழ்ந்தது! தாழ்ந்த குன்றம் கவிழ்ந்தது, ஆச்சரியத்துக்கு உரியதா? இன்று கவிழ்ந்தும் போயிற்று.

காந்தியார் வந்தார் - தரிசனம் தந்தார் - தீண்டாமையைக் கண்டித்தால் - திருக்கோயில் பூசித்தார் - சென்றார். ஆனால் இதற்கா வந்தார்? இம் எனின் ஏன், காமராஜர்கள் அவருடன் குலவ முடியவில்லை. ஏன் பூசுரக் கூட்டமே அவரைப் புடை சூழ்ந்து நின்றது? அவரை வரவேற்கவும் மாலையிடவும், உணவு அளிக்கவும் ஊர்வலமாக ஆ௹த்துச் செல்லவும், உடன் இருக்கவும் உபசரிக்கவும், ஏன், அந்தக் குலத்துக்கே “மிராசு” கிடைத்தது? காங்கிரசின் ஜீவன் வந்திருக்க, தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தலைவர், ஏன், அருகே காணோம் - என்று நாம் கேட்டோம். வழக்கப்படி “காமாலைக் கண்ணனுக்கு எதிலே குற்றம் காணலாம் என்பதே வேலை!” என்று தேசபக்தர்களால், கண்டிக்கப்பட்டோம். கவலைப் படவில்லை. காரணம், கண்ணடித்தவர்கள், நிலைமையை உணராது பேசுகின்றனர் என்பது தெரியுமாதலால், காந்தியாரின் சென்னைப் பயணம், ஆச்சாரியாருக்கு முடிசூட்டத்தான் பயன்படும் என்று கூறினோம் - கண்டிக்கப்பட்டோம். இந்தவிதமான எண்ணம், நமக்கு மட்டுமல்ல, காங்கிரஸ்

ஏடுகளிலே சிலவற்றுக்கு ஏற்பட்டன. “சிவாஜி” என்ற ஏடு. 10-2-46ல்.

“மாகத்மாவின் விஜயத்தை, திரு. இராஜகோபாலாச்சாரியாரும் அவர் கோஷ்டியினரும் தங்களுக்கு அனுகூலமான வகையில் ஒரு அளவு பயன்படுத்திக் கொண்டார்கள். மகாத்மாவின் வாயால், திரு. இராஜகோபாலாச்சாரியாரைப் பாராட்டும்படி செய்து அதைப் பிரசாரம் செய்வதற்குப் பயன்படுத்திக் கொண்டார்கள். காந்திஜியின் அருகில் நடமாட சி.ஆர். கோஷ்டியினருக்குத்தான் உரிமையிருப்பது போலச் சொந்தம் பாராட்டினார்கள்”

என்று எழுதிற்று பெஜவாடாவிலே ஒருவர், காந்தியாரைக் கேட்டேவிட்டார். “ஆச்சாரியாருக்காகத் தானே தாங்கள் சென்னை வந்தீர்கள்” என்று காந்தியார் கோபத்தோடு, “அப்படி ஒன்று இல்லை! ராஜாஜி விவகாரமாக நான் கவனமே எடுத்துக் கொள்ளவில்லை” என்று கூறினார். உடனே ஒரு குதூகலம் பிறந்தது காமராஜர் சகாக்களுக்கு.

“திரு. இராஜகோபாலாச்சாரியாரைப் பற்றிப் பேசும்படி தன்னைப் பலர் கேட்டுக் கொண்டதாகவும் அதற்கு மறுத்துவிட்டதாகவும மகாத்மா வெள்ளையாகப் பேசியிருப்பது, மகாத்மா காந்தி ஒரு மகாத்மாதான் என்பதை எடுத்துக் காட்டுவதோடு, திரு. இராஜகோபாலாச்சாரி கோஷ்டியினர் ஒரு சதிகாரக் கூட்டம் என்பதையும் ஊர்ஜிதப்படுத்துகிறது” என்று சிவாஜி வெற்றிச் சிரிப்புடன் விளக்கம் கூறிற்று.

வார்தாவிலிருந்து கிளம்பிற்று அறிக்கை. அறிக்கையா? இல்லை! ஆறுதி எச்சரிக்கை!

எந்த ஆச்சாரியார், காங்கிரசின் கண்ணியத்தை, கட்டுப்பாட்ûடை, கட்டளையைக் காற்றிலே உதிர் சருகு என்று கருதினாரோ, அவருடைய சேவையைத் தமிழ்நாடு இழக்கக் கூடாது என்று காந்தியார் கூறினார்.

ஆச்சாரியார், ஆகஸ்டுக் கலவரத்தை ஆதரிக்கவில்லை, கண்டித்தார் தியாகிகளைப் பழிக்கிறாரே என்று காமராஜர் கலங்கினார், காங்கிரசுக்கே இது துரோகம் செய்வதல்லவா என்றார், ஆம்! இது அக்ரமம்! துரோகம்! காங்கிரஸ் பெரிதே தவிர ஆச்சாரியார் அல்லர்! என்று தமிழ்நாட்டுக் காங்கிரசார் கூறினர் : நாடெங்கும் ஆகஸ்ட்டுத் துரோகி ஆச்சாரியாருக்கு இடம் கொடாதே என்று ஆர்ப்பரித்தனர், அந்தத் துரோகத்தை பற்றிக் காந்தியார், தமது அறிக்கையிலே, என்ன கூறினார்? 1942ல் ஆச்சாரியா;ர நடந்து கொண்டதை நான் அறிவேன். அவருடைய வீரமும் விவேகமும் போற்றத்தக்கன! ஆச்சாரியாரைத் துரோகி என்று நாடு கூறினால் என்ன, காந்தியார் அவரை வீரர், விவேகி என்று (அதே விஷயத்துக்காக) பாராட்டுகிறார். காமராஜர், வீரர், தியாகி, பக்தர், வீண் கிளர்ச்சிக் காரரல்லர், அவருக்குப் பொதுமக்கள் ஆதரவு இருக்கிறது, ஆச்சாரியார் மீது அவருக்குத் துவேஷமோ, அவரைக் கவிழ்க்க வேண்டுமென்ற கெட்ட எண்ணமோ கிடையாது, காங்கிரக்குக் கண்ணியம் இருக்கவேண்டுமென்பதற்காகவே அவர், தமிழ் நாட்டுக் காங்கிரசாரின் பெருவாரியான சம்மதத்தைக் கேட்டுப் பெற்றபிறகு, ஆச்சாரியார் போக்கைக் கண்டித்தார், என்று மக்கள் மன்றத்திலே பேசிக் கொண்டனர், மகாத்மா காமராஜர் கூட்டத்தை சதிகாரக் கும்பல் என்று கூறிவிட்டார். இப்ண்வ்ன்ங் என்ற ஆங்கிலப் பதத்தை உபயோகித்தார் காந்தியார் இது மிகமிகக் கடுமையான சொல் என்று தினமணி கூறுகிறது. மட்ட ரகத்தைத்தான் கும்பல் என்று அழைப்பதார்கள்! இருபது ஆண்டுபக்தி விசுவாசத்தின் பலனாகக் காமராஜர் கண்டது, தானும் தன் நண்பர்களும், ஒரு விவேகியை, வீரரை, வீழ்த்துவதற்காக வேலை செய்யும் கும்பல் என்று காந்தியாரால் அழைக்கப்பட்டது தான்! எவ்வளவு பூஜை! அதற்குக் கிடைத்த பலன் எவ்வளவு அருமை!

நான் சென்னைக்குச் சென்றது, இந்திப் பிரசாரத்துக்கே தவிர, ராஜாஜி விஷயமாக அல்ல என்று கூறிய காந்தியார், என்னிடம் சிலர் ராஜாஜி விஷயமாகக்

கேட்டார்கள் நான் எதும் கூறமுடியாது என்று கூறிவிட்டேன் என்று பெஜவாடாவில் பேசிய காந்தியார், எதற்காக எந்த நெருக்கடியைத் தீர்க்க, எந்த மகத்தான ஆபத்து தமிழகத்துக்கு வராதிருக்கச் செய்ய திடீரென்று வார்தாவிலிருந்து, “ராஜாஜியை ஒரு கும்பல் தொலைத்துவிடக் கருதுகிறது” என்ற எச்சரிக்கையையும், ராஜாஜி, விவேகி வீரர் என்ற சிபார்சையும், “அவருடைய சேவையைத் தமிழ்நாடு ஆகழலாகாது” என்ற மிரட்டலையுமம அறிக்கை வடிவிலே ஐவவேண்டும்? காங்கிரசிலே நாலாணா அங்கத்தினருமல்லாத் என்னை ஏன் இதையெல்லாம் கேட்கிறீர்கள்ஏ ன்று நாசுக்காகப் பேசும் காந்தியார், ஏன், காமராஜர் விஷயமாக கனல் கக்க வேண்டும்? கவலை எடுத்துக் கொண்டவர், அதை ஏன் சென்னையிலே கூறாது, வார்தா சென்று கூறினார்? கூறுமுன்பு, சென்னையிலே காமராஜரை அழைத்து விசாரித்தாரா? மட்டரகமான “கும்பல்” என்ற பதத்தை உபயோகிக்க வேண்டிய அளவு, காமராஜரும் அவருடைய சகாக்களும் செய்த காரியம் என்ன? ராமும் ரஹீமும் ஒன்றே என்னும் பஜனையில் உடுபட்டிருந்த மகாத்மாவுக்கு இந்த விஷயமாக விசாரிக்க நேரம் இருந்ததா? காமராஜர் போன்றவர்கள் ரொம்ப மட்டரகம், அது ஒரு கிளிக் என்று யாராவது சொல்லியிருந்தாலொழிய, இவராக அந்த முடிவுக்கு வர முடியுமா? இவர் அந்தக் கிளர்ச்சி சம்பந்தமாகக் கவலை செலுத்தியதாக இதாராமும் இல்லாதபோது, அவருடைய வார்த்தையை பிறர் செருகிறது என்றுதானே கொள்ள முடியும்? காமராஜரையும் அவருடைய நண்பர்களையும் “கும்பல்” என்று கேவலப்படுத்திப் பேசியவர் யார்? அவர், காமராஜரைவிட, வீரத்தில் தீரத்தில் தியாகத்தில் அறிவில் ஆற்றலில் உயர்ந்தவரா? என்ன ஊரைகல்? யார் இருக்கிறார்கள் கேட்க!!

“காமராஜரின் கும்பல்” பற்றிக் கேள்விப்பட்ட உடனே காந்தியார், சத்திய சோதனையில் உடுபட்டுள்ளவர், செய்ய வேண்டியது என்ன, ஜார்கூட, “கும்பல்” மீது விசாராணை செய்யாது பாய்ந்திடவில்லை! போலி

விசாரணையாவது நடந்திருக்கும். காந்தியார், ஏன் காமாஜரை விசாரித்திருக்கக் கூடாது? காமராஜர் காநதியாரைக் காணவில்லையோ? கண்டார்! கேளுங்கள் காமராஜரின் சோகம் கப்பிய பேச்சை, “காந்தியாரை நான் தரிசித்தேன். தரிசனம் தந்த மகாத்மா, விசாரித்தாரா? இல்லை! ஒய்வு இல்லையோ? ஒரு முறைக்கு இருமுறை, காங்கிரசில் சேராத காங்கிரசைக் கண்டித்த, ஏகாதிபத்தியத்தின் செல்லப்பிள்ளையாக இருந்த, மகாகனம் சாஸ்திரியாரை, காந்தியார் போய்ப் பார்த்துப் பேசிவர நேரம் இருந்ததே, காமராஜரிடம் பேசத்தானா நேரம் கிடைத்திருக்காது!! எவ்வளவு அலட்சியப் படுத்தப்பட்டார், காமராஜர்! அதை அவர் எவ்வளவு சாந்தத்துடன் பொறுத்துக் கொண்டார்!! எவ்வளவு சகிப்புத்தன்மையுடன் காமராஜர், அந்தப் பத்து நாள்கள் இருந்தார். இஷ்டஜன பந்து மித்ராளுடன் குசலம் விசாரித்துக் கொண்டும், உபசாரம் பேசிக் கொண்டும், காந்தியார் இருந்த அந்தப் பத்து நாள்களும், காந்தியாரைப் புகழ்ந்து பாடாத நாளெல்லாம் பிறவா நாளே என்று கருதிக் கொண்டிருந்த காமராஜர், பொள்ளாச்சிக் குருடரிடமாவது காந்தியார் பேசினார் இருமுறை, பஸ் ஓட்டுபவரிடமாவது பேசினார், பாவி நான் அந்தப் பாக்கியம் செய்யவில்லையோ, பண்ணேனுனக்கான பூஜை பலநாளுமே பாலித்தருளாயோ, ஏன் கசிந்து உருகினாரோ என்னவோ! காமராஜர், ஜலதோஷம் பிடித்ததால் காந்தியார் அருகே போகமுடியாது இருந்தாரோ? இல்லை! அருகேயே இருந்தார்! அந்தப் பரிதாபத்துக்குரிய கண்ணியவான் கூறுவதைக் கேளுங்கள் - கேட்டுவிட்டுக் கண்ணீரைத் துடைத்துக் கொள்ளுங்கள். “நான் காந்தியாருக்குக் கூப்பிடு தூரத்தில் தான் இருந்தேன். என்னிடம் இதுவிஷயமாக அவர் எதும் பேசவில்லை என்பத எனக்கு வேதனையாக இருந்தது” என்று கூறினார். கூப்பிடு தூரம்! கூப்பிடு தூரம்!! ஒரு குரல், “காமராஜ்!” என்று கிளம்பியிருந்தால். “பாபுஜீ!” என்று பக்தர், பரவசத்தோடு, கூறிக்கொண்டே அருகே போயிருப்பார், கேட்ட கேள்விகளுக்குப் பதில் கூறியிருப்பார், தவறு இது என்று காட்டியிருந்தால் திருத்திக் கொள்வார், இப்படி நட

என்று கட்டளையிட்டால் கூட ஏற்றுக் கொண்டிருந்திருப்பார், ஆனால் பாபூஜீ, கூப்பிட்டால்தானே! காமராஜர், கூப்பிடு தூரத்தில்தான் இருந்தார்! கோகில கானம்பாட, கோபாலசாமிகள் தாளம் போட, ஆரியம் ஆனந்தமாக இட, அதைக் கண்டு களித்துக் கொண்டு, ஆமிர்தகுமாரியும், சுசிலாதேவியும், புடை சூழ வீற்றிருந்த பாபூஜீக்கு, கூப்பிடு தூரத்திதலே காமராஜர் இருந்தால் என்ன! எப்படிக் கூப்பிடுவார்கள்? ஏன் கூப்பிட வேண்டும்! அவ்வளவு கவனிப்புக்கு உரியவரா? அவர், தமிழ்நாட்டுக் காங்கிரசுக்குத் தலைவராக இருக்கலாம்! இருக்கட்டுமே! அதற்காக, சம்பந்தியிடம் சண்டை பிடிக்கும் துணிவு கொண்ட பேர்வழிக்கு, “தரிசனத்திலே” இடங்கொடுத்தே, ஒயோ பாவம் என்பதற்காக! கூப்பிட்டு வேறே பேச வேண்டுமா? - என்று கருதினர் போலும் கூப்பிடு தூரத்தில் இருந்தார், கூப்பிடப்படவில்லை! கேட்பார் கூறலாம் என்று இவலுடன் இருந்தார், எதும் கேட்கவில்லை! போய்விட்டார், இனி ஆச்சாரியார் விஷயமாகப் புகை எதும் இராது என்று நம்பினார், அப்போதுதான் வார்தாவிலிருந்து வீசினார் வெடிகுண்டு! கூப்பிடு தூரத்தில் இருக்கும்போது வீசமுடியாதல்லவா? ஆகவே தாமதம்!

காமராஜர் என்ன செய்வார்? புண்பட்ட மனம்! ஆனால் சேவை செய்யும் பண்பிலே பழக்கப்பட்டுப் போனார். எனவே, ஆச்சாரியாருடன் தகராறு வருவப்த்த் தடுத்துக் கொள்ளவேண்டும். ஆபாயச்சங்கு உதியதும், குப்புறப்படுகிறார்கள்! காந்தியாரின் அறிக்கை வந்ததும், சட்டசபை சம்பந்தமாகத்தானே சச்சரவு வருகிறது. நான் தேர்தல் கமிட்டித் தலைமைப் பதவியை ராஜிநாமாச் ப்ச்யகிறேன், என்று கூறிவிட்டார். வேறு வழியில்லை! நாம் கூறுவதல்ல! அந்த வேதனை தரும் வாசகத்தை இருமுறை, காமராஜர் தமது அறிக்கையிலே உபயோகிக்கிறார். ஆச்சாரியாரால் ஆலைக்கழிக்கட்பட்டு, கல்கியால் சின்னத்தலை யாக்கப்பட்டு, காந்தியாரால், அலட்சியப்படுத்தப்பட்டு, கடைசியில், வார்தா அறிக்கையால், வதைக்கப்பட்டு காமராஜர் கண்ணீர்

பெருக்கிநிற்கும் காட்சி, தமிழன் உள்ளத்திலே இழப்பதிந்து விட்டடது.

வேறு வழியில்லை! ராஜிநாமாச் செய்கிறேன்!!

காப்பாற்றுவார் இல்லை! கிணற்றில் விழுகிறேன்!!

குற்றம் செய்தவனல்ல! ஆனால் தண்டிக்கப்படுகிறேன்!

இவற்றைச் சொல்பவருக்குக் கூடச் சிரமம் இல்லை, கேட்கிறோமே நமது செவியால், நம்மால் சகித்துக் கொள்ள முடியவில்லை!

போர்க்களத்திலே எதிரியின் வாளுக்கு மார்கட்டி, மண்மீது சாயும், சகோதரனைக் காணலாம். சகித்துக் கொள்ளலாம், எங்கே நமது அண்ணனைக் கொன்றவன் என்று தேடலாம், போரிடலாம், அவனை வீழ்த்தலாம், அல்லது நாமும் சாகலாம் வழி உண்டு. ஆறுதல் பெற!

மாற்றானின் வஞ்சக மாளிகைக் குள்ளே புகுந்துகொண்டு, அவன் மனம்போன போக்குக்கு ஏற்றபடி எல்லாம் நடந்துகொண்டு, கடைசியில் அவன் ஐசிப் பேச, அது பொறாமல், மாளிகையிலே ஓரிடத்தில் தூக்கிட்டுக்கொண்டு, ஏன் ப்ச்யவேன்? நான் இருந்தால்தானே இந்தக் கொடுமை இதோ சாகிறேன் என்று சாளரத்தருகே நிற்கும் தம்பியின் செவியில் விழும்படி, அண்ணன் அலறினால், எப்படிக் கேட்டுச் சகித்துக் கொள்ளமுடியும்! ஆறுதல் பெற வழி இல்லையே! மறைக்கவும் முடியவில்லையே!

இனி என்ன நடக்கும்? காமராஜர் புரட்சி செய்யப் பார்த்தார், அடக்கப்பட்டார், என்று, ஆரிய ஏட்டிலே பொறிக்கப்படும் காமராஜர் கண்ணீர் பெருக்கிக்கிடக்க, ஆச்சாரியார் காந்தீயப் பன்னீரில் குளித்தெழுந்து, பதவிப் பட்டாடை உடுத்திக் கொண்டு, பவனி வருவார். ஒரு சமயம், ஆ;தப் பவனிக்குக் காமராஜரே சாமரம் வீசச் செய்யப் படலாம்! தமிழ்நாட்டுக் காங்கிரசுக்குக் கோவை சுப்பைôவோ, வேலூர் குப்பரோ தலைவராகக் கூடும்! காமராஜர்,

இலட்சோபி இலட்சத்தில் ஒருவர் என்று ஆகக்கூடும். இவ்வளவு கூட இந்த வீரருக்கு முடிந்ததற்குக் காரணம். சில ஏடுகள் இவரை இதரத்ததால் தானே! இனி இந்த ஏடுகள், விஷயத்துக்கு மூடி போட்டு விடும். போடத்தானே வேண்டும் இல்லையேல், வீரர்கள், தியாகிகள், என்ற விருது பெற்றவர்களைக் கும்பல் என்று கூறிய காந்தியார், தேசீய தினசரி, பாரத தேவியின் முரசு, சுதந்திரத்தின் சங்கு, தேச சக்தியின் மணி ஓசை என்ற விருதுகள் பெற்ற ஏடுகளை, “குப்பை” என்று கூறி விடுவார். இன்று அந்த ஏடுகளெல்லாம், “இப்படி நடக்குமென்று தெரியாமல் போய்விட்டதே! காந்தியார் இதிலே தலையிடமாட்டார் என்றல்லவா எண்ணி ஏமாந்துபோனோம்” என்று நடுக்கும் குரலில் பேசும் பாவம், ஆவப் என்ன செய்ய முடியும்! தினமணி எழுதியபடி, தர்ம சங்கடமான நிலைமைதான்! வெற்றி பெற்ற பிறகு ஆச்சாரியாருக்குத் துதிபாடும்! ஏன்! இன்னும் சில ஏடுகள், இன்று இல்லாவிட்டால் சின்னாட்களுக்குப் பிறகு, காமராஜரின் உண்மை நோக்கம் தெரியாமல் நாம், அவருடைய முயற்சியைக் கண்ணியமான காரியம் என்று நம்பி ஏமாந்து போனோம். அவர் ஓர் வகுப்புவாதி என்று இப்போதுதான் தெரிகிறது. அதனை முன்கூட்டியே தெரிந்தால்தான் ராஜாஜியும்ம காந்திஜியும் அவரை எதிர்த்தனர், என்று எழுதுவுங்கூடும்!

காமராஜரின் எதிர்காலத்தைப் பற்றி நாம் கவலைப்படவில்லை. அவர் அதனைச் சித்தரித்துக் கொள்ள வேண்டியவர் - சக்தி இருந்தால்! தமிழன், காங்கிரசிலே சேர்ந்தால் இலட்சியங்கள் பூர்த்தியாகும் என்று பேசுகிறார்களே சிலர், அவர்கள் காமராஜரின் கண்ணீரைக் கண்டு, தெளிவடைவ ர் என்பது உறுதி. தமிழன் வீரத்தால், தியாகத்தால், தேசபக்தியால், காமராஜர் போல, தமிழ்நாட்டுக் காங்கிரசுக்குத் தலைவராகலாம்! ஆனால் தக்க காரணம் இருப்பினும், தமிழ்நாட்டுக் காங்கிரசே தன்பக்கம் இருப்பினும், ஒரு தர்ப்பா சூரனையாவது, எதிர்க்கத் துணிந்தால், எத்தனை வருஷம் பக்தியோடு பூஜித்திருந்தாலும், பூஜையை ஏற்றுக்கொண்ட தேவனே, பிடி, சாபம்!! என்றுதான்

கூறுவார் காங்கிரஸ், என்பது ஆரிய சேவாஸ்ரமம் என்பது இச்சம்பவத்தால் உறுதியாயிற்று. கருத்துள்ளோர் யாவரும் காணலாம் காமரஜரின் கதியைக் கண்டு, பாடம் பெறலாம்.

ஆனால் காமராஜர், காங்கிரசைவிட்டு விலகுவார் என்று நாம் நம்புகிறோமா? இல்லை! நம்பவுமில்லை! அவருக்கு அந்த யோசனையைக் கூறவுமில்லை. திராவிடர் கழகம் நெருக்கடியான நேரத்தில் கண்ணீர் வடித்துக் கொண்டு வேறுவழி இல்லையே என்று கூறும், “பக்தர்களை” அழைக்கவில்லை. தேவையில்லாததால்! காமராஜார்கள், அங்கேயே இருக்கட்டும். ஆனால் ஒரு விஷயத்தை மட்டும் உறுதியாக நம்பட்டும், அவர்கள் படும் அல்லலை. அவர்கள் அங்கு ஆரியத்தால் அடக்கப்படுவதை, அவர்களின் ஆண்மை மங்குவதை திராவிடர் கழகம் கவனித்து வருகிறது. ஆரியத்துடன் ஆக்கழகம் நடத்தும் போரிலே, அவர்கள் சார்பாகவும், நிச்சயமாகத் திராவிடர் கழகம் பேசும்! காமராஜரின் கண்ணீரைத் திராவிடர் கழகம் கருப்புச் சட்டைப்படை துடைக்கும் - அவர் அடைந்த கதியால், தமிழனுக்கு ஏற்பட்ட தாழ்நிலையை, ந்சிசயமாகத் திராவிடர் கழகம் போக்கும், வீழ்ச்சியுற்ற இனத்திலே, இதுபோல விழியில் நீருடன், வீரர்கள், இருப்பதுண்டு, ஆனால், எழுச்சி பெற்றதும், அந்த இனத்திலே தோன்றும் வீரர்கள், முன்னவர் சிந்திய கண்ணீரைக் கவனத்திலுலிருத்தி மாற்றான் மண்டியிடும் அளவு வெற்றிபெற்று அந்த வெற்றிநாளன்று, வீழ்ந்து கிடக்கும் மாற்றானை நோக்கி, மமதை கொண்டவனே! உன்மயக்க மொழியிலே சிக்கிய மறத்தமிழனைச் சீரழித்தாயே அன்று! உன்னால் அடைந்த வேதனையைத் தாங்கமாட்டாமல் விழியில் நீர் பெருக்கினானே! அந்தக் கண்ணீர், இந்தக் கூர்வாளாயிற்று என்று கூறுவர். காமராஜரே! கவலையைக் கொஞ்சம் துடைத்துக்கொண்டு பாரும், ஊரெங்கும் தோன்றியுள்ள, கருப்புச் சட்டைப்படையை! தமிழனின் கண்ணீரைத் துடைக்கும் பணியை, அந்தச் கருப்புச் சட்டைப் படைக்கு! கண்ணீர் துடைக்கப்படும்.

# திருமுகம்!-1955

திருநாள் கொண்டாடும் தோழர்காள்!

பொங்கற் புதுநாள், ஆண்டுக்கொரு முறை நாம் காணும் திருநாள், திரு இடத்தவருக்குத் தக்கதொரு பொன்னாள்!

இந்நாள் இன்புற்று, அந்த இன்பம் எந்நாளும் இருந்து மகிழ்வளித்தல் வேண்டும் என்று விரும்புகிறேன்.

எங்கிருந்தோ இன்றுமட்டும் வந்து இன்மொழி பேசும் இந்த விழாக்கோலம், மனை எலாம், என்றும் நிலைத்திருக்கக் கூடாதா என்று, எண்ணுவோரில் நானும் ஒருவன் - இல்லையே என்பதறிந்து, ஏங்கித் தவிப்பவர்களில் நானொருவன் - உங்களைப் போலத்தான்.

இன்றுகூட, இன்பம் தம்மை நாடி வராததால், தேடித் தேடிப் பார்த்துத் தேம்பிக் கிடப்போர் இருக்கத்தான் செய்கிறார்கள்! பால் பொங்கிற்று - என்ற கேள்விக்குப் பதிலளிக்க முடியாமல் வேறு பக்கம் பார்வையைச் செலுத்துவோர் இருக்கத்தான் செய்கிறார்கள் - கண்ணீர் பொங்குவதை நாம், இன்றாவது காணாமலிருத்தல் நல்லது என்று எண்ணுகின்றனர், கண்ணியர்கள்.

ஊருக்கோர் விழாவாமே - உழைத்தவனை உயர்த்திப் பேசிடும் விழாவாமே - இந்த நாளில், நாமும், விழாக் கொண்டாட முயலவோ, வறுமை வெளியே தெரிய ஒட்டாதபடி மறைத்து, வாட்டத்தை - வருத்தத்தை மூலையில் இருக்கச் செய்து, முறுவலை வரவழைத்துக்கொண்டு, நாட்டின் விழாக் கோலத்தில் நாமும் கலந்து கொள்வோம் - ஒப்புக்காகவாவது - என்று எண்ணிடும் குடும்பம் எத்தனை எத்தனையோ!!

விழாக்கோலத்தன்று, நமது வேதனையை வெளியே தெரியவைத்து, காட்சிக்குக் களங்கம் உண்டாக்குவானானேன் என்று எண்ணிப் புன்னகையைப் போரிட்டு வரவழைத்துக்கொண்டு, விழாவில் நுழைகின்றனர், பலர் பலப்பலர்.

நாடு முழுதும் விழாக்கோலம் கொண்டாடும் நாள் வரவில்லை - விரைவில் வரும் என்பதற்கான அறிகுறியும் பளிச்செனத் தெரியக் காணோம்.

உள்ளதைக் கணவன் உண்ண இட்டுவிட்டு, அவன் உள்ளன்புடன், “உன் வேலை முடிந்ததோ?” என்று கேட்கும்போது, “முன்பே!” என்று கூறிவிட்டு, அமுதளித்த அணங்கு அவன் ஆனந்தம் பெறக்கனிவும் தந்து, தண்ணீர் பருகிவிட்டு, தாலாட்டும் திருத்தொண்டுக்குச் செல்லும் காட்சி, நெஞ்சை நெக்கு நெக்குருகச் செய்வதன்றோ!

நாடு இன்று உள்ள நிலையில், விழா நிகழ்ச்சி இதனினும் மிகுதியான உள் நெகிழ்ச்சியைத் தருவதாகவே அமைந்திருக்கிறது.

மேட்டுக்குடியினருக்கு. இந்த விழா ஒரு பிரமாதமன்று! அவர்களுக்கு வாழ்வே விழா!!

அடித்தளத்தில் உள்ளவர்களுக்கு விழா, சொல்லளவிலும், ஊருடன் ஒட்டிப் பேசும் முறையிலும் தான்.!

நடுத்தரத்தினர், முறுக்குக் குறைந்த நரம்புகளைத் தடவிக்காண்டே யாழிடம் இன்னிசை வேண்டி நிற்கும் பான்மைபோல, வாழ்க்கைச் சிக்கல்களை அகற்றிட முடியாத நிலையில், ஏதோ ஒரு வகையில், விழாக் கொண்டாடுகின்றனர்.

அந்த அளவு இன்பமாவது, அனைவருக்கும் கிடைக்கச் செய்ய முயல்வோர் யாராயினும், அவர்கள், நமது வணக்கத்துக்கு உரியர்! வாழ்த்துவோம் அவர் தமை!

தி.மு.க. மூலம் என்னுடன் ‘தோழமை’ பூண்டுள்ள எண்ணற்ற இளைஞர்களுக்கு, நான் அனுப்பிடும் பொங்கற் புதுநாள் வேண்டுகோள் இதுதான் - அடித்தளத்தில் இறுத்தப்பட்டு அவதிக்கு உள்ளாகிக் கிடப்போருக்கு, முழு வாழ்வு கிடைக்கச் செய்யும் பணியாற்ற வேண்டும் என்ற உறுதிப்பாடு, இன்று வேண்டும். அதுநாளும் வளரவேண்டும்.

இயற்கை வளம் மிகுதியும் உள்ள எழில் மிக்க ஒரு நாட்டிலே பிறந்திருக்கிறோம்.

எரிமலை மிரட்டுவதில்லை! பூமி வெடித்துக் கெடுப்பதில்லை! கடல் பொங்கி அழிவூட்டுவதில்லை! பொலிவும் பொறுப்புணர்ச்சியும் மிகுந்த தாய்- நமது நாடு!

தென்றலளிக்கிறாள், தாய்!

தேன்பொழியும் கனி வகைகளைக் குவிக்கிறாள்; நறுமணக் குவியலைக் கொட்டுகிறாள்; நானாவிதமான உணவு வகைகளைப் பெருக்கிக் காட்டுகிறாள்!

பொன் வேண்டுமா? மணிவேண்டுமா? பூசச் சந்தனம் வேண்டுமா? வாசமளிக்கும் பண்டம் பல வேண்டுமா? முத்து வேண்டுமா? மூலப்பொருள் வேண்டுமா? கலம் கட்டத் தேக்கு, தேவையான கருவிகள் செய்ய இரும்பு வேண்டுமா? உருக்க நிலக்கரி வேண்டுமா - எது வேண்டும் சொல் மகனே1 - என்று ÷ட்கிறாள் அன்னை - தருகிறாள் தாராளமாக!!

எனினும், தரித்திரம் தீண்டுகிறது, துடிக்கிறார்கள் மக்களில் பெரும் பகுதியினர்.

நாடு, அன்று இருந்த நிலை தெரியுமா என்று கேட்டுப் புலவர் பெருமக்கள் வேறு, நமது ‘கையாலாகாத’ தன்மையை இடித்திடித்துக் காட்டுகின்றனர்.

என் செய்வது?

அவர்கள் கூறுவது, முற்றிலும் உண்மை. நாம், இயற்கை வளமிக்க நாட்டில் பிறந்தவர்கள் மட்டுமல்லர், உலகு புகழ வாழ்ந்தவர்களின் வழித்தோன்றல்கள்!!

முரசு அதிர்ந்த நாட்டில் - நாம் இன்று கேட்பது, முகாரி!!

நம் முதாதையர் வாழ்ந்த வாழ்வின் வகை பற்றிக் கேள்விப்படும் போது, நம்மை நாமே நொந்து கொள்ளத்தான் வேண்டி இருக்கிறது.

அதிலும், நம் மூதாதையர், யார் என்பதையும் தெரிந்துகொள்ளும் தெளிவற்று, மூவேந்தர்களை அறியாமல் முசுகுந்தச் சக்ரவர்த்தியை அறியும் முயற்சியில் ஈடுபட்டு, உழலுவோராக 'நம்மவர்கள்' இருப்பதைக் காணும்போது, நமது வேதனை வளருகிறது.

வாளை பாய்ந்திடும் வயல்! கருங்குவளை கண்மலரும் கழனி! சந்தன மரத்திலே உடலைத் தேய்த்து நறுமணத்தைப் பரப்பும் வேழம் நிரம்பிய காடு, இசை பரப்பும் அருசி, துள்ளும் மான், தோகை விரித்தாடும் மயில், பண்பயிலும் குயில், பாவையருக்குச் சொல் நயம் கற்பிக்கும் கிள்ளை, - இப்படி எல்லாம் விளக்கமளிக்கிறாக்ஃள். சங்கத் தமிழ் பயின்ற புலவர்கள் - அதைக் கேட்கக் தித்திக்கவும் செய்கிறது - அப்படிப்பட்ட நாடு, இப்படி ஆகிவிட்டதே என்று எண்ணும்போது தேள் கடியாகவுமாகிறது. என் செய்வது!

காலைக் கதிரவன் ஒளி, காவலனுடைய கோயிலின்மீது பட்டு - எங்கும் ஒரே தகத்தகாயம்..! என்கிறார் புலவர்!

இங்கு இருந்ததாம்!

எங்கோ ஆரியமன்னர் இருவர், ஏது பேசுகிறோம் என்பதறியாமல், தமிழரை இழித்துரைத்தனராம் - இங்கிருந்து கிளம்பினானாம், செருமுனைச் சிங்கம் சேரன் செங்குட்டுவன் - கல் சுமக்கச் செய்தானாம்! இங்கு! அன்று!!

இன்று, கடல் கடந்து சென்றுள்ளனர் நமது உடன் பிறந்தார், கல் சுமக்க!!

புராணிகர் தரும் வருணனையை மட்டும் கேட்டால், நமக்கு வேதனை பிறக்காது - ஏனெனில், அவர் தரும் வருணனையில் அவ்வளவும், 'அவன் தந்தது' என்று முடிக்கிறார்.

அழகான அரண்மனையா? மயன் கட்டினான்!

பெரியதோர் நதியா? அவர் ஜடா பாரத்திலிருந்து வந்தது.

ஜெய பேரிகை கொட்டிய மகாராஜாவா? அயன் தந்த வரம்!!

இப்படிச் சொல்கிறார், புராணிகர் - அவ்வளவும் அருளின் விளைவு என்று கூறிவிடுகிறார்.

இன்று அதுபோல் இல்லையே என்ற எண்ணம் வருமேயானால், அருள் கிடைத்ததும், பெறுவோம், நம்மால் ஆவது ஒன்றுமில்லை, என்று மனத்துக்குத் திருப்தி தேடிக்கொள்ளமுடியும். இந்தப் பொல்லாத புலவர்கள் அப்படிச் சொல்லவில்லையே!

நம் மூதாதையர்கள், ஆற்றலால் இவ்வளவும் பெற்றனர் என்று கூறி அல்லவா, நம்மைக் குத்துகிறார்கள்!

“அறிவுடையோன் ஆறு அரசும் செல்லும்” - அரசர்கள் அறிஞர்களின் அறிவுரை வழியே செல்பவராம்!

“அறிஞர்களோ, களத்திலே உனக்கு வெற்றி தேடித்தரும் வாள், எதனால் வலிவு பெறுகிறது தெரியுமா, மன்னா! ஏரடிக்கும் சிறு கோலால்!” என்றும், ‘வயலிலே யானை புகுந்து பயிரை அழித்திடுவதுபோல, வரை முறையின்றி வரிவிதித்தல் அடாது’ என்றும், நாடு வளம்பெறுவதும் வாடுவதும் ஆட்சி முறையைப் பொறுத்திருக்கிறது என்றும், வீணான போரிட்டு வீரம் பேசுவது அழகன்று என்றும், மன்னர்களை இடித்துரைக்கவும் அஞ்சாத ஆண்மையாளர்கள். இவ்வழி நிற்கும் அரசின் கீழ் வந்த மக்கள் வளம் பெறாது இருப்பதுமுண்டோ!

அரசர்கள், ஐம்பெருங்குழு, எண்பேராயம் போன்ற குழுக்களை அமைத்துக்கொண்டு ஆட்சி செய்தனர்.
பகைவர், தமிழகத்தைத் தாக்க இயலாவண்ணம் போர்த்திறனுடன் போர்க்கருவிகளும், அஞ்சா நெஞ்சமும் பெற்றிருந்தனர் பேரரசர்கள்.

வளைவில் பொறி
கருவிரல் ஊகம்
கல் உமிழ் கவண்
கல்லிடு கூடை

ஆண்டலை அடுப்பு

இப்படிப் பலப்பல அமைப்புகள்! அவ்வளவும் தவம் செய்து பெற்றவை அல்ல! உலைக் கூடத்தில் உருக்கி வார்த்து, அடித்து எடுக்கப்பட்டவை! இவ்வளவும் ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்பு.

இத்துணைப் போர்க்கருவிகளைப் பெற்று வெற்றி வீரனாக இருக்கும் மன்னனையும் பார்த்துப் புலவர் சொல்வாராம்,
“கடுஞ்சினத்த கொல்களிரும்
கதழ்பரிய கலிமாவும்
நெடுங்கொடிய நிமிர்தேரும்
நெஞ்சுடைய புகழ்மறவரும்”
யானை, குதிரை, தேர், வீரர் - இவை இருக்கலாமய்யா மன்னா! ஏராளமாக இருக்கலாம். ஆனால், அரசு வெற்றி பெறுவதற்கு இவை காரணங்கள் என்று எண்ணிடாதே.
“அறநெறி முதற்றே
அரசின் கொற்றம்”
அறநெறி வேண்டும், அதுதான் வெற்றிக்கு வழிகோலும், என்று இடித்துரைக்கிறார்! அதற்குப் பரிசும் பெறுகிறார்!!

பதினாறாம் நூற்றாண்டிலே இங்கிலாந்து நாட்டிலே மன்னன், தன்னை ‘தேவ அம்சம்’ என்று கூறித் திரிந்தான் - ஈராயிரம் ஆண்டுகளுக்கு முன்னம் இங்கு அரசருக்கு, அறநெறி செல்! என்று அன்புக்கட்டளையிடும் அருந்தமிழ்ப் புலவர்கள் இருந்தனர்.

அழகான நகர்கள் - எழில் உமிழும் சிற்றூர்கள்!

முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல் - இப்படி வண்ணங்கள்.

ஆறுகிடந்தன்ன அகல் நெடுந்தெரு - என்கிறார் புலவர்.

இரப்போர் சுற்றமும்
புறப்போர் கொற்றமும்
உழவிடை விளைப்போர்!

என்று உழவுத் தொழிலைத்தான், நாட்டுக்கே அச்சாணியாக்கிக் கூறுகிறார், புலவர்.

“நூலினும்
மயிரினும்
நுழைநூற் பட்டினும்”

ஆடைகள் நெய்வராம்!

தெளிந்த வெண்ணிறமான அருவிநீர் வீழ்ச்சி இருக்கிறதே, அப்படி இருக்கும் ஆடைகள் நெய்தனராம். டாக்கா மஸ்லின் என்றால் மட்டுமே புரிந்துகொள்ளும் தாழ்நிலை பெற்ற நமக்கு இது புரிவதும் கடினமே. புலவர் கூறுகிறார்.

“அவிர் துகில் புரையும்
அவ்வெள் ளருவி” என்று.

இந்த வளம் போதாதோ? போதும், தாங்கள் மட்டும் வாழ்வது என்று குறுகிய எண்ணமிருந்தால், தமிழர், உலகுக்கும் தமிழகத்து வளத்தையும் திறத்தையும் வழங்கலாயினர் - வாணிபத்துறை இதற்கே பெரிதும் பயன்பட்டது.

எழுகடல் தாண்டி, ஒன்பது அரக்கரை மாய்த்து, அவர்கள் தங்கக்கூண்டிலே அடைத்து வைத்திருந்த பஞ்சவர்ணக் கிளியைக் கொண்டுவந்து, பட்டத்தரசனிடம் கொடுத்து, ராஜ்யத்தில் பாதியும் அரசகுமாரியையும் பரிசாகப் பெற்ற வீரனுடைய கதைகளைப் பிற நாடுகள் பெற்றிருந்தன - இந்தியத் துணைக் கண்டத்தில்.

இங்கு! கடாரம் கொண்டவன், இமயத்தில் கொடி பொறித்தவன், இலங்கை வென்றவன் - இப்படிப் பேரரசர்களின் வரலாறுகள்!!

பஞ்சவர்ணக் கிளி அடைபட்டிருந்த ‘கூண்டு’ எங்கே என்று தேடிட ‘ஆராய்ச்சியாளர்’ உளர் -அரசாங்கச் செலவில்! பேரரசர்களின் வரலாற்றைக் கண்டறிந்து தொகுத்து எழுதும் முயற்சிகூட இல்லை!!

வளமுள்ள நாடு - அறமறிந்த அரசர்கள் - அவர்கட்கு ஆற்றலளிக்கும் மாவீரர் - அவர்கள் நெறி தவறாமல் பார்த்துக்கொள்ளப் பேரறிவாளர், இவர்கள் அனைவருக்கும் உணவிடும் உழவர், அவர்க்கு உறுதுணையாகப் பல்வேறு தொழில் புரிவோர், இவர்தம் கைவண்ணம் உலகு காண வழிவகுத்த வணிகர்...! இப்போது நாம்!!

எப்படிப் பொறுத்துக் கொள்ள முடியும்!!

“காணார், கேளார், கால்முடப் பட்டார்
பேணா மாக்கள், பேசார், பிணித்தோர்”

இவர்களுக்கு ஆதரவு அளிப்பதுதான் தருமம், அன்று நமது நாட்டில்!

இன்று இவர்களைக் கோபுர வாயிற்படியில் உட்காரக் கண்டு, உள்ளே சென்று, சூடம் கொளுத்தி, நமக்குச் சுகவாழ்வு தரும்படி, எம்மானை வேண்டுகிறோம் - தர்மங்கூடச் செய்கிறோம் பிராமண தானம்! கோயில் திருப்பணி!! அன்று அங்ஙனமில்லை. செல்வமும் கொழித்திருந்தது; அறநெறியும் தழைத்திருந்தது.
யானை வெண்கோடும்
அகிலின் குப்பையும்
மான் மயிர்க் கவரியும்
சந்தனக் குறையும்
சிந்துரக் கட்டியும் காடு, நாட்டுக்கு அளிக்கும்! - என்றால், வளம் எத்தகையது என்பதை எண்ணிப் பார்த்தல் எளிதுதானே! காடே, இவ்வளவு தருகிறது! நாடு, எப்படி இருந்தது? புலவர் நம்மைக் கடை விதிக்கே அழைக்கிறார் - பார்வை எப்படியோ என்ற அச்சம்கொண்டு நாளங்காடி - பகலிலுள்ள கடைக்கு அழைக்கிறார் - (கடை இருவகை, பகலில் உள்ளது, இரவில் உள்ளது) அங்கு.

பண்டங்கள் மலை மலையாக!

பண்டங்களை வாங்கிக்கொண்டு போகிறார்கள் - பெரும் அளவு.

கடை வீதியிலோ, பண்டம் எப்போதும் தங்குதடையின்றிக் குவிந்து கிடக்கிறது.

கடலிருக்கிறதே அன்பா! அது மழை பெய்வதற்காக, தண்ணீரைக் கொடுத்துவிடுகிறது, - மேகமாகிறதல்லவா வெப்பத்தால்!

அப்படிக் கொடுப்பதால், கடல் நீரின் அளவு குறைந்துவிடுகிறதோ! இல்லையல்லவா!

ஆறுகள் பலப்பல, கடலில் வீழ்கின்றன அல்லவா! அதனால் கடல் நீரின் அளவு அதிகமாகி விடுகிறதோ? இல்லையல்லவா!

அதுபோல, கூடல் நகர (நாள் அங்காடி) கடை வீதியில், பண்டங்கள் எவ்வளவு வெளியார்க்கு விற்றாலும் குறைவதில்லை, வெளியார் எவ்வளவு பண்டங்களைக் கொண்டுவந்து விற்றாலும் மிகுவதில்லை, எப்போதும் அளவின் வளம் நிலைத்து நிற்கிறது - என்று கூறுகிறார்.

“மழை கொளக் குறையாது
புனல் புக மிகாது
கரை பொருது
இரங்கு முந்நீர் போலக்
கொளக் கொளக் குறையாது
தரத் தர மிகாது
மாடம் பிறங்கிலை
மலிபுகழ்க் கூடல்
நாளங்காடி.”

முந்நீர், என்றால் கடல் என்பதுமறியாது, கங்கை, யமுனா, சரஸ்வதிபோன்ற மூன்று புண்ணிய தீர்த்தங்கள் போலும் என்று எண்ணும் நாளில் அல்லவா இருக்கிறோம்!

அங்காடிகளிலே, பண்டங்கள் வளமாக இருக்கும் என்றாரே புலவர், என்ன பண்டங்களோ என்று ஆவல் பிறக்கும்; பாருங்கள் பண்டங்களை!

நீரின் வந்த நிமிர் பரிப்புரவியும்

காலின் வந்த கருங்கறி மூடையும்
வடமலைப் பிறந்த மணியும் பொன்னும்
குடமலைப் பிறந்த ஆரமும் அகிலும்
தென் கடல் முத்தும், குணகடல் துகிரும்
கங்கை வாரியும், காவிரிப் பயனும்,
ஈழத்துணவும், காழகத் தாக்கமும்
இவையெல்லாம்!

இவைதமைக் கொண்டு வாணிபம் செய்தோர், எங்ஙனம் இருந்தனர்?

நடுவு நின்ற நன்னெஞ்சினோர்:
நல்ல இதயம் படைத்தவர்கள் - நடுநிலை தவறாதவர்கள்.

பழிபாவத்துக்கு அஞ்சி நடப்பது என்கிறார்களே. அது சொல்லளவு அன்று, செயலில்.

வடுவஞ்சி வாய்மொழிந்து தேய்ந்தது, விற்க! கூடுதலானது, வாங்க! இது பிழைக்கும் வழி, என்பதன்று, முறை.

தமவும் பிறவும் ஒப்ப நாடி நடந்து வந்தனர்.

வரைமுறையின்றி வெளிநாட்டுப் பண்டங்கள் குவிந்து, உள்நாட்டுச் செல்வ நிலையைச் சீரழிக்க விட்டனரோ! இல்லை!

‘புலிபொறித்துப் புறம் போக்கி’
வந்தனர், ஆட்சியாளரால் அனுப்பப்பட்ட அதிகாரிகள் - சங்கம் உண்டு!

நெஞ்சு உருமும் நேர்மைத் திறனும், கடமை உணர்ச்சியும் கொண்ட அதிகாரிகள், பண்டங்களைப் பரிசீலனை செய்து ‘உல்கு’ - (சுங்கம்) வாங்கி, புலிக்கொடி முத்திரையிட்டு, ஒரு புறம் வைத்தனர் - இதை வைகல்தொறும் செய்தனர் - நாளெல்லாம் செய்தனர். இத்தகைய வளமிருந்ததால், சதங்கை, பரியகம், நூபுரம், பாடகம் காற்சரி இவற்றைக் காலில் அணிந்து பொன்வளை, சித்திரவளை, மணிவளை, சங்க வளை, பவழ வளை, இவைதமைக் கையில் பூண்டு,

கழுத்திலே வீரச் சங்கிலி, சவடி சரப்பளி, முத்தாரம் போட்டுக் கொண்டு, வலம்புரி, பூரப்பாளை போன்ற அணிகலன்களைத் தலையிலே அணிந்துகொண்டு, பொன்னார் இழையும் துகிலும் பூண்டு, பெண்கள், ஆடியும் பாடியும் மகிழ்வர்! அலைகடலைக் கிழித்தெறியும் நாவாய் ஏறிச் சாவகம், யவனம் சென்று, பொருள் ஈட்டித் திரும்பிய வாணிக வாலிபனும், எதிரியின் வாளைக் களத்தில் போரிட்டுப் பறித்துக் கொண்ட வீரனும், களைத்தும் இளைத்தும் வருவர்!

சாலையிலும் சோலையிலும், தமிழ் இசை! தையலரின் ஆடலால், எழும் சதங்கை ஓசை!

கடலையும் களத்தையும் கண்டு கண்டு எதை எதையோ காண வேண்டும் என்று எண்ணிடும் நெஞ்சம் கொண்ட இளைஞர்கள்!

சந்திப்பு!!

எப்படி இருக்கும் என்று விவரிக்கவும் வேண்டுமா! பாருங்கள், தெரியும் - கேட்டு இன்புறத்தான் வேண்டும் எனில், நண்பர் நெடுஞ்செழியனைப் பிடித்திழுத்து வாருங்கள் - நான் அகநானூற்றுப் பருவத்தை ஏறத் தாழக் கடுந்துவிட்டவன்!!

இவ்விதமான இன்பத் திராவிடம் இன்று உள்ள இழிநிலை நமக்கு நன்றாகத் தெரியும், பொன்னான இந்த விழாவே அனைவருக்கும் உண்டு என்று கூறத்தகும் நிலை இல்லை என்பது ஒன்றே போதும், நாடு நலிந்து கிடப்பதற்குச் சான்று.

இந்த நலிவு போக்கும் பணிக்கு நம்மை நாமே ஒப்படைத்துவிட வேண்டும்.

அங்ஙனம் ஒப்படைத்துப் பணியாற்றி வரும் எண்ணற்ற இளைஞர்கள். இன்று நாட்டிலே புதியதோர் விழிப்புணர்ச்சியை ஏற்படுத்திவிட்டனர் - பொங்கற் புதுநாள் நமக்கேற்ற விழாநாள் - பிறஆரியக் கலப்புடை

ஆகா நாட்கள் என்ற தெளிவு ஓரளவுக்குப் பிறந்திருப்பதே, பெருமைக்குரியது. விழிப்படைந்து விட்டோம்! அந்த விழிப்புணர்ச்சி பெறப் பலப்பல பாடுபட்டோம் - பல கட்டங்களைக் கடந்தோம்.

பல கட்டங்களைத் தாண்டிவிட்டோம்! புதியதோர் கட்டம் வந்து சேர்ந்திருக்கிறோம்! இங்கு நம்மைச் சுற்றிலும், நையாண்டி செய்வோர் அல்லர் அலட்சியம் செய்வோர் அல்லர், எந்த முறையினாலாவது நம்மை ஒழித்துக் கட்டிவிட வேண்டும் என்ற உறுதியை வெறி அளவுக்குக் கொண்டிருப்பார் உள்ளனர். அப்படியா? என்று கேட்டு அச்சப்படவும் வேண்டாம்; அவர்களை ஒரு கை பார்க்கிறோம் என்று முழக்கமிட்டுக் கொண்டு பாய்ந்து சென்று மோதிக்கொள்ளவும் வேண்டாம். அதற்காக அல்ல, இதைக் கூறுவது. நாம், மேற்கண்டுள்ள பயணத்தில் வெற்றிகரமாக முன்னேறிக்கொண்டு வருகிறோம் என்பதை அறியவும் அகமகிழவும், இந்த அளவுக்கு முன்னேற எந்த உறுதியும் உள்ள உரமும், அறிவுத்தெளிவும் நமக்கு உறுதுணையாக அமைந்திருந்தனவோ, அவை நம்மை மேலும் அழைத்துச் செல்லும் என்ற நம்பிக்கை பெறவும், இடையே எழும்பும் இடர்ப்பாடுகள் கண்டு நாம் மனம் உடையவும் மாட்டோம். மாச்சரியம் கொள்ளவும் மாட்டோம் என்பதை 'மாற்றார்' என்ற கோலம் பூண்டுள்ளவர்களுக்குக் கூறிக் கொள்ளவுமே, இதைக்குறிப்பிட்டேன்.

நாம், மிக மிகச் சாமான்யர்கள்!

இதை நாம், அடிக்கடி நினைவிற்குக் கொண்டுவர வேண்டும்.

நமக்குள்ள உற்சாகமும் ஊக்கமும், நம்பிக்கையும் எழுச்சியும் இதனால் குலையும் என்று, கருதவேண்டும். நாம் எப்படிப்பட்டவர்கள் என்பதை நினைவிலே வைத்துக்கொண்டால்தான், நாம் பெறும் வெற்றிகளின் பெருமை துலங்கும்.

நாம், மிக மிகச் சாமான்யர்கள்!

நாம், சாதித்துள்ளவையோ, மிகப் பெரியவை!

நாம், சாதித்தாக வேண்டியவற்றுடன் ஒப்பிடும்போது, இவை, கடுகளவு!!

நாம், சாமான்யர்களானாலும், சாதிக்க வேண்டியவற்றைச் சாதித்துத் தீருவோம்.

நாம், சாமான்யர்களானாலும்... என்பது கூடத் தவறு.

நாம், சாமான்யர்கள் - எனவேதான் நாம் சாதிக்க வேண்டியதைச் சாதிக்கப் போகிறோம்.

ஏனெனில், கவிஞர் இக்பால் கூறியபடி, இது, பாமரமக்கள் பாராளும் காலம்! சாமான்யர்களின் யுகம்! தேவ புருஷர்கள், காலமன்று!!

நாம், சாமான்யர்கள் - எனவேதான் சாமான்யர்களின் பிரச்சினையைக் கவனிக்கிறோம்.

'சத் புருஷர்கள்' 'ரிஷிசிரேஷ்டர்கள்' 'முனிபுங்கவர்கள்' என்போர் சாமான்யர்களின் பிரச்சினையை அன்று, 'சர்வேஸ்வரனைப் பற்றிய பிரச்சினையைக் கவனித்துக் கொண்டிருந்தனர். கதைகள் பல உள, இதைக் காட்ட! நாம், எடுத்துக்கொண்டுள்ள காரியம், எங்கிருந்து வந்தோம்? எங்கே போகிறோம்? ஏன் பிறந்தோம்? ஏன் இறந்துபடுகிறோம்? இறந்த பின் என்ன ஆகிறது? பிறக்கு முன் என்ன இருந்தது? - என்ற பிரச்னைகளுக்கு. விளக்கம் காண்பது அல்ல! அது, சாமான்யர்களாகிய நமக்குத் தேவையற்றது!
நமது பிரச்னை, மக்கள் மக்களாக மாண்புடன் வாழ, ஒரு வழி கண்டறிந்தாக வேண்டும் என்பதாகும்.

மனித உருவிலும், மிருக வாழ்விலும் உள்ள நிலை மாற்றப்பட்டாக வேண்டும்!

மனித வாழ்வின் மேம்பாடு குலையும்படி உள்ள, எண்ணங்கள், ஏற்பாடுகள் எவையும் களைந்தெறியப்பட்டாக வேண்டும்.

எல்லோரும் இன்புற்று வாழவேண்டும். எத்தன் - ஏமாளி - என்ற நிலை இருத்தல் ஆகாது.
இல்லாமை, இருத்தலாகாது!

அறியாமை, அகற்றப்பட்டாக வேண்டும்!!

அடிமை, என்ற நிலை, ஏற்பாட்டிலே மட்டுமல்ல, எண்ணத்தாலும் இருத்தல் கூடாது.
சுயமரியாதை!

புரட்சி!

திராவிட நாடு திராவிடருக்கே!

என்று நாம் கூறுகிறோம் - இவற்றின் உட்பொருளை ஆராயும்போது, இறுதியாக நமக்குக் கிடைக்கும் கருத்து, மனிதவாழ்வின்
மேம்பாடு என்பதுதான், என்பது புலனாகும் - ஆத்திரம் அகற்றி ஆய்ந்தறிவோருக்கு.
நாம், இந்தப் பெருஞ்செயலில் ஈடுபட்டு விட்டோம்.

வழி அறியாமல், திகைத்தோம்!

இன்று, நாம், வழி அறிந்து செல்கிறோம். எனவேதான், பல கட்டங்களைக் கடந்து செல்ல முடிந்தது.

நாம்! - இந்தச் சொல்லே, நாட்டு நடவடிக்கைக்கான அகராதியில், இடம் பெறாதிருந்த நாளொன்று இருந்தது; அறிவீர்கள்.

நாம்! - இந்த அகராதியில் இடம்பெறப் பாடுபட்டோம் - கஷ்ட நஷ்டம் ஏற்றுக்கொண்டோம் - கல்லடியும் சொல்லடியும் தாங்கிக்கொண்டோம் - ‘கண்ணீரும் செந்நீரும்’ கொட்டினோம் - அகராதியில் இடம் பெற்றோம். பிறகோ?

நாம் - பாடுபடத் தொடங்கினோம் - காட்டுப் பாதையில் நடந்தோம் - கள்ளி காளானைக் கண்டோம் -” கடுவனும் காட்டெருமையும், செந்நாயும் சீறும் புலியும் மிரட்ட,

துரத்த, அவற்றுக்குத் தப்பி, சந்தன மரத்தின் மீது அமர்ந்து சிந்து பாடும் குயிலைக் கண்டிட வேண்டும் என்று ஆவலுடன் செல்லும் வீர வேட்டுவன் போலச்சென்ற வண்ணம் இருந்தோம்"!

இதுகள் - என்ற ஏளன மொழியால் நம்மை நாடு அழைத்தது!

ஏளனம் கேட்டு, இளம் உள்ளம் பதைத்தது - மூதறிஞர், நம் தலைவர் கூறினார், வெற்றி! வெற்றி! தோழர்களே! இதுதான் வெற்றி! நாம், அவர்களின் 'பார்வை'யில் பட்டுவிட்டோம். அவர்கள் நம்மைக் கவனிக்கிறார்கள், நாம் அவர்களின் கண்ணுக்கே படாமலிருந்த நிலை அன்று. நாம் தெரிகிறோம், எனவேதான் 'இதுகள்' என்று ஏளனம் செய்கிறார்கள், இது நமக்கொரு வெற்றி! என்று எக்காளமிட்டார்.

ஓவியன், கோடுகளை வரைந்துவிட்டான் - அவன் மனக்கண், என்னென்ன அழகழகான உருவங்கள் இனி அங்கு எழும் என்பதைக் காண்கிறது. மற்றவருக்கோ, சில சிறு கோடுகள் - வளைவுகள் - இவையே, தெரிகின்றன! இரண்டு கீறல் இருக்கிறது. 'குறுக்கும் நெடுக்குமாக' - ஒரு புறம் - இன்னொரு புறம் நாலைந்து புள்ளிகள் - வேறொரு புறம் சிறு வளைவு - பிறிதொரு புறம் ஐந்தாறு நேர்க்கோடுகள் - இவ்வளவுதான் தெரிகிறது. மற்றவர் காணும்போது - ஓவியன், இவற்றைக் கொண்டுதான் பிறகு, அழகான அருவியையும் அந்திவானத்தையும், அதன் அழகு கண்டு சொக்கி நிற்கும் ஆரணங்கையும், வேழத்தை வேட்டையாட வந்த வீரன், அந்த வேல் விழியாளைக் கண்டு காதல் பொழிவதையும் காட்டப் போகிறான்.

இதுகள்! - என்ற நிலை, இத்தகைய கீறல் - கோடு - வளைவு.

நாம் - இதுகள் ஆனோம் - அதாவது நாட்டு நடவடிக்கையில் நமக்கோர் இடம் உண்டு, நாலுபேர் கூர்ந்து கவனித்துத் தீரவேண்டிய இடம் உண்டு என்பது

ஏற்பட்டுவிட்டது. இந்தக் கட்டம் இழந்து சேரமட்டும் நாம் கொட்டிய உழைப்புக் கொஞ்சமன்று.

பிறகு, புதுபுதுக் கட்டங்கள்!!

இதுகளை ஒழித்தாக வேண்டும்!

இதுகள் எமக்கு எம்மாத்திரம்!

இதுகளைச் சட்டை செய்யவேண்டாம்!

இதுகளால் ஏதும் ஆகாது!

இப்படி ஒரு கட்டம்!!

பிறகு?

இதுகளின் யோக்கியதையைக் கேளுங்கள்!

இதுகளின் வண்ட வாளங்களை விண்டிடுவேன் கேண்மின்!

இதுகளின் குடலைப்பிடுங்கி மாலையாக்கிப் போட்டுக்கொண்டு, கூத்தாடுவேன் காண வாரீர்!

இதுகள் மயக்கும் - மயங்கிவிட வேண்டாம்! அடுக்கு மொழி பேசும் – கேட்கவேண்டாம்! அழகு நடையில் எழுதும் – படிக்கவேண்டாம் – கூட்டம்போடும், போகாதீர்கள்! கூத்தாடுவர் – பார்க்காதீர்கள்! -
இப்படி ஒரு கட்டம்!

இந்தக் கட்டத்தில், முத்தமிழ் கற்றோரும் நம்மை எதிர்த்தனர், முடிபோட்டு விடுவோரும் தாக்கினர், கற்றறிந்த கனவான்கள் கிளம்பினர். கலாம் விளைத்தலைக் கலையாக்கிக் கொண்ட கண்ணியரும் கலந்து கொண்டனர். ஆகமத்தைத் தூக்கிக்கொண்டு சிலர், அரிவாளை ஏந்திக்கொண்டு சிலர், சாபம், நிந்தனை, பழிசுமத்தல் எனும் பல்வேறு முறைகள், இத்துடன் ஆபாசமாகத் தாக்கிப் பேசுவது - எழுதுவது - என்று இவ்வண்ணம் போர்புரியக் கிளம்பிற்று ஒரு பெரும் படை!

பெரும்படை என்பது, அளவு குறித்து!! இந்தக் கட்டமும் தாண்டினோம்!

அவர்கள் சொல்வதிலும் நியாயம் இருக்கத்தான் செய்கிறது.

அவர்கள் எதற்கும் காரணம் கேட்கிறார்கள். தவறு என்ன?

அவர்கள் கொண்டுள்ள குறிக்கோள் சாலச் சிறந்ததுதான்.

இப்படிக் கூறிடப் பொதுமக்களில் ஒரு பெரும் பிரிவு, முன் வந்துவிட்டது - பொச்சரிப்புக்காரரின் முகம் கருத்தது. இப்போது, புதுக்கட்டம்! ஆட்சியாளருக்குத் தூபமிட்டு, ஆவேசமாடவைத்து, நம்மை அழித்தொழிக்கலாம் என்ற அற்ப ஆசையால் உந்தப்பட்டு, ஆர்ப்பாட்டக்காரர் சிலர் அரங்க மேறி அலறித் துடித்து, இவர்களைப் பேச விடாதீர்கள் - எழுத அனுமதிக்கக் கூடாது - படக் காட்சி எடுக்குமிடத்தில் அண்ட விடாதீர்கள் - நாடகமாட அனுமதி தராதீர் - சட்டம்! சட்டம்! கடுமையான சட்டம்! மேலும் மேலும் கடுமையான சட்டம் வேண்டும் - என்று சர்க்காரிடம் சென்று, ‘சோடசோபசாரம்’ செய்து, ‘வரம்’ கேட்கிறார்கள். தேவதையும், அங்ஙனமே ஆகுக! என்று திருவாய் மலர்ந்தருளும் நிலை. இதுதான், இப்போது உள்ள புதுக்கட்டம்.

இந்தக் கட்டத்திலே நாம் தரப்போகும் ‘பலி’யைப் பொறுத்துத்தான் நமது இறுதி வெற்றி இருக்கிறது.

இதற்குத் தயாராக எண்ணற்ற இளைஞர்கள் உள்ளனர், என்பதை நான் அறிவேன். இளைஞர் உலகின் மனப்பாங்கு, காலக் கண்ணாடி, எழுச்சியின் எழில் மிகு சித்திரம், உரிமைப் போர் முரசொலி! விடுதலை விருத்தம்! வாழ்க்கை எனும் வாவியிலே -சுயநலம் எனும் நச்சு கலக்கப்படாத நிலை! குடும்பம் எனும் கோல் கொண்டு துழாவி, சேற்றை மேலுக்குத் தள்ளி, நீரைப் பாழாக்கும் பருவம் - சுயநலமும் சுகபோகப்

பித்தும், எருமை எனப் புகுந்து இதயத் தாமரையைத் துவைத்துப் பாழாக்கிடாத பருவம் - சந்தனக் காட்டைக் கடந்து, மணத்தை இன்பம் எனும் குழவியைப் பெற்றெடுத்துத் தரும்தென்றல் போலச் சுருதியும் தாளமும் அமைந்து, சொற்சுவையும் பொருட் சுவையும் இழைந்து, கேட்போருக்குக் களிப்பூட்டுவதோடு, கருத்தூட்டும் இசைபோல உள்ளது வாலிபப் பருவம்.

மாயாவாதமும் மன மருட்சியும் நெருங்க நடுங்கும் நிலை அது. புராணமும் புல்லர் மொழியும் புகப் பயப்படும் மனம். பதவியும் படாடோபமும் பத்துக் காதத்திலே மிரண்டோடச் செய்யும் வீரம் குடிகொண்ட மனம்!

வெட்டிப் பேச்சைத் தட்டி நடக்கும் தீரர்கள். அடிமைத்தனம் எங்கு இருக்கக் காணினும் அவர்களின் விழி கனலைக் கக்கும்; மொழி வீரத்தைப் பொழியும்! உரிமை, உரிமை, என்று உரைப்பர்! அந்த நடமாடும் எஃகுக் கம்பிகள் நாட்டு விடுதலைப் போருக்கேற்ற நல்ல தம்பிகள்! பாடுபட்டழைத்துப் பயன் காணா மக்களைக் கண்டால், கண்கள் குளமாகிவிடும், கரங்கள் இடுக்கண் களையத் துடித்திடும். சிந்தனை சமதர்மத்துக்குத்தவும்! இத்தகைய மாண்புடைய மணிகளே, அறியாமை எனும் மையிருட்டிலே சிக்கிக் கிடக்கும் தமிழகத்திலே, நாம் காணும் தூங்கா விளக்குகள்! துயர் துடைத்திட இடர் பல ஏற்கவும் தயாராக உள்ள செயல் வீரர்கள், எத்தரை வீழ்த்திடக் காலம் தந்த ஈட்டி முனைகள்! சனாதனத்தை அழிக்கும் சுரங்க வெடிகள்! பழைமை எனும் நீர் மூழ்கிக் கலத்தை வீழ்த்தும் டார்ப்பிடோக்கள்! வைதிகபுரிமீது, பகுத்தறிவுக் குண்டுகளை வீசும் வீர விமானிகள்!

புராணம் படிக்கச் சொன்னால், படியை ஆழாக்காகக் காய்ச்சிச் சீனியும் சிறிதளவு குங்குமப் பூவும் சேர்த்து, தங்க வளை குலுங்க, தாமரைக் கண்ணிலே கனிவு கூத்தாட, வைரம் ஒளிவிட, அழகு ஆலவட்டம் வீச, வெள்ளிச் செம்பிலே, காய்ச்சிய பாலை ஊற்றி எடுத்துச் செல்லும் காரிகையரும், காணிக்கை தந்த காலைத் தொட்டுக் கும்பிடும் கனதனவான்களும், அனுமாரின்

வீரப்பிரதாபங்களைக் கேட்டு அம்பியின் சேட்டைகளை அதனுடன் ஒப்பிடும் அம்மையாரும், பத்துத்தலை இராவணன் இராமனின் 'பட்டமகிஷியை' இச்சைக்கினியவளே! பச்சை மாமயிலே! பசும்பொன் மேனியளே! பவள இதழழகி! உருகி உடல் கருகி உள்ளீரல் பற்றி எரியாது, அவியாது, என் செய்வேன்! காதல் கனலை இனித் தாங்க வல்லேன் அல்லேன்! உன்னை நான் அடைந்தேயாக வேண்டும். இன்றேல் உயிர் தரியேன்! உன்மீது எனக்குள்ள மோகம் கைலையைவிடப் பெரியது. உன்னை எண்ணி நான் விடும் கண்ணீர் வெள்ளம் கங்கையைவிடப் பெரியது, ஏக்கத்தால் கிளம்பும் என் பெருமூச்சோ எரிமலை கக்கும் நெருப்பு! தங்கக் கட்டிலிலே, மலர் தூவிய பஞ்சணையிலே நாமிருவரும் கொஞ்சிவிளையாடக் காலம் என்று வருமோ! மாதே! மாதரசி! மணியே! - என்றெல்லாம் வருணித்து ஆசை மொழி காட்டினான் என்று புராணிகர் படிக்கும்போது, உண்மைதான், பெண்ணை வசியப்படுத்த இந்த ஆண்கள் இதுபோலத்தான் இனிக்க இனிக்கப் பேசுவது வழக்கம் என்று அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டு கூறும் ஆரணங்குகளும், புடைசூழ இருந்திடக் கண்டு, இரும்பூ தெய்திடலாம். காண்கிறோம் இத்தகு காட்சிகளை! கேள்விப்பட்டிருப்பீர்கள், காகுத்தன் கதை படித்த கலா விற்பன்னன் 'சீதா பஹரணம்' செய்து வெற்றிபெற்ற செய்திகளையும்!

நாம் மேற்கொண்டுள்ள பணி, இவ்விதமானதா?

அல்ல! அல்ல!

சமுதாயத்தைத் திருத்த முற்படுகிறோம். சமுதாயம், 'ரிஷீஸ்வரர்களின்' திட்டத்தின்மீது கட்டப்பட்டிருப்பதாகக் கூறி, நம்மைத் தடுக்கச் சிலர் முற்படும்போது, அந்த 'ரிஷீஸ்வரர்களின்' விஷயங்களையே கூட அம்பலமாக்குகிறோம்.

ஆபத்தான செயலல்லவா! ஆத்திரம் அடைகிறார்களே, பழைமையின் பாதுகாப்பாளர்கள், பகைக்கிறார்களே, நமது

வாழ்வையே பாழாக்கவும் துணிகிறார்களே, என்று உற்றார் பெற்றோர் கூறத்தான் செய்கிறார்கள். அவர்களின் ஆசையும் பாசமும் நமக்கெல்லாம் புரியாமலும் இல்லை! இன்று, இதோ எவ்வளவு களிப்பு - குடும்பத்தில் குதூகலம் - வெட்கத்தால் சிவப்பாகிவிட்டதே, என்னடா செய்தாய் சேட்டை என்று பெரியவர் கேட்கிறார், வாலிபனை - அவன் தண்ணீர் கேட்டுக்கொண்டுதான் அவள் இருந்த பக்கம் போனான் - தண்ணீரா பருகுகிறான் - வளை ஒலி - இச்சொலி - வெட்கம் பிறக்கத்தானே செய்யும் - மேலும் அந்தப் பயல், கரும்பு சுவைப்பதையும் மறந்து, அம்மாவிடம் கொஞ்சு மொழியில் கேட்கிறான், “அம்மா! எனக்கும் ஒரு முத்தம்” என்று - ஒன்பது தருகிறாள். வள்ளல் பிறந்த நாடல்லவா! இத்தகைய இனிய காட்சிகளைக் காணவேண்டும் என்று பெற்றோருக்கு ஆசை இருக்குமே தவிர. ‘ஆறு மாதம் கடுங்காவல்’ என்ற சொல் கேட்பதிலா விருப்பம் பிறக்கும். “பாதிக் காலம் ஜெயில்! மற்றப் பாதிகாலம் ரயில்! இதுதானே உங்கள் வாழ்வு!” என்று கேட்டாவிட்டார் என் உடன்பிறந்தானை, அவன் வாழ்வின் மாமருந்து! அப்படித்தான் பலருடைய நிலையும்.

பேச்சு - இல்லையேல் பெருமூச்சு - சிலவேளைகளில் கண்கூடக் கசியும், பல இல்லங்களில் - இளைஞர் பலர், நாடு மீட்டிடும் நற்பணியாற்றும் போது ஏற்படும் தொல்லைகளைக் காணும்போது. ஆனால், இப்படி இடுக்கண் காண்போர் நாம்தானா? உலகிலே கஷ்ட நஷ்டம் ஏற்கும் அணிவகுப்பு, இதுவா முதலாவது! இல்லை! இல்லை!

கேட்கும்போதே, திகில் பிறக்கும் கொடுமைகளை, சித்திரவதைகளைத் தாங்கிக் கொண்ட தீரர்கள் ஏராளம்!

உலகு, ஒளிபெற, தமது வாழ்க்கையிலே இருளைச் சேர்த்துத் கொண்டவர்கள் எண்ணற்றவர்கள்.
பழங்காலத்துச் சிறைக்கூடம், பயங்கரமான இடம் - பழிவாங்கும் இடம்; சித்திரவதை புரியும் இருட்டுக் கிடங்கு. அங்குத் தள்ளப்பட்டபோதும் வீரர்கள் குன்றாது

நின்றனர். குவலயத்தாரின் மேன்மைக்காகத் தமது இரத்தத்தை, தசையை ஈந்து, இளமையை இழந்து, இன்னலை வரவேற்றுக் குடும்பத்தை மறந்து, வாழ்வை இழந்து எத்தரை வணங்க மறுத்தனர்; குன்றின்மேலிட்ட விளக்கென இன்று அவர்தம் எண்ணங்கள் கொள்கைகள், திட்டங்கள், முறைகள் ஒளி தருகின்றன.

பக்தர்களுக்காவது கஷ்டங்கள் ஏற்பட்டபோது, எல்லாம் அவன் செயல் என்ற ஆறுதலும், கடவுளை நம்பினோர் கைவிடப்படார் என்ற நம்பிக்கையும் துணைசெய்தன. புராணங்களின்படி இத்தகைய பக்தர்களின் கஷ்டத்தைப் போக்கப் பரமசிவன் இடபமேறியோ, விஷ்ணு கருடனேறியோ வந்து ரட்சித்துவிடுவர்!

நாட்டு விடுதலைக்கோ, உரிமைக்கோ, மக்கள் விடுதலைக்கோ, மானத்துக்கோ போரிட்ட வீரர்கள், வெஞ் சிறையில் வீழ்ந்தபோது அவர்களுக்கு, "அந்த லோகவாசர்கள்" தரும் ஆறுதலும் கிடைப்பதில்லை. அரன், அரி ஆகியோர் வந்து வந்து வரமளிப்பதும் கிடையாது.

இந்து மார்க்கத்தில் தவிர, ஏனைய இஸ்லாமிய, கிருஸ்தவ மார்க்கங்களிலே, கடவுள், கதை ஏந்தியோ, கத்தி தாங்கியோ, சக்கரம், சூலம், வேல், வில், ஆகியவை ஏந்திக்கொண்டோ இருப்பதில்லை. எனவே, 'பக்தர்கள்' பாடுபட்டால், வாகனமேறிவந்து சக்கரத்தை ஏவி, பாவியின் சிரசைத் துண்டிக்கச் செய்து, பக்தனே! மெச்சினேன் உன் திறத்தை! பரமபதம் வந்துசேர்! - என்று அழைப்பதில்லை.

ஏசுவிடம் - அவருடைய மார்க்கத்தைச் சேர்ந்தவர், தனக்கு இன்னலும் இழிவும், பழிச் சொல்லும் பகைவர் தாக்குதலும் வந்துறும்போது, முறையிட்டால், என்ன சொல்லுவார்! என்னைச் சிலுவையில் அறைந்தனர், அறியாயா! உன் கொள்கைக்காக, உனக்குக் கஷ்டம் விளைவித்தால், யார் என்ன செய்ய முடியும்! கொள்கையிலே உறுதி இருந்தால், கடுநெருப்பும் குளிரும்!

- அதாவது உன் மனப்பக்குவம்தான் உனக்குத் துணை - வெளி உதவி கிடைக்காது - தேடாதே! - என்றுதானே கூறமுடியும்.

முகமதுவிடம் முறையிட்டால் அவர் மச்சகூர்ம அவதாரம் எடுத்துப் பழக்கப்பட்டவரா - எனவே அவரும், “வந்து ரட்சிக்க முடியாது! மெக்கா மெதினா பாதையிலே என்மீது வீசப்பட்ட கற்கள் கொஞ்சமல்ல! உலகம் உன் கொள்கையின் உயர்வை உணர்ந்து பின்பற்றும் வரையிலே உன்னைத் துன்பம்தான் தழுவும். அதைச் சகித்தலே வீரம்” என்ற சன்மார்க்கமே போதிப்பார்.

நம் நாட்டு நாயன்மார்கள், பக்தர்கள், ஆழ்வாராதிகள் ஆகியோருக்கு, எதிரிகள் எவரேனும் நஞ்சிட்டால் அமுதமாக மாறும். வெளி உலகிலே இப்படி நேரிட்டதில்லை. சாக்ரடீசுக்குத் தந்த விஷம், திராட்சை ரசமாக மாறிவிடவில்லை. உயிரைக் குடித்தேவிட்டது!! நெருப்பிலே தள்ளுவர் பக்தர்களை, உடனே, அவன் அருளால் தாமரைத் தடாகமாகிவிடும், தீக்குழம்பு இருந்த இடம்! நீரிலே தள்ளுவர், மாளிகையாகிவிடும்! பாம்பு வீசுவர், மாலையாக மாறிவிடும்! தூணிலே இருந்து சிங்கம் வெளிப்படும், எதிரியின் மார்பைப் பிளந்துவிடும்! - எல்லாம் இங்கு! பக்தர்களுக்குக் கஷ்டம் வரும் - ஆனால், கஷ்டம் தீர்க்கமுடியாததாகிவிடாது - மலைபோல் வந்த துன்பம் பனிபோல நீங்கிவிடும்.

கல்லோடு கட்டிக் கடலிலே போட்டனர், ஒரு நாயனாரை. பதிகம் பாடினார்; உடனே கல்லோ தோணியாகிவிட்டது.

கல்லாகும்படி சபித்து விடுகிறான் கணவன். கற்பை இழந்துவிட்ட தன் மனைவியைக் காகுத்தனின் கால் தூசி படுகிறது. கல்லுருவிலிருந்து, பெண்ணுருக் கொள்கிறாள் பத்தினி!

பக்தர்களுக்கு நேரிடும் தொல்லைகள், இன்னல்கள், ஆபத்துகள் அனந்தம் - பயங்கரமானவை. ஆனால், அவையாவும், பஞ்சு பஞ்சாகப் பறந்துபோய் விடும், பகவான் அருளால்!

இந்த ‘வசதி’ கிடையாது, வேறு மார்க்கத்துப் பக்தர்களுக்கு!!

இந்த ‘வாய்ப்பு’க் கிடைப்பதில்லை. இங்கும் சரி வேறு எங்கும் சரி, நாட்டுக்குழைப்போர், மக்களின் நலனுக்கு உழைப்போர் - ரட்சிக்கப் படுவதில்லை - நெருப்பு அவர்களைச் சுட்டுச் சாம்பலாக்கி இருக்கிறது, நஞ்சு அவர்களைப் பிணமாக்கியிருக்கிறது, கொடியோனுடைய வாள், அவர்களின் தலையைக் கீழே உருட்டி இருக்கிறது.

பக்தர்களுக்கு நன்றாகத் தெரியும், தங்களுக்கு எவ்வளவு பயங்கரமான ஆபத்து நேரிட்டாலும், பகவான் காப்பாற்றிவிடும் சக்தியும். பண்பும் கொண்டவர் என்பது. எனவே, அவர்கள் சகித்துக்கொள்ள முடிந்தது - துயர் துடைக்கப்படும் என்ற நம்பிக்கை இருந்ததால்!

நாடு விடுதலை பெறவேண்டும், மக்கள் நலன்பெற வேண்டும் என்ற சீரிய நோக்கத்துக்காகப் பணிபுரிபவருக்கோ, தங்கள் கொள்கையின் தூய்மையிலே நம்பிக்கை நிரம்ப உண்டு, ஆனால் பகவான், ஆபத்து வேளையிலே வந்து ‘கை கொடுப்பார்’ என்பது பற்றிய நம்பிக்கையைக் கொள்ள முடிவதில்லை - ஏனெனில், பகவான் அப்படிப் பட்டவர்களை, பக்தர் கூட்டத்தவரல்லாதாரை, ரட்சிக்க முனைந்ததாக, அதற்காகச் சக்கரம் ஏவியதாகவோ, அவதாரம் எடுத்ததாகவோ, கதையும் கிடையாதல்லவா!!

பக்தர்களுக்கு வந்துள்ள ஆபத்துகள், சோதனைகள், பகவானுடைய லீலா விநோதங்களை விளக்கும் சம்பவங்கள்.

நாட்டுக்குழைத்தோருக்கு வந்த ஆபத்துகள், ஆபத்துக்களாகவேதான் இருந்தன! கல், கனியாக வில்லை. தூக்கு மேடை, துளசி மாடமாகி விடவில்லை. பகத்சிங், பிணமாகாம
லிருக்க, பகவான் அருளவில்லை. திருப்பூர்க் குமரனைத் தடிகொண்டு தாக்கியபோது, பாண்டியன் தந்த பிரம்படி, அண்டபிண்ட சராசரம் முழுவதும் பட்டது போன்ற,

அற்புதம் நிகழ்த்தி, ஆண்டவன் அந்த இளைஞனைக் காப்பாற்றவில்லை. சிதம்பரனார் செக்கு இழுத்தபோது, நந்தன் தூங்கும்போது சிவ கணங்கள் உழவுவேலை செய்ததுபோலச், சிதம்பரனார் வசம் விடப்பட்ட செக்கு, அவனருளால், தானாகச் சுற்றவில்லை - அவரேதான் இழுக்க நேரிட்டது.

பக்தர்களின் வாழ்க்கை வரலாற்றுக்கும், கொள்கைக்காகப் பணிபுரிந்தவர்களின் வரலாற்றுக்கும், இந்த மாபெரும் வித்தியாசம் இருப்பதை மனத்திலிருத்திப் பார்த்தால்தான், ஊருக்குப் பிழைத்தவர்களின் மாண்பு உள்ளபடி விளங்கும்.
இளைஞனாக உள்ளே சென்று, வயோதிகனான பிறகே, சிறையிளின்றும் வெளியே வந்தவர்கள் எத்தனை பேர்!

திடகாத்திரமாக இருந்தபோது உள்ளே தள்ளப்பட்டு, தாளமுத்துகளான பிறகு வெளியே தள்ளப்பட்டவர்கள், எவ்வளவு! குடும்பத்திலே மணி விளக்காக இருந்த நிலையிலே, உள்ளே தள்ளப்பட்டுச் சிறையினின்று வெளி வரும்போது, குடும்பம், புயலில் சிக்கிய கலம்போன்ற நிலையில் இருக்கக் கண்டவர் எவ்வளவு.

மக்களின் வாழ்வு பூங்காவாக வேண்டும் என்பதற்காகத் தம் வாழ்வைப் பாலைவனமாக்கிக் கொண்டவர்கள் எவ்வளவு. கருகிய மொட்டுகள், சகக்கி வீசப்பட்ட மலர்கள் என்ற நிலை பெற்றவர்கள் எவ்வளவு.

அத்தன்மையான ஆண்மையாளர்களிலே சிலருக்காவது அவர்களின் அந்திய காலத்திலேயோ, அவர்கள் மறைந்த பிறகோ, கீர்த்தி ஏற்பட்டது; உலகு புகழ்கிறது; உத்தமர்கள் என்று போற்றப்படுகின்றனர்.

பலர் பாடுபட்டனர்; எனினும், ‘ஊர்பேர்’ தெரியாதவர்களாகிவிட்டனர். அவர்களின் கல்லறைகளைக் கூடக் கயவரும் காலமும் கல்லி எடுத்தெறிந்து விட்டநிலை காண்கிறோம்.

பலப்பலர், காட்டு ரோஜா பூத்து, மணம் வீசி, தானாக உலர்ந்து, உதிர்ந்து, சருகாகிவிடுவது போலாயினர்.

நாம், அறிவுப் பணியாற்றும் ஓர் ஒப்பற்ற படையிலே உள்ளவர்கள் என்று எண்ணும்போது, எத்தகைய இடுக்கண் வரினும், அஞ்சாது, தொண்டாற்றவேண்டும். அலை, மலை எனத்தான் எழுகிறது - ஆயினுமென், அலை மடியும்; கலம் மேலால் செல்லும், என்ற உறுதிப்பாடு நமக்கு வேண்டும்.

அடக்குமுறையை நாம், ஆழ்கடலில் கலம் விடுவோன் காணும் அலைஎனக் கொள்ளவேண்டும்.
பயமூட்டுவதாக இருக்கிறது என்பதற்காகப் பயணத்தை நிறுத்திவிட முடியாது.

தந்தையர் நாடுதந்த ‘பண்பாடு’ அது அன்று!

தாயகத்தின் தளை நீங்கும் வீரர் என்ற பெயருக்கு இழுக்கின்றி, நடந்துகொள்ள வேண்டும்.

நம்மால் ஆகுமா! - என்ற திகைப்புப் பிறக்கும் கட்டம் அல்ல இது.

நமக்கு இது எம்மாத்திரம்!! - என்ற தகாத்துணிவும் கூடாது.

நாம், சாமான்யர்கள் - எனினும், பெரிய காரியங்களைச் சாதித்திருக்கிறோம்.

நாம் சாமான்யர்கள் - எனவே, வெற்றி பெறுவோம்.

நாம் மருளமாட்டோம், மையலூட்டும் மாது மலரணைக் கழைத்திடுவதாயினும்.

நாம், நமது நாடு இருந்த நிலைமையும் தெரிந்து கொண்டோம். இன்று உள்ள நலிவும் புரிந்துவிட்டது - அந்த நலிவு நீக்கும் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டோம். பணியாற்றி வருகிறோம்.

பழைய நாள்தொட்டு, தாயகம் கொண்டாடி மகிழ்ந்த இப்பொங்கல் புதுநாளன்று நாம், புது உறுதி பெறுவோம்.

இந்நாள் தரும் இன்பம் புதியதோர் பொலிவு பெற்றுத் தாயகம், சிறந்து விளங்கிடச் செய்யும் சீரிய ஆற்றலை நமக்குத் தருமாக.

வாழ்க தோழர்காள்! வளர்க நுமது தொண்டு!

(திராவிட நாடு பொங்கல் மலர் – 1955)

# தி. வேலரா! நினைவிருக்கட்டும்

எந்த ஒரு கட்சியாயினும், அது அதிகாரத்திற்கு வந்துவிட்டால், அதற்கு மதிப்பும் ஓரளவு செல்வாக்கும் இருப்பது சகஜம். அதிலும், அதிகாரத்திற்கு வருமுன், பொது மக்களுக்கு அளவு கடந்த ஆசைகளைக் கூறி, அவர்களுடைய ஆதரவையும் ஒத்துழைப்பையும் பெற்ற ஒரு கட்சி அதிகாரத்துக்கு வந்துவிடுமானால், அந்தக் கட்சிக்கு மேலும் சிறிது செல்வாக்கு அதிகமாகும்.

இந்தச் செல்வாக்கு, நிரந்தரமாகாது - அழிக்க முடியாதது என்று கருதிக்கொண்டு, அதிகாரத்தில் அமர்ந்துள்ள ஒரு கட்சி, அதிகார போதையில் தன்னுடைய பழைய வாக்குறுதிகளை எல்லாம் மறந்து, காரியமாற்றத் தொடங்குமாயின், அதிகார பீடம் ஆட்டங் கொடுத்து விழுந்து விடும்.

பொது மக்களின் ஆதரவும் ஒத்துழைப்பும் தன் பக்கம் இருந்தாலன்றித், தன்னுடைய அதிகார பீடம் நிலைத்திருக்காது என்பதை மறந்து, கண்மூடித் தர்பார் நடாத்தும் எந்தக் கட்சியும் நீடித்திருந்து அதிகாரம் செலுத்த முடியாது. அப்படிப்பட்ட கட்சிக்கு அவ்வப்போது ஆட்டம் ஏற்படுவதும், அதிகார பீடம் மாறுவதும், பின்னர் அந்தக் கட்சி அதிகாரத்துக்கே வரமுடியாத நிலை ஏற்படுவதும் நாட்டின் பல பகுதிகளிலும் நடக்கும் சம்பவங்களாகும்.

இந்த நிலைமையையே இன்று ஆட்சிப் பீடத்திலுள்ள சென்னை சர்க்காரும் ஏற்படுத்திக் கொள்ளும் முறையில் தன்னுடைய அதிகாரத்தைப் பிரயோகித்து வருகின்றது. எந்தப்பக்கம் திரும்பினாலும், மக்களுடைய கொதிப்பையும், குமுறலையும், கொந்தளிப்பையுமே சர்க்கார் காணும் நிலைமை ஏற்பட்டுவிட்டது. எந்த ஆட்சியாளர் காலத்திலும் ஏற்படாத வேலை நிறுத்தங்கள் இன்றைய ஆட்சியில் ஏற்பட்டு விட்டன.

ஆலைத் தொழிலாளர்கள்
ஆரம்ப ஆசிரியர்கள்

என்.ஜி.ஓ.க்கள்
போலீஸ் சிப்பந்திகள்
இன்னும் எத்தனையோ பேர், தங்கள் தங்கள் குறைகள் தீர்க்கப்பட வேண்டுமென்பதற்காகக் கிளர்ச்சிகளும் வேலை நிறுத்தங்களும் செய்தனர் - செய்கின்றனர். இவையெல்லாம் சர்க்காரின் இன்றைய ஆட்சி முறை எப்படி இருக்கிறதென்பதையே எடுத்துக்காட்டுவதாக உள்ளன.

பொது மக்களின் கிளர்ச்சிகள் ஒருபுறம் இருக்க, அதிகார பீடத்திலுள்ள மந்திரி சபைக்குள்ளேயே ஒத்துழையாமை இயக்கம் தோன்றி விட்டது. மந்திரி சபை ஆரம்பத்திலிருந்தே இந்த இயக்கம் வளர்ந்து வருகிறது. மந்திரி சபை ஏற்பட்ட சில நாட்களுக்குள்ளாகவே, அதில் மாறுதல் உண்டாகும் அளவுக்கு ஆட்சி முறையிலே அலங்கோலம் ஏற்பட்டுவிட்டது.

பிரகாசம் மந்திரி சபை கலைக்கப்பட்டு, ஓமந்தூரார் மந்திரி சபை ஏற்படுத்தப்பட்டது.

ஏன் இந்த நிலை ஏற்பட்டது? பிரகாசம் மந்திரி சபை வேறு கட்சி; ஓமந்தூரார் மந்திரி சபை வேறு கட்சியா? இல்லை. இரண்டும் ஒரு கட்சிதான். என்றாலும், அதிகார பீடத்தில் அமர்ந்து ஆட்சி செலுத்தக்கூடிய அறிவைப் பெற்றுள்ள ஒரு கட்சியையே சார்ந்துள்ள மந்திரிகளுக்குள்ளேயே ஒத்துழையாமை இயக்கம் புகுந்து விட்டதென்றால், அவர்களுடைய ஆளும் திறனும், அதனால் மக்களுக்கு ஏற்படும் நன்மைகளும் எந்த அளவு உருவான பலனைத் தருமென்று, அவர்களை ஆட்சிப் பீடத்தில் அமர்த்திய பொது மக்கள் எண்ணிப்பார்க்கும் காலம் வந்து விட்டது.

மந்திரி சபையில் ஏற்பட்டுள்ள மாறுதல் இந்த அளவோடு நின்று விடுமென்றும் சொல்வதற்கில்லையே! ஓமந்தூரார் மந்திரி சபையையும் கவிழ்த்துவிட்டு, வேறு புதிய மந்திரி சபையை ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்ற அளவுக்கு நிலைமை வளர்ந்துவிட்டதே! மக்களின் ஆதரவையும் ஒத்துழைப்பையும் பெற்று ஆட்சிப் பீடம் ஏறிய ஒரு

கட்சிக்குள் திடீர் திடீர், "பச்சோந்தி" மாற்றம் ஏற்படக் காரணம் என்ன? இந்த மாற்றம், மக்களின் செல்வாக்கு மந்திரி சபைக்கு இருக்கிறதென்பதைக் காட்டுகின்றதா? அல்லது மக்களுக்கு மந்திரி சபையிடம் மதிப்பில்லை என்பதைக் காட்டுகின்றதா? மக்களிடமிருந்து பெற்ற செல்வாக்கை மந்திரி சபை இழந்து விட்டதென்பதைத்தானே இந் நிகழ்ச்சிகள் நன்கு எடுத்து காட்டுவனவாக உள்ளன. மந்திரி சபை யின் ஆட்சி முறை, மக்களின் தேவைகளைப் பூர்த்தி செய்வ தாகவோ, பூர்த்தி செய்யாவிட்டாலும், மக்களுக்கு மனமாறுதலை உண்டாக்காததாகவோ இன்றைய மந்திரி சபை வேலை செய்ய வில்லை என்பதையே இம்மாறுதல்கள் எடுத்துக் காட்டுகின்றன.

எந்தக் கட்சியினுடைய எதிர்ப்பும் இன்றி, ஏகபோகமாகத், தேர்தலில் வெற்றிபெற்று, அதிகாரத்தில் அமர்ந்துள்ள எம்மை எவர் என்ன செய்துவிட முடியும் என்ற எக்களிப்போடு, அதிகார போதையையும் அளவுக்கு மிஞ்சிக் கொண்டுவிட்டால், எந்த அசைக்கமுடியாத கட்சிக்கும் அழிவு ஏற்படும் என்பது திண்ணம். இதனை அதிகாரத்தில் இருக்கும் எந்தக் கட்சியும் மறந்துவிடக் கூடாது. அது, எவ்வளவு பலம் பொருந்திய கட்சியாய் இருந்தாலும் சரி, மக்களுடைய ஆதரவை அமோகமாகப் பெற்றுள்ள கட்சியாய் இருந்தாலும் சரி, மக்களின் ஒத்துழைப்பை இழக்கும் முறையில் தன்னுடைய ஆட்சி முறையை நடாத்திச் செல்லுமானால், அந்தக் கட்சிக்கு அதிகார பீடத்தில் இடம் கிடைக்காது. இதற்கு ஓர் உதாரணம்.

இங்கிலாந்தின் பிடியிலிருந்து விடுபட்ட அயர்லாந்தை தி - வேலரா என்பவர் தன்னுடைய அதிகாரத்துக்குக் கீழ்கொண்டுவந்து, கடந்த பதினாறு ஆண்டுகளாக ஏகபோகமாய் ஆண்டு வந்தார். இன்று தி-வேலராவின் நிலை என்ன? பதினாறு ஆண்டுகளாக மக்களின் செல்வாக்கையும் ஒத்துழைப்பையும் பெற்று ஆட்சி புரிந்துவந்த தி - வேலரா இன்று ஆட்சியில் இல்லை.

மக்கள் அவருக்கு எதிராகக் கிளம்பி அவரை விரட்டி விட்டனர்.

அயர்லாந்து, நம் நாட்டைப் போல், பலதிறப்பட்ட அரசியல் கட்சிகளையோ, சாதி மதவேறுபாடுகளையோ கொண்ட ஒரு நாடன்று, என்ற போதிலும் அந்நாட்டின் தலைவன், பொதுமக்களின் செல்வாக்கையும் ஒத்துழைப்பையும் பெற்று ஆட்சி செலுத்த முடியவில்லையென்பதை, பலதிறப்பட்ட அரசியல் கட்சிகளையும் சாதிமதங்களையும் தன்னகத்தே கொண்டுள்ள ஒரு நாட்டைத் தாங்களே ஆளலாம் - ஆள முடியும் என்று எண்ணிக்கொள்ளும் இன்றைய நம் ஆட்சியாளர்கள் தங்கள் நினைவுக்குக் கொண்டுவந்து பார்ப்பார்களானால் அவர்களுடைய ஏகபோக ஆட்சி முறையால், இந்நாட்டு மக்களின் நிரந்தரமான ஒத்துழைப்பை எந்தக் காலத்திலும் பெற முடியாதென்பதை உணர்வார்கள்.

எனவேதான், காரணம் எதுவுமின்றிக், கிடைத்த செல்வாக்கை வைத்துக்கொண்டு, அடக்குமுறையை அள்ளி வீசுவது போன்ற முறை தவறிய காரியங்களைச் செய்யத் தலைப்பட்டிருக்கும் சென்னை சர்க்காருக்கு, தி-வேலரா, நினைவிருக்கட்டும் என்று எச்சரிக்கிறோம்.

14.3.1948

# முரண்பாடுகள் அல்ல

பண்டித ஜவஹர்லால், சிறை வைக்கப் பட்டார். 1942

பண்டித ஜவஹர்லால், வைசிராய் ஏற்பாடு செய்த விமானத்தில் மலாய் சென்று, அங்கு மவுண்ட் பேடன் பிரபுவுடன், மோட்டரில் பவனிவந்தார். 1946.

காங்கிரஸ் காரியக் கமிட்டியின் அறிக்கையைச் சர்க்கார், கண்டித்தனர். 1942

காங்கிரஸ் காரியக் கமிட்டியினர் உணவு சம்பந்தமாக வெளியிட்ட அறிக்கையைச் சென்னை சர்க்கார் ஆலோசகர் பொதுமக்களுக்குச் சிபாரிசு செய்கிறார். 1946

இவைகள், முரண்பாடுகள் அல்லவா? என்றே எவரும் கேட்பர். இல்லை என்பதுதான், ஆராய்ந்து பிறகு அனைவரும் கூறவேண்டிய பதிலாக இருக்கும். இவை முரண்பாடுகள் போல் தோற்றமளிக்கும், ஏகாதிபத்தியத் திருவிளை யாடல்கள்! ராஜதந்திரத் திட்டங்கள்!

மலாயாவில், மவுண்ட் பேடன் பிரபுவுடன், பண்டிதஜவஹர் பவனி வந்த செய்திகேட்டு, பிரிட்டிஷாரின் முகம் சோகம் கப்பியதாக இருந்திருக்கும் என்று இங்கு, அந்தச் செய்தியைக் கேட்டுக் களிப்புடன் காணப்படும் காங்கிரஸ் அன்பர்கள் கருதக்கூடும். உண்மை என்ன வென்றால் ஏகாதிபத்திய ஏஜெண்டும், ஏகாதிபத்திய எதிர்ப்புச் சக்தியின் தலைவரும், ஒரே மோட்டாரில் பவனி வந்தனர் என்ற செய்தி, இங்கு உண்டாக்கியவதைவிட, அதிகமான சந்தோஷத்தைப் பிரிட்டனில் உண்டாக்கியிருக்கும் “வெள்ளையனே”, வெளியே போ! என்று வீரமுழக்கம் செய்தாரே, அந்த நேருதான் இவர்! பக்கத்தில் இருப்பது, வெள்ளைக்காரர், அதிலும் ஏகாதிபத்திய ஏஜெண்டு, அதுமட்டுமல்ல ராஜகுடும்பம், மவுண்ட் பேடன் பிரபு பக்கத்தில் இருப்பவர்” என்று படத்தைப் பார்த்துப் பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ராஜதந்திரிகள் பூரித்துப் போயிருப்பர்! இந்த ராஜோபசாரத்தை நேரு ஏற்றுக் கொண்டதன் மர்மம்,

அவர்களுக்கு தெரியம், நம் மக்கள் அறியமாட்டார்கள். பயத்தால் வெள்ளைக்காரன் பணிந்தான் என்று நம் மக்கள் எண்ணிக் களிப்பர் பல நாடுகளைப் பலகாலமாகப் பிடித்தாட்டும் வெள்ளையனுக்குத் தெரியும் பிரிட்டிஷ் பசப்பும் பேரமும் பலித்துவிட்டது, என்பதைத்தான் அந்தப்படம் பாடமாகக் காட்டுகிறது என்பது, முரண்பாடுபோலத் தோன்றும் இந்தச் செய்திகள், இந்திய உபகண்டத்தின் விடுதலை வரலாற்றிலே, நாம், ஒருமுக்கியமான கட்டத்திலே இருப்பதைக் காட்டுகின்றன. பளபளப்பான பாதை, ஆனால் வழவழப்பும் அதிகம்!

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் கடைசி நாள்கள் ஆரம்பமாகிவிட்டன. இதனை மற்றவர்களை விட, பிரிட்டிஷார் மிகநன்றாக அறிவார்கள். உலகிலே, எந்தப் பகுதியிலும், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு, இடியும் ஜனமும் கண்டனமும் எதிர்ப்பும் சூரியன் ஆஸ்தமிக்காத பரந்த சாம்ராஜ்யம் எம்முடையது என்று பெருமை பேசிக்கொண்டு பிரிட்டனில், இன்று கூர்ந்து நோக்கினால், ஒரு பரந்த சாம்ராஜ்யத்தைப் பண்புடன் ஆள்வதற்கு வேண்டிய மூளைபலம் அங்கு இல்லை என்பதைத் தெரிந்து கொள்ளலாம். ஆதிர்ப்திகள் கிளம்பத்தான் செய்யும், அவைகளை அடக்குவதிலேதான் அரசியல் திறமையே இருக்கிறது. என்ற பழைய கோட்பாட்டை நம்பியதனால் வந்தபலன் இதுதான். ஏராளமான பொறுப்புகளைச் சுமந்து கொண்டு, அதற்கேற்ற அவ்வளவு திறமையின்றி இளைத்துப்போனால், எந்த ஏகாதிபத்தியமும் தானாகக் கலகலத்துதான் போகும். கரைவது, கலகலப்பது, கலைப்பது, சிதறுண்டு போவது, சின்னாபின்னப்படுத்துவது, என்ற முறைகளிலே பலவகைகள் உண்டு. ஆனால் முடிவு ஒன்றுதான், ஏகாதிபத்தியம் நிலைக்கமுடியாது என்பதே ஆம்முடிவு. இந்த நிலைமையினின்றும் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள, பிரிட்டன் ஓர் புதிய தந்திரத்தை இன்று கையாள்கிறது. அதாவது, சாம்ராஜ்யங்களிலேயும்,

தன்னுடன் ஏதேனும் ஓர் வகையில் தொடர்பு கொண்டுள்ள மற்ற நாடுகளிலேயும், சர்வாதிகாரம் பெற்றுள்ள கட்சிகளுடன் உறவாடி, அந்தக் கட்சிகளைத் தழுவி அவைகளைத் துணைக் கொண்டு தன் சரிவு விரைந்து நேரிட்டு விடாதபடி பாதுகாக்கும் தந்திரத்தைப் பிரிட்டன் கையாள்கிறது.

சீனாவிலே, தேசியவீரர், தியாக புருஷர் என்ற விருதுகள் பெற்று, சர்வாதிகாரியாக விளங்கிய, மார்ஷல் சியாங் கே ஷேக்கைப் பிரிட்டன் ஆதரித்ததுடன், சீனாவின் விடுதலை க்கும் விமோசனத்துக்கும், பாடுபடக்கூடிய ஒரே தலைவர் அவரே என்றும் பிரச்சாரம் செய்ததன் மர்மம் இதுவே சீனாவில் சியாங்குக்குச் சர்வாதிகாரம் கிடைத்து, அதே சியாங்கின் நேசம் பிரிட்டனுக்குக் கிடைத்தால், பிரிட்டனுக்கு இலாபமல்லவா! அது போலவே கிரீசில், தனக்குத் துணை நிற்கும் கட்சிக்கு ஆதரவு திரட்டப் பிரிட்டன் வேலை செய்தது. ஏகிப்திலே இதுபோன்ற துணைக்கட்சி கிடைக்குமா என்று தேடி அலுத்து முயற்சி வீணாகக் கண்டது இந்தியாவிலே இன்று, இதே தந்திரத்தைக் கையாண்டு, ஓரளவு வெற்றியும் பெற்றிருக்கிறது.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை ஒழித்தாக வேண்டும் என்று மக்கள் கொண்டுள்ள உணர்ச்சியையும், இந்தத் துறையிலே காங்கிரஸ் நடத்திய பல போராட்டங்களின் மூலம் ஏற்பட்ட எழுச்சியையும் கண்டதும் இந்த உபகண்டத்து முதலாளிகள், தங்கள் ஆதிக்கத்தை நிலை நாட்டிக் கொள்ள இந்த உணர்ச்சியையும் எழுச்சியையும் பயன்படுத்திக் கொள்ள வேண்டி, பண பலத்தைத் தந்ததால், உணர்ச்சியும் எழுச்சியும், பிரம்மாண்டமான உருவை அடைந்தது. இதனைப் பிரிட்டனில் உள்ள முதலாளிகள் தெரிந்து கொண்டனர். எனவே அந்தப் பிரிட்டிஷ் முதலாளிகள், இந்திய முதலாளிகளுடன் கூடிக்கொண்டு, யாராவது ஆண்டு கொண்டு போகட்டும், நமக்குள் வியாபார சம்பந்தமான உறவு இருந்தால் போதும் என்று பேரம் பேசிக்கொண்டனர். இந்தப் பேரம் திருப்திகரமாக முடிந்துவிடவே இந்திய முதலாளிகள்

காங்கிரசையும் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தையும், நேசர்களாக்கும் கைங்கரியத்தைச் செய்துவைத்துவிட்டனர். அதனாலேதான் விசித்திரமான காட்சிகளைக் காண்கிறோம். நம்ப முடியாத செய்திகளைப் படிக்கிறோம்! எந்தப் பண்டித ஜவஹர்லாலை 1942ல் சிறையில் தள்ளினரோ அதே ஏகாதிபத்திய ஏஜெண்டுகள் 1946ல் அதே பண்டிதருக்கு, மலாய்போய் வர விமானம் ஏற்பாடு செய்து தந்தனர். பிரிட்டிஷ் தளபதிகளில் ஒருவரான மவுண்ட்பேடன் பிரபுவும் பண்டிதரும் மலாயாவில் பிரபுவின் மோட்டாரில் பவனி வந்தனர்.
உணவு நெருக்கடியைச் சமாளிக்கக் காங்கிரஸ் தீட்டிய திட்டத்தைப் பொதுமக்கள் ஏற்று நடத்த வேண்டுமென்று, சென்னை சர்க்கார் (ஆட்வைசர்) இலோசகர் கூறுகிறார்.

இந்த விசித்திரங்கள் போதாதென்று, வேறொன்றும் இப்போது தெரிகிறது.

சோவியத் ரஷியா, இந்தியாவிலே ஆதிக்கம் தேடுகிறதாம் அதனைத் தடுக்க, பிரிட்டிஷ் காங்கிரஸ் கூட்டுத் தேவையாம்!

கம்யூனிஸ்டு கட்சியினர் மீது கோபித்துக் கொள்வது என்ற அளவிலிருந்து ஆரம்பமாகி இன்று, பொது உடைமைக் கொள்கையையே பகிரங்கமாகவும், கூச்சமின்றியும் கண்டித்துப் பேசக் காங்கிரஸ் பிரசாரகர்கள் கிளம்பிவிட்டனர்.

ரஷியாவுக்கு ஏகாதிபத்திய ஆசை என்றும், அதனை இந்தியா எதிர்த்தாக வேண்டுமென்றும் பேசப்படுகிறது. ரஷியாவை ஆதரிக்கும் தோழர்களுக்கு இங்கே சோறுகூடப் போடமாட்டோம். வேண்டுமானால் ரஷியா, பாரசூட் மூலம், அவர்களுக்கு உணவு தரட்டும் என்று, அன்னதான சமாஜத் தலைவரல்ல, அரசியல் பத்திரிகை நடத்தும் அன்பர் சொக்கலிங்கம் தினசரியில் எழுதுகிறார். ஏழைப் பங்காளரான இவர் மட்டுமல்ல. பிரிட்டனிலே கார்லி பிரபுவும், ரஷியா, இந்தியாவிலே ஆதிக்கம் பெற விரும்புகிறது என்று பேசுகிறார்.

பிரிட்டிஷ் பிரசாரம் அற்புதமாக வேலைசெய்து வருகிறது. ரஷியாவின் ஆதிக்கம் வலுவடையும் என்ற பயத்தைக் களிப்பினால், இந்திய உபகண்டத்திலுள்ள சிற்றரசர்கள் சீமான்கள், கோடீஸ்வரர்கள் ஆகியோருக்குக் குளிரும் காய்ச்சலும் பிறக்கும், அந்த வர்க்கம் தன்னுடைய கங்காணிகளைக்கூப்பிட்டு புதிய ஆபத்து வருகிறதாம்! ஆகவே போர் முறையை மாற்றுங்கள் பிரிட்டனுடன் போராடியது போதும் - ரஷிய ஆதிக்கம் வர விடாதபடி தடுக்கவேண்டும். அதற்கான பிரச்சாரத்தைத் துவக்குங்கள். பிரிட்டனுடன் இனி விரோதம் வேண்டாம். நேசம் வேண்டும், பிரிட்டிஷ் பலத்தைத் துணை கொண்டுதான், இங்கு சோவியத் சூறாவளி ஏற்படாதபடி பாதுகாப்புத் தேடிக்கொள்ளவேண்டும் என்று முதலாளி வர்க்கம் கூறும் என்று பிரிட்டன் அறியும். அந்த வர்க்கத்தால் வளர்க்கப்பட்டுள்ள “காங்கிரஸ்” இப்போது, பிரிட்டனுடன் கூடிக்கொண்டு, ரஷியா மீது துர்ப்பிரசாரம் செய்யும் “பிரச்சார அச்சு” ஏற்படுத்திக் கொண்டது. எனவே தான், பிரிட்டன் மற்றக் கட்சிகள் ஏக்கேடு கெட்டாலும் சரி, காங்கிரசைக் கட்டித் தழுவினால் போதும் என்று துணிந்து கூறுகிறது. காதல் நாடகமும் தொடர்ந்து நடக்கிறது! அந்தப் புதிய அனுபவத்தை ஆலகாபாத் பண்டிதர் சிங்கப்பூர் பவனியின்போது பெற்று ரசித்திருப்பார் என்று நம்புகிறோம்.

“தேசிய உணர்ச்சி” உருவானதும், அதனை முதலாளிகள் விலைக்கு வாங்கிக் கொள்பவர்கள் என்பதும், முதலாளியின் கைச்சரக்கானதும், அதனை ஏகாதிபத்யம், தோழமை கொள்ளும் என்பதும், அரசியல் அரிச்சுவடி அறிந்தவருங் கூடத் தெரிந்து கொள்ளலாம். ஆனால் இசியாவையே ஊய்விக்கும், ஆபாரமான காரியத்துக்காக அறிவையும் திறமைப்யுயம் ஆர்ப்பணிக்க முன் வந்ததாகக் கூறிக்கொள்ளும் அன்பர்கள் மட்டும் இதனை அறிந்ததாகத் தெரியவில்லை என்ன காரணமோ!

ரஷியாவின் ஆதிக்கம் வந்த, விடமோ என்ற கிலிபோபால் மன்னருக்கும், ராஜபுதன ராஜாக்களுக்கும் கோடீஸ்வரர்

பிர்லாவுக்கும், ஆலை அரசர் டாடாவுக்கும், பண்ணை முதலாளிமார்களுக்கும், பாட்டாளியின் இரத்தத்தைக் குடிக்கும் பலருக்கும் இருக்கலாம் - சகஜம்! தினசரி ஆசிரியருக்கு, எந்தச்சமஸ்தானம் போய்விடும் என்று திகில், விருது நகர் காமராஜருக்கு, எந்தச் சமஸ்தானம் போய்விடும் என்ற அச்சம், ஏன் இவர்கள் ரஷியாவின்த பெயர்கேட்டு நடுங்கவேண்டும்! நடுங்குவதுடன் இல்லையே, பரிதாபத்துக்குரிய அவர்கள், ரஷியாவுக்கு பயந்து பிரிட்டனுடன் கூடிக் குலவவும் துணிகிறார்களே, அதனை என்னென்பது! தென்றலுக்குப் பயந்து தேள்கடியைத் தேடிப் பெறுபவனை நாம் கண்டதில்லை, ஆனால் தேசபக்தியின் பெயரல் உள்ள, சிலதலைவர்கள், ரஷிய ஆதிக்கம் வருமென்று பயந்து, அந்தப் பயத்தைக் கிளப்பிவிட்ட பிரிட்டனுடன் கூடிக்கொள்ளவும் துணியும் விசித்திரத்தைக் காண்கிறோம், வியப்படைகிறோம்.

ரஷியாவின் ஆதிக்கம் வருகிறதாம், என்ற செய்தியைக் கேட்டதும், இடியோசை கேட்ட நாகமென்று, மாளிகையிலே, மனோஹரி தரும் மதுக்கிண்ணத்தைப் பெற்று மகிழும் மாமிசப் பிண்டங்கள் மருளட்டும், மக்களின் தலைவர்கள் மருள்வானேன்! மாஸ்கோமணம் பரவுமென்ற பயத்தை, மக்களின் வியர்வையைப் பொன்னாக்கி மணியாக்கிப் பூரித்துக் கிடக்கும் மதோன்மத்தர்கள் கொள்ளட்டும், பாட்டாளிகள் பதறுவானேன்? சிங்கார மண்டபங்கள் சீறட்டும், சித்திரக் கோலைகளிலே சிரித்து இடும் சிற்றிடையாளைப் பறித்தெடுத்த மலரெனக் கொண்டு காம மது உண்டுகளிக்கும் காசாசைக்காரர்கள் கலங்கட்டும், உழைத்து உருமாறி, உலுத்தர்களின் பிடியில் சிக்கிச் சீரழிந்து, கிடக்கும் கோடிக்கணக்கான மக்கள், ஏன் கோபமோ, பயமோ கொள்ள வேண்டும்! ஜாரின் கூலிகளாகத் தங்களை இக்கிக் கொண்டவர்கள் பயம் கொள்வது சகஜம், முதலாளி வர்க்கத்தின் சவுக்கடியால் வாழ்க்கையிலே வறுமைத் தழும்புகளைப் பெற்றுள்ள மக்கள் ஏன் பயப்பட வேண்டும்!

பிரிட்டன், இதுபோது ஆரம்பித்துள்ள "சோவியத் எதிர்ப்புணர்ச்சி" இந்திய முதலாளிகளுக்குப் பரவிவிட்டது. அந்த முதலாளிகளின் கைப்பாவையாகக் காங்கிரஸ் இருப்பதால், அந்தக் காங்கிரஸ் பிரச்சார பீரங்கியை மாஸ்கோ பக்கம் திருப்புகிறார்கள். அந்தத் திருப்பணியிலே தினசரி ஆசிரியர் போன்ற சமன்தானமற்ற, ஜெமீனற்ற, பண்ணையற்ற, ஆலையற்றவர்கள் உடுபடுவது, நகைச்சுவையுடன் கலந்த சோகக் சித்திரம்! இந்த விசித்திர நாள்களிலே, இந்த விபரீதக் காட்சியையும் காண்கிறோம்!

ஆனால், பிரிட்டிஷ் ராஜதந்திரம் இன்று காங்கிரசைச் சரிப்படுத்திவிட்டதே தவிர, காங்கிரசுக்குப்பல மூட்டிய மற்றச் "சக்திகளை" பிரிட்டன், வெல்லவில்லை - வெல்லவும் போவதில்ல. காங்கிரசுக்கு முடிசூட்டிவிட்டதாலேயே புரட்சிப் புயலுக்கு மூடியிட்டு விட்டதாகப் பிரிட்டன் கருதுவதற்குக் காரணம், நாம் முதலில் கூறியபடி, பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தின் மூளைபலம், குறைந்து விட்டதுதான், மூளையிலே மூடுபனி கிடப்பதால் தான், இன்னமும் பிரிட்டன், இந்தியாவிலே, மெஜாரிட்டி மைனாரிட்டி பிரச்சனை இருப்பதாக எண்ணுகிறது, இன்று இங்கே இருப்பது இனப்பிரச்னை என்பது தெரியாமல்.

முதலமைச்சர் ஆட்லி, மேதாவித்தனமான ஓர் அரசியல் உண்மையை எடுத்துக்காட்டுபவர் போல, ஒன்று சொன்னார், "மெஜாரிட்டியின் முற்போக்கைத் தடுக்க மைனாரிட்டியை அனுமதிக்கமாட்டோம்" என்று அதற்குப் பொருள் காங்கிரஸ் கட்சியின் போக்கை மற்றச் சிறுகட்சிகள் தடுக்கும்படியாக நாங்கள் அனுமதிக்கமாட்டோம், என்று கொள்கிறார்கள், களிப்புமடைகிறார்கள்.

மெஜாரிட்டியாக, உள்ள கட்சியை மைனாரிட்டி ஒரு போதும் தடுக்கத்தான் முடியாது, தடுக்க முடிகிறது என்றால் அப்போது, மெஜாரிட்டி என்று பெயரளவில் உள்ள கட்சிக்கு, மைனாரிட்டியின் எதிர்ப்புச் சக்தியைச்

இல்லையா? அமெரிக்கா போய்வந்த தினமணி ஆசிரியர், ஆங்கிலருக்கு ஆங்கிலம் கற்றுக் கொடுக்கக் கூடியவர் என்று ஆக்கரகாரம் புகழும் இந்து பத்திரிகைக் குழுவினர், ஏன் இவர்கள் எல்லாம், சென்னையைப் புராணிகர்களிடம் ஒப்படைத்து விட்டுக் கிடக்கிறார்கள். கேட்பார் யார்? கேட்பவனைத்தான், துரோகி, நாத்தீகன் என்று தூற்றிவிடுகிறார்கள். நீங்கள் யோசியுங்கள், ஒரே நாளில் ஒரு ஊரில், இவ்வளவு புராணப் பிரச்சாரம் நடைபெறுமானால், மக்களுக்கு அனுமாரின் வாலின் அளவு தெரியக்கூடுமே தவிர அமெரிக்காவின் நிலைமையை விளங்கும், சைதன்யரின் பாசுரம் நினைவிற்கு வருமேயொழியச் சோவியத் சோபிதமா புரியம்! உலகிலே வேறு எங்கேனும் இதுபோல, ஒரே புராணமயமாக்கப்பட்டிருக்கிறதா! எந்தக் காலத்தில் வாழ்கிறோம், என்னென்ன விதமான, புதுப்பிரச்னைகள் மக்கள் முன் தோன்றியுள்ளன, எவ்வளவு சிக்கல்கள் தீரவேண்டி இருக்கிறது, இவைகளை மறந்து, இனந்தாஸ்ரமத்திலே பஜனை நடத்துகிறார்கள்.

சென்னை பேசுகிறது, இவ்விதம், தாளச்சத்தம், மேளச்சத்தம், சதங்கைச் சத்தம், புராணிகரின் சத்தம், இவையே எப்பக்கமும் கேட்கப்படுகிறது. இங்கே பலகல்லூரிகள், பலப்பல உயர்தரக் காலசாலைகள், உலகம் சுற்றிய அறிவாளிகள், ஊராள்வோரை மிரட்டும் உரத்தகுரலினர், உயர்தரமான பத்திரிகைகள் உள்ளன. இருந்தும் ஒரே தினத்தில் ஒருபக்கம் சீதைக்குக் கலியாணம், வேறோர் பக்கம் ராமருக்குப் பட்டாபிஷேகம், மற்றோர் பக்கம் தேவிக்குப் பூஜை, பிறிதோர் பக்கம் அம்பிக்கைக்கு இராதனை என்று இருக்கக் காண்கிறோமே அன்றி, பிரான்சு விடுதலை பெற்றது எவ்விதம், வானத்தில் பறக்கும்வழி எப்படி ஏற்பட்டது வரிப்பளுவின்றி மக்கள் வாழ முடியுமா? வர்க்கப்போராட்டம் தீருமா? வல்லரசுகளின் ஆதிக்க வெறி அழியுமா? என்ற பிரச்சனை யார் பேசுகிறார்கள்? ராஜராஜ சோழன், ராணி மங்கம்மா, ரஞ்சித்சிங் என்று, ஏதேனும் வீரக்கோட்டத்தவர் பற்றிய பேச்சு

இருக்கக்கூடாதோ, தோடர்மால் போன்ற நிர்வாகிகள், இளங்கோ போன்ற புலவர்கள், ஓவியக்காரர்கள் ஆகியோர் பற்றிய பேச்சு இருக்கக்கூடாதா, அடிமை வர்த்தம் ஒழிந்தவிதம் எப்படி, என்று கூறலாகாதோ, அடிமை வர்த்தகம் ஒழிந்தவிதம் எப்படி, என்று கூறலாகாதோ, அந்தநாள் தமிழன் யவனத்தில் வியாபாரம் செய்தவிதம் விளக்கப்படக்கூடாதோ, பேசப் பிரச்னைகளா இல்லை? மக்கள், தெரிந்து கொள்ள வேண்டும் என்று இவலுடன் உள்ள விஷயங்கள் ஆயிரமாயிரம் இருக்க, சாவடிச் சுப்பனும் தெரிந்து கொண்டிருக்கும் ராம-கிருஷ்ண கதைகளைத்தானா, அறிவுத்தாகம் அதிகரித்துள்ள இந்தந ôளிலே பேசிக் கொண்டிருக்க வேண்டும்? ஜாவாவில் இன்று என்ன நடக்கிறது என்பதைப் பொதுமக்களுக்குக் கூற வேண்டிய இந்நாளிலே ஜனக ராஜ்யத்திலே நடைபெற்ற சுயம்வரத்தைப் பற்றியா பேசிக்கொண்டிருப்பது? இப்படிப் பழைமைக்குப் பலமான பிரச்சாரம், பலரகமான பிரசாசரம் நடைபெற்றால், புதுமைக்குப் புகலிடம் எது. தோடி இராக ஆலாபனையுடன் சேர்த்துத் தருவது எதனை? தாசரதியின் பெருமையை! இடையை வளைத்து, சடையைக் காட்டி, பூங்கொடி போலாடி, ஆடலழிகள் காட்டுவது எதனை? அய்யன் ஆடிய ஆட்டத்தை. சினிமா நட்சத்திரங்கள், இசைவாணர்கள், நாட்டிய ராணிகள், பாகவத் சிரோமணிகள், பிரம்மஸ்ரீகள், பிரசங்க பூஷணங்கள், ஆகியோர் பழைமைக்கே பிரச்சாரம் புரிபவர்களாக உள்ளனர், உலகின் இன்றைய அறிவுக்காகப் பேசுபவர் காணோம். இந்நிலையில், மக்கள் மனதிலே பூட்டப்பட்டுள்ள தளைகள் நீக்கும் வழி எங்கிருந்து ஏற்படும்? சிக்கலான பிரச்னை அல்லவா?

***

ஞாயிறு இதழில் நான் கண்ட மற்றோர் செய்தி, கருத்த மேகத்திடையே தோன்றும் மின்னல் போன்று இருந்தது. அது நிரந்தர ஒளியாகுமா என்ற ஆசையால் தூண்டப்பட்டே இதனை எழுதுகிறேன்.

மைலாப்பூரில், பேச்சுமேடை ஒன்று அமைத்திருக்கிறார்கள் என்ற செய்தி வெளி வந்திருக்கிறது. இவலுடன் அதனைப் படித்தேன். தோழர்கள் சிவஞானகிராமணியார், ப. ஜீவானந்தம், ஏன், ஜீவர்த்னம், டி. செங்கல்வராயன் ஆகிய தோழர்கள் அந்த விழாவில் கலந்து கொள்ளு கின்றனர் என்று இருக்கக் கண்டு சந்தோஷித்தேன், நாட்டுவிடுதலை பற்றித் தோழர் சிவஞானமும், பாட்டாளிகளின் விடுதலைப்பற்றித் தோழர் ஜீவாவும், பார்ப்பனியத்திடமிருந்து திராவிடம் விடுதலை ஆடைவதுபற்றி ஜீவரத்னமும், பாட்டு மொழியிலே நாட்டுப் போரைக் கூற நண்பர் செல்கல்வராயனும் ஒன்றுகூடும் பேச்சு மேடை தனிச்சிறப்புப் பெறுமல்லவா, என்று களித்தேன். பேச்சு மேடைக்கு யார் தலைவர் என்று பார்த்தேன், பயந்தேன்! நண்பர் ரா.பி.சேதுப்பிள்ளை தலைவர் என்று பொறிக்கப்பட்டிருந்தது. ஐயகோ! அவர் விரிசடையும் திரிசடையும், வேலும் வில்லும், வாலும் காலும், கோசலைச் செல்வனும் மிதுலைச் செல்வியும் என்று, பழைமையை வழங்கும் இயல்பினராயிற்றே, பேச்சு மேடைக்கு அவரை அழைத்து வந்தால் ஜீவாவின் வர்க்கப் போராட்டத்தைக் குறைத்துவிட்டு, ஜானகியின் ஜடை அழகுபற்றியல்லவா அவர் பேசத்தொடங்குவார், என்ன செய்வது என்று ஏங்கினேன். அன்று என்ன நடந்ததோ தெரியாது. ஆனால், பேச்சு மேடைக்காரரை மட்டுமல்ல, பேசத் தெரிந்த வரனைவரையும் கேட்டுக் கொள்ளுகிறேன், இனியேனும் பழைமை பேசுவதை, புராணம் பேசுவதை நிறுத்துங்கள், உலக நிகழ்ச்சியை எடுத்துக் கூறுங்கள், வீரர் வாழ்க்கையைக் கதை ரூபமாக்கிப் பேசுங்கள், விடுதலைக் கிளர்ச்சிகளைச் சொல்லுங்கள், விஞ்ஞானத்தை விளக்குங்கள், அறிவுபரவ உங்கள் ஆற்றலை உபயோகப் படுத்துங்கள், ஐயனின் பெருமையையும் ஆம்மையின் அருமையையும் அனைவரும் தெரிந்து கொண்டார்கள், உலகின் நிலைமைத்தான் நமது மக்களுக்குத் தெரியாது. அது தெரியவிடாதபடி இன்றும் புராணிகர்களின் சத்தம், சென்னை போன்ற இடத்திலேயே அதிகமாகிவிட்டது.

இந்தச் சத்தம், நமது நாட்டைப் பிடித்தாட்டும் பழைமைப் பித்தத்தை அதிகரிக்கச் செய்யும், பசிபிக்கடலை அறியமாட்டார்கள் பாற்கடலின் பெருமையை அறிந்தவர்போல் பேசுவர், ஏவரஸ்ட் சிகரம் எது என்றால் கூறார்கள், எம்பெருமானின் தூதுவன் ஏந்திச்சென்ற சஞ்சீவி பர்வதத்தின் சிறப்பைச் சொல்லுவார்கள், காவிரியின் பிறப்பிடம் கூறார்கள், யமபுரத்திலே ஓடும் நெருப்பாற்றின் நீளம் அகலம் கூறுவார்கள். டெலிவிஷன் என்றால் என்ன என்று கேட்டால் தெரியாது என்பார்கள், ஆனால் ஞானதிருஷ்டியால் வசிஷ்டர் விஸ்வாமித்திரரின் நிலையை அறிந்தார் என்று பேசுவார்கள். மலடோவ் எங்கே போகிறார் என்று கூறத்தெரியாது, நாரதர் பிரம்ம லோகத்திலிருந்து கிளம்பிப் பூலோகம் வந்த கதையைக் கூறுவர், ராஜதந்திரக் கலகக்காரரின் பேச்சால் சமர்மூள்வதை அறியமாட்டார்கள். நாரதர் கலக விசேஷத்தைப்பற்றிப் பேசுவார்கள்! உலகின் நடவடிக்கைகளை மறந்து, வாழ்க்கையின் பிரச்னைகளை அலட்சியப்படுத்திவிட்டுப் பிறகு எப்படி நாடு முன்னேற முடியும்? பேச்சு மேடையைப் புராணிகர்களிடமிருந்து கைப்பற்றி, அறிவு பரப்புவோர் அங்கு நீட்சி செலுத்த வேண்டும், இல்லையேல், நாட்டின் நலிவு நீங்காது. இப்போது நண்பர்கள் அமைத்துள்ள பேச்சுமேடை, இந்தத் தூய்மையான பணிபுரியுமா? சிக்கலான பிரச்னைதான், இதற்குப்பதில் கூறுவதும், ஆனாலும், நம்புவோம், நல்லறிவுக்காக நண்பர்கள் பாடுபடுபவார்கள் என்று.

(திராவிட நாடு - 7.4.46)

# தாமரைபூத்த குளம்

“கலைமணம் கமழ வேண்டுமானால் கம்பன், கட்டாயம் நமக்குத் தேவை! என்று திட்டமாகத் தோழரொருவர் கூறுகிறார். அவர் பல பாடல்களைப் படித்து ரசித்தவர். ஆகவே அவருக்கு, ஏன் நாம் கம்பர் பாடிய நூலைக் கண்டிக்கிறோம் என்பதைக் கூற வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. அவர் ஏன் நண்பர். ஆகவே அவரை நான் காடு மேடு அழைத்துச் சென்று கஷ்டப்படுத்த விரும்பவில்லை. மேலும் அவர் கலாரசிகரானா படியால், அங்கு செல்வது சிரமம். அவரை நான் நாலு தடாகங்களுக்கு அழைத்துச் செல்கிறேன். குளத்தோரமாக நடந்து கொண்டே, ஏன் கம்பர் மீது குறை கூறுகிறோம் என்பதைப் பேசினால், அவருடைய மனமும்; குளிரும், நமது நிலையும் தெளிவுபடும் நீங்களும் வாருங்கள் பொழுதுபோக்காகவும் இருக்கும், பாடமும் கிடைக்கும்.

***

நாலு தடாகங்களிலே, இரண்டு நிடத தேசத்திலுள்ளவை, ஒன்று ஆயோத்திக்கும் மிதுலைக்கும் இடையே உள்ளது, மற்றொன்று கிராமீயத் தடாகம்.

***

ஆதிவீரராமபாண்டின், பொதுவாகப் பலவித ரசங்களும் செறிந்திருப்பினும், சிருங்கார ரசமெனப்படும் காமச்சுவை அதிகமாகச் செறிந்ததாகவே, நைடதம் என்ற நூலை இயற்றினான். ஆசிரியன் ஓர் மன்னன். மங்கையரின் மதுர மொழியின் இனிமையையும், சரசத்தின் சாற்றையும், பருகிப் பழக்கப்பட்டவன். எத்தனையோ மின்னல் கொடிகளை, மேனி மினுக்கிகளை, கீதமொழிக் கிளிகளை, மான் விழிகளை, மலர் முகவதிகளைக் கண்டு, களிக்கும் வாய்ப்பு, மற்றக்கவிகளைவிட ஆதிவீரராம பாண்டியனுக்கு அதிகமாக இருந்திருக்கத்தானே வேண்டும்! வெறும் கற்பனையை மட்டுமே நம்பிக் கவிபாட ப்வ்ண்டிய அவசியம் அவனுக்கு இல்லை. எழிலிடை மாதர் அவன் இணை விழிகாட்டும் குறிப்பறிந்து நடக்கக் காத்துக்கிடந்திருப்பர். எனவே அவன்

“அந்தச்சுவை”யை அழகுறு கவிபாட அனுபவத்தைத் துணைகொள்ள முடியும். மன்னவன் என்ற நிலைமட்டுமல்ல, அவனுடைய குணமே, காமக் கவிபாடுதற்கேற்றது என்பதாகக் கதையும் கூறுவர். பொன்மேனியும், தாமரை முகமும், முத்துப் பற்களும் பவழ இதழும், இன்னபிறவும் அமையப் பெற்று புன்சிரிப்பால் போரிட்டுப் போகக்களத்திலே சலிக்காதிருக்கக்கூடிய சரசியாகத் தேடித் தேடிப்பார்த்துத் தன் உறவின் முறையிலே அத்தகைய இலக்கணங்களுடைய உல்லாசி கிடைக்கப் பெறாததால், வேறு குலத்திலே பெண் கொண்டான் ஏன்றோர் கதையும் உண்டு. இது கட்டிவிட்டதாக இருக்கக்கூடும். ஆனால், அவனுடைய குணத்தை, அதாவது மன்னனின் மனம் மங்கயைர் இராச்சியிலே அதிகமாகப் படிந்திருந்ததும் என்பதை விளக்கவே இப்புனைந்துரை ஏற்பட்டிருக்க வேண்டும். இத்தகைய மன்னன், தன்னையொத்த வேறோர் மன்னன் கதையை, அதாவது நளச்சக்கர வர்த்தியின் கதையைப் பாடினான். காரிகையரின் காதலீலைகளைக் காண்டம் காண்டமாகக் கவியாக்கக் கூடிய அனுபவ அறிவும் இருந்தது அவனுக்கு. அவ்விதம் பாடிட “நைடதம்” இடங்கொடுக்கக்கூடிய நூலே, ஏனெனில், முற்றுந்துறந்த முனிபுங்கவர்களும், கற்றுத் தெளிந்து காடேகியவர்களும் ஊய்ய, உலகமாந்தர் படித்தும், படிக்கப் பக்கநின்று கேட்டும் புண்யம்பெற வேண்டுமென்று எழுதப்பட்ட தேவகதை அல்ல, ஒரு தேசத்து மன்னன் கதை. ஆண்டவ அவதாரத்தின் அருமை பெருமைகளை அவனியோருக்கு உரைத்து, நீதிகள் புகட்டி, நேர்மையின் தன்மையைத் தீட்டிக்காட்டித் திருவருளைக் கூட்டுவிக்கும் புண்ய சரிதமல்ல! சாதாரண அரசனின் ஆவதியை விளக்கும் கதை. அதிலே, அவருக்கு மங்கையரின் மலரடி வருடி கருத்தறிந்தபின் அரசிலை தடவிடும் இடவரைப் பற்றியோ, அந்தப்புர லீலைகளைப் பற்றியோ எவ்வளவு வேண்டுமானாலும் எழுதலாம், பொருந்தும். மதுக்கடையிலே மகேஸ்வர வணக்கமும், மகேஸ்வரன் கோவிலிலே மதுப்பிரசாதமும், பொத்தமுடையதாக இருக்க முடியுமா!

அதுபோலவேதான், தேவ கதையிலே, தெளி வற்ற மக்கட்கும் தெய்வீகத்தின் தன்மையைத் தெளிவாகத் தீட்டிக் காட்ட எழுந்த சரிதைகளில், காமச்சுவையைக் கலக்கி விடுவது கூடாது, கலக்கினாலும் ஒரு அளவு இருக்க வேண்டும். வரையறை இருத்தல் வேண்டும், நேரடியாகப் பள்ளி அறைக்கே வாசகர்களை இழுத்துச் சென்று, ஆழ்ந்து பார்! கூர்ந்து பார்! என்று ஆடுக்கடுக்காகக் கூறுவது ஆடா. இவ்வளவு கூறிவிட்டு, இடையிடையே எம்பெருமான் திருவடிகளே சரணம் என்று இறைஞ்சினால், அது வெறும் இரைச்சலாக இருக்கமுடியுமே தவிர, இன்னருளைக் கூட்டுவிக்காது என்பதே ஏன்போன்றோரின் கருத்து. நைடத நூலாசிரியர், இந்த வரம்பு கடவாமல் பாடியிருக்கிறார். கம்பர்போலக் காடுமேடு சுற்றி வரவில்லை. இதன் பயனாக அவருடைய கவிதாதிறம் பாழ்பட்டுப் போய் விடவுமில்லை. காதல், தாபம், எடல், கூடல், சந்திரனைப் பழித்தல், தென்றலை ஆகழ்தல், மன்மதனைக் கடிந்துரைத்தல், மாலைகண்டு மருளல் எனும் இன்ன பிற காமச்சுவைக்குரிய இலக்கண் அமைப்புகளை அவர், விட்டு விடவில்லை, ஒழுங்காக ஒன்றுவிடாமல் பாடித்தான் இருக்கிறார், என்றாலும்கூட, அந்த வரம்பு கடவாது இருக்கிறார். கம்பரின் கலையிலே, அந்த எல்லைக்கல்தான் இல்லை, கொஞ்சமும் இல்லை. அவர் அன்று பாடிவிட்டுப் போக, அந்தப் பாடல்களிலே உள்ள அந்தப்புர விளக்கரசங்களை நமது இயக்கத்தவர் எடுத்துக்காட்டிப் புண்ய கதையிலே இது இருக்கலாமா, இது தேவரசமாகுமா, இந்த ரசங்களிலே இலயித்து விட்டபிறகு மக்கள் ராமரசம் தேடுவரா என்று கேட்கவே இன்று, கம்பனின் கல்லறைக்குக் காவலராக உள்ள கலா ரசிகர்கள் கம்பனின் பாடல்களிலே இன்னின்ன இடத்திலே வளைந்துவிட்டது. வேறோர் கரம்பட்டதால், இன்ன இடத்திலே ஓடிந்தே விட்டது. இந்தக் கவிதைகள், கம்பர் பாடியதே அல்ல, என்று கூறவும், திருத்தவும், ஓட்டிக்காட்டவும், வெட்டித் தள்ளவும், சலித்தெடுக்கவும், பொறுக்குமணிகளைச் சேர்க்கவுமான நிலைமை உண்டாக்கிவிட்டது. இந்த உரிமை இக்கலாசரிகர்கட்கு உண்டோ இல்லையோ, நமது கவலை அதுவல்ல.

உண்டென்று எண்ணுவோர் கலனான கவிதைகளைத் திருத்தட்டும், இல்லை என்று எண்ணுவோர், நில்லடா! உனக்கு இந்த உரிமை ஏதடா? பதில் சொல்லடா! என்று பரணி பாடட்டும், நாட்டிலே நாம் காணும் நானாவிதமான வேடிக்கைகளிலே இது ஒன்று, நமக்கென்ன பார்ப்போம். ஆனால் இவர்களை இந்த நிலைக்குக் கொண்டு வந்தது எது? கம்பன் கவிதையானால் என்ன? இராமகாதையாக இருந்தால் என்ன? கேடு இருந்தால் களைந்தெறி! குப்பை இருந்தால் கூட்டித் தள்ளு! இழுக்கு இருந்தால் எடுத்து ஏறி! தீது தருமானால் தீயிலிடு! என்று நாம் கூறி வருவதுதான். மற்றும் சில புலவர் பெருமக்கள், கம்பனைக் காப்பாற்றும் பணி தமது என்று கருதிக்கொண்டு, கவிதையைப் பதம் பிரிப்பதிலும், பதங்களிலே இங்கே ஓர் தோய்வு ஏற்பட்டுவிட்டது. இங்கே கடை குறைந்திருக்கிறது என்று சிலபல கூறிப்பொருள் இதுவல்ல, வேறுண்டு, வேறும் உண்டு, என்று கூறுகின்றனர். இப்படிக் கூறும்போது, இத்தகையவர்களின் புலமையைக் கண்டு நமக்கு மதிப்பு உண்டாகின்றது என்றபோதிலும், இவ்வளவு அறிவும், இத்தகைய திரைவிடு வேலைக்குப் பயன்படுகிறதே என்பதை எண்ணும்போது, பரிதாபம் ஏற்படத்தான் செய்கிறது. கடைவீதியிலே கனிவிற்பவன், அழுகிய பாகத்தை அறுத்துப் போட்டுவிட்டு, மிச்சமுள்ள பாகத்தின் மதுரத்தைப் புகழ்ந்துரைத்து, கிடைத்த வரையிலே கிடைக்கட்டும் என்று பார்க்கிறானே, அதுபோல ஒரு சாராரும், சாம்பிள்பழம் இனிப்புத் தண்டாகக் கொடுத்துப் புளிக்கும் பழங்களைக் கூடையிலே நிரப்பிக் கொடுத்துவிடுகிறானே, அது போலச் சிலரும் கலைவியாபாரம் செய்கின்றனர். கனியின் தன்மையல்ல, வியாபாரத்தின் காரணம், விற்பவரின் சமர்த்து!

இங்ஙனம் ஓட்டை ஓடிசலைத் தட்டி நிமிர்த்திக் கொடுப்பவரும், முலாமிடுவோருங்கூட, எதும் செய்யமுடியாது, தலையைக் கீழே தொங்கவிட்டுக் கொள்ளக்கூடிய கவிதைகளையும் கம்பர், தைரியமாகப் பாடித்தான் இருக்கிறார். ஆதிவீரராம பாண்டியன்,

மாதர்களை வர்ணிக்கிறபோது, அந்தந்த நிலைக்கு ஏற்றபடி மாதர்களை வர்ணிக்கப் பார்க்கிறோம். தடாகத்திலே தையலர் நீராடுவர், அதுபோது தாமரைக்கும் அவர்கள் முகத்திற்கும் மாறுபாடு காணாமல், வண்டுகள் மயங்கும், குவளைக்கும், கோமளவல்லிகளின் கண்களுக்கும் மாறுபாடு காணாது வண்டுகள் மருளும். என்று ஆதிவீரராமபாண்டியன் பாடுகிறார், அந்த ஆளவோடு, அதாவது வண்டுகள் பெண்களைக் குளங்களிலே கண்ட ஆளவோடு நிறுத்திக் கொள்கிறார், ஒரு வரம்பு இருக்கட்டும் என்பதற்காக. அதேவிதமான நிலைமையில் கம்பர் தீட்டும் கவிதைகளைப் பாருங்கள். நுண்பொருள் விளக்கம். எவ்வளவு! விளக்கம் உரைத்தலோடு விடுகிறார? இடவர், ஆக்காட்சியைக் காண்பதையும், அந்த நேரத்தில் அவ்வாடவர் கொண்ட கருத்துகளையும், ஆக்கருத்துகளால் அவர்களின் கரமும் சிரமும் படும்பாட்டையும் “குளோசப்” எடுத்துக் காட்டாவிட்டால் கம்பருக்குத் திருப்தி ஏற்படு வதில்லை, ஏன்? இந்த வர்ணனைகளை அவர் இராமபூஜைக்குரிய சஹஸ்ரநாம அர்ச்சனை என்று எண்ணுகிறாரா? பரிதாபத்துக்குரிய மக்கள், இவ்வளவு ரசங்களையும் கடந்தல்லவா, இராமரின் பெருமையைத் தெரிந்து கொள்ள முடியும். இதற்குள் அவர்கள் அலுத்தே போய் விடுவார்களே! தேவகதை கூறி, மக்களைச் சன்மார்க்கத்திலே உடுபடச் செய்யக் கம்பன் காட்டும் வழி சரியானது தானா என்று தான் கம்பதாசர்களைக் கேட்கிறோம். சன்மார்க்கமென்ன அவ்வளவு நாற்றமும் கசப்புமுள்ளதா, அதன் மீது இவ்வளவு சுவையைப் பூசித்தர! அப்படி நல்ல எண்ணத்தோடு பூசித்தரப்பட்டாலும்கூட, சுவைப்பவர்கள், மதுரம் கிடைக்கும் வரை சுவைத்து விட்டுக் கசப்புத் தெரியத் தொடங்கியதும், ஊமிழ்ந்துவிடுவார்களோ, நோக்கம் ஈடேறவும் வழி சரியில்லையே! வேறு என்ன காரணம் இப்படி வரை முறையின்றிக் கம்பர், வாரி வாரி இந்த ரசத்தை இறைப்பதற்கு? இதற்கோர் சமாதானம் கூற வேண்டாமா கலாவாணர்கள். எங்கே கூறினார்கள்? எப்போது கூறப்போகிறார் கள்? எப்படிக் கூற முடியும்?

கம்பர் கையாண்ட அதேவிதமான நிலைமைகளையுங்கூட, நைடத நூல் ஆசிரியர், ஒரு வரம்பு கட்டியே புகல்கிறார், தாம் எடுத்துக் கொண்டது சாதாரண அரசன் கதை என்ற போதிலுங்கூட. ஓடத்திலேறிச் சென்ற மாதர்மீது நீர்விழுவதால், மறைவிடம் தெரியலுற்ற சம்பவமொன்றைக் கம்பர் காட்டினாரல்லவா? அந்த மறைவிடம் தெரியலுற்றதும், ஓடத்திலிருந்த இடவர், களைப்பு நீங்கிக் களிப்பு கொண்டனர் என்று பாடுகிறார் கம்பர். எந்த இடவனும், அத்தகைய நிலையிலே, கூர்ந்து நோக்கிக் குளிர்மனமானான் என்று, பண்பு விளக்கத்தைப் பெரிதென்று கருதும் எந்தக் கவியும் பாடமாட்டார். கம்பருக்குப் பண்பு விளக்கத்திலே இருந்த மோசு அதிகம். ஆகவேதான், காணக் கூடாத இடத்தைக் கண்ட இடவர், களிகொண்டனர் என்று, பச்சையாகப் பாடுகிறார். ஏககாலத்திலே, பகவான் திருஅவதாரம் செய்த ஆயோத்தியிலே மக்களின் மாண்பு, மறைவிடத்தைக் கண்டு மகிழும் அளவு பட்டுப்போய்விட்டது என்பதும், மூடியிட்டு விடவேண்டிய சம்பவத்தைத் துளியும் தங்குதடையின்றி விளக்கும் அளவு, கம்பரின் காமச்சுவை உணர்வு இருந்ததென்பதையும் நாம் உணருகிறோம். கடவுட் காதையிலே இக்காட்சியா என்று கேட்கிறோம்.

***

இடவர்தான் ஐதோ காமத்தால் கயவராயினர், மாதர்கள் எப்படிப் பொறுத்துக் கொண்டனர்? எப்படிப்பட்ட சரசியும் இப்படிப்பட்ட இடவரின் பார்வையைச் சகித்துக் கொள்ள மாட்டாளே, உத்தம இராமனின் பிறப்பிடமான ஆயோத்தி வாழ்மாதர்கள் எப்படிச் சகித்துக் கொண்டனர்? இடவர் பார்த்தனர், இரணங்குகள் அருவருப்படைந்தனர் என்றாவது கம்பர்பாடி யிருக்கக் கூடாதா, காரிகையர் மீதேனும் களங்கம் படியாதிருக்கட்டும் என்ற தூய எண்ணம் கொண்டு. இல்லையே! இதைவிட அரிய சந்தர்ப்பம் கிடைக்கிறது ஆதிவீரராமபாண்டியருக்கு. தடாகத்திலே பெண்கள் நீர் விளையாடுகிறார்கள், ஆக்காட்சி நடைபெற்றுக் கொண்டிருக்கும்போது, நளன்

அவ்வழியே செல்கிறான்! இந்த "வாய்ப்பு" கிடைத்துவிட்டால் இராமனே தடுத்தாலும், அனுமானே குறுக்கிட்டாலும்கூடக் கம்பனைத் தடுக்க முடியாது! நைடதநூல் ஆசிரியர், கட்டுக்கு அடங்குகிறார், பண்புக்குப் பழுது ஏற்படக்கூடாது என்பதற்காக. குமரிகள் குளத்திலே நீராடும் நேரத்திலே, அந்த இடத்திலே நளன் செல்லுதல் எங்ஙனம் பொருந்தும்? இடவனொருவன் தாம் நீராடுவதைக் கண்டால், நங்கையின் மனம் புண்ணாகாதா, அவர்களின் பண்பும் கெடாதா? நளன் ஆக்காட்சியைக் கண்டது நங்கையருக்குத் தெரிந்ததாகக் கூறலாமா? இருசாராரின் மனப்பாங்குமன்றோ இழுக்குடையதாக ஏற்பட்டுவிடும்? இவ்வளவும் இதற்கு மேலும் யோசிக்கிறார் கவி கம்பனானால், யோசனை இந்தப் பிரச்சனைகளிலே சென்றிராது. எதை எதை எதெதற்கு ஒப்பிடலாம் என்ற யோசனையிலே ஆழ்ந்துவிடுவார், அதிலிருந்து ஆழகான கருத்துக்கள் கிளம்பிவிடும், காமரசம் ஊற்றெனக் கவிதா உருவிலே பெருகும். ஆதிவீரராம பாண்டியன், அந்தக் காட்சியைப் பண்புடன் பாடுகிறார், மங்கையரின் மேலிட மறைவிடம் தடாகத்திலே நீராடும் நேரத்திலே தெரிவது இயல்பு, அதனையும் அவர் இயல்புக்கு மாறாகக் கூறவில்லை. ஆனால் அதே நேரத்தில், நளனின் நற்பண்புகளுக்கு இழுக்கு நேரிடாதபடியும் பாதுகாத்து விடுகிறார். எந்தக்கவியானாலும், தானெடுத்துக் கொண்ட "சற்பாத்திரங்களை" இழுக்குச் சூழா வண்ணம் பாதுகாத்திட வேண்டாமா? அதற்காகவே ஆதிவீரராமபாண்டியன், நளன், நீராடும் மங்கையரைக்கண்ட போது, என்ன நிலையிலே, அவன் இருந்தான் என்பதை விளக்க ஒரு சம்பவத்தைக் கூறுகிறார். நளன் நங்கையரைக் கண்டானே தவிர, நங்கையர் எவரும் நளனைக் காணவில்லை! அவர்கள் நீராடுவதிலேயும், ஒருவரோடொருவர் விளையாடிக் கொண்டிருப்ப திலேயுமே கவனம் செலுத்தினர் போலும் என்று கூறுகிறாரா? அதுவுமில்லை. சுற்றுமுற்றும் பார்த்தாலும், நங்கையர் கண்களுக்கு நளன் தெரியமாட்டான்!! யார் கண்களுக்கும் தெரிய முடியாதபடி,

உருவை மறைத்துக் கொண்டு செல்கிறான் நளன். தமயந்தியின் திருநகரிலே, அரசிளங்குமரிக்குச் சுயவரம். மன்னர்கள் பலர் வருகின்றனர். தமயந்தியிடம் காதல்கொண்ட நளனும் வருகிறான். தேவர்களும் வருகின்றனர். இந்திரன் தமயந்தியிடம் சென்று தன்னை மணம் புரிந்துகொள்ளும்படி சொல்லுமாறு நளனையே தூதனுப்புகிறான். “அடியேன் எங்ஙனம் அந்தப்புரம் செல்வது? அனுமதியார்களே!!” என்று நளன் விளம்ப, “கவலைவேண்டாம். யார் கண்களிலும் நீ தெரியமுடியாதபடி உன் உருவை மறைத்துக் கொண்டு செல்லும் மந்திரத்தைக் கற்பிக்கிறேன்” என்று இந்திரன் கூறுகிறான். அந்த மந்திரப் பலனால், நளன் யார் கண்களிலும் படாமல் போகிறான். அந்த நேரமாகப் பார்த்துதான், நைடத நூலாசிரியர் நீர் விளையாடும் நங்கையரை நளன் கண்டதாகக் கூறுகிறார்.

“யாவர்க்குங் கட்புலனால் உருக்காண்கிலாத ஓர் நுட்பநூல் விஞ்சையை நுவன்றிட்டான்”

“அதாவது, எவர்களும் கண்ணால் உருவத்தை அறிய முடியாததாகிய, நுண்ணிய நூலிலே சொல்லப்பட்ட மந்திரத்தைச் சொன்னான்” என்ற பகுதியை முதலிலே கூறிவிட்டுப் பிறகுதான், தார்வேந்தனைக் கார்நிறக் கூந்தலார் குளிக்குமிடத்திலே நின்றதாக ஆசிரியர் காட்டுகிறார். எவ்வளவு வரம்பு பாருங்கள்?

தெளித்த நீரே துகிலை நனைத்து மறைவிட ஒளியைப்புறத்து அளித்து விட்டதாமே, கம்பனின் ஓடமேறிய மாதர் காட்சியின்படி. நீரிலலேயே மூழ்கி விளையாடிக் கொண்டிருந்த நங்கையரின் நிலை எவ்வண்ணம் இருக்கும். இங்கும் அதுதான்! ஆனால் என்ன சொல்கிறார் கவி. நளன், “நாமோயார் கண்களிலும் தென்பட மாட்டோம், நமது கண்களுக்கோ எல்லாக் காட்சிகளும் உள்ளது உள்ளபடி தெரியும். இங்கோ அழகிய மாதர்கள்! நீராடுகிறார்கள்! அங்கதரிசனம் தங்குதடையின்றி கிடைக்கிறது! அரிதரிது இதுபோலச் சந்தர்ப்பம் கிடைப்பது! ஆகவே இங்கேயே நிற்போம்,

இன்னும் பலகாண்போம், களைப்பு நீங்க, களிப்புப் பொங்க" என்று எண்ணினான் நளன் என்பதாகக் கவி கூறினாரா? அல்லது அத்தகைய எண்ணம் அவனுக்கு உண்டானது போலும் என்ற நூலைப் படிப்பவர்கள் சந்தேகிக்கக் கூடிய விதத்திலே, ஏதேனும் உரைத்தாரா? போகட்டும், கண்டான், களிகொண்டான் என்று கூறினாரா? ஆயோத்தி இடவர், மாதரின் மறைவிட ஒளிபுறத் தளித்ததும் ஆயர்வு நீங்கினர் என்று கம்பர் சொன்னாரே, அதுபோல ஆதிவீரராமபாண்டியன் கூறுகிறாரா? இல்லை! இல்லை! தற்செயலாக இக்காட்சியைக் கண்டான் காவலன், கண்டதும், காணக் கூடாததைக் கண்டுவிட்டோமே என்று கருதிக் கண்களை மூடிக்கொண்டான் என்று கூறுகிறார். கண்களை மூடிக் கொண்டான் என்றால், வெறும் பாவனைக்கு மூடிக்கொண்டானா? இல்லை? உண்மையிலேயே! சில வைதீகர்கள், கண்களை மூடிக் கிடப்பது போலக் குளத்தருகே அமர்ந்து கொண்டு, அங்கு வந்து போகும் அரிவையர் மீது, கடைக்கண்ணைச் செலுத்துகின்றனரே அதுபோல நளன் நயனங்களை மூடினது போலப் பரசாங்கு செய்துவிட்டு, கொஞ்சம் "ஓரப்பார்வை" செலுத்தினானா? இல்லை, ஆறுக மூடிக் கொண்டான். மங்கையரின் நிர்வாணக் கோலத்தைத் தான் பார்த்தால், அந்நிலையிலே தன்னை வேறு யாரேனுமோ, மங்கைமாரோ கண்டுவிட்டால், கேவலமாகக் கருதுவார்களே என்று அஞ்சி, சுற்றுச்சார்புக்குப் பயந்து கண்ணை மூடினானா? இல்லை! மற்றவர்கள் என்ன எண்ணுவார்களோ என்று பயந்தல்ல அவன் கண்களை மூடிக்கொண்டது. அவனுடைய மனமே அதற்கு இடந்தரவில்லை. இதுவல்லவா பண்பு! நளன், கலைவல்லோன், நற்பண்புகட்கு உறைவிடம், நாடாளும் மன்னன், எனவே அவன் நிர்வாண நங்கையரைக் கண்டான் களித்தான், மேலும் சில நேரம் கண்டான் என்று கூறலாகாது என்ற வரம்புக்குக் கவி ஆதிவீரராமர் கட்டுப்பட்டார்.

"மலர்பயில் வாவிதோய் மாதர் வண்டு கில்லை

புனனனைதலு மல்குறோன்றலாற் கலைவலான் கண்முகிழ்த்தேகக்

காண்குறாள் லைமுகடமுந்துற வொருத்தி முட்டினாள்”

இது செய்யுள். பொருள் விளக்கத்துக்காக இதோ அதனை பிரித்துக் காட்டுகிறேன்.

மலர்பயில் வாவிதோய் மாதர் நுண்துகில் ஆலைபுனல் நனைதலும் ஆல்குல் தோன்றலால் கலைவலான் கண்முகிழ்த்து ஏக காண் குறாள்முலை முகடு அழுந்துற ஒருத்தி முட்டினாள். கருத்தைக் கவனியுங்கள். நீர்நிலையிலே நிர்வாணக் கோலத்திலே நங்கையர் இருக்கக்கண்ட நிடத தேசாதிபதி, கண்களை மூடிக்கொண்டு நடக்கலானான், அந்த நேரத்திலே நீராடி வெளிவந்த நீலவீழியாள், நளன் தெரியாததால், அவன் மீது மோதிக் கொள்கிறாள், மேலிடம் நளனுடைய மார்பிலே அழுந்தும்படி! இது பொருள். செய்யுளை இங்ஙனம் ஆதிவீரர் இயற்றினதன் உட்பொருளைக் காணுங்கள். யார் வருகிறார்கள் யார் போகிறார்கள் என்பதுகூடத் தெரியவில்லை நளனுக்கு, அவ்வளவு ஆறுகமூடிக் கொண்டான் கண்களை. அதுமட்டுமல்ல. தடாகத்தருகே கண்களை மூடியவன், இரண்டடி எடுத்து வைத்த உடனே திறந்து விடவுமில்லை. இங்கே இதுபோன்ற காட்சிகள் பல இருக்கக்கூடும், என்று ஒயுற்றுக் கண்களை மூடிக்கொண்டே நடக்கலானான். அவ்வளவு பண்பு விளக்கம் செய்கிறார் கவி. அது மட்டுமல்ல, நளன் மீது மோதிக் கொண்ட மாதைப்பற்றிக் கவி, அமைத்திருக்கிற பதத்தைக் கவனியுங்கள், முட்டினாள், முட்டுவது எது? மிருகத்தனமான செயல் இது, என்பதைக் கவி, நாம் உணர வேண்டுமென்பதற்காக முட்டினாள் என்று கடுமையான பதத்தைப் புகுத்திக் கவிதையை முடிக்கிறார். இதே நிலையிலே கம்பரை ஏவிப்பாருங்கள், பத்தப்பாடலாவது பாடாவிட்டால், அவருடைய மனம் அமைதி ஆடையாது என்று நிச்சயமாகக் கூறலாம்!

ஏன் சொல்லிலே உங்கட்கு அவ்வளவு நம்பிக்கை ஏற்படாமல் போகக்கூடும். எனக்குத் தடையில்லை, தோழர்களே, அதே விதமான நிலைமையில் கம்பர், எப்படிப் பாடியிருக்கிறார் என்பதைக் காட்ட, அடிக்கடி, நீராடும் துறைக்குச் சென்று நிர்வாண நளினிகளைக் காண்பது கூடாதே என்று பண்பு கூறுகிறது, பாவாணர்கள் நம்மீது பூட்டும் பாணங்களோ, இவர்தம் குட்டுகளை வெளியாக்க வேண்டுமே என்ற துடிப்பைத் தருகிறது. ஆகவே உங்களுக்கு மீண்டுபோர் முறை அழைப்பு, தடாகத்துக்கு, தத்தை மொழிச்சியர் நீராடும் இடத்துக்கு. இது ஆயோத்தி மாதர்கள் நீராடிய இடம். மிதிலையிலே, வில்முறிந்தது, ஜனகனின் சொல் வென்றது, இராமருக்குச் சீதையைத் திருமணம் செய்து தரத்தீர்மானித்த மிதிலை மன்னன் ஆயோத்தி அரசனுக்கு இந்த நற்செய்தியைக் கூறி அனுப்பத் தசரதன் களிப்புடன் மிதிலைக்குப் புறப்பட்டான். பட்டத்தரசிகள் புடைசூழ, அவர்தம் பாங்கியர் உடன்வர, மற்றும் மந்திரிப் பிரதானியரும் ஏவலர் காவல் புரிவோரும் படைவீரரும் உடன் நிற்க. மிதிலை செல்லும் வழியிலே, ஒருசோலை. அங்கு தங்கினர் இளைப்பாற. அங்கோர் பொய்கை, அதிலே புனல் விளையாடப் புகுந்தனர் பூம்பாவைகள். சிந்தனையைச் செலுத்திப் பார்க்கவேண்டும் கம்பதாசர்களே! நளன் கண்ட நீராடு மாதர், புனலாடுகையில், காமவேட்கை உடையவர்களாகவோ, சேட்டை செய்ததாகவோ கவி கூறவில்லை. தற்செயலாக அதைப்பார்க்க நேரிட்ட நளனும், நின்ற இடமே தங்கிப் பார்த்துப் பூரித்தான். காமுற்றான் ஏன்றோ சொன்னாரில்லை. ஆயோத்தி இடவரும் மகளிரும், கம்ப சித்திரத்திலே காணப்படும் விதத்தைப் பாருங்கள், மகளிர் நீராடினர் என்று ஆதிவீரராமபாண்டியன் கூறினார். கம்பருக்கோ இந்த அளவு திருப்திதருவதாக இல்லை. ஆகவே அவர் இடவர் கண்டனர் களித்தனர், சிலர் கூடநின்று புனலாடினர் என்று பாடியிருக்கிறார். விளக்கு இருக்குமிடத்திலே ஒளி இருக்க வேண்டும், இடவர் இருக்கும் இடத்திலே ஆணங்குகள் இருக்க வேண்டியது, அதுபோலவே அவசியம் என்பது போலும் கம்பர் கருத்து.

“குடைந்து நீராடு மாதர் குழாம்புடைசூழ வாழித்தடம்புயம் பொலியாண்டோர் தார் கெழுவேந்தனின்றான் என்று மகிழ்ந்து கூறுகிறார் கம்பர், பாலகாண்டம், புனல் விளையாட்டுப் படலம் 12வது செய்யுளிலே.

குடைந்து நீராடும் மாதர்
குழாம் = நீரிலே மூழ்கி விளையாடும் மாதர் கூட்டம்
புடைசூழ = தன்னைச் சுற்றிலும் நிற்க.
இழி தடம்புயம் பொலிய = வட்ட வடிவமான தோள்வளை அணிந்த பெரிய புஜங்கள் அழகு பெறுமாறு.
தார்கெழு = மாலையணிந்த
ஓர் வேந்தன் - ஒரு மன்னன்
நின்றான் - நின்றிருந்தான்.

தரசதனுடன் வந்த ஒரு மன்னன், கலியாண வீட்டுக்குப் போகுமுன், சோலையிலே மாலையிலே மையல் கொண்டதாலே, மாதர் பலர் நீரில் நிற்கத் தானும் நின்றானாம். நால்வகைப் படைசுற்றி நிற்க மன்னர்கள் நிற்பதாகக் கவி கூறினால், ஆக்கவிதையைப் படிப்போர் எழுச்சி பெறக்கூடும். எதிரிகள் சுற்றி நின்றனர், இவன் நடுவே நின்றான் என்று கவிபாடினல், படித்திடும் கோழையும் வீரனாவான். மந்திரி பிரதானியர் புடைசூழ மன்னவன் இருந்தான் என்று கவி பாடினால் கேடொன்றுமில்லை, ஆட்சி ஒழுங்காக இருந்தது என்றேனும் அறியலாம். கம்பன் காட்டும் மன்னன், நீராடும் மங்கையர் புடைசூழ நிற்கிறான்! என்ன நேர்த்தி! இதுவா கீர்த்திக்கு இதாரம்?

கற்புடை மாதரின் மனப்பாங்கு எவ்வளவு தூரம் உச்ச நிலையில் இருக்க முடியும் என்பதை எடுத்துக்காட்ட, வேதநாயகம் ஓரிடத்தில் ஒரு கற்பனைத் தம்பதிகளின் காதையைக் கவிதை உருவிலே காட்டுகிறார்.

ஓவியக்காரனொருவன் ஆழகிய சித்திரம் தீட்டினான், அதை வந்து பார்க்கும்படி தன் இல்லக் கிழத்தியை அழைக்கிறான் கணவன். உரையாடல் நடக்கிறது.

“அது என்ன சித்திரம்?”

“அற்பதமானது, வந்து பாரேன்.”

“இணா, பெண்ணா?”

“ஏன்? இடவனின் ஓவியந்தான், வா, பார்க்கலாம்”

“ஆண் சித்திரமேல் நான் பாரேன்.

“பைத்யமே! ஆண் சித்திரமல்லடி, ஆண் சித்திரமல்ல ஆழகான பெண் ஓவியம். வா, போய்ப் பார்ப்போம்.”

“எஹீம். வரமுடியாது, நீரும் போகக்கூடாது. பாவையர் தம் உருவமெனில் நீர் பார்க்க மனம் பொறேன்.”

“இடவனாயின் நான் காணேன், பெண்ணெனில் நீ போய்ப் பாராதே, நீ எனக்கு, நான் உனக்கு”, இப்படி இருக்கிறது வேதநாயகத்தின், குடும்பப் பண்பு தீட்டும் முறை.

“ஓவியர் நீள சுவரெழுதும் ஓவியத்தைக் கண்ணுறுவான்
தேவியை யாம் அழைத்திட ஆண்
சித்திரமேல் நான் பாரேன்
பாவையர் தம் உருவமெனில் நீர்
பார்க்க மனம் பொறேனென்றாள்
காவிவிழி மங்கையிவள் கற்புவெற்
பின் வற்புளதால்”

“அறிஞர் வேதநாயம் தமது கவிதைமூலம் நாட்டவருக்கு அறிமுகப்படுத்தி வைக்கும் “தேவி”யுடன், இடவருடன் சேர்ந்து திடாகத்திலே நின்று கொண்டிருந்தனராமே ஆயோத்தி நகரத் “தேவிகள்” அவர்களை ஒப்பிட்டுப் பாருங்கள்! கம்பனின் பண்பும் அதன்மூலம் உங்கட்கு விளங்கும்.

மாதரும் இடவரும் ஒரேதடாகத்தில் நின்று குளித்திடும் “ரசலீலை” “இராமப் பிரபாவத்தை” விளக்கிடத் தேவையா என்பதே நம் கேள்வி. ஆயோத்திவாழ் இடவரும் மாதரும் இப்படிக் காமசித்தர்களாக இருந்தனர் என்று கூறுவது. “தெய்வமாக்காதை”யைக் கூறவந்த கம்பரின்

நோக்கத்துக்கு ஊறு தேடுவதாகாதா என்று கேட்கிறோம். கோபித்து என்னபயன்!

காதலரின் குறும்பான விளையாட்டைக்கூட, ஒரு கட்டுப் பாட்டுக்குள் நிறுத்துகிறார் நைடத நூலாசிரியர். நளனும் தமயந்தியும திருமணம் முடிந்தபிறகு, வாழ்விலே ஒவ்வொர் நாளும் திருநாள் என்று கூறக்கூடிய விதத்திலே ஆனந்தமாக வாழ்ந்து வரும்போது, புனலிடை மூழ்கி, பொழிலிடை உலவி, கனிமொழி பேசி, இல்லறம் நடாத்தி வந்த காதையைக் கூறுகிறார் ஆதிவீரராமபாண்டியன். எப்படி? புனலிலே விளையாடச் செய்கிறார் நளனையும் தமயந்தியையும்! ஆனால், அங்கே கூட, மாதரின் பண்புக்கு மாசு நேரிடாதபடி பாதுகாக்கிறார், தமது பாடல் வேகத்துக்குக் கண்ணியம் எனும் கடிவாளம் பூட்டி.

கம்பர் காட்டும் தடாகம் வேறு, நிடதநாட்டுத் தடாகம் வேறு, முன்னதிலே, பலமாதர் ஒரு இடவர், இடவர் களிக்கிறார் இரணங்குகள் கவலையுற்றுள்ளனர், நிடதநாட்டுப் புனல் விளையாட்டு அத்தகைய காமவேள் சாலையல்ல, இங்கு நளனும் தமயந்தியும் புனலாடுகிறார்கள் தனியாக. அதுபோது, இடைநீர்ப்பட்டு நனைந்துவிடுகிறது, நளன் காண்கிறான். தமயந்தின் நிலை என்ன? வெட்கினாள். வெட்கம் மட்டும் போதுமா? “வேண்டாம் கண்ணாளா! இதுஎன்ன விளையாட்டு என்று கொஞ்சுமொழி பேசி, அவன் பார்வையை வேறுபுறம் திருப்பும்படி கெஞ்சினாளா? இல்லை! வேறு என்ன செய்தாள்? தகாதசெயல் புரியும் தன் மணாளனை மாதருககே இயல்பான சாகசத்தால் தடுத்துவிட்டாள். நீராடச்சென்ற இடத்தில் சுகந்தத்தூள் இருந்த தல்லவா, மெய் மணக்கத் தேய்ததிட. அந்தப் பொடி கலந்த நீரை வாரினாள், நளனுடைய முகத்திலே இறைத்தாள்! கண்ணிலே பொடி வீழ்ந்த போது காவலனின் நோக்கம், காரிகையின் மீது பாயமுடியாதல்லவா! ஒரே விநாடியில், வெட்கம், திகைப்பு, யோசனை, யுக்தி, வேலைத்திட்டம், வெற்றி இவ்வளவும் தமயந்திக்கு ஏற்படுகிறது. ஒருகை

நீர்தான் இவ்வளவுக்கும். ஆனால் அந்த நீரைவாரி இறைக்கச் செய்ததன்மூலம், ஆதிவீரராம பாண்டியன் மாதர்குல முழுதுக்குமன்றோ பெருமை தேடித் தந்துவிட்டார்!

“அந்துகினனைதலினாலல் குறோன்றுதல்
கந்தடுகளிற்றினான் காணவேள்குறாச்
சுந்தரச் சுண்ணநீர் முகத்திற்றூவி”
ஆம்துகில் - ஆழகிய இடை
நனைதலின் = நனைந்துவிட்டதால்
ஆல்குல் = மறைவிடம்
தோன்றுதல் = தோன்றுதலை
கந்துஆடு = கட்டுத்தறியை முறிக்கின்ற
களிற்றினான்= யானையை உடைய நளன்
காண = பார்க்கவே
வெள்குறா - வெட்கமுற்று
சுந்தரம் = ஆழகான
சுண்ணநீர் = கந்தப்பொடி கலந்த தண்ணீரை
முகத்தில் தூவி = (தமயந்தி நளனுடைய) முகத்தில் இறைத்தாள்.

ராஜலீலைக்கே இவ்வளவு கட்டுத்திட்டம், வரையறை வைத்து நைடத நூலாசிரியர் பாடி இருக்கும்போது, தேவலீலையை விளக்கவந்த சாமகாதையிலே, கம்பர், கொண்ட முறை சரியா, என்று கேட்டால், கோபிக்கின்றனர். கோபம் வருவது சரி, ஐயனே, ஏன் அந்தக் கோபத்தை, கலையை இக்கதிக்கு ஆளாக்கிய கம்பன் மீது காட்டாது, உள்ளதை எடுத்துக்கூறும் ஏன்மீது காட்ட வேண்டும்? நானா ஆக்கவிதைகளைப் புனைந்தேன், இல்லாததை எடுத்துரைத்தேனா? சந்தேகமிருப்பின், கம்ப ராமாயணம், நைடதம் இரண்டையும் எடுத்துப் புரட்டி, நான் குறித்துள்ள பாடல்கள் உள்ளனவா என்று பாருங்கள்.

“போ,போ, பரதா! நீங்களும் கவிபாட ஆரம்பித்தால் இப்படித்தான் பாடுவீர்கள்” என்று கூறுவர் கடைசி

சமாதானமாக. ஆனால் அதுவும் பொருந்தாது.

ஆழகான குளம்! தாமரை அற்புதமாக மலர்ந்திருக்கிறது! வனப்புள்ள ஒருபெண்! மூழ்கி மூழ்கி விளையாடுகிறாள் அங்கு. ஒரு இளைஞன், கண்டு விட்டான் காட்சியை, பறிகொடுத்தான் மனதை.

கம்பசித்திரத்துக்கு ஏற்றகாட்சிதானே இது! "குளோசப்" எடுக்க ஏற்ற இடம். ஆனால் எங்கள் கவி பாரதிதாசன், அந்தத் தடாகத்துக்கு உங்களை அழைக்கிறார், வந்து பாருங்கள், துளியேனும் அருவருக்கவோ, கூச்சப்படவோ, இடமிருக்கிறதா என்று

"தாமரை பூத்த குளத்தினிலே
முகத்தாமரை தோன்ற முழுகிடுவாள்"

முகத்தாமரையைத்தான் காணலாம்! ஆனால் அவள் ஆôகி அல்லவோ, முகம்மட்டுந்தான் தெரியும்படி நீரிலேயே ஆழ்ந்து இருக்கிறாளோ? இல்லை! ஆழகான மேனியாள், ஆனந்தமாக நீர்விளையாடுகிறாள், ஆனால், "பண்பு" அவரை, "முகத்தாமரை தோன்ற முழுகிடுவாள்" என்ற ஆளவோடு நிறுத்துகிறது, முகம்மட்டும் தாமரை அல்ல, மேனியே அழகுதான் அந்த மங்கைக்கு, ஆகவேதான் கவி.

"அந்தக் கோமளவல்லியைக் கண்டு விட்டான்"

என்று, ஒரேவார்த்தையில், சினிமாக்காரர் பாஷையில் கூற வேண்டுமானால், லாங் ஷாட் கொடுத்துவிட்டார் அவள் கோமளவல்லி என்று கூறி.

அந்தக் கோமளவல்லி மட்டும், கம்பரிடம் சிக்கி இருந்திருந்தால் என்ன நேரிட்டிருக்கும்! குறைந்தது பத்துப்பாடல்கள் அவருடைய உள்ளத்திலிருந்து குபு குபு வென்று கிளம்பி இருக்கும். அவைகளிலே ஒன்றிரண்டாவது, "குளோசப் காட்சி" யாக இருந்திருக்கும்.

அவள் கோமளவல்லியாக இருக்கலாம், ஆனால் அந்தக்குமரன் ஒருதடிப்பயல், முகத்தாமரையைக் கண்டு விட்டும் தன் வழியே தான் சென்றான், என்று "வேதாந்தம்"

பாடுகிறாரா என்றால், அதுவுமில்லை. “கொள்ளை கொடுத்தனன் உள்ளத்தினை” என்று காதல் கதைதான் கூறுகிறார். குப்பன் என்ன கண்டான்! முகத்தாமரையைக் கண்டான் முதலில், பிறகு ஒரேநொடியில் அவள் உருவ முழுவதும் கண்டான், ஆவளோர் கோமளவல்லி என்பதைத் தெரிந்து கொண்டான், பிறகு,

“அவள் தூய்மை படைத்த உடம்பினையும் பகந்தோகை நிகர்த்த நடையினையும்” காண்கிறாள்.

இவ்வளவும் கண்டான், பிறகு கதை தொடர்கிறது. இதிலே, நிகர்த்த நடையினையும்” காண்கிறாள்.

கலாரசிகர்களே! தாமரை பூத்த தடாகங்களைப் பார்த்தோம், உங்களைத்தான் கேட்கிறேன், இவைகளிலே, எந்தத் தடாகம், பண்பும் பாவின் இனிமையும் சமஏடையாக்கப்பட்டுத் தீட்டப்பட்டிருக்கிறது. நீங்களே கூறுங்கள். புரட்சிக்கவிஞர், “குப்பன்” கதை கூறுகிறார், ஆதிவீரராமபாண்டியன் இராஜா கதை கூறுகிறார், கம்பரோ, “தேவமாகதை” கூறுகிறார். வெறும் பொழுதுபோக்குப் பாடலல்ல கம்பருடையது. பிறவிப்பெருங்கடலை நீந்திச்சென்று, சாலோகசாமீப சாயுச்யப் பதவியை ஆடைவதற்கான மார்க்க நூல் அது, என்பதை மறந்துவிட வேண்டாம். மார்க்க நூலிலே, இந்தக் காமமது இப்படிக் கரைபுரண்டு ஓடலாமா? என்பதுதான் நமது கேள்வி.

மறுபடியும் யோசியுங்கள், பிறகு கோபம் ஏன்மீது வராது, அந்த ஏட்டின்மேல் பாயும்.

தாமரை பூத்த குளத்துக்கு அழைத்துச் சென்று அங்கு தையலரை நிர்வாண நிலையில் கண்டு மகிழும் இடவர் உள்ர் என்று காட்டி, இது கலை, கலை மட்டுமல்ல, கடவுள் நெறிக்கான காவியம் என்று கம்பர் கூறுகிறாரே, அது முறையா என்று கேட்கிறோம். தவறா?

(திராவிடநாடு - 14-4-46)

# அதுதான் சரி!

“நீங்கள் ஒரு சமரசத்துக்கு வந்தாலும் சரி, வராவிட்டாலும் சரி, நாங்கள் வெளியேப் போவது நிச்சயம் என்று அறிவித்துவிடுவதே சிறந்த வழி”

என்று பிரிட்டிஷ் பத்திரிகை ஒன்று எழுதியிருக்கிறதாம். சிலாக்கியமான யோசனை, அதனைச் சீக்கிரத்திலே பிரிட்டிஷ் சர்க்கார் ஆமுலுக்குக் கொண்டு வருவது நல்லது என்று நாம் கூறுகிறோம் வெளி ஏற வேண்டியவர்களுக்கு.

மூன்றாவது கட்சி ஒன்று இருக்கிறது, அதனாலேயே இங்கு வர்க்கப் போர், வகுப்புப் பூசல், ஜாதிச் சண்டை முதலியன மூண்டு, சமரசமோ, முன்னேற்றமோ ஏற்பட மார்க்கமில்லாமல் போய்விட்டது. என்று, காங்கிரஸ் கட்சி அடிக்கடி சொல்லி வருகிறது. உயிர்ப்பிரச்னைகள் பலவற்றைப் பழங்காலத்தில் போட்டுப் பரணைமீது வைத்துவிட்டு, எல்லாம் இந்த வெள்ளைக்காரர்கள் வெளி ஏறின பிறகு கவனித்தும் கொள்ளலாம் என்று காங்கிரஸ் கூறிவருகிறது. நாளாகநாளாக பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்தினால் ஒருபுறம் நாட்டுக்குக் கஷ்டநஷ்டம் ஏற்படுவதுடன், சீர்கெட்ட சமுதாயத்தின் நிலைமை மேலும் மேலும் அதிகரித்து, அழுகி வருகிறது. சமூகக் கொடுமைகளும் ஆநீதிகளும், உரம் பெறுகின்றன. இவைகளை ஒழித்துப் புது உருக்காக்கும் உண்மையான நோக்கம், காங்கிரசுக்கு இருக்கிறதா அல்லது சமுதாயத்தின் சீர்கேடுகளை விட்டுவைத்து, அதிலே சிலருக்குச் சுகாதார ஆதிகாரி வேலை கொடுத்துவைக்க விரும்புகிறதா, என்பதைப் பரீட்சித்துப் பார்க்க, சந்தர்ப்பம் இல்லை - அது ஏற்படவேண்டும் - விரைவாக. ஆகவே நாம், பிரிட்டிஷார் வெளிஏற வேண்டும் என்ற யோசனையைச் சொல்லளவிலே நிறுத்திவிடாமல் செயலிலே காட்டும்படி கூறுகிறோம்.

பரந்த சாம்ராஜ்யத்தை ஒரு காலத்தில் இளமுடிந்தது பிரிட்டனால் கடலிலே கலம்விட்டும், இங்காங்கு இருந்த

கலகலத்தப் போன சமுதாயங்களை, அதே நிலையில் விட்டு வைக்கும் தந்திரத்தாலும் இன்று, அந்த முறையைக் கண்டிக்காதவர்கள் கிடையாது.

பிரிட்டிஷார், மதவிஷயத்தில் தலையிடு வதில்லை என்ற வாக்குறுதி கொடுத்ததை, அவர்களுடைய பெருங்குணம் என்றனர் சிலர், இங்குள்ளோர் நல்லாட்சியின் நற்பண்பு என்றனர்.

நாம், அந்தப் போக்கைப் பலமாகப் பலகாலமாகக் கண்டித்து வந்திருக்கிறோம். மத விஷயத்திலே நடுநிலைமை வகிப்பதாகக் கூறிக் கொண்டு, சமுதாயத்திலே சுரண்டி வாழ்பவர்கள், சுகபோகிகள் ஆகியவர்கள் கொழுக்கவும், பாடுபடுபவன், நாடாண்டவன் நலியவுமான நிலைமை வளருவதைக் கண்டும், அந்த நிலைமை மதத்தின் பெயராலேயே, காப்பாற்றப்பட்டு வருவதைத் தெரிந்தும், “நாங்கள் என்ன செய்வோம்! அவர்களின் மதம் அப்படிப்பட்டது! நாங்கள் மதவிஷயத்திலே தலையிடுவதில்லை” என்று கூறி, வெளி உலகு இங்குள்ள நிலைகண்டு கேலி செய்யும், மேயோக்கள் நையாண்டி செய்யவும், பார்லிமெண்டுகளிலே பரிகாசப் பேச்சுப் பேசவும் சந்தர்ப்பம் உண்டாக்கித் தந்ததுதான், பிரிட்டிஷ் கொள்கையினால் ஏற்பட்ட விளைவு, இந்தப் போக்கை நாங்கள் கண்டிக்கிறோம், என்ற தீர்மானத்தை, திருச்சியில் நடைபெற்ற திராவிடர்கழக மாகாண மாநாட்டிலே நாம் நிறைவேற்றி இருக்கிறோம்.

அறிஞர் ராதாகிருஷ்ணன், அமெரிக்காவில்.

“ஜனங்களின் மதசம்பந்தமான சம்பிரதாய விஷயங்களிலே தலையிடுவதில்லை என்ற கொள்கையைப் பிரிட்டிஷார் அனுஷ்டித்து வருவதால், வெகு காலத்துக்கு முன்பே மறைந்து ஒழிந்து போயிருக்க வேண்டிய பல கழகக் குரோதங்களுக்கு, தங்களை அறியாமலே பிரிட்டிஷார் நல்ல பாதுகாப்பை அளித்து அவை நீடித்திருக்க உயிர் கொடுத்துவிட்டார்கள்” என்று

பேசியிருக்கிறார். உண்மை! அப்படி உயிர் கொடுத்து விட்டதிலே முக்கியமானது பார்ப்பனியம் - உலகிலே வேறெங்கும் இல்லாத அக்ரமம்! உலகிலே வேறு எங்கும் தீண்டாமை இல்லை. இங்கு இருக்கிறது. இதற்காக வெட்கப்படுவோர் இல்லை.

உலகிலே வேறு எங்கும் சமுதாயம் இத்தனை ஜாதிகளாகப் பிளக்கப்பட்டு இல்லை. இங்கு இருக்கிறது, அது போகவேண்டு மென்பவர்கள், நாத்திகராக்கப்படுகின்றனர்.

அர்த்தமற்ற, இபாசமான, ஆநாச்சாரமான கோட்பாடுகள் உலகிலே இன்று எங்கும் இல்லை, அவை அத்தனையும் இங்கே பூத்துக் காய்த்துக் கிடக்கின்றன.

போப்பாண்டவர் பாவ மன்னிப்புச் சீட்டு விற்பதில்லை, புரோகிதக் கூட்டம், இங்கே அந்த வேலையை விடவில்லை.

கிருஸ்துவ மடாலயங்கள், அறிவாலயங் களான பள்ளிக்கூடங்களையும், ஆன்பாலயங் களான இஸ்பத்திரிகளையும் அமைக்கின்றன. இங்குள்ள மடாலயங்கள் கண்கவர் பூஷணங்கள அணிந்தே கட்டிலறை நோக்கிப் பெண்கள் பல பேர்கள் குலவிப் பின்வர முன் நடந்தார் என்று நிலையிலே உள்ளன.

சேறான அகழிகள், கலனான கோட்டைகள், பிளவுபட்ட பாறைகள், இடிந்து கிடக்கும் ஆரண்மனைகள், இருண்ட இடங்கள், சமுதாயம் இந்நிலையில் இருக்கிறது. பிரிட்டிஷ் ஆட்சியோ, இவைகளைத் திருத்தவில்லை, திருத்தாது, திருமுகம் மதத்திலே தலையிடுவதில்லை என்று தந்தாகிவிட்டது. இவைகளுக்கு இடையே, விஞ்ஞானம் உலவ விடப்பட்டிருக்கிறது. விதவைக்குத் தரப்படும் வெள்ளைச் சேலை போல! இந்த நிலைமாற வேண்டும் என்றால், வெள்ளையன் போக வேண்டும் என்று கூறுகிறார்கள். போய் விடுங்கள், பிறகு அது நடக்கிறதா இல்லையா என்று நாங்கள் பார்த்துக்கொள்கிறோம், இடையே நீ நின்று கொண்டிராதே.

என்று பிரிட்டிஷ் ஏகாதிபத்யத்துக்குக் கூறுகிறோம். உடனடியாக அமைவது சனாதன ஆட்சியாக இருக்கும், ஆனால் கவலை இல்லை, அப்போதுதான், நமது மக்கள், யார் நண்பர்கள், யார் நரி உள்ளமும் மனித உருவமும் பெற்றவர்கள் என்பதைச் சுலபத்திலே புரிந்து கொள்ள முடியும். “அவனும் போய்த தொலைந்தானே! ஈன்னமும் இந்த அக்ரமம் இருப்பது அழகா?” என்று மக்கள் அத்திரத்துடன் கேட்கத் தொடங்குவார்கள், சமூக அக்ரமங்களைக் காணும் போதெல்லாம் அந்த மகத்தான புரட்சி ஏற்படவேண்டும், அதற்காகவே, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், வெளியேற வேண்டுமென்று விரும்புகிறோம்.

சலிப்பினாலோ அல்லது கேலிக்காவோ, அந்த பிரிட்டிஷ் பத்திரிகை எதற்காக அவ்விதம் எழுதியிருந்தாலும் சரி, அதைப்பற்றிக் கவலையில்லை. பிரிட்டிஷார் வெளிஏறப் போவதாக ஊடனே அறிவித்துவிட வேண்டியது தான். அதான்சரி.

(திராவிடநாடு - 14.4.46)

# சர்ச்சிலிசம்

“ஏழைகள் படும்பாடு உமக்குத் தெரியவில்லையா?”

“தெரிகிறது!”

“தொழிலாளர்களின் துயரால் நாடு நலிவதைத் தாங்கள் உணர்வில்லையா?”

“உணருகிறேன்”

“பயங்கரமான பொருளாதார பேதம் சாந்தியையோ சமாதானத்தையோ தராது அல்லவா?”

“தராது. சமருக்குத்துதான் வழி உண்டாக்கும்”

“சுரண்டிப் பிழைப்பவன் சுகபோகியாகவும், பாடுபடுபவன் பகல் பட்டினியாகவும் இருப்பது முறையா”

“முறையல்ல!”

“ஒருசிலர், பணத்தைப் போட்டு, பொறிகள் அமைத்து, இயற்கைச் செல்வத்தைப் பாட்டாளியின் உழைப்பால் பெருக்கி, தங்கள் சொந்த இலாபத்தைக் குவித்துக் கொள்கிறார்களே, அது கொடுமையல்லவா?”

“கொடுமைதான்”

“அந்தக் கொடுமை ஒழிக்கப்பட வேண்டாமா?”

“கட்டாயம் ஒழிக்கப்படத்தான் வேண்டும்”

“ஆகவே முதலாளித்வ முறைபோய்த் தொலைய வேண்டாமா?”

“தொலைய வேண்டும்”

“அப்படியானால் சமதர்ம ஆட்சிக்காகத்தானே முயற்சிக்க வேண்டும்?”

“ஆமாம்!”

“சமதர்ம ஆட்சி சாத்தியப்படும். அது வெறும் கனவல்ல, ஏட்டிலே தீட்டப்பட மட்டுமே ஏற்ற இலட்சியமல்ல, நாட்டிலே நடத்திக் காட்டக் கூடியது என்ற உண்மையைச் செயலிலே, தீரமாய், ஆபத்துக்களைப் பொருட்படுத்தாமல், தன்னந்தனியாக நின்று எடுத்துக்காட்டிய நாடு எது?”
“ரஷியா”

“உண்மையாகவா?”

“ஆமாம்! இது உலகுக்கு அரிச்சுவடி போலாகிவிட்ட செய்திதானே”

“அப்படியானால், ஏன், அத்தகைய மகத்தான பணியை மானிட குலத்துக்குச் செய்த மாநிலத்தின் மணிவிளக்கு, மங்காப்புகழ்படைத்த சோவியத் ரஷியாவைக் கண்டிக்கிறீர், வெறுக்கிறீர், அதற்கு எதிர்ப்பிரச்சாரம் செய்கிறீர்?”

“அதுவேறு ஒரு காணரத்துக்காக”

“சமதர்மம் அவசியம் என்பதையும் ஒப்புக் கொள்கிறீர், சம தர்மத்தின் தாயகம் சோவியத் ரஷியா என்றும் ஒப்புக் கொள்கிறீர், இருந்தாலும், அதே ரஷியாவை வெறுத்துப் பேசுகிறீரே, ஏன்?”

“அதுவா? அங்கே ஜனநாயகம் இல்லை”

“சரி! அங்கு ஜனநாயகம் தேவை என்றால் ரஷியர்கள் கவலை எடுத்துக் கொள்ளட்டும். அதற்காக நீர், அதன்மீது துவேஷப் பிரசாரம் செய்வானேன்?”

“உனக்குத் தெரியாது விஷயம். ரஷியாவின் செல்வாக்குப் பலமாகிக் கொண்டு வருகிறது. ஆதிக்கம் வலுவடைகிறது. ஒரோப்பிய நாடுகள் பலவற்றிலே ரஷியாவுக்குச் செல்வாக்குக் கிடைத்துவிட்டது. மத்திய கிழக்கில், சீனாவில், ஏன், நமது இந்திய சாம்ராஜ்யத்திலேகூட, மாஸ்கோவுக்குச் செல்வாக்கு ஏற்பட்டுவிட்டது.”

“சரி! அதனாலே என்ன ஆபத்து நேரிட்டுவிடும்? என்ன கேடு?”

“நமது ஏகாதிபத்யம், சாம்ராஜ்யம், வியாபார ஆதிக்கம், கடலில் இதிபத்யம், சர்வதேச சபைகளிலே நமக்குள்ள செல்வாக்கு இவைகள் பாழ்படவோ! நமது ஏகாதிபத்யத்தை நாசம் செய்யக்கூடிய விஷக்காற்று மாஸ்கோவிலிருந்து கிளம்புகிறது. அது பரவாதபடி தடுத்தாலொழிய நமது ஏகாதிபத்யம் கெடும்.”

“ஏகாதிபத்ய பாதுகாப்புக்காகத்தானா, இந்தச் சோவியத் எதிர்ப்பு?”

“சந்தேகம் என்ன! நான், நமது ஏகாதிபத்யத்தைக் கலைத்து விடுவதற்காகவா, பிரிட்டிஷ் பிரதமரானேன்!”

ஏகாதிபத்யத்தைக் காப்பாற்றுவதற்காக, ஏழைகள், வாழவும் வழி உண்டு என்ற உண்மையை உலகிலே நிலைபெறச் செய்த சோவியத் மீது பகையை மூட்டிவிட்டது தர்மமா?

ஏழைகளைக் காப்பாற்றும் வழி நமக்கும் தெரியும். அதற்கு நமக்கு மாஸ்கோ பாடம் கற்றுக் கொடுக்கத் தேவையில்லை. ரஷியத் திட்டம் ரஷியாவுக்கு. இங்கு நாமே திட்டம் தயாரித்துக் கொள்ள முடியும், இங்குள்ள நிலைமை, தன்மை, தேவை, அறிவு, ஆற்றல், இவைகளுக்குத் தக்கபடி.

கேள்வி, பதில் வடிவிலே உள்ள, இந்தத் தத்துவம், சர்ச்சிலிசம், அதாவது, முதலாளித்துவ முறைக்கு, முலாம்பூசி, அதைக் காப்பாற்றுவதற்கு, பொதுமக்களிடையே, பிரச்சாரத்தைத் தந்திரமாகப் புரிந்து, முதலாளித்வத்தைச் சுக்குநூறாக்கிய சம்மட்டி அடியினின்றும், சீமான்கள் தப்பித்துக் கொள்வதற்கு வழி கண்டுபிடித்து, அந்தச் சம்மட்டியைத் தயாரித்த சோவியத் ரஷியா மீதே பழிபல சுமத்தி, எந்தப்பாட்டாளி மக்களின் போற்றுதலைப் பெற வேண்டுமோ, அதே பாட்டாளிகளைக்

கொண்டே அதே சோவியத்துக்கு எதிர்ப்புணர்சசியை உண்டாக்கும் வித்தை, இந்தச் சர்ச்சிலிசம்!

இது பிரிட்டனிலே முன்னாள் முதலமைச்சாராக இருந்த சர்ச்சிலால் துவக்கப்பட்டு, இந்நாள்வரை அவரால் வளர்க்கப்பட்டு வருகிறது. அவரே கூட எதிர்பார்த்திருக்க மாட்டார், இதற்கு, இந்திய பூபாகத்திலே ஒரு கிளை ஸ்தாபனம் ஏற்படும் என்று. ஆனால் சர்ச்சிலிசம் இதுபோது இங்கு மிகத் திறமையாக வளர்க்கப்பட்டு வருகிறது. அதல சதல பாதாளம் என்று லோகங்கள் பல உண்டு என்ற அளவிலே, தங்கள் பூகோள ஞானத்தை வரையறுத்துக் கொண்டிருந்த அன்பர்கள் கூட இன்று ரஷியாவின் ஆதிக்க வெறிபற்றியும், ராஜதந்திர வெற்றி பற்றியும் பேசுகிறார்கள். பொது உடைமை என்ற தத்துவமே கூடக் கேலிக்குரிய விஷயமாக்கப்பட்டு வருகிறது. தோழர்கள் என்ற சொல்லே, ஜனனக் குறியாக்கப்பட்டு வருகிறது. ரஷியாவின் ஏகாதிபத்யம், பரவாதபடி செய்யும் புனிதப்போருக்குத் தங்களையும் தங்கள் ஆற்றல் (?) திறமை (?) ஆகியவற்றையும் ஆர்ப்பணிக்க முன்வந்துள்ளனர், இந்நாட்டுக் காங்கிரஸ் அன்பர்கள் பலர், சர்ச்சிலுக்கு இப்படிச் சீடகோடிகள் பெருகி வருவது பேரானந்தம் தரும்! சர்ச்சிலிசம் பரவுகிறது?

சர்ச்சிலிசம், வேதனையில் பிறந்த குழந்தை. பிரிட்டிஷ் ஆதிக்கம், பல்வேறு நாடுகளிலேயும் எதிர்க்கப்பட்டு, ஏகாதிபத்யம் ஜனனச் சித்திரமாக்கப்பட்ட பிறகு, சோவியத் மணம், பெர்லின், பாரீஸ், வார்சா, மாட்ரிட், ரோம், லண்டன் முதலிய பல்வேறு தலைநகர்களிலும் கமழத் தொடங்கிய பிறகு சர்ச்சிலிசம் பிறந்தது, ஏகாதிபதியத்தின் தத்துப்பிள்ளைகளான, ஆலை அரசர்கள், மில்மன்னர்கள், சுரங்கச் சீமான்கள், எண்ணெய் அரசர்கள் ஆகிய முதலாளிமார்களின், ஆதிக்கத்தின் சாவுச்சந்தமாக. அது, மக்கள் கீதமல்ல! ஆனால் இங்கு, மக்களின் மதிப்புக்குரியவர்கள் என்ற மான்யம் பெற்றுள்ளவர்கள், சர்ச்சிலிசத்தை, இராக-பாவ-தாளம் கெடாதபடி பாடி இன்புறுகிறார்கள். ஏன்? ஏகாதிபத்ய தத்துப்பிள்ளைகளின்

தம்பிமார்கள் ஏராளம் வடநாட்டில், அவர்களின் "அரண்மனைக் குழந்தைகளுக்கு" வேறு இலாபனம் பிடிக்கக் காரணம் இல்லையல்லவா?

மாஸ்கோ ரேடியோவில், டில்லியில் நடைபெறும் பிரிட்டிஷ் மந்திரிமார்களின் மந்திரலோசனை, "வேறொன்றுமில்லை, பிரிட்டிஷ் முதலாளிகளும் இந்திய முதலாளிகளும் கூடி, உலகிலே குமுறிவரும் புரட்சிச்சக்தியை, குறிப்பாகச் சோவியத் சக்தியை ஒழிக்க ஏற்பாடு செய்துகொண்ட ஒப்நதத்தின் உறவுப்பேச்சுத்தான்" என்று கூறப்பட்டதாம்.ø
"சுத்த ஆபாண்டம்! மோசமான புளுகு, இந்திய முதலாளிகளுக்கும் பிரிட்டிஷ் முதலாளிகளுக்கும் ஒப்பந்தமும் இல்லை, தொடர்பும் இல்லை என்று தேசியப் தொடர்பும் இல்லை" என்று தேசியப் பத்திரிகைகள் தீப்பொறி பறக்கத்தான் எழுதுகின்றன. ஆனால் பாபம் அதே இதழ்களில் வேறோர் பக்கத்தில் வந்து பாருங்கள்!

வசீகரமான புதிய மோட்டர்கள் வந்துவிட்டன!

வந்துவிட்டன இந்துஸ்தான்!

10!

என்ற விளம்பரங்கள், பிர்லா கம்பெனியாருடையது. ஆழகாகப் பிரசுரிக்கப் பட்டுள்ளன. கோடீஸ்வரர் பிர்லாவுக்கும் வெள்ளை முதலாளி நப்பீல்டு பிரபுவுக்கும், மோட்டர் தொழில் பாக ஒப்பந்தம் நடந்திருக்கிறது. விளம்பரங்கள், மாஸ்கோவின் வாக்குப் பொய்யல்ல என்பதை விளக்கமாகக் காட்டுகின்றன.

காந்தியார், சர்ச்சிலித்தைக் கடைப்பிடிக்கவில்லை. சர்ச்சில், சமதர்மம் எனக்குத் தெரியும், ரஷியா கற்றுக் கொடுக்கத் தேவையில்லை என்று கூறுகிறார். காந்தியாரோ, பச்சையாக நெடுநாட்களுக்கு முன்பே சொல்லிவிட்டார், "நான் ரஷியா நடத்திய புரட்சி சம்பந்தமான புத்தகங்களைப் படிக்கவில்லை" என்று. ஆகவே அவர், எப்போதும்போல, இராமராஜ்யம்

வரவேண்டும் என்று கூறிகிறார். மற்றவர்கள், மாஸ்கோவைப் பாராட்டிப் பேசி லண்டனின் ஆதிக்கத்தைக் கண்டிப்பர். பல்லவி சமதர்மம் அனுபல்லவி, அதனைப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் கெடுப்பது, சரணம் சுயராஜ்யத்தின் அவசியத்தைப் பற்றி, இப்படியே இருந்தது, காங்கிரஸ் கீர்த்தனம்! சந்தேகமிருப்பவர்கள், பண்டித ஜவஹர், பெய்ஸ்பூரில் நடைபெற்ற காங்கிரஸ் மாநாட்டிலே ஆற்றிய தலைமை உரையைப் பாருங்கள், பண்டிதர் மாஸ்கோவுக்கு எவ்வளவு அருகிலே போகிறார் என்பது விளங்கும். இன்று காங்கிரஸ் கீர்த்தனமே மாறிவிட்டது, ரஷியாவின் ஆதிக்க ஆசை! அதற்கு நாங்கள் சம்மதிக்க மாட்டோம்! ரஷிய சமதர்மமும் எமக்கு வேண்டாம். நாங்கள் சுதேசி சரக்குத் தயாரித்துக் கொள்வோம். என்கின்றனர். சரக்கு இந்துஸ்தான் மோட்டார் நம்பர் பத்து, போன்ற முறையிலே இருக்கக்கூடும். நாட்டு விடுதலையில் நாட்டம் கொண்ட நண்பர்களே, இப்படி சர்ச்சிலிசத்துக்கு இரையாவது, சரிதானா என்று கொஞ்சம் இர ஆமர இருந்து யோசியுங்கள்.

கம்யூனிஸ்டு கட்சிமீது வந்த கோபம், கடைசியில், சர்ச்சிலிசத்துக்குச் சீடர்களாகும் நிலைமைக்கா கொண்டு போய்விடவேண்டும்! இது, ஜின்னாமீது உண்டாகும் கோபம், காங்கிரசை, சுதேச சமஸ்தான லீலாவிநோதர்களின் சிநேகத்தைக் கூட நல்லது என்று எண்ணச் செய்து விட்டதே, அதுபோல அல்லவா இருக்கிறது, ஏன் இந்த விபரீதபோக்கு?

சோவியத் ஆதிக்கம் பரவுகிறது என்பதை இல்லை என்று மறுக்கவில்லை. மறுக்கமுடியாது. மறுப்பானேன்! ரஷியா, அதிக தூரத்திலும் இல்லை. எல்லைப்புற மாகாணம், அதைத் தாண்டினால் இப்கானிஸ்தான், அதை ஆடுத்தால், ஈரான், அதை ஓட்டி சோவியத்! மிக அருகாமையில்தான் ரஷியா இருக்கிறது உண்மைதான். இருந்தால் என்ன? ஆதிக்கம் வலுத்தால் என்ன? கிலிகொள்ள வேண்டியவர்கள் யார்? மக்களா, அல்லது மக்களைக்

கசக்கிழிப்பியும் முதலாளித்துவமா? யோசித்துப்பார்! மாளிகையிலே உலவும் மந்தகாச உருவங்கள், மருள வேண்டியது முறை தான். உனக்கு என்னப்பா கவலை? உலுத்த வாழ்வுக்காகவே உன் உழைப்பைத் தந்து உறுமாறுபவனே, நீ ஏன், உன் சக்தயைத் தற்கொலைக்குப் பயன்படுத்திக் கொள்கிறாய்.

ரஷியாவின் ஆணவம் ஆதிக்க வெறி, ஆசை ஆகியவைகளைக் கண்டித்து எல்லைப்புற மாகாண எம்.எல்.ஏ. ஒருவர் சென்ற வார இந்து இதழிலே ஒரு கட்டுரை தீட்டியிருக்கிறார். என்ன சொல்கிறார், இந்த சர்ச்சிலிச் சீடர்?

“ரஷியாவின் ஆதிக்கம் இந்தியாவிலே பரவாதபடி தடுக்க, எல்லைப்புற மாகாணம் பணிபுரியும். எல்லைப்புற மாகாண வழிதான், எதிரியின் படைஏடுப்புக்கு ஏற்றது. ஆகவே எல்லைப்புறம் பாதுகாப்பானதாக, பலமானதாக இருக்கவேண்டும்” என்று கூறுகிறார். நல்ல மனிதர், சோவியத்தினால் ஆபத்து வரும் என்று இங்கு எண்ணம் இருப்பதைக் கவனித்தார், தனக்கும் சோவியத் ஆதிக்கம் பிடிக்காது என்பதைக் காட்டிக் கொண்டார், பிறகு? அங்கேதான் அவர், வேடிக்கையான மனிதராகிறார்!

சோவியத் ஆணவமும் ஆதிக்க வெறியும் கொண்டதாம்! அவர்கூறுவது. அதனை இந்தியாவுக்குள் வரவிடாதபடி தடுக்கும் நிலைபெற்ற இடம் எல்லைப்புற மாகாணம். அந்த எல்லைப்புற மாகாணத்தின் நிலைமை என்ன?

“பொருளாதாரத்துறை, கல்வித்துறை ஆகியவற்றிலே நீங்கள் அடைந்திருக்கிற அளவு முன்னேற்றம் எங்களுக்கு வேண்டும். படிக்கும் வசதியற்ற பட்டாணியன் படித்த பண்டிதனுடன் எப்படி நேசமாக முடியும்? யந்திரத் தொழில் துறையிலே நன்றாக முன்னேறிய இந்தியாவிலே, தொழில் துறையிலே முன்னேற்றமே ஆடையாத எல்லைப்புற மாகாணம் எப்படி ஒரு அங்கமாக இருக்கும்!

எங்கள் மாகாணத்திலே படிப்பு மிகமிகக் குறைவு. எங்களுக்குப் பள்ளிக்கூடங்கள், கல்லூரிகள், பல்கலைக்கழகம், தொழிற்கல்லூரி, மாதர் கல்வி போதகர்கள், ஆஸ்பத்திரிகள் எல்லாம் வேண்டும். எவ்வளவோ தொழில்கள் உற்பத்தி செய்யவழி உண்டு, ஒன்றுகூட உண்டாக்கப்படவில்லை. மலைகளிலே ஊலோகங்கள் உள்ளன. வெட்டி எடுக்கப் பணம் இல்லை. எந்தத் துþறியலே பார்த்தாலும் நாங்கள் மிகப்பன்னணியில் இருக்கிறோம். கதை இருக்கிறது ஏராளமாக, நாங்கள் முன்னேகியாதியுடன் வாழ்ந்தோம் என்றுகூற பழங்கதை பேசிப்பயன் என்ன? இப்போது நாங்கள் மிகப்பின்னணியில் இருக்கிறோம்”

இது, எல்லைப்புற மாகாணம் தான் அப்துல்கனிகான் எல்.எல்.ஏ. தீட்டும் சித்திரம். படிப்பு இல்லை! தொழில் இல்லை! நாகரிக வாழ்வுக்கான வசதி இல்லை, இந்தியாவின் மற்ற இடங்கள் முன்னேறிவிட்டன, முன்னேறுகின்றன, எல்லைமட்டும் தொல்லையே அனுபவித்துக் கொண்டே இருக்கிறது, என்றார் கான்அப்துல்கனிகான்.

இந்த எல்லைப்புற மாகாணத்தின் பலத்தைக் கொண்டு தான் ரஷியப்படை ஏடுப்பு நேரிட்டால் தடுக்க வேண்டும் என்கின்றனர். மகத்தான காரியத்தைச் செய்ய வேண்டிய பொறுப்பு எந்த மாகாணத்தின்மீது ஏற்றப்படுகிறதோ, அந்த எல்லைப்புறமோ, கல்வி தொழில் முதலிய எல்லாத்துறையிலும் பலம் குன்றிக் கிடக்கிறது!!

என்று அவரே கூறுகிறார். கூறிவிட்டு என்ன கேட்கிறார்? கொஞ்சம் கடன் கேட்கிறார். எல்லைப்புற மாகாணத்தைச் சீராக்க, பலப்படுத்த, எதிர்த்தாக்குதல் ஏற்படின் தடுக்க, எவ்வளவு பணம்? ஒரு இருபது கோடி ரூபாய்! ஆசாமி, புத்திசாலிதான்! சந்தேகமா!!

மற்றொன்று சொல்கிறார். சோவியத் ரஷியாவுக்கு ஏராளமான ஐந்தாம்படை இங்கே இருப்பதாக. கம்யூனிஸ்டுகளை அவர் குறிப்பிடவில்லை.

பசி! ஐழ்மை! இவை, சோவியத்துக்கு ஐந்தாம்படை என்கிறார். உண்மை! ஆனால் எவ்வளவு பெரிய உண்மை!! பசி! பசி! எங்கெங்கு பட்டினிப் பட்டாளம் இருக்கிறதோ, எங்கெங்கே ஏழையின் கண்ணீர் வழிகிறதோ, எங்கே இல்லாமையின் இம்சை இருக்கிறதோ, அங்கே எல்லாம், சோவியத்துக்கு ஐந்தாம்படை உண்டு, என்கிறார் எல்லை எம்.எல்.ஏ. உண்மைதானே! இந்த நிலையில் இவர் கேட்கும் 20 கோடி கடனாகக் கொடுத்துதான் என்ன பயன்?

பட்டினிக் கொடுஞ்சிறையிலே பதறுகின்ற மனிதர்களிடமா, மாஸ்கோவின் ஏகாதிபத்தியம், ரஷிய ஆதிக்க ஆசை என்ற சர்ச்சிலிசத்தைப் பேசுவது! பலிக்குமா? நம்புவரா? நியாயந்தானா?

சிந்தித்துப் பாருங்கள், நாட்டு விடுதலையில் நாட்டம் கொண்டவர்களில் ஏராளமானவர்கள், தங்களையும், அறியாமல் சர்ச்சிலிசத்தக்குப் பலியாகிறார்களே, இது சரியா என்று!

(திராவிட நாடு - 21.4.46)

# ஐந்தாம் ஆண்டு!

“திராவிட நாடு” ஐந்தாம் மலரின் முதல் இதழ், தங்கள் கரத்தில் இருப்பது. கடந்த நான்கு ஆண்டுகளாகக் கடமையைக் களிப்புடன் நிறைவேற்றி வந்த, “திராவிட நாடு” இனியும் அப்பணியினை ஆற்றும் உறுதியுடன், உமது உற்சாகம், ஆதரவு எனும் உறுதுணை தேடவந்துள்ளது. கொந்தளிப்பான நாட்களிலே தோன்றி, காலநிலை எனும் கஷ்டங்களைத் தாங்கி “திராவிட நாடு” பணியாற்றி வந்திருக்கிறது, பணிபுரிய முன் வந்திருக்கிறது. அன்றுபோல் இன்றும், இன்றுபோல் என்றும் உமது ஆதரவை அருளக் கேட்டுக் கொள்கிறோம். இதுவரை “திராவிட நாடு” நமது இயக்கத்தவரிடமிருந்து பெற்றுள்ள ஆதரவும் உதவியும், தேவை. மேலும் சில மடங்கு அதிகமாக அன்பர்கள் அதனை அளிப்பர் என்று நம்புகிறோம்.

இயக்க ஏடுகளின் வாழ்வு, எதிர்நீச்சல்காரனுடையது போன்றது. இன்பம் நிறைந்ததாகவோ எளிதான வகையில் வெற்றி பெறக்கூடியதாகவோ இருக்க முடியாது. எங்கும் ஒரேவிதமான சேதியாகத்தான் இருக்கும். குடியரசு, திராவிடமணி, தொழிலாளர் மித்திரன், திராவிட நாடு ஆகிய அலுவலகங்கள் அனைத்திலும், ஒரேவிதமான நிலைமையே இருந்து தீரும் காரணம், இவை, மக்களுக்கு இனிப்புப் பண்டம் தயாரித்து விற்பனைக்கு அனுப்பும் வேலையில் உடுபடாமல், சிந்தனைக்குச் சற்றுச் சிரமமான வேலை தருவருதான். இந்தப் பொதுநிலையிலும், திராவிடநாடு, நாலு ஆண்டுகள் பணிபுரிந்து ஐந்தாம் ஆண்டு ஆரம்பாகிறது. வளர்ச்சி, உற்சாக மூட்டக்கூடிய விதத்திலேயே ஏற்பட்டிருக்கிறது என்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

சமுதாயத்திலே உள்ள ஜாதிச் சனியன், சனாதனக்கேடு, வைதிகக் கொடுமை, ஆகியவைகளை நாம் காணும்போது, நமது கண்களிலே அனலும் புனலும் கொப்பளிக்கிறது. எப்பாடு பட்டேனும், இவைகளைக் களைந்து எறியவேண்டும் என்ற எண்ணம் உண்டாகிறது. மகத்தான

வேலை, அதனை நாம் மேற்கொண்டுவிட்டோம். அளவு நிலைமை கஷ்டநஷ்டக் கணக்கு இவைகளைக் கூடக் கவனிக்கவோ, இவைபற்றிக் கவலைப்படவோ கூட நேரமோ நினைப்போ இருப்பதில்லை. "போரிடு போரிடு! பொல்லாங்கை ஒழிக்கப்போரிடு! ஆநீதியை அழிக்கும் அறப்போரில் உடுப்டு" என்று உள்ளம் தூண்டியபடி இருக்கிறது. நம்மால அந்த எழுச்சிக் குரலினின்றும் தப்ப முடியவில்லை.

மிகப் பெரிய இக்காரியத்தைக் சாதிக்கத் தேவையான அளவு பணம் இல்லையே, வாழ்விலே நிம்மதி இல்லையே, வசதி இல்லையே, உதவி இல்லையே, என்று மனதுக்துக் கூறினாலோ, மனம், ஆமாம்! அதனால்தான் உன்னை நீ ஒப்படைத்துவிடு இந்தக் காரியத்துக்கு இதனால் உனக்கு என்ன கஷ்டம்வரும்? மாளிகை பறிபோகுமா? மிட்டா கலையுமா? ஆலை அழியுமா? சோலையில் உலவிடும் இன்பத்தை இழக்க வேண்டி வருமா? நீ இவைகளற்றவன், இழக்க என்ன இருக்கிறது உனக்கு? ஏன், உனக்கு கலக்கம்? ஏழு! போரிடு! என்று மேலும், தூண்டியே விடுகிறது.
பன்னெடுங் காலமாக எறிப்போன கொள்கைகளை எதிர்த்து நடத்தும் புது அமைப்பு முறைக்கான பிரச்சாரம் மக்களின் செவி புகுமா என்பதே சந்தேகமாக இருக்கிறதே என்றால், "செவியிலே அல்ல தவறு, உன் குரலிலே, அதைச் சரிப்படுத்து, இடைவிடாமல் எடுத்துக் கூறு, இதமாகக் கூறு, இன்னலுக்கிடையே இனிய முகத்தோடு இருந்து கூறு, இன்றே கூறு, கூறும் சக்தி உள்ள மட்டும் குறைகள் இருப்பது பற்றிக் குமுறிக் கொண்டிராமல், கூறிக்கொண்டேயிரு" என்றே உள்ளம் வற்புறுத்துகிறது. பகுத்தறிவு இயக்கப் பணிபுரிவோன் உள்ளம், அந்நிலை பெற்று விட்டது. அந்தப் பணியின், ஒருமுறை, ஒருவகையே, ஏடு, திராவிட நாடு அறிவுப் புரட்சிகாகக் ஆற்றலுடன் பணிபுரியும் அஞ்சாநெஞ்சன், வெஞ்சமர் பலகண்ட மாவீரன், பெரியார் இராமசாமியின் எண்ணங்களை, நாட்டுக்கு எடுத்துக்காட்டும் ஏடு. திராவிடத் தனி அரசுக்கான புரட்சி முரசு.

மகாராஜாக்கள் மண்டியிடச் சிற்றரசர்கள் சாமரம் வீசப் பிரபுக்கள் பாதம் தாங்க, பனியாக்கள் பல்லக்குத் தூக்க, பார்ப்பனர்கள் புகழ்கீதம் பாடப் பவனிவரும், பாசீசக் காங்கிரசோ, பழைமைக்கே பாடுபடும் ஸ்தாபனமாகி விட்டது. பலமும், அதற்கேற்ற அளவு எதிர்க்கட்சியை அழிக்கும் வன்மையும், அந்த ஸ்தாபனத்துக்கு ஏற்பட்டுவிட்டது. ஏன் என்று கேட்பார் இல்லை என்ற நிலையில், எதையும் செய்யலாம் என்ற முறையில், நாடாளத் தொடங்கும் நாள் இது. மக்களின் நலன், இத்தகைய ஆட்சி முறையினால் பாதிக்கப்பட்டால், கண்டிக்க, தடுக்க திருத்த ஏடுகள் அதிகம் இல்லை. அந்தப் பணிக்கு முன்னணி வீரனாகத் திகழ்வது, “குடியரசு” அதன் ஒலிபெருக்கி “திராவிட நாடு”.

விடுதுலைக் கிளர்ச்சிக்கு, வித்து என்றிவிட்டோம், உழைப்புத் தியாகம் எனும் நீர்பாய்ச்சும் காலம் வந்துவிட்டது. திராவிட நாடு ஆநதக் காரியத்துக்கான திறமையையும், வலுவையும் பெற வேண்டும், உங்கள் ஆதரவு பெருகினால், பெறும், என்று உறுதியாகக் கூறுகிறோம், எங்கெங்கு கொடுமை காணப் பட்டாலும், அங்கெல்லாம் நின்று போரிட்டுக் கொடுமையை ஒழிக்க வேண்டும் என்று திராவிட நாடு விழைகிறது. பாட்டாளிகளின் பாதுகாப்பாள னாக, வாலிபர்களின் முரசொலியாக, விளங்க வேண்டும் என்று விழைகிறது.

ஆங்கில, ஆரிய, பனியா ஏகாதிபத்தியங் களின் இணிவேரைக் களைந்து ஏறியும் பணியில் திராவிட நாடு தனக்குப் பெரும் பங்கு தரவேண்டுமென்று நாட்டு மக்களûக் கேட்டுக் கொள்கிறது. அறிவுத்துறையில் ஆநகே நாட்களாக முளைத்துக் கொழித்துக் கிடக்கும் கள்ளிக் காளான்களைக் கல்லி ஏறிய வேண்டுமென்று ஆசைப்படுகிறது. கலையின் பெயரால் நடத்தப்படும் கபடம் உடைபட்டாக வேண்டும், பழைமை பேரால் நடைபெறும் பாதகங்கள் பொடிபட வேண்டும், எங்கும் எவருக்கும் உரிமை வேண்டும், விடுதலை வேண்டும், சமத்துவம் வேண்டும், இவைகளைக் காணப் பணிபுரிய

வேண்டும், அப்பணியிலே நமக்கோர் நல்ல பங்கு வேண்டும் என்று திராவிட நாடு கேட்கிறது. வெள்ளை ஏகாதிபத்யக் கோட்டைகளை, வேதியரின் அரண்களை, ஆரியக் கலைக்கூடங்களை, கற்பனைக் கடவுளருக்காகக் கட்டுப்பட்டுள்ள கோட்டங்களை, அந்தப் பெயர் கூறிவாழும் கபடர்களின் குகைளகைத் திராவிட நாடு தனது சக்திக்கேற்ப அளவேனும் தாக்கித் தகர்க்க வேண்டும் என்று ஆசைப்படுகிறது. அந்தச் சக்தியை அதிகப்படுத்தும் பொறுப்பும் நிலையும் உம்முடையது. நாம், நமது குறிக்கோளைக் கூறினோம், நம்மை வேலை வாங்கும் பொறுப்பு உம்முடையது பணித்திடுக.

முடியுமா? நம்முன் காணப்படும் மாபெரும் ஆநீதியை அழிக்க முடியுமா? என்று கேட்கத் தோன்றும், நாம் எண்ணியதுண்டு, திண்ணமாக நம்புங்கள், முடியும்! காட்டரசனான சிங்கத்துக்குப் பக்கத்தில் கைத்துப்பாக்கியை வைத்துப் பாருங்கள் (ஓவியத்தில்) சிங்கத்தின் வலின் நுனியிலுள்ள கத்தை அளவு இருக்கும் கைத்துப்பாக்கி! கேலிச்சித்திரமாகத் தோன்றும் ஆனால், வல்லமையும் திறமையும் உடையவன் உபயோகித்தால், அந்தச் சிறு துப்பாக்கி சிங்கத்தை வீழ்த்தும், சிங்கத்தை மட்டுமல்ல, மற்ற பல துஷ்டமிருகங்களையும், பழைமைக்காட்டிலே, மதோன்மத்தரென உலவும் புராணப் புலிகளும், சனாதனச் சிங்கங்களும், கைத்துப்பாக்கி அளவான நமது பிரச்சார யந்திரத்தினால், நிச்சயமாகச் சாகடிக்கப்படும். இப்போதே கூட, அவை, தேசியத் தோட்டத்திலே பதுங்குமிடங்கள் தேடிக் கொண்டதால், நமது குறிக்கு அகப்படாமல் தப்பித்துக் கொண்டுள்ள. இன்னும் கொஞ்ச நாட்கள் மட்டுமே, இந்தப் பதுங்குமிடம் கிடைக்கும். பழைமைக்காடு அழிக்கப்படும் நாள் விரைந்து வந்து கொண்டே இருக்கிறது. திராவிட நாடு இந்த பணியில் மும்முரமாக வேலை செய்யும். உலகிலே, நடைபெற்ற புரட்சிகளை உங்கள் முன் தீட்டிக் காட்டும் வீரர் வரலாறுகளை விளம்பும், விஞ்ஞானிகளின் சேவையை எடுத்துரைக்கும், ஆரியம் புகா முன்னம் திராவிடர் வாழ்ந்த வகையைக்கூறும், இனித் திராவிடர்

விடுதலை பெறவேண்டியதன் அவசியத்தையும் அதற்கான அறப்போர் மார்க்கத்தையும் எடுத்துக்கூறும் திராவிட நாட்டிலே வெளிவரும், அச்சமற்ற கண்டனங்கள், தனி ஆட்கள்மீது கொண்ட குரோதத்தின் விளைவு அல்ல, வாலிப உள்ளத்திலே மூண்டெழும் தன்மானத் தீயின் பொறிகள்!

பத்திரிகையாளர் உலகிலே நமது பத்திரிகைகள் இடம் பெறா! எழுத்தாளர் உலகிலே, நமது "எழுத்தாளர்கள்" காணப்படமாட்டார்கள். அந்நிலை ஆச்சரியப்படக் கூடியதுமல்ல, அருவருக்குத் தக்கதுமல்ல, ஆயாசப்படக் காரணமுமில்லை. சுராஜ்மல் லல்லுபாய் கம்பெனியில் சம்மட்டிக்கு இடம் கிடைக்குமா? பளபளப்பும் ஜொலிப்பும் கொண்ட பத்திரிகை உலகிலே, பாசறைச் செய்திகளைத் தாங்கி வரும் நமது ஏடுகள் இடம் பெறத்தான் முடியாது. உங்கள் மனதிலே, அவை இடம் பெற்றுவிட்டால் போதும். அந்த மன்றத்தைவிட மதிப்பும் சக்தியும் வாய்ந்த இடம் வேறு இல்லை.

"திராவிட நாடு", அலங்கார ஆட்டைகள், ஆழகான படங்கள், சிங்காரக் காட்சிகள், சினிமா ரசங்கள், எழுத்தாளரின் எழிலோவியங்கள் எதுமற்றது. போருக்கான வாளுக்குப் பூவேலை இராதல்லவா! போகிகளின் கையிலே உள்ள செயினில் வைர இழைப்புத் தரப்படும். திராவிட நாடு போர்வாள்! அதனுயை ஆற்றல், கூர்மையைப் பொறுத்தது!

அன்பர்கள், ஆண்டு ஐந்தாகிறது, ஏன் இன்னும் திராவிட நாடு கொஞ்சம் மேனி மினுக்குடன் வரலாகாது! முடியாத காரியமா? என்று கேட்ட வண்ணம் உள்ளனர். அவர்களின் இவலையும் நாம் அடியோடு கவனியாமலிருக்கப் போவதில்லை. சிறிது சிறிதாக இதழின் தோற்றத்திலே, எழில் கூட்ட முயற்சிக்கிறோம். அச்சுப் பொறிக்கு, மின் உதவிகிட்டவில்லை. கேட்டிருக்கிறோம். கிடைத்ததும், காகித நிலைமையும், சரியானதும், கண்ணுக்குக் காட்சியாகவும் இருக்கும்படி, இதழைச் சித்தரிக்கிறோம். சூழ்நிலைகள் தெளிவுபடட்டும்.

திராவிட நாடு கனதனவான்களின் காணிக்கையோ, வியாபாரிகளின் விளம்பரப் பணமோ பெற்று வாழ்ந்து வரவில்லை. அன்பர்கள் தரும் ஆதரவினாலேயே வாழ்கிறது, வளர்கிறது, எனவேதான், மகிழ்ச்சியுடன் உமக்கு நன்றி கூறும் இந்நாளில், மறவாமல் உமது ஆதரவை அதிகப்படுத்துக என்று கேட்டுக் கொள்கிறோம். கணக்குப் புத்தகம், கவலைக்கேற்ற சித்திரமாகத்தான் இதுபோதும் இருக்கிறது. சிறிதளவு அக்கரையை அதிகப்படுத்தினால் சீராக முடியும் நிலைமை செய்க.

கருத்துள்ள கவிதைகள், காலத்தைக் காட்டும் கட்டுரைகள், சிந்தனைக்குரிய சிறுகதைகள், ஓவியங்கள் ஆகியவற்றைத் தீட்டி அனுப்புங்கள், நாடு மீள்வும், கேடு தீரவும் நாமினி இலங்கி நனிவாழவும்!

விடுதலை வீரர்களான நமது தோழர்கள் நெடுஞ்செழியன், செழியன், அன்பழகன், வேதரத்னம், வேலன், புலவர் மாணிக்கம் ஆகிய அன்பர்களின் எழுச்சிமிக்க கட்டுரைகள், நமக்குச் சீமான்கள் தரக்கூடிய செக்குகளை விட அதிகமான ஆனந்தத்தை அளிப்பன. அவர்களுக்கெல்லாம் நமது நன்றி.

புரட்சிக் கவிஞர், புதுவைச்சிவம், மற்றும் எண்ணற்ற புதுக்கவிதையாளர்கள், அடிக்கடி தந்துதவும், கவிதைகள் நமக்கு மாளிகைவாசிகள் தரக்கூடிய பணத்தை விட மகிழ்வூட்டுவன. அவர்களுக்கு, நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

கைவல்யம் அவர்களின் கருத்தோவியங்ள், நமக்குக் கிடைத்தற்கரிய கருவூலங்கள். தளர்ந்த உடல், முதிர்ந்த பருவம், ஆனால் ஆர்வம் கொழுந்துவிட்டு ஏரிந்தவண்ணம் இருக்கும் அவ்வீரர், திராவிடநாட்டுக்குச் செய்துவரும் பேருதவிக்கு எமது மனமுவந்த நன்றி உரித்தாதுக.

ஏஜெண்டுகள் அனைவரும் இயக்கத் தோழர்கள், அவர்கள் ஆற்றும் பணியும் காட்டும் எக்கமும், எமக்களிக்கும் உற்சாகமும், போற்றத்தக்கன, எமது நன்றிஅவர்கட்கு,

பொருளாலும், பிறவற்றாலும், திராவிட நாடு வளர உதவிய அன்பர்கட்கெல்லாம் நமது நன்றியறிதலைக் கூறிக்கொண்டு, நாலு ஆண்டுகளாக நாம் ஆற்றிய தொண்டினை, மேலும் திறம்பட நடத்த, இந்த ஐந்தாம் ஆண்டினைத் துவக்குகிறோம் என்று கூறி, இந்த இதழினை உமக்குத் தருகிறோம், உவகையுடன்.

(திராவிடநாடு - 21-4-46)

# கல்கத்தாவில் சமூக சீர்திருத்த இயக்கம்!

தீண்டாமை, மதுபானம் முதலியவற்றை ஒழிக்கவும், எதிர் ஜாமீன் முறையை ஒழித்து விதவா விவாகத்தை ஆதரிக்கவும் கூட்டுறவு முறைகள், கூட்டு விவசாயம், கூட்டுக் குடிசைத் தொழில் முதலியவற்றை வளர்க்கவும் சுயதேவை பூர்த்தி முறையை அமல் நடத்தவும் டாக்டர் பி.சி.ராய் தலைமையில் கல்கத்தாவில் சமூக வகுப்புச் சீர்திருத்த இயக்கம் ஒன்று தொடங்கப்பட்டுள்ளது.

வங்கத்தில் பிரம்ம சமாஜம் தோன்றிய நாளிலிருந்து சீர்திருத்த ஆர்வம் இருந்தே வந்தது. நாட்டு விடுதலைப் போராட்டம் காரணமாக, இந்தச் சீர்திருத்த இயக்க வேகம் குறைந்து போயிற்று. சமூகப் பிரச்சனைகள் கவனிக்கப்படாது போய்விடவே, ஊழல்கள் தாண்டவமாடவும் உலுத்தரின் கோட்பாடுகள் தலைதூக்கவுமாயின. இந்தக் குறைபாட்டை உணர்ந்து, சமூக சீர்திருத்தத்தைக் கவனிக்க ஒரு இயக்கம் தோன்றியிருப்பது. மகிழ்ச்சிக்குரிய செய்தி, இதனை நாம் வரவேற்பதுடன் கடந்த 25 ஆண்டுகளாக, சமூக சீர்திருத்தத் துறையிலே அஞ்சாது பணிபுரிந்துவரும், சுயமரியாதை இயக்கத்துக்கும், வங்க, சமூக சீர்திருத்த இயக்கத்துக்கும் தொடர்பு ஏற்படும் என்று நம்புகிறோம்.

(திராவிட நாடு - 28-4-46)

# கா. சுப்பிரமணிய பிள்ளை

இரு மொழிகளிலும் வல்லவர்

பல்கலைக் கழகப் புல்வர் தோழர் கா.சுப்பிரமணியம் எம்.ஏ., எம்.எல். அவர்களின் மறைவால் வருந்தாத தமிழ் மக்கள் ஒருவரும் இரார் என்பது எனது துணிவு. அவர் அறிஞர்க்கு ஆசிரியராகவும், புலவர்களுக்குத் தலைவராகவும், தன்னுணர்வாளர்களுக்கு அன்பராகவும் இருந்த காரணத்தால்!

ஆங்கிலம், தமிழ் ஆகிய இரு மொழிகளையும் துறைபோகக் கற்ற, இரு மொழிகளிலும் எம்.ஏ. பட்டம் பெற்றவர். சட்டக் கல்வியைச் சரிவரக் கற்றுத் தமிழ் மக்களுள் முதல் முதலாக எம்.எல். பட்டம் பெற்ற பேரறிவுப் பெருமையும் இவருக்கு உரியது. இவருடைய அறிவாற்றல் இவரைச் சட்டக் கல்லூரியின் பேராசிரியர் ஆக்கியதுடன், தாகூர் சட்ட விரிவுரையாளர் பட்டத்தையும், பதினாயிரம் வெண் பொற்காசுகளைப் பரிசாகவும் பெறச் செய்தது.

மாணவர்களுக்குத் தமிழறிவை ஊட்டியவர்அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் இரு தடவைகளில் பேராசிரியராக அமர்ந்து மாணவர்களுக்குத் தமிழறிவை ஊட்டியவர். இவருக்கிருந்த சட்டக் கல்லூரிப் போசிரியப் பதவிக்கு ஏற்பட்ட எதிர்பாராத முற்றுப்புள்ளி நிகழ்ந்திராவிட்டால், இவரது அறிவாற்றல் உயர்நீதி மன்றத் தலைவரின் பதவிக்கும் மேற்பட்ட நிலையை அடையச் செய்திருக்கும்.

சட்டக் கல்லூரியின் தலைவர் பதவிக்குத் தகுதியானவர்சட்டக் கல்லூரிக்கு ஒரு நிலையான தலைவர் இருத்தல் நலம் என்றும், அதற்குத் தோழர் கா. சுப்பிரமணியம் அவர்களே தகுதி வாய்ந்தவர் என்றும் பேசப்பட்டபோது, அந்த நோக்கம் அவ்வளவு இன்றியமையாதது அல்ல என அப்போது சட்டக் கல்லூரியில் இருந்த பலர் கருத்து வெளியிட்டு அவ்வப்போது ஒருவரைத் தலைவராக்குவதே

நல்லதென்ற முடிவுக்கு வந்ததால், தோழர் கா.சு. அவர்கள் சட்டக் கல்லூரியினின்றும் விலக வேண்டியவரானார்.

சாதிப் பித்தத்தைத் தெளிய வைத்தவர்.

தோழர் கா.சு. அவர்கள் சாதிப்பூசல் ஒழிய வேண்டும் என்பதிலும் கருத்துடையவராய் இருந்தார் என்பதற்கும் ஒரு நிகழ்ச்சியை எடுத்துக் காட்டுகிறேன்.

தோழர் கா.சு. அவர்கள் வீட்டுக்கு, ஒரு நாள் சைவர் ஒருவர் வந்தார். சாப்பாடு நடந்தபோது அங்கிருந்த மற்றொரு சாதிக்காரர் தாம் சாப்பிடுவதைப் பார்க்கக் கூடாது என்றார். அதற்குத் தோழர் கா.சு. அவர்கள், “அந்த வேற்றுச் சாதிக்காரன் சோற்றைப் பார்த்தால் அதை யாரும் மறுப்பதில்லை. தங்களுடன் பேசினால் அதற்கும் தடையில்லை. ஆனால், தங்களையும் சோற்றையும் சேர்த்துப் பார்த்துவிட்டால் மட்டும் எங்கிருந்து தீட்டு வந்து விடும்?” என்று கேட்டார். வந்த சைவர் மனம் வெந்து, பதில் சொல்ல முடியாது திகைத்து விட்டார்.

சீர்திருத்தச் செம்மல்தோழர் கா.சு. அவர்கள் கலப்பு மணமே நாட்டு முன்னேற்றத்திற்கு நல்வழி என்றும், கைம்பெண் மறுமணம் செய்துகொள்வதில் தடை இருக்கக்கூடாது என்றும், ஆண்களைப் போலவே பெண்களுக்கும் சொத்து முதலான எல்லா வகையான உரிமைகளும் வழங்கப்பட வேண்டும் என்றும், கோவில்களிலும் மடங்களிலும் வறிதே முடங்கிக் கிடக்கும் பெருந்தொகைப் பொருள்களையெல்லாம் முடியுமானால் சட்ட வாயிலாகவேனும் எடுத்து, ஏழைகளின் கல்வி நலனுக்காகப் பயன்படுத்த வேண்டும் என்றும் பல முறைகளில் சொல்லியும் எழுதியும் வந்திருக்கிறார்.

அவரால் அளவுகடந்த பயன்களைப் பெற்ற சைவ சித்தாந்த உலகம், அவரின் வாழ்நாட்களை வறுமையாலும், அது காரணமாக ஏற்பட்ட நோயாலுமே கழித்து மறையும்படி செய்துவிட்டது என்பதையும் இங்குக் குறிப்பிடாமல் இருக்க முடியவில்லை.

சைவமாம் கடலில் நீந்திச் செல்லும்பொழுது, எதிரே வந்த சில சீர்திருத்தமாம் 'பொற்றுரும்புகளை' எம்மிடம் வீசி எறிந்துவிட்டு, மீண்டும் அச்சைவக் கடலிலேயே நீந்திச் சென்றவரை - சைவ உலகம் கைவிட்டது என்றால், அது பெரிதும் வருந்தக் கூடிய ஒரு நிகழ்ச்சியாகும்.

(திராவிடநாடு - 20.5.1946)

# அவருடைய இலட்சியம்!

“பாம்புகளுடனும் தேள்களுடனும் பயமில்லாமல் விளையாட வேண்டுமென்பதே என்னுடைய இலட்சியம். ஆனால் இந்த நாள்வரை அது வெறும் ஆசையாக மட்டுமே இருந்து வருகிறது. அது நிறைவேறுமோ நிறைவேறாதோ, அப்படி நிறைவேறுவதாய் இருந்தாலும்எ ப்பொழுது நிறைவேறுமோ அறியேன்”

இந்த வாசகத்தைப் படித்த உடனே, இப்படி - யார் சொல்லியிருக்கக்கூடும்? ஒரு பாம்பாட்டியோ, ÷ள்பருந்து விற்பவனோ தான் சொல்லியிருப்பான் என்று நீங்கள் ஒருக்கால் நினைக்கலாம். பாம்பாட்டி தானே பாம்போடு விளையாடுகிறான்; தேள்மருந்துவிற்பவன்தானே தேளைத்தன் உடம்பில் உலாவவிட்டு விளையாடுகிறான்; இதைக் கூறுவதற்கு ஒருதலையங்கம் எழுதுவதா என்று நீங்கள் நினைக்கலாம். நீங்கள் நினைப்பது போலவேதான், நாமும் இதுவரை நினைத்திருந்தோம், பாம்புடனும் தேளுடனும் விளையாடுபவர்கள் பாம்பாட்டியும் தேள்கடி மருந்து விற்பவனும்தான் என்று.

ஆனால், இப்போது பாம்புகளுடனும் தேள்களுடனும் விளையாடுவதை ஒருவர் தன்னுடைய இலட்சியமாகக் கொண்டிருக்கிறார். ‘இலட்சியம்’ என்பது ஒருவனுடைய வாழ்க்கையின் குறிக்கோள்; அதாவது, ஒருவன் தன்னுடைய வாழ்நாளில், தனக்காகவோ அன்றிப் பிறருக்காகவோ செய்ய வேண்டுமென்று எண்ணுகின்ற காரியங்கள் பலவற்றுள், முக்கியமானதாகவும் இன்றியமையாததாகவும் கருதப்படும் காரியத்திற்கே, ‘இது ஒன்றுதான் என்னுடைய வாழபுக்கையின் இலட்சியம் அல்லது குறிக்கோள்’ என்று சொல்லப்படுவது. இந்த இலட்சியம் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமாக அவருக்கும். அவர்களின் வாழ்க்கையின் அமைப்பைப் பொறுத்து இலட்சியங்களும் வெவ்வேறு விதமாக அமையும். பாடகனுக்குப் பாடுவதே அவனுடைய வாழ்க்கையின் இலட்சியம். பணக்காரனுக்கு மேலும் மேலும் பணம் திரட்ட வேண்டுமென்பதே இலட்சியமாக

இருக்கும். திருடன், திருட்டுத் தொழிலையே தன்னுடைய இலட்சியமாகக் கொள்வான். இப்படியே ஒவ்வொருவரும் தங்கள் வாழ்க்கைத் தரத்தை ஒவ்வொரு இலட்சியத்தை அடிப்படையாகக் கொண்டே நடத்திச் செல்வர். வாழ்க்கையில் மேற்கொள்ளப் படும் இலட்சியங்களைத் தமக்காக மட்டுமு“ மேற்கொள்பவர் களும், தமக்கும் பிறர்க்குமாக மேற்கொள்பவர்களும்; தமக்கில்லாவிட்டாலும், தாம் மேற்கொள்ளும் இலட்சியம் பிறருக்கும் பயன்பட்டால்போதும் என்று மேற்கொள்பவர்களும் என்பதாகப் பலமுறைகள் உண்டு.

ஆனால் இங்கே பேசப்படும் இலட்சியம், அதனை மேற்கொள்பவருக்கோ அன்றிப் பிறருக்கோ பயன்படாதது. தனக்கும் பயன்படாது; அதனால் பிறருக்கும் பயன் இல்லை என்ற ஒரு இலட்சியத்தை பாம்புடனும் தேளுடனும் விளையாடுவதை) மேற்கொண்டுள்ளவர் யார் என்பதை நாம் சொன்னால் நீங்கள் நம்ப மாட்டீர்கள்; “அவரா? அவர் ஒருபோதும் இப்படிச் சொல்லியிருக்க மாட்டார்! இதுவெறும் பொய்!” என்றுதான் சொல்வீர்கள். பேரைச் சொன்னால் நீங்கள் திகைத்துப் போவீர்கள். எனவே நாம்பேரைச் சொல்லவிரும்ப வில்லை. இவ்வாரத்தில் வெளியிடப்பட்ட “அரிஜன்” பத்திரிகையைப் புரட்டிப்பாருங்கள். அதில் ‘அஹிம்சையின் தாத்பர்யம்” என்று ஒருகட்டுரை காணணப்படும். அந்தக்கட்டுரையை எழுதியவர் தான், தன்னுடைய இலட்சியம் பாம்புகளுடனும் தேள்களுடனும் விளையாடுவது என்று குறிப்பிட்டிருக்கிறார். அதைப்படித்தபின், அதை எழுதியவர் யார் என்பதையும், அவர் ஏன் பாம்புகளுடனும் தேள்களுடனும் விளையாட விரும்புகிறார்? அதனால் அவருக்கோ அன்றிப்பிறருக்கோ ஏற்படும் பயன் என்ன. இந்த இலட்சியத்தை அவர் ஏன் மேற்கொண்டார்? இந்த லட்சியம் ‘இராமநாமம்’ கைகூடினால் தான் நிறைவேறும் என்றுகூடஅந்தக் கட்டுரையில் எழுதியிருக்கிறாரே! இதன்மகத்வம் யாதோ? என்பனவற்றையும் யோசித்துப் பாருங்கள். யோசனைக்கும் அகப்படாவிட்டால் உடனே வார்தாவுக்கு எழுதுங்கள்

# சுதேசி சுரண்டல் யந்திரம்!

“பணக்காரன் கொழுத்த பணகாரானாகிறான். ஏழை, பரம ஏழையாகிறான். பஞ்சமும் பசியும் நோயும் தாண்டவமாடுகிறது.”

என்று சென்ற கிழமை காந்தியார் தமது பிரார்த்தனைக் கூட்டத்திலே கூறினார். உண்மையான நிலைமை இந்தநிலை, “சாத்தானின் சேட்டை” என்றார். நமக்குச் சாத்தான் தெரியாது, ஆனால், இந்த நிலைச் சேட்டை ஆபத்தான சேட்டை என்பதை உணர்கிறோம். இதுபோக, இந்நிலை மாறா என்னவழி கூறினார் காந்தியார்? இதற்கு முன், “மகரிஷிகளும் மகாத்மாக்களும், ஆழ்வாராதிகளும் நாயன்மார்களும் சித்தர்களும் ஜீவன்முக்தர்களும்” சொன்ன அதே வழியைத்தான் அவரும் சொன்னார், அதாவது “ராமநாமத்தை ஜெபியுங்கள்” என்றார்! ராமநாத்தின் மகிமையினாலேயே பணக்காரன், ஏழை என்ற வித்யாசம் நீங்கும், பஞ்சமும் பிணியும் போகும் என்று கூறுகிறார் ராம ராஜ்யத்திலேயே, ஓடம் ஓட்டி ஜீவித்த “குகன்” ஒரு புறத்திலும் ஜாதகம் கணித்துக் கொடுத்து அரண்மனையில் வசித்துவந்த வசிஷ்டர், மற்றோர் புறத்திலும் வாழ்ந்தனர், என்பதனையும், உல்லாச புருஷர்கள் ஒருபுறமும் உழவர் கூட்டம் மற்றோர் புறமும் வாழ்ந்திருந்தது என்பதும் வால்மீகி, கம்பர், இருவர் தீட்டிய இராமாயணத்திலிருந்தும் தெரிந்து கொள்ளலாம். அவ்விதமிருக்க, “ராமநாமம்” பணக்காரர் - ஏழை என்னும் சமூகப் பேதத்தையும், அதனால் விளையக்கூடிய வேதனைகளையும் நீக்கும்படி அது சாத்தியமாகும்? கேட்கப்படாது! மகாத் மாக்களின் வாசகத்தைப் சந்தேகிப்பதா மகா பாபமேன்னோ!!

ஏழை, பணக்காரன் என்ற பேதம் இருப்பதும், மறைவரும் மாற்றப்படுவதும் ஒருபுறம் இருக்கட்டும், பணக்காரர்களாகச் சிலரே, இருப்பது, தேசத்தை மட்டுமல்ல, தேசிய இயக்கத்தையே கெடுத்துவிடும் என்ற கருத்தைக் கவனிப்போம். கவனிக்கும்படி, நண்பர் காமராஜரின் பேச்சு தூண்டுகிறது.

ஜூன் முதல் தேதி ஆம்பாசமுத்திரத்தில் கூடிய அரசியல் மாநாட்டிலே பேசும்போது, நண்பர் காமராஜர், "காங்கிரஸ் ஏழைகமக்களின் ஸ்தாபனம், அவர்களின் நன்மைக்காகப் பாடுபடுவதே அதன் இலட்சியமாகும். காங்கிரஸ் இலட்சியத்தில் அனுதாபம் காட்டி ஸ்தாபனத்தில் சேர்ந்து கொள்ளும் மனப்பான்மை சமீபகாலத்தில் பணக்காரர்களிடம் அதிகமாகக் காணப்படுகிறது. காங்கிரசில் செல்வாக்கான பதவிகளைக் கைப்பற்றிக் கொள்ளத் திட்டம் போட்டு அவர்கள்ம வேலை செய்கிறார்கள். கடந்த 25 வருஷங்களாகக் காங்கிரஸ் ஊழியர்கள் தியாகம் செய்தது காரணமாகக் கிடைக்கப்போகும் பலனைத் தாங்கள் அனுபவிக்க வேண்டும் என்னும் ஆசையே இந்த முயற்சியின் அடிப்படையான காரணமாகும். பணக்காரர்களின் இந்த எண்ணம் நிறைவேறாதபடி பார்த்துக் கொள்ளவேண்டியது காங்கிரஸ்காரர்கள் கடமை என்று குறிப்பிட்டிருக்கிறார்.

எந்த நாட்டிலும், ஏற்படும் இந்த ஆபத்தை நண்பர் காமராஜர் உணரத் தொடங்கியது கண்டு மகிழ்கிறோம். பெரியாரின் இயக்கத்தினை நாட்டு விடுதலைக்கே கேடானது என்ற கண்ணோடு நோக்காது இருந்திருந்தால் காமராஜருக்கு இந்தக் கருத்து, அதாவது பண ஆதிக்கக்காரர்கள், காங்கிரசில் புகுந்து கொண்டு அதன் மூலம் தமது செல்வாக்கைப் பலப்படுத்தி வருகிறார்கள் என்ற கருத்து, நெடுநாட்களுக்கு முன்பே தெரிந்திருக்க முடியும். காலதாமதமானாலும் காரியம் ஒன்றும் அதிகமாகக் கெட்டுவிடவில்லை, இப்போதாவது தெரிந்துகொண்டாரே என்றவரை திருப்தியே. ஆனால், இந்த ஆபத்û எப்படிப் போக்குவது?

"தேசிய ஸ்தாபனம்" இப்படிச் செல்வான்களின் பிடியில் சிக்கிவிடுகிறது என்றால், இதனைப் போக்கவும், காந்தியார், ராமநாமமே கற்கண்டு, என்றுகூறுவாரோ, என்னவோ நாமறியோம், மகாத்மாக்களின் மனமும் மார்க்கமும் மனைத்துக்குரியது, மக்களின் நடைமுறைக்கு அவை ஒட்டிவருவதில்லை. எனவே,

இந்தப் “புதிய ஆபத்து” காமராஜர் எடுத்துக்காட்டிய ஆபத்து, நீக்கப்பட என்ன வழி என்பதை, மக்கள் யோசிக்கவேண்டும். நாட்டு விடுதலை என்றால் நாட்டு மகக்ளின் நல்வாழ்வுக்காகப் போரிடுவது என்று பொருள் கொள்பவர்களே. உண்மையான தேசியவாதிகள். பிரிடடிஷ் ஏகாதிபத்தியப் பிடியிலே இந்தியா சிக்கி இருக்கிறது என்றால், அதன் பொருள் பிரிட்டனிலே உள்ள ஒவ்வொருவனும் இந்தியாவிலே ஆதிக்கம் செலுத்துகிறான் என்பதல்ல, பிரிட்டிஷ் குபேரர்கள் ஆதிக்கம் செலுத்துகிறார்கள் என்று பொருள் துவக்கத்திலே இந்தியாவை அடிமைப்படுத்தும் போராட்டங்களை வெள்ளையர் நடத்தியபோது வேலை வெட்டி கிடைக்காமல் வீதியில் திரிந்து வீணன் என்று கண்டிக்கப்பட்ட கிளைவ் போன்ற காசில்லாத காற்றாடிப்போக்கினர்தான் நுழைந்தனர். சொந்த நாட்டைவிட்டு, நெடுந்தூரம் கப்பலில் பயணம் செய்து, ஊர்பேர் தெரியாதவர்களின் நாட்டிலே வேலைசெய்வது என்றால், மாளிகைவாசிகளா வருவார்கள்! பிரிட்டனிலே பிழைக்க வழியற்றவர்கள், தெருக்கோடிச் சண்டையில் தேர்ந்தவர்கள், ஆகியோரே வரமுடியும். அத்தகைய படையைத் துணைக்கு அழைத்துக்கொண்டு பண்டங்களையும் ஏற்றிக் கொண்டுதான் பரங்கிகள் நுழைந்தனர்.

பரந்த இந்தியப் பூபாகத்தில், இங்கே அதுபோது இருந்த இளித்தவாயர்ளின் உதவியால் நிலைத்தனர், பெரும்பொருள் திரட்டினர், திரட்டிய பொருளால் துரைமாராயினர், பிரிட்டனிலே திரும்பிச் சென்று, பிரபுக்களாயினர், பிரிட்டிஷ் அரசியலிலேயும் செல்வாக்குப் பெற்றனர், பிரிட்டனிலே இருந்த பரம்பரைப் பணக்காரர்கள் இவர்களைப் புதிய பணக்காரர் என்று முதலில் கேலி செய்தனர் என்றபோதிலும், நாளாவட்டத்திலே இவர்கள் பிரிட்டிஷ் அரசியல் வாழ்விலே செல்வாக்கான இடங்களைப் பிடித்துக்கொண்டு, ஆளும் வர்க்கமாயினர். அவர்களே பிறகு, “சாம்ராஜ்ய சிற்பிகள்” “ஏகாதி பத்தியக் காவலர்கள்”

என்று அழைக்கப்பட்டனர். அந்தக் கூட்டத்தினரின் ஆதிக்கத்தைத்தான், "ஏகாதிபத்தியம்" என்று பொதுப்பெயரால் அழைக்கிறோம். ஆலசிப் பார்த்தால், பிரிட்டிஷ் முதலாளிமார்களின் பிடியிலே "இந்தியா" சிக்கிக் கொண்டது என்றுதான் ஏற்படும்.

இந்தியாவின் வைசிராயாக இருந்த வின்லிதோ பிரபுவுக்கு, இப்போது என்ன வேலை? இம்பீரியல் கெமிகல் கம்பெனியிலே ஒரு டைரக்டர், தாவது உலகெங்கும் வியாபித்துள்ள மிக இலாபகரமான ஓர வியாபாரக் கம்பெனியிலே அவர் ஓர் பங்குதாரர், முக்கியஸ்தர், அது மட்டுமல்ல பெரிய பண்ணைக்குச் சொந்தக்காரர். ஆள்பவராக இங்கே வருபவர்கள் பெரும்பாலும், பிரிட்டிஷ் முதலாளி வர்க்கத்தவராக, அல்லது அதன் ஏஜெண்டாக இருப்பார், ஏகாதிபத்தியம், ஏகாதிபத்யம் என்று நாம் கண்டிப்பது, உண்மையிலே, சுரண்டிச் சுகபோகத்திலே புரளும் வர்க்கத்தின் ஆதிக்கத்தைத்தான்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் என்ற ஏற்பாடு, பிரிட்டனிலே, கடல் வியாபாரத்தால் பணக்காரர் களான ஒரு சிறு கூட்டத்தார், நமது நாட்டு அரசியலிலே ஆதிக்கம் தேடிக் கொண்டு, அதன் துணைக்கொண்டு, இந்தியா, போன்ற பரந்த, சிக்கல் நிறைந்த இடங்களிலே, நுழைந்து, ஏராளமான பணத்தை "முதல்" ஆகப்போட்டு மிகக்குறைந்த கூலி கொடுத்துப் பாட்டாளிகளை அமர்த்தி, அங்கே கிடைக்கும் இயற்கைச் செல்வத்தைச் சுரண்டுவது, அதனால் பெருத்த இலாபம் ஆடைவது, மூலப் பொருள்களை ஏற்றுமதி செய்து கொண்டுபோய், செய் பொருளை இங்கே அனுப்புவது, அதன்மூலம் ஏராளமான பணம் இலாபமாகப் பெறுவது என்பதுதான். இந்தச் சுரண்டல் யந்திரம் இப்போது, அதிக நாள் வேகமாக வேலை செய்ததால், தேய்ந்து போயிருக்கிறது. இந்த யந்திரம் தேய்வு அடைந்திருக்கும் அதே நேரத்தில் சுதேசிச் சுரண்டல் யந்திரம் அமைக்கப்பட்டு, வேலை செய்து வருகிறது. பிரிட்டிஷ் யந்திரத்தைப் பழுது பார்ப்பது, அல்லது புதிதாக்குவது என்பதைவிட,

ஏற்கெனவே தயாராக இருக்கும் சுதேசிச் சுரண்டல் யந்திரத்துக்குத் தேவையான, உதவி செய்து, பங்காளிகளாகிவிடுவது சுலபம் என்ற நிலையில், இன்று பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகள் உள்ளனர். ஆகவேதான், ஏகாதிபத்தியக்காரர்கள், புன்னகை புரிகிறார்கள், பேரம் பேசுகிறார்கள், ஜெய்ஹிந்து கூறுகிறார்கள். இந்திய ஒக்கியத்தை வற்புறுத்து கிறார்கள். தேச பக்தியின் அவசியத்தைக் கூட எடுத்து உபதேசிக்கிறார்கள்.

இரண்டு பெரிய போரிலே சிக்கிய பிரிட்டனின் பொருளாதார சக்தி நொறுங்கிப் போயிருக்கிறது. கடல் அரண் இருந்தால் மட்டுமே பிரிட்டன் தன் சுதந்திர வாழ்வைக் காப்பாற்றிக் கொள்ளமுடிந்தது. அரசியல் வாழ்வு காப்பாற்றப் பட்டதே யொழிய, பிரிட்டிஷ் பொருளாதார வாழ்வு நொறுங்கிவிட்டது. எனவே, இப்போது, பிரிட்டனால், முன்போல, ஏராளமான பணத்தை மூலதனமாக, இங்கேயோ, அல்லது வேறு இடங்களுக்கோ அனுப்பி, சுரண்டல் யந்திரம், அமைக்கமுடியாது, பிரிட்டனுக்குள்ள சக்தி குறைந்துவிட்டது. என்பது மட்டுமல்ல அதே சமயத்தில், இந்திய முதலாளித்துவம், புது முறுக்குடன் இருக்கிறது. பணவிஷயம், சுரண்டும் முறைக்குத் தேவையான மூளைச்சுறுசுறுப்பு ஆகியவற்றைப் பொறுத்த வரையிலும், சுதேச முதலாளித்துவம் பிரிட்டனிடமோ, வேறு வெளிநாட்டினிடமோ தயவு கோர வேண்டிய நிலைமையில் இல்லை. பிரிட்டனே, கடனாளி! பொருளாதாரத் துறையிலே நோயாளியுங்கூட. எனவே, இந்திய முதலாளித்து வத்துடன் கூட்டாளியாகிவிடத் துடிக்கிறது. இல்லையானால், அமெரிக்கக் கோடீஸ்வரர்கள், காத்துக் கொண்டிருக்கிறார்கள். தங்கள் வலையை வீச, இந்தியத் தேசிய இயக்கத்தைப் பணக்காரர்கள் என்பது, இந்தப் புதுக் கூட்டாளிமுறையின், வேலைத் திட்டமேயாகும். காமராஜர், குறிப்பிடும், நிலைமை, தமிழ் நாட்டை மட்டும பொறுத்ததல்ல “அகில இந்தியக் காங்கிரஸ்” என்று மொத்தத்திலே கவனிக்கபோனால், வடநாட்டு முதலாளிமார்களின்

பிடியிலே, அந்த அமைப்பு இருப்பதைக் காணலாம். ஆகவே, ஜாக்ரதையாக இருப்பது, எச்சரிக்கையாக இருப்பது, தியாகிகள், வீரர்கள் ஆகியோர்களால் வளர்க்கப்பட்ட காங்கிரசைப் பணக்காரர் கூட்டம் கைப்பற்றாமல் பார்த்துக் கொள்வது, என்று நண்பர் காமராஜர் விடுக்கும் யோசனை இருக்கிறதே. அது, தமிழ்நாட்டைப் பொறுத்த வரையில் வெற்றகரமாக, நடப்பதாகவே வைத்துக்கொள்வோம். அதனால் பலன் என்ன? வடநாட்டு முதலாளிமார்களிடம் காங்கிரசின் “சூத்திரக் கயிறு” இருக்கிறபோது, காங்கிரஸ் எப்படித் தியாகிகள், வீரர்கள், தொண்டர்கள் ஆகியோருக்காகப் பணிபுரியும் மகத்தான இயக்கமாக இருக்கமுடியும்?

பம்பாயிலே, தோழர் நிம்கர் என்பவர், பல நாட்களாகப் பட்டினி கிடக்கிறார். ஆலைத் தொழிலாளர்களின் சில குறைகள் போக்கப்பட வேண்டும் என்பதற்காக என்ன நடந்தது? காங்கிரஸ் தலைவர்களிலே பெரிய தலைகள் அப்படி ஒரு சம்பவம் நடப்பதாகவே கருத்திலே கொள்ளவில்லை. வைசிராய் மாளிகையின் ராஜதந்திரச் சூழலில் சிக்கிக் கொண்டுள்ளனர். இரண்டாம் வரிசைக்காரர்கள், ஒரு ஆசாமி பட்டினி கிடக்கிறார், அதுவும் சாகும் வரை பட்டினி இருக்கப்போகிறாராம், தன் சொந்தக் காரியத்துக்காக அல்ல, தொழிலாளர்களின் குறைகளைப் போக்கவே இப்பட்டினி துவக்கினராம் என்பதை அறிந்துள்ளனர். அறிந்து போக்கவே இப்பட்டினி துவக்கினராம். என்பதை அறிந்துள்ளனர், அறிந்து என்ன செய்தனர்? பட்டினி இருப்பதை நிறுத்திக்கொள்ளும்படி தோழர் நிம்கருக்கு யோசனை கூறினர்! “ஐயா! என்னைத் தொந்தரவு செய்யவேண்டாம். உங்கள் செல்வாக்கு முழுவதையும், மில் முதலாளிமார்களிடம் போய் உபயோகித்து ஏன் வேண்டுகோளுக்கு அவர்களைச் செவிசாய்க்கச் சொல்லுங்கள்” என்று தோழர் நிம்கர் கூறி அனுப்பிவிட்டார், என்ன நடந்தது பிறகு? ஆலை முதலாளிகளிடம் சென்றனரா காங்கிரஸ் தலைவர்கள்? இல்லை! ஏன்? முடியாது! ஆலை அரசர்கள், இவர்களின் பேச்சைக் கேட்கமாட்டார்கள் அவர்களின், “டெலிபோன்”

சத்தம் கேட்டால் சட்டமும் சட்டத்தைக் காப்பாற்றுவதற்காகச் சர்க்கார் வைத்திருக்கும் படைபலமும் பரிவாராதிகளும், ஓடோடி வந்து கைகட்டி வாய் பொத்தி நின்று சேவகம் செய்யும். அதுபோலவே, அந்த டெலிபோன் சத்தம் கேட்டதும், “தேசியத் தலைவர்கள்” விமான மார்க்கமாக விரைந்து வருவார், ஆஹிம்ஸையின் அவசியம், கட்டுப்பாட்டின் மேன்மை, தொழிலாளி முதலாளி ஒற்றுமையின் தன்மை, ஆகிம்சையின் அளவிலாத பெருமை ஆகியவற்றைப் பற்றி உபதேசிப்பர். காந்தியாரோ ராமநாமமே கற்கண்டு, அதுவே, ஏழையின் பொற்குண்டு என்று பாடுவார். ஜக், தோ, என்பார். உடனே, உரத்த குரலிலே, தொழிலாளர்களின் கோரிக்கைகளைப் பற்றி முழக்கமிட்ட தோழர்களெல்லாம் “ராம்தூன்” பாடுவார்கள். இந்த நிம்மதியான காட்சியை, குமாரி நிர்மலாவுக்குக் காட்டிக் கொண்டே, ஆலை அரசர் புதிய மோட்டாரில் போய்க் கொண்டிருப்பார். இதனைப் பத்திரிகைப் பிரச்சார பலத்தால் எவ்வளவு காலத்துக்கு மறைத்து வைத்தாலும், பயனில்லை உண்மை வெளிப்பட்டே தீரும்.

இந்த நிலைமையை மாற்ற காமராஜர், என்ன செய்ய உத்தேசிக்கிறார்! என்ன செய்ய முடியும்? தமிழ் நாட்டுத் தனவந்தர்கள், தமிழ்நாட்டுக் காங்கிரசைக் கைப்பற்றிவிட முடியாதபடி, கண்ணுங்கருத்துமாக இருந்து வெற்றி பெறுவதாகவே வைத்துக் கொள்வோம். அதனால், காங்கிரசின் தன்மையை வடநாட்டு நிலைமையை எப்படி மாற்றிவிட முடியும்! அதனை மாற்றா முன்பு, இங்கே பணக்காரரின் ஆதிக்கம் காங்கிரசிலே இல்லாதபடி பாதுகாத்துதான் பயன் என்ன? ஏழைகளின் ஸ்தாபனமாகத் தென்னாட்டுக் காங்கிரசும், பணக்காரர்களின் பதுங்குமிடமாக வடநாட்டுக் காங்கிரசும் இருந்தால், இரண்டும் ஒன்றோடொன்று பொருந்துமா? அந்த நிலையிலே, காங்கிரசின் மேலிடமாக குருபீடமாக வடநாடு இருக்கும்போது, முதலாளிகளின் குரலுக்குத்தானே வலுவிருக்கும்? இது பற்றி நண்பர் யோசித்தாரா? யோசிப்பார்? யோசிக்கவிடுவார்களா?

பிரிட்டிஷ், ஏகாதிபத்தியத்தின் ஆரம்ப காலத்திலே எப்படி, பிரிட்டிஷ் முதலாளிமார்கள் மூலப் பொருள்களை இங்கிருந்து எடுத்துக் கொண்டுபோய், அதே பொருள்களைச் செய்பொருளாக்கி அதிக விலைக்கு இங்கே கொண்டு வந்து விற்று, இரட்டை இலாபம் பெற்றார்களோ அதே நிலைமையில் இப்போது வடநாட்டார் செய்து வருகிறார்கள். அதாவது, சுதேசிச் சுரண்டல் யந்திரம், வடநாட்டில் அமைக்கப் பட்டிருக்கிறது. அந்த யந்திரம் தென்னாட்டைச் சுரண்டுகிறது. பஞ்சு ஆலைகள், இரும்புத் தொழிற்சாலைகள் பல ரசாயனச் சாலைகள், மோட்டார் உற்பத்தி, மருந்து, முதலிய எண்ணற்ற பல துறைகளிலே, வடநாடு - குறிப்பாக பம்பாய், குஜராத் பகுதிகள் - மேனாடு கண்டு பொறமைப் படக்கூடிய அளவுக்கு முன்னேறிவிட்டது. ஒரு பிர்லாவுக்கும் டாட்டாவுக்கும் இருக்கும் செல்வாக்கைக் காமராஜர் கொஞ்சம் யோசித்துப் பார்க்கவேண்டும்.

அவர்கள் “இரட்டைக் குழல் துப்பாக்கிகள்” தேசியமும் அவர்கள் கூப்பிட்ட குரலுக்கு ஓடிவந்து குற்றேவல் புரியும் ஏகாதிபத்தியமும், அவர்களின் இச்சையை அறிந்து பூர்த்தி செய்ய எப்போதும் சித்தமாக இருக்கும். டாட்டா கம்பெனியின் அதிகாரியான சர். ஆர்தீசர்தலால், வைசிராய், நிர்வாக சபை அங்கத்தினரானார். பொது மக்களுக்கும் அவருக்கும் என்ன தொடர்பு? ஏதேனும் கட்சிக்குப் பிரதிநிதியா? இல்லை! டாட்டாவின் முத்திரை பொறிக்கப்பட்டவர். எனவே, அவருக்கு வார்தாவும் இடம் தருகிறது. வைசிராய் நிர்வாக சபையிலும் இடம் கிடைத்தது. ஆண்டு பல சிறையிலே கிடந்த பண்டித ஜவஹருக்கு, வைசிராய் நிர்வாக சபையிலே இருக்க அழைப்பு அனுப்பிய அதே வைசிராய், டாட்டா கம்பெனி டைரக்டர், தோழர் ஜான் மத்தாய்க்கும் அழைப்பு அனுப்பினார்! போஸ் படையினர் மீது தொடரப்பட்ட வழக்கைச் சர்க்கார் சார்பிலே இருந்து நடத்திய சர். ஏன்ஜினியருக்கும், வைசிராய் அழைப்பு அனுப்பியிருக்கிறார். அதாவது பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், சுதேசச் சுரண்டல் யந்திரத்தின் துணையை நாடுகிறது.

ஆக்வே, நாட்டை ஆளும், பொறுப்பை, சுதேச சுரண்டல்காரர்களிடம் ஒப்படைத்துவிடத் தயாராகிவிட்டனர். இடையே லீக் தோன்றியதால் ஏகாதிபத்தியம், தனது திட்டத்தை அங்கங்கே திருத்தவேண்டி நேரிட்டது. இல்லையானால், அதிகாரம் அவ்வளவும், பிர்லா-பஜாஜ்-டாட்டா, ஆச்சிடம் கொடுத்து விட்டு, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம், அந்த அச்சுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு, தன் இலாபக் கணக்கைச் சரிபார்த்துக் கொள்ளும் சத்காரியத்திலே உடுபட்டிருக்கும்! தெளிவாகத் தெரிகிறது. தீவிரத் தேசியவாதிகள் மட்டுமே இதனை உணர மறுக்கிறார்கள். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின வார்சு ஏற்பாடாகிவிட்டது, வார்சு பாத்தியத்தைப் பெற்ற பிரபுக்களே, காங்கிரசை மேலும் மேலும் தமது ஆதிக்கத்தின் கீழ் கொண்டு வரப்போகிறார்கள். அதற்கேற்ற பணபலம், பிரச்சார பலம் ஆமோகமாக இருக்கிறது. இந்தப் பலம் பொருந்திய பிடியிலிருந்து, காமராஜர் எப்படிக் காங்கிரசைக் காப்பாற்றுவார்! காந்தியாருக்கு இது கவனிக்கப்படவேண்டிய பிரச்சனையாகவே தோன்றாது! அவர் மராட்டியக் கதாசிரியர் காண்டோர்கார் கூறுவதுபோல "தரித்திர நாராயணனுக்கும் இலட்சுமி தேவிக்கும் திருமணம் நடத்தி வைக்கும் காரியத்திலே உடுபட்டிருக்கிறார். இப்படிக் கஷ்டத்தின் மேல் கஷ்டம் வருகிறதே என்றால், "ஐக், தோ, ராம், ராம், போல்!" என்று கூறப்போகிறார் அது போதுமா, பணக்காரர்கள் காங்கிரசைக் கைப்பற்றாதிருக்கும்படி பார்த்துக் கொள்ள?

இந்த நிலையிலேதான், காமராஜர் "திராவிடநாடு" என்ற நமது கிளர்ச்சியின் காரணத்தைக் கவனித்துப் பார்க்க வேண்டும். அந்தக் கிளர்ச்சியின் பொருள் என்ன? அரசியலிலே பதவிகள் பெறுவதா? இல்லை! முடியாது, கிடைத்தாலும் அனுபவிக்க ஆட்கள் கிடையாது!! தேர்தலுக்கான புது கோஷமா? இல்லை! தேர்தலுக்கே நிற்பதில்லை என்று தீர்மானம், பட்டம் பதவிகள் பெறுவதற்கான பசப்பு மொழியா? இல்லை! சேலத்திலே திராவிடர் கட்சியினர் பட்டம் பெறக்கூடாது, கௌரப்

பதவிகளிலே இருத்தலாகாது என்று தீர்மானித்தனர். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் தூண்டிவிட்டதால் கிளம்பிய பேச்சா? இல்லை! பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் புது அரசியல் திட்டம் தீட்டும் சமயத்திலே, திராவிடர் கழகத்துக்கு அழைப்பும் இல்லை.

இதிலே வெட்கம் என்ன, வெளிப் படையாகவே கூறுகிறோம். ஒருவிதமான வசதியும் இன்றியே திராவிடர் கழகம் "திராவிட நாடு திராவிடருக்கே" என்று கிளர்ச்சியைத் துவக்கி இருக்கிறது. ஏன்? புதியதோர் பொருளாதார ஏகாதிபத்தியம் தயாராகிவிட்டது. வடநாட்டிலே அந்த ஏகாதிபத்தியம், பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு "வார்சு" அதன் பிடியிலே, திராவிடம் சிக்கினால், அதன் செல்வம் வரண்டு போகும், மக்கள் கூலிகளாவர், மாளிகைகள் குடில்களாகும், என்று உண்மையிலேயே அஞ்சுவதாலேதான் திராவிடர் கழகத்துக்கு இந்த மூலாதாரப் பிரச்சனையே வெற்றிகரமாக நிறைவேற்றக்கூடிய "சக்தி" இருக்கிறதா இல்லையா என்பது வேறு பிரச்சனை. இந்தப் பிரச்சனைக்கு அர்த்தமும் அவசியமும் இருக்கிறதா இல்லையா என்பதைத்தான், காங்கிரசிலே உள்ள திராவிடத் தோழர்கள் சிந்தித்துப் பார்க்க வேண்டும். அரசியல் விதலையைத் திருப்பூர் குமரன் தலையிலே இருந்து ஒழுகிய இரத்தம், காசிராஜன் கண்ணிலே புரண்ட தண்ணீரும் காமராஜரின் குரலிலே ஏற்பட்ட புண்ணும், மற்றும் எண்ணற்ற வாலிபர்களின் உழைப்பும் வாங்கித் தருகிறது. அரசியல் விடுதலை என்றால், அரசியலை நாமே நடத்தும் உரிமை. இந்த உரிமையைப் பொருளாதாரப் பலம் படைத்தவர்கள் எளிதிலே கைப்பற்றுகிறார்கள். அதற்குக் காமராஜரின் பேச்சே போதுமான இதாரம். இந்த நிலை, தமிழ்நாட்டைவிட, வடநாட்டில் மிக அழுத்தமாகவும் ஆசைக்கமுடியாத தன்மையிலும் இருக்கிறது. அந்த வடநாட்டுக்குத்தான் அரசியல் அதிகாரத்தின் தலைமைப் பீடமும் கிடைக்கிறது. அந்த வடநாட்டுப் பிரபுக்கள், பிரிட்டிஷ் ஏகாதிபத்திய ஏஜெண்டுகளின் கூட்டாளிகளாக இருக்கிறார்கள்!

சங்கிலித் தொடரைக் கவனித்துக் கொண்டே போனால், மீண்டும் இலண்டன் தெரியும்!! இடையே இருந்து இணைப்பு வேலை நடத்துவது வடநாடு, திராவிடநாடு திராவிடருக்கே என்பது, இந்த இணைப்புக்கு ஒரு வெட்டு வேண்டுமென்கிறது. வெட்டிவிட்டால், திராவிடம் தனி, அதன் நிலைமையை வடநாட்டுச் சுதேசிச் சுரண்டல் யந்திரம் ஒன்றும் செய்யமுடியாது.

இந்தக் கிளர்ச்சியை, மடியவிட்டு விட்டாலோ, மங்கவிட்டு விட்டாலோ, என்னநேரிடும்? பிரிட்டிஷ்-பனியா கூட்டுச் சுரண்டலுக்குத் திராவிடம் பலியாகித் தீரவேண்டும். பிரிட்டிஷ்-பனியாக் கூட்டுச் சுரண்டலுக்கு, எல்லை, சிந்து, பஞ்சாப், ஆசாம், வங்காளம், பலியாகாது அவை AC என்று தனித்தனி வட்டாரங்களாகின்றன. திராவிடமே, பிரித்தானியம் பார்ப்பனியம், பனியா என்னும் பிடிகளிலே சிக்கியதோடு இனி B தொகுதியில் சேரும்படி, அதன் மீது அரசியல் திட்டத்தைத் திணிக்கிறார்கள். இதை B தொகுதியில் பம்பாய், ஐந்துமாகாணம், ஒரிசா, மத்ய மாகாணம், ப்ச்னனை, இவகைள் இருக்கவேண்டும் என்று நிர்ப்பந்திக்கப்படுகிறது. பம்பாயில்தான் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் வார்சு அமைக்கப்பட்டிருக்கிறது. அந்த வார்சுக்குத்தான் ஒக்யமாகாணத்தில் வளர்ந்துள்ள விடுதலை இயக்கம் வாழ்க்கைப்பட்டுவிட்டது. இந்தத் தொகுதியிலேதான் பிர்லா-பஜாஜ்-டாட்டா அச்சு இருக்கிறது. இஅது பிரம்மாண்டமாகத் சுதேசிச் சுரண்டல் யந்திரம், இதன் மூலதனமும், மூளை பலமும், பிரச்சாரபலமும், ஆமோகம், இந்த அச்சுதான் இன்று காங்கிரஸ் இயக்கத்தையே நடத்தி வைக்கிறது என்று கூறலாம். பிர்லா-பஜாஜ்-டாட்டா அச்சுக்குத் துணை அச்சுதான். பிரிட்டனில் உள்ள நப்பீல்டு போன்ற பிரபுக்களின் அச்சு! இந்தச் சுதேசி சுரண்டல் யந்திரம், திராவிடத்திலே உருள இடந்தருவதே, பி தொகுதி என்ற முறையிலே, சென்னையைப் பம்பாயுடன் தொகுப்பது! யுத்த காலத்திலே, பொருள்களுக்கும் இடங்களுக்கும் எதிரி மூலம் சேதம் ஏற்படாதிருப்பதற்காகவே பூச்சுவேலை செய்து மறைப்பார்கள். அது போல

திராவிடத்தைச் சுரண்டிக் கொண்டிருக்கும் இந்த அச்சுக்கு, மூவர்ணப் பூச்சு இருக்கிறது. அந்தப் பூச்சு கண்டு பூரித்து, இதுவரையில் அந்த ஆச்சைக் கொழுக்கவிட்டு விட்டனர் நமது காங்கிரஸ் தோழர்கள்.

இனிவரும் நாட்களிலே இந்த அச்சுக்கு, ஐந்து மாகாணங்களில் வேலை இராது, (எல்லை, பஞ்சாப் சிந்து, ஆசாம், வங்காளம்) எனவே அந்த அச்சு, அதிகரித்த பசியுடன் திராவிடத்தின் மீது பாயும்! திராவிடம் அந்த ஆச்சின் பாய்ச்சலைத் தாங்கும் சக்தியில் இல்லை! எனவேதான் இப்போதே விழித்துக்கொண்டாக வேண்டும் என்கிறோம். புது அரசியல் திட்டத்திதலே பி தொகுதியல் திராவிட நாடு சேர்க்கப்படக்கூடாது, தனித்தே இருக்கவேண்டும். மத்திய சர்க்காருடன் பாதுகாப்பு ஏற்பாட்டுக்காக, மற்றத் தொகுதிகள் தொடர்பு வைத்துக் கொள்வது போல் வைத்துக் கொள்ளலாம், பனியா அச்சுடன் சேருவது கூடாது, ஆபத்து என்பதைக் காங்கிரசிலுள்ள திராவிடர்கள் உணரவேண்டும்.

காமராஜர், “பணக்காரர்கள் காங்கிரசைப் பற்றாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும்” என்று சொன்னார். பணக்காரர்கள் காங்கிரசைக் கைப்பற்றுவது மட்டுமல்ல, பிர்லா-பஜாஜ்-டாட்டா ஆச்சின் மூலம், திராவிடத்தையே, பம்பாய்க்குப் பிடி இக்குவதற்கான வேலை நடந்து வருகிறது. இந்தப் புதிய பேராபத்தைத் தவிர்க்கத்தான், நாம், “திராவிடநாடு திராவிடருக்கே” என்று கூறுகிறோம். கேலி செய்யப்பட்டோம், கவலை இல்லை, இப்போதாவது நண்பர்கள் நமக்கு வர இருக்கும் புதிய ஆபத்தை உணர்ந்து (பி) தொகுதியிலே (திராவிட நாட) சென்னையை இணைக்கக்கூடாது என்று கிளர்ச்சி செய்தால் போதும்.

திராவிடர் கழகத் தலைவர் பெரியார், காங்கிரசில் சேரவும் தயார் என்று பல கூட்டங்களிலே பேசிவருகிறார். ஏன்? ஏகாதிபத்திய எதிர்ப்பு ஒழிப்பு என்பனவற்றிலே, அவருக்கோ அவரைப் பின்பற்றுபவர்களுக்கோ, காங்கிரஸ் கூறுவதைக் கேட்கக்கூ்து என்ற கருத்து கிடையாது. அந்த எதிர்ப்பு நடத்திவிட்டு இந்தத் தொகுப்பு

(பி) (பம்பாயுடன் தொகுப்பு) ஏற்பட்டுவிட்டால் என்ன செய்வது என்ற அச்சந்தான். திராவிடர் கழகத்தார் கொண்டிருந்தது. அந்த அச்சம் எவ்வளவு நியாயமானது என்பதை, இப்போது தொகுதி அரசியல் திட்டம் நிரூபித்துவிட்டது. திராவிடத்தைப் பிர்லா-பஜாஜ்-டாட்டா அச்சுடன் சேர்க்கிறார்கள்! தேர்க்காலிலே, திராவிடம்! பொருளாதாரத்திலே பிரிட்டனையும் மிஞ்சிய வட்டாரத்துக்த் திராவிடம் பலியிடப்படுகிறது. இந்த நிலமை நேரிடாதபடி தடுப்பதற்காகத்தான். திராவிடர் கழகம் என்ற தனிஸ்தாபனம் தேவைப்படுகிறதே யொழிய, வேறு காணவில்லை. இதனைத் திராவிடர் கழகத் தினசரி “விடுதலை” 17-6-46 தலையங்கத்திலே விளக்கமாக எடுத்துக் காட்டியிருக்கிறது.

குறைந்த அளவு வடநாட்டார் சம்பந்தமாவது அவர்களது ஆதிக்கமாவது இல்லாதிருக்குமானால், அதாவது வடநாட்டார் பிணைப்பிலிருந்து காங்கிரஸ் விடுபடுமானால் தாம் உடனே சேருவதில் இக்ஷேபனை இல்லை என்றும் பெரியார் சொல்லி வருகிறார்.

உண்மையில் காங்கிரசினிடம் அதன் அமைப்பு கொள்கை ஆகியவைகளைப் பற்றித்தான் எந்த உண்மைத் தொண்டனுக்கும் அதில் சேருவதற்கும் சேராததற்கும் காரணம் இருக்கலாமே ஒழிய, காங்கிரஸ் என்கின்ற பெயரிடம் யாருக்குத்தான் வெறுப்பு விரோதம் இருக்க முடியும். ஆகையால், காங்கிரசில் உ.வெ.ரா. சேருவதும், தொண்டாற்றுவதும் அது இந்த மாகாணத்தில் ஒரு சுதந்திர ஸ்தாபனமாய் வெளி மாகாணத்தான் ஆதிக்கமில்லாததாய் மத்திய காங்கிரஸ் ஸ்தாபனத்துடன் இணைந்து வேலை செய்யும் ஒரு தனி சுதந்திரமுடையதாய் இருப்பதைப் பொறுத்தும் திராவிடர் கழகம் முக்கிய கொள்கையை ஏற்றுக் கொள்வதைப் பொறுத்துமே ஒழிய மந்திர வேலைக்கோ தேசபக்த பட்டம் பெறவோ அல்ல, என்பதை வாசகர்கள் உணரவேண்டுகிறோம், என்று விடுதலை தீட்டியிருக்கிறது.

அகில இந்தியக் காங்கிரசுக்குக் கட்டுப்பட்ட நிலைமையில் வடநாட்டு ஆதிக்கம் கூடாது என்று பேசவோ, பி தொகுதியில் சென்னையச் சேர்க்கக் கூடாது என்று பேசவோ, சென்னை மாகாணக் காங்கிரசுக்கு அதிகாரம் இராது, பொருத்தமாகவும் இருக்க முடியாது. எனவேதான் பெரியார், காங்கிரசில் சேருவது என்றால், இந்த மாறுதல்கள் தேவை என்று கூறுகிறார்.

இப்போது உடனடியாகச் செய்யவேண்டிய முக்கியமான வேலை சென்னை மாகாணத்தைப் பி தொகுதியில் சேர்த்திருப்பதைக் கண்டிப்பாய்க் கண்டித்தாக வேண்டும். அந்தப் புது அடிமைத் தனை திராவிடத்தின் மீது பூட்டப்படாதபடி பார்த்துக் கொண்டாக வேண்டும்.

காமராஜர் இந்தக் கிளர்ச்சியைத் துவக்கினால், திராவிடர் கழகம், அதிலே முழுப்பங்கு எடுத்துக்கொள்ளத் தயாராகவே இருக்கிறது "பி" தொகுதியில் சேருவதால் உண்டாகக்கூடிய சாதக பாதகங்களைப் பரிசீலனை செய்ய, சென்னை மாகாணத்தைப் பொறுத்தமட்டிலே உள்ள எல்லாக் கட்சியினரும் கொண்ட ஓர் மாநாடு கூட்டப்பட்டால் பி தொகுதியிலே சென்னை இணைக்கப்படுவதால் கேடு என்பது விளக்கப்பட்டு ஒப்புக்கொள்ளப்படும் என்பதிலே நமக்குப் பூரண நம்பிக்கை இருக்கிறது. அந்த விளக்கம் ஏற்பட்ட பிறு சென்னை மாகாணக் காங்கிரஸ் சென்னை மாகாணம் "பி" தொகுதியில் அதாவது மார்வார் தொகுதியில் பிர்லா-பஜாஜ்-டாட்டா ஆச்சில் சேர்க்கப்படக்கூடாது என்ற கிளர்ச்சியைத் துவக்க முன்வந்தால் திராவிடர்கழகம் அந்தக் கிளர்ச்சியிலே இரண்டறக் கலக்கவும் அந்த நோக்கத்துடன், காங்கிரசிலேயே சேரவும் தயங்காது. பணக்காரர்கள் காங்கிரசைக் கைப்பற்றாதபடி பார்த்துக் கொள்ளவேண்டும் என்று பேசுவதிலே என்ன பிரயோஜனம்? தலைக்கு மேலே உட்காரப் பார்க்கும் சுதேச் சுரண்டல் யந்திரத்திலிருந்து தப்பிப் பிழைக்க என்ன வழி? இதனைக் காமராஜர் யோசித்துப் பார்க்க வேண்டும் - விரைவாக.

# காஸ்பேரி!

புத்தகசாலை குமாஸ்தாவாகா வாழ்க்கையை ஆரம்பித்துப் புகழ்பெற்ற உன்னதப் பதவியை அடைந்துள்ள ஸீனர் டி. காஸ்பேரி இத்தாலியில் சமீபத்தில் நடைபெற்ற தேர்தல்களின் விளைவாக, வாரம் ஒன்பது பவுன் சம்பளம் பெறும் பிரதம மந்திரியாக நியமிக்கப்பட்டார்.

ஸீனர் டி. காஸ்பேரி பிரம்மாண்டமான வாடிகன் புத்தகசாலையில் புத்தகவிபர ஜாபிதா தயாரிப்பு வேலையைச் செய்து தமது ஜீவனத்தை நடத்திவந்தார். அந்த வேலை முடிந்தபிறகும் இவர் பரம ஏழையாகவே இருந்தார். 1944இல் இத்தாலி சரணடைந்த் பிறகு அமைக்கப்பட்ட போனோமி மந்திரி சபையில் வெளிநாட்டு மந்திரியாக நியமிக்கப்பட்ட போது, நீலநிற உடுப்பு ஒன்று வாங்கிக் கொள்வதற்குத் தமக்குக் கொஞ்சம் முன் பணம் வேண்டுமென்று கேட்டதுதான் இவரது முதல் வேண்டுகோளாயிருந்தது. கண்ணியமாக அணிந்துகொள்ளக்கூடிய உடுப்பு ஒன்றுகூட ஆவரிடம் அப்பொழுது இல்லை.

இத்தாலிய அரசியல் சர்வாதிகாரியாய் இருந்து வந்த முன்ஸோலினி 1926இல் இவரைக் கைது செய்தார். அதன் விளைவாக இரண்டு வருஷ சிறைத் தண்டனையை இவர் அனுபவிக்க நேர்ந்தது. விடுதலையானதும் இவர் வாடிகனுக்குப் போய்ச் சேர்ந்தார்.

மலைமீது ஏறுவதும், இலத்தின் காவியங்களிலிருந்து ஏதாவது மேற்கோள்கள் சொல்லிப் பத்திரிகைகாரர்களைத் திணர அடிப்பதுமே இவருக்கு மிகவும் பிடித்தமான பொழுதுபோக்குகள்.
(திராவிட நாடு 23.6.46)

குற்றவாளி - கூண்டில் இல்லை!

பொன்மலையில் இரயில்வே தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்வதாக உள்ளனர்.

பல நகரசபைகளிலே, தோட்டி வேலை செய்பவர்கள் வேலைநிறுத்தம் செய்கின்றனர்.

“சர்க்கார் சிப்பந்திகள்” வேலை நிறுத்தம் செய்யக் கிளம்புகின்றனர்.

அல்லலைக் தாங்க மாட்டாமல், பள்ளிக்கூட ஆசிரியர்கள் வேலை நிறுத்தம் செய்ய முடிவு செய்துள்ளனர்.

பல ஆலைகளிலே இதே நிலை.

போக்குவரத்து ஸ்தாபனங்களிலே இதே நிலை.

கிராô்திகாரிகளின் குறைகளும் அவர்களை அதே நிலைக்குக் கொண்டுவந்து விடுகிறது. வயலிலே பாடுபடும் உழவனும், கலப்பை மீது கண்ணீர் சிந்திச் சிந்திப் பார்த்துவிட்டு, இதே நிலைக்கு வருகிறான்.

இத்தனை வேலை நிறுத்தங்களும் விளையாட்டுக்கும் பொழுது போக்குமா நடத்தப் படுகின்றன!
“பசியுடன் பாடுபடும் தபால்காரன்” என்று பாட்ஜ் அணிந்து கொண்டு தபால்காரர் சென்றனர்.

“குறைந்த சம்பளம் பெற்றுக் குமுறும் சர்க்கார் குமஸ்தாக்கள்” என்று சர்க்கார் சிப்பந்தி பாட்ஜ் அணிகிறார். இவை, விளையாட்டா? ஐழ்மையை மறைத்துக் காட்டவும் பசித்தாலும் எப்படி அதனை இலஜ்ஜையின்றி வெளியே எடுத்துச் செல்வது என்று எண்ணி மறைத்தும் தமது வறுமையைக் கூறி, ஏன் மற்றவர்களுக்குச் சங்கடத்தை ஏற்படுத்தவேண்டும் என்ற பெருந்தன்மையுடனும் நடந்து வந்தவர்கள் இன்று.
எங்கள் வாழ்வு குறை உடையது
போதுமான வருமானம் இல்லை.
பசியார உணவுக்கு வழி இல்லை
வறுமையால் வாடுகிறோம்.

என்று பகிரங்கமாகக் கூறுகிறார்கள். அவர்கள் எவ்வளவு குமுறிக் குமுறியிருந்து விட்டுக் கூறத் தொடங்கினர்

என்பதை எண்ணிப் பார்க்கும் எவரும், அவர்களால்பால் பரிவு காட்டாமலிருக்க முடியாது.

குறை கூறிக்கொண்டே இருந்தவர்கள், புதிதாக ஒருகுறை கூறினர், என்பது அல்ல இப்போது உள்ள நிலைமை.

எவ்வளவு குறைகளையும் தாங்கும் சக்தி பெற்றிருந்தவர்கள், அந்தத் தாங்கும் சக்தி போய்விட்டதால், வெட்கத்தை விட்டு வெளியே சொல்லியாவது, நமது குறைகளைத் தீர்த்துக் கொள்ளலாம் என்றல்லவா, முன்வந்துள்ளனர். இவர்கள் மீதா சீறிவிழுவது? இவர்களின் நிலைமையை அறிந்து, பரிவு காட்டுபவர்களை எல்லாம், காங்கிரசின் எதிரிகள் என்று ஒரே, வாய்வீச்சினால் சாய்த்துவிடுவதா! காங்கிரசின் எதிரியார்? படுகிற பாட்டுக்கு ஏற்ற அளவு பணம் கேட்கிறர்வர்களை, சக்திக்கு ஏற்ற அளவு.

வேலைசெய்கிறோம் (சக்திக்கு மீறிய அளவுகூட) தேவைக்கு ற்ற அளவு வசதிகள் தரவேண்டும் என்று கேட்கிறவர்களை ஆதரிப்பவர்கள் அத்தனை பேரும், காங்கிரசின் எதிரிகள் என்றால், நாளாவட்டத்தில், மந்திரி சபை தவிர (பார்லிமெண்டரி காரியதரிசிகளைக் கூடச் சேர்த்துச் சொல்ல முடியாது) மற்றவர்கள் அத்தனை பேரும், காங்கிரஸ் எதிரிகள் பட்டிக்குத்தான், போய்ச் சேரவேண்டி நேரிடும், இது நியாயமுமல்ல, நல்லதுமல்ல!

இந்த மாகாணத்தில் 1,20,000 ஆசிரியர் உள்ளனர். இவர்களின் 60,000 ஆசிரியர்களுக்கு மேலாகவே, மாதம் 30 ரூபாய் சம்பளம் பெறுகிறார்கள். 40,000 ஆசிரியர்கள் 31 ரூபாயிலிருந்து 50 ரூபா வரை சம்பளமாகவும் 2000 ஆசிரியர்கள் 100 ரூபாயும் அதற்கு மேற்பட்ட தொகையும் பெறுகிறார்கள்.

இந்த நிலையில் உள்ள ஆசிரியர்களுக்கு "நீங்கள் புனிதமான தொழிலிலே உடுபட்டவர்கள், கேவலம் பணம் உங்கள் குறியாக இருக்கக் கூடாது. புண்ணிய காரியம், பிள்ளைகளுக்குக் கண்திறப்பது. எழுத்தறி வித்தவன் இறைவனாகும் என்று புகழ்மாலை சூட்டிவிடுகிறோம்.

புண்ணியகாரியத்திலே உடுபட்டுள்ள போதிலும் இவர்களுக்கும் பசி தாகம் ஏற்படுகிறது! குடும்பப் பொறுப்பு இருக்கிறது! ஆசிரியர்களிடம் தரப்படும் ரூபாய்க்கு ஆணா பதினாறுதான் கிடைக்கும். இந்நிலையில் 30 ரூபாய் சம்பளம் பெற்றுக்கொண்டு, எப்படி, 60,000 ஆசிரியர்கள் வாழ்வை நடத்த முடியும்? லோகல் போர்டு பள்ளிக்கூட ஆசிரியர்களின் சம்பள விகிதம் 1934-இம் வருஷம் ஏற்பட்டது. அதாவது ஆளவரிசி வரும் என்று மக்கள் கனவுகூடக் கண்டிருக்கமுடியாத நாளில், கள்ளமார்க்கெட், கொள்ளை இலாபம், வங்கப் பஞ்சம், கோதுமைச் சத்தும் ஆவுன்சு உணவும், என்ற சொற்கேளே நடமாடாத நாள்களிலே, போர்வாடைக்கு முன்பு ஏற்பட்ட சம்பள முறை.

1934-1946! எவ்வளவு மாறுதல்! எத்தணைப் புதுப்பிரச்சினைகள்! எவ்வளவு நெருக்கடிகள் வாழ்க்கைச் செலவு. இந்த 12 வருஷ காலத்திலே எவ்வளவு உயர்ந்துவிட்டது. 1934ல் சம்பள விகிதம் நிர்ணயித்தபோதே, "இது மிகக் குறைவு" என்றனர். 12 - ஆண்டுகளாக இதே சம்பளம். விலைவாசிகள் விஷம்போல் ஏறின! சம்பளம், "கல்லுப் பிள்ளையாராகவே" இருந்தது - இருக்கிறது. என்ன செய்வார்கள் ஆசிரியர்கள்? இவர்களைக் கிளர்ச்சி செய்யும்படி யார் தூண்ட வேண்டும்?

இங்கே மட்டுந்தானா ஆசிரியர்கள், சம்பள உயர்வுக்காகப் போரிடுகின்றனர். சென்னையை முந்திக் கொண்டது ஒக்கிய மாகாணம். அங்கு 40,000 ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள் பத்துப் பதினைந்து நாள்கள் வேலைநிறுத்தம் செய்து, பிறகு, குறைந்தது 25 ரூபாயாவது சம்பளம் தரப்படும் என்ற வரம்பெற்றனர் காங்கிரஸ் மந்திரியிடம். இங்கே பிரதம மந்திரி பிரகாசம், ஊர்வலமாகச் சென்று தமக்கு உற்ற குறையைக் கூறிய ஆசிரியர்களை, மனம் புண்படும்படிப் பேசினார் என்று பத்திரிகைகளிலே பார்த்தோம், ஒக்கிய மாகாணக் கல்வி மந்திரியும் ஆசிரியர்கள் மீது சீறித்தான் விழுந்தாராம்!

செகண்டரிகிரேட் ஆசிரியருக்கு, சர்க்கார் பள்ளிக்கூடமாக இருந்தால் மாதம் 30 ரூபாய், போர்டு பள்ளிக்கூடமானால் 24, சரக்கார் உதவிபெற்று நடத்தப்படும் பள்ளிக்கூடமானால் 18.

ஹையர்கிரேட் ஆசிரியருக்கு சர்க்கார் பள்ளியில் 23, போர்டு பள்ளியில் 20 சரக்கார் உதவிதரும் பள்ளிக்கூடம் 14 - ரூபாய் தருகிறது! (இதிலே 100க்கு 15 ரூபாய் மானேஜ்மெண்ட் செலவுக்குப் போய்விடும்)

இந்த நிலையிலே உள்ள ஆசிரியர்கள், ஊர் உலகம் அறியாதர்களல்லர்! இவர்களû யார் கிளப்பிவிட வேண்டும்? அதிகவேலை, போதுமான போஷாப்பு இல்லை! என்ன விளைவும் இதனால்? உடலைத் தேய்த்து உயிரைத் தேயவைக்கும் இருமல்! ஒட்டிய உடல்! குழிவிழுந்த கன்னம்! ஒளி இழந்த கண்கள்! கிழிந்த கோட்! வீட்டில் வேதனை! வெளியே நடமாடும்போது வெட்கம்! வகுப்பில் உட்காரும்போது அலுப்பு! அலுப்பினால் ஆத்திரம்! ஆத்திரத்தை ஓரளவுக்குக் குறைத்துக்கொள்ள, கொஞ்சம் பிரம்பு வீச்சு! - இதுதான் ஆசிரியர் நிலை - அறிவளிக்கும் பேருபகாரிய்ன பிழைப்பின் இலட்சணம். கூனிக் குமுறிக்கொண்டு தள்ளாடி நடந்து பள்ளிக்குச் செல்லும்போது, ஆசிரியர் பார்க்கிறார். போதையை மிரட்டும் பூஜாரி தன்னைவிட நன்றாக வாழ்வதை! திதி நடத்தும் வாத்தியார் திவ்யமாக வாழ்வதை இவரை, யார் கிளப்பிவிடவேண்டும்! ஒவ்வொர் இருமலும் அவரைக் கிளப்பிவிடுகிறது - காங்கிரசின் எதிரிகளா தூண்டவேண்டும்! இப்போது, ஆசிரியர்கள், இதழ்களில் பார்ப்பார்கள். சென்னை நகரத்தோட்டிகள், தினம் 2 ரூபாய் கூலிகேட்டு வேலை நிறுத்தம் செய்கிற செய்தியை யார் தூண்டிவிட வேண்டும்!

1934க்கும் 1946க்கும் இடையே, வாழ்க்கைச் செலவு பலப்பல மடங்கு அதிகரித்துவிட்டது என்று பொருளாதார நிபுணர்கள் கூறுகிறார்கள். ஆசிரியர்களின் சம்பளமோ 1934ல் இருந்த நிலைமையிலேதான்! இது நியாயமா?

முறையா? கல்வியை வளர்க்கும் வழியா? அறிவுக்கு அரணா?

1934ல் சர்க்கார் மக்களிடமிருந்து பெற்ற பணம் வரியாக, 14 கோடி. 1946ல் 48 கோடி ரூபாய் சர்க்காருக்கு மக்கள் தருகின்றனர். ஆனால் ஆசிரியர்களுக்குச் சர்க்கார், அந்த 1934ல் போட்ட சம்பளமேதான் தருகிறார்கள். என்றால், ஆசிரியர்களைக் கிளர்ச்சி செய்யும்படித் தூண்ட ஆள் வேறு வேண்டுமா என்று கேட்கிறோம்.

யார், கிளர்ச்சி செய்தாலும், வேறு யாரோ தூண்டிவிடுகிறார்கள் என்று சமாதானம் கூறுவது, நல்லதுமல்ல, நியாயமுமாகாது.

ஆலைத் தோழனா? இரயில்வே தொழிலாளியா? தபால் தோழரா? கிராமாதிகாரியா? ஆசிரியரா? தோட்டிமார்களா? யாராக இருந்தாலும் சரி, இவர்களெல்லாம். யாராலோ கிளப்பி விடப்படுகிறார்கள். யாரோ தூண்டிவிடுகிறார்கள். என்று கூறுவது பொறுத்தமற்ற சொத்தை வாதம், மட்டுமல்ல, முதலமைச்சர் (தம்மையும் அறியாமல்) நாடு பூராவிலும் பாட்டாளி உலகெங்கும், காங்கிரஸ் எதிரிகள் ஆதிக்கம் செலுத்துகிறார்கள் என்று, கூறுவதாக முடியும்! பாட்டாளி உலகு, காங்கிரசல்லாதாரிடம் இருக்குமானால் - பிரகாசம் மந்திரிசபையிலே இருள் நிச்சயம் ஏற்படும்! தூண்டி விடுகிறார்கள். வேண்டுமென்றே கிளப்பி விடுகிறார்கள் என்றே வைத்துக்கொள்வோம் வாதத்துக்காக என்ன செய்ய வேண்டும் மந்திரியார்? தூற்றியவர்களைத் தூற்றிவிட்டால் போதுமா? தூக்கிலிட்டு விட்டால் தொல்லை போய்விடுமா? நாட்டு மக்களிடையே குமுறல் இருக்குமட்டும் வேலை நிறுத்தம் நடந்தபடிதான் இருக்கும். பிரகாசம்காரு, தூண்டி விடுபவர்கள் வெட்கத்தால் தலையைத் தொங்க விட்டுக் கொள்ளும்படி, தொழிலாளர்களின் குறைகளைத் தீர்த்துவிட்டு, “யாராக இருந்தாலும் சரி, உங்கள் சாமர்த்தியத்தை எல்லாம் காட்டுங்கள். எங்கே ஒரு தொழிலாளர் தகறாரையாவது காட்டுங்கள் பார்க்கலாம்? உண்டாக்குங்கள் பார்க்கலாம்! முடியாது! நீங்கள்

தலைகீழாக நின்றாலும் அது நடவாது. ஏன் ஆட்சியிலே பாட்டாளி உலகு பரிபூரணத் திருப்தியுடன் வாழ்கிறது" என்று கூறுவதுதானே.

"சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டச் சர்க்கார் சகல சக்தியையும் உபயோகிக்கும்" என்கிறார் முதலமைச்சார். பூ! இதென்ன பிரதாபம்! சக்திகள் இருக்கும் இடத்திலே, யாரை உட்காரவைத்தாலும் சொல்லலாம் அதுபோல செய்யவும் முயலலாம்! இதைச் சொல்ல, செய்ய, போக்துரை போதுமே, காங்கிரஸ் மந்திரிசபை வேண்டாமே!

உண்மையிலேயே, தூண்டிவிட்டவர்கள், கிளப்பிவிட்டவர்கள் யார் என்று அறிய முதலமைச்சர் ஆவாக்கொண்டால், நாம், அந்தக் குற்றவாளிகளைக் காட்டத் தயாராக இருக்கிறோம். அவர்கள் நெடுந்தூரத்திலும் இல்லை!

"இப்போதுள்ள காலமாறுதலின் பயனாக, விலைவாசிகள் ஏறிவிட்டன. வாழ்க்கைச் செலவு அதிகமாகிவிட்டது. போருக்கு முன்பு 500 ரூபாய் சம்பாதித்துக் குடும்பம் நடத்தியவரால், அவர் தேசபக்தராக தேசியவீரராக, இருந்தாலும் இப்போது குறைந்தது 3 மடங்கு அதிகமாகப் பெற்றுதான், வாழ்க்கையை நடத்த முடியும்" என்று காங்கிரஸ் தலைவர்கள், சட்டசபையிலே தெளிவாகக் கூறிவிட்டனர். மந்திரிமார்கள், காரியதரிசிகள் மெம்பர்கள் ஆகியோர் இந்த "வாதத்தின்" துணைக்கொண்டு தத்தமது சம்பளத்தை அதிகப்படுத்திக் கொண்டனர்.

சொல், செயல், இரண்டின் மூலமாகவும், "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர்" "தன்னலம் மறுத்தோர்" இந்த நாள்களிலே சம்பளம் உயர்த்தினால் ஒழிய வாழ முடியாது என்பதை நாட்டுக்கு எடுத்துக் காட்டிவிட்டனர். "தூண்டுதல்" இதனைவிட வேறு வேண்டுமா? "உச்சி மீது வானிடந்து வீழுகின்ற போதிலும்" அச்சமில்லாத அரும்பெரும் தலைவர்களே, அரிசி ரூபாய்க்கு இரண்டுபடி தானே ஐயா! எப்படி, இந்தநாளில் நாங்கள் வாழமுடியும்,

ஆகவே சம்பளத்தை உயர்த்திக் கொள்கிறோம் என்று கூறிவிட்டனர். இவர்களே குற்றவாளிகள்! இதிலே நானுமல்லவா இருக்கிறேன் என்று பிரகாசம்காரு கேட்பார். “ஆஹா! பந்தலுகாருவும் இரக்கத்தான் செய்கிறார்!”

தாமாக முன்வந்து செய்திருக்க வேண்டியதைத் தொழிலாளர், தீயின் மத்தியில் நின்று கேட்டும் செய்ய மறுத்துப் பாட்டாளி உலகின் நிலையைக் குலைக்கிறார்கள் என்று குற்றம் சாட்டுகிறோம்.

தொல்லை பொறுக்க மாட்டாமல், பொமக்கள் சர்க்காரின் செவியில் ஏழையின் அழுகுரல் விழும் என்ற நம்பிக்கையுடன் பாட்டாளிகள் கிளர்ச்சி செய்வதை, யாரோ தூண்டிவிடுகிறார்கள், அவர்கள் காங்கிரஸ் விரோதிகள் என்று கூறி, மக்களின் கருத்தைத் தவறான பாதையிலேயே திருப்ப முயற்சிக்கிறார்கள் என்று குற்றம் சாட்டுகிறோம்.

ஏழைகள் தலையில் 3512 இலட்ச ரூபாய் வரியாகவும், பணக்காரர் மீது 548 இலட்சம் வரியும் ஏற்றும்படியான “பூர்ஷ÷வ” (முதலாளித்வ) பட்ஜட் தயாரித்தனர் என்று குற்றம் சாட்டுகிறோம்.

எனவே கொந்தளிப்பும் குமுறலும், கிளர்ச்சியும் வேலை நிறுத்தமும் அதன் விளைவுகளான வேதனைகளும், யாரோ கிளப்பிவிட்டதல்ல தூண்டிவிட்டதல்ல!

கிளப்பிவிடுவது, தூண்டிவிடுவது, என்ற வார்த்தைகளைத் தாராளமாகப் பலர் உபதேசித்து விடுகின்றனர். குற்றச்சாட்டிலே ஒன்றாகக் கருதவும்படுகிறது. தூண்டிவிடும் செயல்.

பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இருப்பதால் ஏற்படும் கேடுகளையும் அவமானத்தையும் அறிந்துகொள்ளாமல் இந்திய உபகண்டத்து மக்கள் உணர்வற்றுக் கிடந்தபோது காங்கிரசானது, மக்களிடம் அன்னிய ஆட்சியின் கேடுகள், அடிமைத் தனத்தால் வரும் இழிவுகள் ஆகியவற்றை எடுத்துக்கூறி உணர்வு பிறக்கச்செய்து, அன்னிய

ஆட்சியை எதிர்க்கும் துணிவு உண்டாகச் செய்தது. அதற்காக அவர்களுக்கு மக்கள் சிலைகள் அமைத்தனர். கவிகள் சிந்துபாடினர், கன்னியர் இரத்தி எடுத்துனர். எழுத்தாளர் புகழோவியம் தீட்டினர்.

ஆனால் இந்தக் காரியமாற்றியவர்களைப் பிரிட்டிஷார் என்ன கூறினார்?

தூண்டிவிடுகிறார்கள்! கிளப்பி விடுகிறார்கள்!! என்றுதான். ஐனோ, தங்கள் திருவாயிலிருந்தும் அதே சொற்கள் கிளம்பிவிட்டன என்று முதலமைச்சரைக் கேட்க விரும்புகிறோம்.
தூண்டிவிடுகிறார்கள்!
கிளப்பிவிடுகிறார்கள்!
ஆம்! இவை, பழைய சொற்கள்! மிகமிகப் பழைய வார்த்தைக்ள, மாளிகையிலே இருந்துவந்த மமதை நிறைந்த மன்னன் மனோகரியின் இதழிலே மதுகண்ட சீமான், உலகிலே ஏமாந்தவர்கள் எங்கெங்கு உண்டு என்று புள்ளி விவரக் கணக்கெடுத்துச் சளைக்காமல் சுரண்டும் ஏகாதி பத்தியக் காவலர். இவ்வளவு பேர்வழிகளும் இந்த இரண்டே சொற்களை உபயோகித்தனர். தூண்டிவிடுகின்றனர்! கிளப்பிவிடுகிறார்கள்! என்றே அவர்களும் கூறினர். தாங்களும் கூறினீர்! ஐனோ?

வேலை நிறுத்தத்தைக் கிளப்பி விடுபவர்களைக் காங்கிரசின் எதிரிகள் என்கிறார் பிரகாசம். யார், கிளப்பி விடுகிறார்கள்?
தொழிலாளி வீட்டிலே உள்ள
உடைந்த பாண்டம்
அவன் குடி இருக்கும்
ஓட்டைக் கூறையுள்ள குடில்
அவன் உடலை மூடிக்கிடக்கும்
கந்தல் சட்டை
அவனுடைய
நோயாளி மனைவி
அவனுடைய
தேய்ந்துபோகும் குழந்தைகள்

தொழிலாளர்கள், குறைந்த சம்பளம் பெறும் அதிகாரிகள் ஆகியோருக்கு வேலைநிறுத்தம் விளையாட்டுமல்ல, வீம்புமல்ல. வேதனை தாங்கமுடியாத வேதனை. அவர்களை இந்நிலையில் இருக்கச்செய்து விட்டுப் பொதுமக்கள் சர்க்கார் என்ற புகழுரையையும் ஓட்டவைத்துக் கொண்டு, கிளர்ச்சி செய்தால் ஒடுக்கிவிடுவோம் என்று கூறுவது குடியரசுக் கோட்பாட்டையே உதறித் தள்ளும் குற்றமாகும்! ஆனால் அந்தக் குற்றவாளிகள் - கூண்டில் இல்லை. பவனி வருகிறார்கள், மற்றவர்களைத் தூற்ற!

(திராவிடநாடு - 18.8.46)

# தறுதலை ஆட்டம்!

தென் ஆப்பிரிக்காவிலே உள்ள பரங்கிகளின் மண்டைப் புழு, மிக வேகமாக அவர்களை ஆட்டிப் படைக்கிறது. தென் ஆப்பிரிக்க சர்க்காரின் சட்டத்தை அங்குள்ள இந்திய மக்கள் பெரும்பாலும் தமிழர் மீறுகின்றனர்- அமைதியான முறையில் அவர்கள் மீது சட்டம் பாயட்டும். இந்த வெள்ளைக் கும்பல் ஏன் பாயவேண்டும்? சட்டப்படி ஒரு நடவடிக்கையும் எடுத்துக்கொள்ளாமல் ஸ்மட்ஸ் துரை இருந்தபோதே, தென் ஆப்பிரிக்க வெள்ளைக்காரர்கள், நூறுபேர் கூடி அமைதியாகச் சட்டமறுப்பு நடத்துபவர்களைத் தூற்றியும் தாக்கியும், கூடாரங்களைக் கிழித்தும் கொளுத்தியும், தாய்மார்களை ஆவமதித்தும் தறுதலை ஆட்டம் இடியிருக்கிறார்கள். ஸ்மட்ஸ் கையாலாகாதவர் என்று தீர்மானித்துவிட்டு இந்தத் துரைமார்கள் கிளம்பிவிட்டார்களா? காலித்தனத்திலே தங்களுக்கு முதல் தாம்பூலம் தரவேண்டும் என்று ஆசைப்படுகிறார்களா? ஏன் இந்த ஆணவம் பிடித்த செயல்? இதனால் “இந்தியரின்” மனம் புண்படும் என்று மட்டுமல்ல, உலகிலே நாகரிகத்தையும் நற்பண்மையும் மதிக்கும் எந்த அறிஞரும், இந்த வெள்ளை நிறத்திமிரைக் கண்டிப்பர் என்பது திண்ணம்.

கடல் கடந்து சென்று கண்காணா இடத்திலே வசித்துவரும் நம் தமிழ் மக்களைக் கேவலமாக நடத்திய தென் ஆப்பிரிக்கப் பரங்கியரின் திமிர் அடங்கிட நெடுநாட்கள் பிடிக்காது. இந்த ஆணவச் சேட்டையின் மூலம் தென் ஆப்பிக்காவிலுள்ள தமிழ் மக்களை அடக்கிவிடலாம் என்று நம்பினால், அந்த வெள்ளை நிறத்திமிர் பிடித்தவர்கள், ஏமாறப் போவது நிச்சியம், ஸ்மட்ஸ் துரை, கொஞ்ச நஞ்சம் மிச்சமாக இருக்கும் நன்மதிப்பையாவது காப்பாற்றிக் கொள்ள விரும்பினால், உடனே இந்த உதவாக்கரை வெள்ளையரின் சேஷ்டையைக் கண்டித்துத் தண்டிக்க வேண்டும். இல்லையேல், அவர்களின் செயலக்கு, ஸ்மட்ஸ் துரையும் உடந்தைதான் என்று உலகு தீர்ப்பளிக்கும் என்பது உறுதி. உலகில் ஆநீதியை ஒழிக்கவும், ஒரு நாட்டுக்கும் மற்றொரு நாட்டுக்கும் பூசல்

ஏற்படக்கூடிய காரணம் இருந்தால் அதனை நீக்கவும் நிறுவப்பட்டுள்ள, ஒக்கிய நாடுகள் மன்றத்திலே, தென் ஆப்பிரிக்க சர்க்கார், இந்தியவர்களை இழிவுபடுத்துவதப் பற்றிய தகவலை சர். ஏ. இராமசாமி முதலியார், இந்திய சர்க்கார் போக்கு அங்கு விசாரிக்கப்படும் விரைவில் அந்தச் சபையின் யோக்கியதை என்ன என்பதை உலகு கண்டுகொள்ள அரிய வாய்ப்பு பார்ப்போம். “இலட்சிய சிருஷ்டி” என்று ராஜதந்தரிகள் புகழ்ந்து வாழ்த்திய சபை, என்ன செய்கிறது என்று சட்டமறுப்பு நடந்து வருகிறது. தென் ஆப்பிரிக்காவில் டாக்டர் மோகாம்புரி நாயகர் உட்பட, பல தோழர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர். தண்டனை தரப்பட்டு வருகிறது. துரைமார்களின் துடுக்குத்தனத்தை அடக்க தென் ஆப்பிரிக்க சர்க்கார் முன்வரக் காணோம். இந்த நிலையில், இலங்கையிலேயும், தமிழர்கள் தவிக்கிறார்கள்.

பெயர் சேனாநாயகர், ஆகவே, வீரமாகப் பேசியாக வேண்டும் என்று எண்ணிவிட்டார் போலும் இலங்கை மந்திரியார், தமிழர் நடத்தும் நியாயமான கிளர்ச்சியைக் கண்டு, நமது போக்கை மாற்றிக் கொள்ளாததுடன், தமிழரைக் கிள்ளுக்கீரை என்று எண்ணிக்கொண்டு அவர்கள் நடத்தும் கிளர்ச்சியால் ஒன்றும் நேரிட்டுவிடாது என்று துந்துபி நாதம் செய்கிறார். சோறும் துணியும் தரவேண்டுமென்று, இங்கே காவடி தூக்கிய காலம் போய், இப்போது சேனாநாயகர்கள், தமிழரை மிரட்டி அடக்கவும், சட்டத்தால் தாக்கவும் துணிந்துவிட்டனர். இலங்கை சர்க்காரின் போக்கைத் தமிழகம், கூர்ந்து கவனித்துக் கொண்டுதான் வருகிறது. தமிழரைத் தாழ்வாகக் கருதித் தான் தோன்றித்தனமாக நடந்து கொள்வது கூடாது என்று சேனாநாயகாவுக்கு எச்சரிக்கிறோம். தமிழரின் காலை மிதிக்கவேண்டாம். அவர்கள் பிறர்தலை தம்காலில் உருளுமளவு போராடிய பரம்பரையினர். வீரர்களின் மனத்தைப் புண்படுத்த வேண்டாம் என்று எச்சரிக்கிறோம்.

தென் ஆப்பிரிக்காவில் இழைக்கப்படும் கொடுமை, இலங்கையில் நடைபெறும் அக்ரமம், இவைகள் இங்கே,

நமது நாட்டிலேயே, நம்மவர்களிலே, பாடுபடும் பரம்பரையாக உள்ள பழங்குடியினருக்கு நாம் செய்யும் கொடுமைகளோடு ஒப்பிட்டால், சிறுபிள்ளை விளையாட்டாகவே தோன்றும். உலக மன்றத்தை நேருக்கு நேர்நின்று சந்தித்துப் பேசுமளவு, யோக்கியதை நமக்கு இல்லை. நாம், நம் மக்களில் ஒரு முக்கியமான பிரிவினரை நீதியுடன் நடத்திக்கொண்டு வரவில்லை. எனவேதான் சட்ட மறுப்புக்கும் சாஸ்திர மறுப்புக்கும் உள்ள பேத்தை நாம் முன்பு விளக்கினோம். ஆனால், இங்கு அநீதியும் அக்ரமும் நடப்பதனாலேயே, உலகிலே வேறோர் இடத்திலே புதிதாக அநீதியும் அக்ரமமும் முளைத்தால், சகித்துக்கொண்டிருக்க வேண்டுமென்பதில்லை. மக்களை மக்கள் தாழ்வாகக் கருதும் தத்துவத்தைத தலைதூக்க விட்டதன் பலனைத்தான் இன்று நாம் சேரிகளிலே பார்க்கிறோம்.

பேத உணர்ச்சிக்கு ஏக்காரணத்தைக் கொண்டோ என்ன சாக்குக் கூறியோ, இடமளித்துவிட்டனர். இங்கு, முன்னோர்கள் காலத்திலே அதன் விளைவு என்ன? அறிஞர்கள் கண்டு வெட்கப்படும் நிலையிலும், ஆற்றலுள்ளவர்களும், இதனை அடியோடு போக்குவது சுலபமாகத் தோன்றவில்லையே என்று ஆயாசப்படவும், அரசியல் கட்சிகள் இமை வேகத்திலே, இது விஷயத்திலே நடக்கும்போதே ஆபத்து வருமோ என்று பயத்தோடு இருக்கவேண்டியதுமான, பயங்கரம் நிரம்பிய, சிக்கலான சூழ்நிலை ஏற்பட்டுவிட்டது. பொறுமை வேண்டும் - படிப்படியாகத்தான் முன்னேற முடியும் - பக்குவமாக நடந்து கொள்ளவேண்டி இருக்கிறது என்றெல்லாம் கூறும் தலைவர்களையே காண்கிறோம். அலட்சிய சுபாவத்தாலே, அந்த நாளிலே ஜாதி பேத அக்ரம்ததை நுழைய விட்டதனுடைய பலனை இன்று நாம், வட்டி தொடர் வட்டியுடன் சேர்த்துப் பெற்று வருகிறோம். தீண்டாமை, ஜாதி பேதம் என்ற கொள்கையும் திட்டமும், மெள்ள மெள்ள இங்கே நுழைந்தபோது, எதிர்த்திருந்தால், இந்தக் கேவலமான நிலைமை இன்று இராது.

அக்ரமத்தைச் சகித்துக் கொண்டதால், அநீதியைப் பொறுத்துக் கொண்டதால், இன்று மக்களை மக்களே

தீண்டுவதும் கூடாது, அது பாபம், என்ற முதல்தரமான மடத்தனம், உயர்தரமான சாஸ்திர சம்பிரதாயமாகி விட்டது. சமூகம் ஜாதி பேதத்தின் பிடியிலே சிக்கிச் சின்னா பின்னப்பட்டதைக் காண்பதால், அதனைப் போக்குவது எவ்வளவு கஷ்டமாகி விட்டது என்பது தெரிவதால், முளையிலே கிள்ளி ஏறியாததால், இன்று வெட்ட வெட்டத் துளிர்விடும் விஷவிருட்சமாக ஜாதி இருப்பதைக் காண்பதாலேதான் தென் ஆப்பிரிக்காவிலே, இன்று புதிதாக முளைக்கும் அக்ரமத்தை உடனே அழித்தாகவேண்டும் என்ற ஆர்வம் பிறக்கிறது. அலட்சிய சுபாவத்தாலேயோ, எத்தனையோ துன்பமும் இழிவும் பழியும் இதனைவிட அதிகமாக இங்கே இருக்கிறது என்ற எண்ணத்தாலேயோ, சும்மா இருந்துவிட்டால், பிறகு ஒரு சில ஆண்டுகளிலே, அக்ரமம் நிலைத்து விடுவதுமட்டுமல்ல, ஓங்கி வளர்ந்து பிறகு, நீக்கமுடியாததாகிவிடும். ஆகவேதான், தென் ஆப்பிரிக்கச் சட்ட மறுப்பபு நாம் ஆதரிக்கிறோம். மனுவின் சாஸ்திரத்தை, சம்பிரதாயத்தை நம் முன்னோர்கள் ஏற்றுக்கொண்டதன் பலனாய், நாலாயிரம் ஜாதிகளாகிப், பாழாகிவிட்டோம். மனு, ஆப்பிரிக்காவில், ஆதோ ஊலாவுகிறான் ஸ்மட்ஸ் உருவிலே என்றால், நமக்கு ஆத்திரம் வரத்தான் செய்யும். அந்த அக்ரமத் திட்டத்தை அடியோடு ஒழிக்க அஞ்சா நெஞ்சுடன் போராடிக் கண்காணா நாட்டிலே, வெள்ளையரின் சிறையிலே, புகத் துணிந்த வீரர்களைப் பாராட்டுகிறோம். அவர்களின் போர், வெற்றிகரமான முடியவேண்டும் என்று ஆசைப்படுகிறோம்.

காந்தியார் சொல்வது போல, இங்கே ஜாதி இந்துக்கள் சம்பிரதாயத்தின் பேரால் என்ன ஆநீதியபச் செய்கிறார்களோ, அதைத்தான் ஸ்மட்ஸ் ஆப்பிரிக்காவிலே சட்டத்தின் பேரால் செய்கிறார். “அந்தச் சட்டமும், இந்தச் சம்பிரதாயமும் தவிடுபொடியாக வேண்டும். மனிதத் தன்மையின் மேன்மையும் உரிமையும் நிலைக்க வேண்டுமானால், இன்று ஜாதி இந்துக்கள் கொண்டுள்ள சம்பிரதாயங்கள் அவ்வளவும்

அந்த நாட்களிலே, மனு புகுத்திய சட்ட திட்டங்களே, தென் ஆப்பிரிக்காவிலே உள்ள நமது நாட்டு மக்களைச் சேரிகளில் தள்ளிவிடும் துணிவு எப்படி ஸ்மட்சுக்குப் பிறந்தது? சேரிகள் கிராமந்தோறும் உள்ள இந்தியாவிலே இருந்துவந்தவர்கள் தானே இவரக்ள், மனிதர்களிலேயே மேல் கீழ், ஜாதிகளை ஏற்றுக்கொண்டு, வரைமுறை கெடக்கூடாது என்று இன்றளவு வரையில் நடந்துவரும் நாட்டிலே இருந்து வந்தவர்கள்தானே இவர்கள், இவர்களை இங்கேயும் சேரியில் தள்ளி வைக்கலாம் என்ற தைரியம் பிறந்தது.

இங்கே, மனுவின் அக்ரமச் சட்டங்களையும் அவைகளை உள்ளடக்கிய சாஸ்திர, சம்பிரதாயங்களையும், நாம், தைரியமாக எதிர்த்து ஒழித்திருந்தால், பரங்கிக்குத் தைரியம் பிறந்திருக்க முடியுமா? சாஸ்திர மறுப்பு இங்கே நடந்திருந்தால் அங்கே ஸ்மட்சின் சட்டம் பிறந்தே இருக்காது. அந்தத் தைரியமே உண்டாகாது. இப்போதும், அங்கே சட்டமறுப்பு நடக்கட்டும். இங்கே சாஸ்திர மறுப்பையும் துவக்கலாமே! ஏன், அதற்குமட்டும், உரிமை, விடுதலை வட்கை, சர்வ தேசநீதி ஆகியவை பற்றி மேதாவித்தனமான கருத்துரைகள் தரும், ஏடுகள், மௌனம் சாதிக்கின்றன. தென் ஆப்பிரிக்காவிலே, சட்ட மறுப்பு மூலம், ஸ்மட்ஸ் துரையின் சட்டத்தை ஒழிக்கத் திராவிட இளைஞர்கள் ஆயிரம்பேர் தருகிறோம். இங்கே சாஸ்திர மறுப்பைத் திராவிடர் கழகம் துவக்கினால், எத்தனை வீரர்கள், தூய கதரணிந்தோர் வரத் தயாராக உள்ளனர்? சட்டமறுப்புக்கு மட்டுந்தானா வீரர்கள், சாஸ்திர மறுப்புக்கு இல்லையா? மனு ஆப்பிரிக்காவிலே மட்டுந்தானா தாக்கப்பட வேண்டும். இங்கே மனு மனம்போன போக்கிலே இன்றும் இருக்கிறானே கேட்பார் இல்லையா, நீதி கிடையாதா என்று திராவிடர் கழகம் கேட்கிறது, நாட்டு மக்களை நோக்கி பெருமூச்சு மட்டுந்தானே பதிலாகக் கிடைக்கிறது.

(திராவிட நாடு 30.6.46)

+

# மனு சிரிக்கிறான்!

ஸ்மட்ஸ், சட்டத்தை மீறும் கிளர்ச்சிக்கு எவ்வளவு ஆதரவு நம் நாட்டுத் தலைவர்களா லும், பத்திரிகைகளாலும் தரப்பட்டுள்ளன என்பதையும் மனிதனை மனிதன் இழிவுபடுத்தும் மமதையை ஆப்பிரிக்காவிலே எதிர்க்கும் வீரர்கள் போலவே, மனிதனை மனிதன் அதிலும் ஒரே நாட்டு மக்களிலேயே ஒரு பிரிவினர் மற்றோரு பிரிவினரை, அதிலும் இந்து மதத்தின ரிலேயே ஒரு பகுதியினார் மற்றோர் பகுதி யினரைக் கேவலப்படுத்தும் சாஸ்திர ஆதாரமான சம்பிரதாயமாகிவிட்ட சட்ட திட்டத்தை இங்கே எதிர்ப்பவர்கள், எப்படி அனாதைப் பிள்ளைகள் போல் தலைவர்களாலும் பத்திரிகைகளாலும் நடத்தப்படுகின்றனர் என்பதையும், ஒப்பிட்டுப் பாருங்கள்- உங்கள் நெஞ்சிலே கை வைத்துக் கூறுங்கள். சட்ட மறுப்புப் போலவே, சாஸ்திர மறுப்பும் அவசியந்தானே, அப்படி இருக்க, சட்ட மறுப்புக்கு ஆதரவு திரட்டுவது போல, சாஸ்திர மறுப்பு ஏன் திரட்டக்கூடாது, ஏன் திரட்ட முடிவதில்லை, என்பதின் சூட்சமம் என்ன?

வெள்ளைக்கார இனம், உயர்ந்த ஜாதி; கருப்பு நிறத்தவர்கள் தாழ்ந்த ஜாதி, என்ற நிறத் திமிர் பிடித்தவர்கள், கருப்பரைக் கேவலமாக நடத்துகிறார்கள், இழிவுபடுத்தும் சட்டம் செய்கிறார்கள், கொடுமை நடக்கிறது. அதிலே சில வெள்ளையர்கள் வெளிப்படையாகவே வெள்ளைக்காரர்கள் உயர்ந்த இனம் என்று பேசுகிறார்கள். நிற பேதம் கூடாது. அதனைப் போக்க வேண்டும் என்று கொண்டுவரப்படும் திட்டங்களை தவறு என்று ஏசுகிறார்கள். அத்தகைய வெள்ளைக் குண்டர்களின் வாய்க் கொழுப்பு ஒரு கட்டத்திலே பொறிக்கப்பட்டிருக்கிறது.

பக்கத்து கட்டத்திலே பாருங்கள். வேதப் பிராமணர்களின் பேச்சு இருக்கிறது. சனாதனம், வர்ணாஸ்ரமம், வைதிகம், பழைய வாழ்வுமுறை, லோகாச்சாரம், தேசாச்சாரம் என்று பலவிதமாக அழைக்கிறார்களே, ஜாதி பேதம் என்ற

ஏற்பாட்டை அந்த ஜாதி பேதம் போக்கப்பட வேண்டும், பிராமணர், இதராள் என்று வித்தி யாசம் காட்டக் கூடாது, எல்லோரும் ஓர் குலம், எல்லோரும் ஓர் நிறை என்று பேசிப்பாருங்கள் வேதப் பிராமணாளிடம். என்ன பதில் வரும்? ஜாதி முறை கெடக்கூடாது, கெடவிடக்கூடாது என்று பேசுவார்கள். அவர்களின் பேச்சு 2-வது கட்டத்திலே இருக்கிறது.

வெள்ளையரின் நிற பேதம் காட்டும் போக்கைக் கண்டிக்க நாம் தயங்குவதில்லை. தலைப்பிலேயே தைரியமாகக் கண்டனம் இருக்கிறது, வெள்ளைக் குண்டர்கள் என்று.
ஆனால் அதே தைரியத்துடன், பிராமணப் பிண்டங்கள், வைதிகப் பிச்சுக்கள் என்று கூற முடியுமா? நீங்கள்தான் உடனே சொல்வீரகளே, ``ஏண்டா தம்பி! பிராமண துhஷணை செய்கிறாய்'' என்று. நான் அவர்களை நீங்கள் திட்ட வேண்டும் என்று தூண்டுகிறேன் என்பதாக எண்ண வேண்டாம். நிற பேதம் இருக்கத்தான் வேண்டும் என்று கூறும் வெள்ளைக்காரனைக் கண்டிக்கும் நம்முடைய வீர்தீர பராக்கிரமம் அவ்வளவும், வைதிகத்தின் பேரால், ஜாதிபேதம் இருக்கத்தான் வேண்டும் என்று பேசும் வேதப் பிராமணர் களைக் கண்ட உடனே, சப்த நாடியும் அடங்கி கைகால், வெடவெடவென நடுங்கி, நாக்குக் குளறி விடுகிறதே! வீரம் விரையமாகிறது. தீரம் ஈரமாக மாறிவிடுகிறது, பாராக்கிரமம் பாதசேவா உணர்ச்சியாகி விடுகிறதே, இதைத் தீவிரத்திலே திளைத்த தோழர்கள் கொஞ்சம் கவனித்துப் பார்க்கட்டும் என்பதற்காகவே, சொல்கிறேன்.

நிற பேதம் இருக்க வேண்டும் என்று பேசிய உடனே, வெள்ளைக் குண்டர்கள்- கொக்கரிப்பு- என்று நமது தலைவர்கள் முழுக்கமிட, நமது பத்திரிகை ஆசிரியர்கள், கோபமென்ற பேனாவின் ஆத்திரமென்ற முள்ளைச் செருகி, தேசியம் என்ற மையிலே தோய்த்துக் கிளர்ச்சி என்ற காகிதத்திலே தீட்டுகிறார்கள், அதைப் படித்த உடனே நமது ``மகா ஜனங்கள்'' ஆஹா! இந்த வெள்ளைக் குண்டர்களைச் சும்மா விடக்கூடாது, விரட்டி அடிக்க

வேண்டும், எட்டி உதைக்க வேண்டும் என்று வீர கர்ஜனை புரிகிறார்கள். ஆனால் நிற பேதம் இருக்க வேண்டும் என்று வெள்ளைக் குண்டர்கள் பேசுவது போலவே, ஜாதி முறை இருக்கத்தான் வேண்டும் என்று பார்ப்பனர் பேசும் போது, அதனை நமது தலைவர்கள், ஸ்ரீமான் சீனுவாசாச்சாரியாரின் வியாக்யானம்", ``ஸ்ரீசங் கராச்சாரியாரின் ஸ்ரீமுகம்", ``மகாமகோபாத்தி யாயரின் மனுஸ்மிருதி பாஷ்ய உரை" என்று கூறிவிட, நமது ஏடுகள் ``நம் நாட்டுப் பூர்வீகப் பெருமையும், கீர்த்தியும், வேதபுராண இதிகாசாதி கள் மூலம் வியக்தமாகத் தெரிவதால், இக்கால நாகரிகம் என்ற மோகத்திலே மூழ்கி, சமூகக் கட்டுப்பாட்டையும், தார்மீக முறைகளையும் பாழ் பண்ணும் காரியாதிகளிலே கண்மூடித்தனமாக இறங்கி, நாட்டையும், நாட்டின் நற்பெயரையும் கெடுக்கும் நாசகாரியத்திலே இறங்க வேண்டா மென்று நம் யுவர்களையும், யுவதிகளையும் கேட்டுக் கொள்கிறோம்" என்று எழுதிவிடும். அதைப் படிக்கும் நமது `மகாஜனங்கள்" ஜாதி முறை இருக்க வேண்டுமென்ற கொள்கையை நிலைநாட்டும் சூழ்ச்சியிலே தாங்களாகவே சிக்கிக் கொள்வர்.

நிறத்திமிர் பேசுபவர்களைத் கண்டிப்பது போல, ஜாதி முறை பேசுபவர்களையும், கண்டித்திருந்தால், நம் நாட்டு ஏடுகளின் பேனா முனை, ஸ்மட்ஸ் துரையின் இருப்பிடத்தைத் தாக்குவது போலவே, இங்கே ஜாதி இருக்கத்தான் வேண்டும் என்று பேசுபவர்கள் இருக்கச் செய் வதற்கான முறைகளை வகுப்பவர்கள் ஆகி யோர்களையும் தாக்கியிருந்தால், நாடும் மக்களும் எப்போதோ நல்ல நிலைமையை அடைந்திருக்க முடியும். போனது போகட்டும், இனியேனும், ``தலைவர்களும், தாள்களும்" இந்தக் காரியத்தைச் செய்யுமா? மக்களே! பதில் கூறுங்கள்!! ஸ்ரீரங்கம் பார்ப்பன அம்மையார் கண்ணிலே மிளகாய்ப் பொடியைத் தூவிய போதுகூட, டாக்டர் ராஜன், ஒரு வார்த்தை அவர்களைக் கண்டிக்க முடியவில்லையே! கண்டிக்க முடியுமோ! ``அதோ நிற்பது கமலா, நம்ம அத்திம்பேருக்கு பந்து. கூச்சல் போடுவது,

சீனு சம்சாரம், சகுந்தலா! பக்கத்திலே நிற்பது பர்வதம், சுந்தராச்சாரியாரின் இரண்டாந்தாரம்எல்லாம் நம்மவா" என்று இந்த விதமாகத்தானே எண்ணி யிருக்க முடியும். அதை, ஆச்சாரியார் சொல்லியே விட்டார் ஒரு சமயம், ``சனாதனி களின் மனதை நோகச் செய்யமுடியாது. அவர்கள் என் இரத்தம், என் சதை' என்றார்.

இந்தத் தலைவர்கள் கண்டிக்க முடியாத நிலையில் இருக்கிறார்கள். போகட்டும். இருக்கிறார்களே நமது இனத் தலைவர்கள். காமராஜர்கள், தேவர்கள் முதலியவர்கள், இவர்களாவது கண்டிப்பார்களா? முடியாது. அவர்களெல்லாம், ``கேவலம் வகுப்புவாதம் பேச மாட்டார்கள்" போகட்டும். ஜாதி என்ற சொல்லே தமிழனுடையது அல்ல என்று இலக்கிய மூலம் கண்டறிந்த கதிரேசர்கள் கலியாண சுந்தரங்கள் மீனாட்சி சுந்தரர்கள் சேதுக்கள் சாதுக்கள் ஆகியோர் கண்டிப்பார்களா? முடியாது. அவர்கள், ``சுடு சொல் புகலாதே, சினமது கைவிடு, சிவனது பதம் தொடு, அன்புவித்தினை நடு, அரனை எண்ணிப்பாடு" என்னும் சித்தத்தினர். இப்படிப் பலரும், கண்மூடி மௌனியானதாலே தான், ஜாதி பேதம் நிலைத்து இருக்கிறது. அது இருக்கத்தான் வேண்டும் என்று கூறும் வேதப் பிராமணர்கள் உள்ளனர். அவர்கள் பேசுவதைக் கேட்டுக்களிக்கும் மக்களும் உள்ளனர்.

* * *

தென் ஆப்பிரிக்காவின் லைடன்பர்க் என்ற ஊரிலே, வெள்ளையர்களின் பொதுக் கூட்டம் நடைபெற்றது. இந்தியர்களைப் பகிஷ் காரம் செய்ய வேண்டியதென்று அதிலே பேசினார்கள். வெள்ளையர், கருப்பர் என்ற நிற பேதத்தைப் போக்குவதற்காகக் கொண்டு வரப்படும் முயற்சிகள், முறைகள் ஆகிய வற்றைத் தாங்கள் ஏற்றுக்கொள்ளப் போவ தில்லை என்றும், அந்தப் பேதத்தைப் போக்கக் கூடாது என்றும், வெள்ளையர்கள் கூட்டத்திலே தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

* * *

ராய்ட்டர் இப்படி ஒரு செய்தியை வெளி யிட்டிருக்கிறது. இதைப் படிக்கும்போது நமக்கெல்லாம் இரத்தம் கொதிக்கிறது, கோபம் பொங்குகிறது, ஒரு கண்டனக் கூட்டம் போட லாமா என்று தோன்றுகிறது. உண்மையிலேயே கண்டிக்கத்தான் வேண்டும். ஆனால் இந்த வெள்ளைக்குண்டர்கள், நிற பேதம்- இருக்கத் தான் வேண்டும் என்று பேசியது போல, ஜாதி பேதம் இருக்கத்தான் வேண்டும், பிராமண முதல் ஜாதி, மற்றவர் அடுத்தடுத்துத்தான், என்று இங்கே வைதீகர்கள் சனாதனிகள், வேதப் பிராமணர்கள் குளத்தங்கரை மாநாடுகள் நித்த நித்தம் நடத்துகிறார்கள்- விசேஷ மாநாடுகளிலே, பெரிய பண்டித சிரோமணிகள், வேத வியாக்யான கர்த்தாக்கள் பிரதிவாதிபயங்கரங்கள், திருவாய் மொழி திவ்யப் பிரபந்தம் முதலிய ஆதாரங்கள் காட்டிப் பேசுகின்றனர்.- சங்கராச்சாரிகளின் ஸ்ரீமுகம் பிறக்கிறது. சதகதாகாலட்சேபங்களிலே உபதேசிக்கப்படுகிறது- சங்கீத சபைகளிலே கூத்துக் கொட்டகையிலே, சினிமாக்கோலாகல மண்டபங்களிலே ஜாதிமுறையின் அவ சியத்தைப் பற்றிப் பேசுகிறார்கள்.

வேதப் பிராமணர்களின் பேச்சுக் கேட்கும் போது, வெள்ளைக் குண்டர்களின் பேச்சைக் கேட்டதும், கிளம்பிய ரோஷம் எங்கே? வீரம் எங்கே? தைரியம் எங்கே? எங்கே?

அவை போகுமிடத்தைத் தேடுங்கள், எல்லோரும் ஒன்றாய்க் கூடுங்கள், பேத உணர்ச்சியை, யார், எந்தக் காரணத்துக்காகப் புகுத்தினாலும் சாடுங்கள், பிறகு பாருங்கள், நாடு எவ்வளவு விரைவில் முன்னேறுகிறது என்று.

இதைச் செய்யாதவரையில், மனுவின் மமதை நிறைந்த சிரிப்பு அடங்காது.

(திராவிட நாடு - 7.7.1946)

# விழா!

தமிழகம் விழாக்கொண்டாடுகிறது, களிப்புடன், பெருமையுடன், தனது அருமருந்தன்ன புதல்வனின் வெற்றி கண்டு பூரிப்படைகிறது. தமிழர் எங்கும் தலைநிமிர்ந்து நடந்து, எமது கவிஞரின் விழா காண வாரீர் என்று அன்புடன் அழைக்கின்றனர். எந்த நாட்டிலும், இத்தகைய விழாக்கள், அடிக்கடை நடைபெறாது, வாழ் நாளிலே, இவ்விதமான விழா ஒரு முறை, இருமுறை ஏற்படக்கூடும். பல தலைமுறை களுக்கொரு முறை மட்டுமே, இத்தகைய விழாவினைக் காணும், நாடுகளும் உள்ளன. நம்நாடு, மற்ற நாடுகளைவிட, இத்துறையில், முன்னணியிலுள்ளது. எழிலும் திறனும், வளமும் செயலும் நிரம்பிய நாடு. வாழ்வின் அலைகட்கு அஞ்சா நாடு, இயற்கையின் இன்பச் சோலை, வீரர் கோட்டம், கற்புடை மாதரின் பொற்கோட்டை மட்டுமல்ல, நம்நாடு கவிதா மண்டலம் இதன் வனப்பு, கவிதா உள்ளத்தைக் கிளறக் கூடிய விதமாக அமைந்திருக்கிறது. இங்கு வானிடம் உறவு கொண்டாடும் மலை உச்சிகள், தேனிடை தோய்த்தெடுத்த செந்தமிழ் நடையில், பலரைப் பாமாலை தொடுக்கப் பணித்திட்டன. ஆறுகள், கலை உள்ளத்தில் ஊற்றுப் பெருக்கெடுத்தோடும் வண்ணம் செய்தன. சாலையும் சோலையும், அவை தம்மில் உலவும் மாந்தரும் மயிலும், கவிதையை வழங்கும் பண்பினைத் தருபவையாயின. கடலைத் தொட்டு முத்தமிடும் ஊர்களும், ஆறுகளை மாலைகளாகக் கொண்ட அணிபுரிகளும், மலைக்கோட்டை கொண்ட இடங்களும், இங்கெல்லாம் வதியும், ஆற்றல் மறவரும் அவர்தம் அழகு மகளிரும், வீரக் கழலொலியும், மதலையர் குதலையும், மாதரின் மதுர மொழியும் பிறவும், மாண்பினை மீறா மகிழ்ச்சியைத் தந்து, எங்கும் கவிவாணகர்ள் உலவிடும் பெருமைக்குரிய நிலையைத் தந்தது - எனவேதான் வேறு பலநாட்டினர் விழித்தெழா முன்பு இங்கு, சங்கம் நிறுவியிருந்தனர், புவலர்கள் ஆரசோச்சுபவனை ஆள்வோராயினர், அறிவும் அழகும் பின்னிக்கொண்டுள்ள அருக்கவிதைகளை இயற்றினர்.

தமிழகம், வெண் மணற்பரப்பில் தன் நிலவொளி வீசியது போன்ற கட்சி தந்தது. இது ஓர் நாள்.

இடையே வந்தது இடர். இருள் புகுந்தது, இடரின் துணைக்கொண்டு மனமுரள் மிகுந்தது. மதிமறைந்தது, முகிலிடை மதியென! மன்னர்கள் கோலாகலராயினர்! புலவர்கள் பூஜாரிகளாயினர்! பிறகு மக்கள், மனவளம் கெடாது வேறென்ன விளையும்? பச்சை மாமாலையைக் கண்டு பா பாடியது போயிற்று! பவளவாய்ப் பெண்ணினைப் பாராட்டிய பாடல் குறைந்தது! குழந்தையின் கொஞ்சு மொழியும் குறுநடையும் பிறவும், கவிதைகட்கேற்ற கருத்தாக அமையும் நிலையும் போயிற்று! வீரன் கைவாள், அவன் மார்பின் வடு, இவைபற்றிய நினைப்பு குறைந்துவிட்டது. பச்சைமா மாலைபோல மேனி, பவளவாய்ப் கமலச் செங்கண், அச்சுதா, ஆமரர் ஐறே! என்பனபோன்ற பஜனைப் பாடல்களைப் புலவர்கள் இயற்றலாயினர். தமிழகத்தின் மாண்பு, ஆரியக் கற்பனைக்கு வாழ்க்கைப்பட்டு, வகைகுன்றிப் போயிற்று.

கிழக்க வெளுக்காலாயிற்று! ஒளியின் கீற்றல்கள் மெள்ள மெள்ளத் தலைதூக்கலாயின. தாளச் சத்தமும் மேள முழக்கமும் மிகுந்திருந்த போதிலும், புரட்சிக் குரலொலியும், கிளம்பலாயிற்று. விண்ணை நோக்கி நின்ற கண்கள் மீண்டும் மண்ணை நோக்கலாயின. மக்கள் மீது மீண்டும் சிந்தனை சென்றது. தமிழ் வென்றது!

அந்த வெற்றி விழாவே, நாம் குறிப்பிடுவது, புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் அவர்கட்குத் தமிழகம் இதுபோது அளிக்கும் பொற்கிழி ஒரு தனி மனிதருக்குக் காட்டும் அன்பு, ஆதரவு, மதிப்பு மட்டுமல்ல, கலைத்துறையிலே, மீண்டும் மக்களுக்கு மகத்தான வெற்றி கிடைத்துவிட்டது என்பதனை உணர்ந்து உள்ளம் மலர்ந்து, அந்த வெற்றிக்கு அளிக்கும் விழாவாகும். இதனை நாம், “புதிய காலம் பிறந்தது” என்பதைக் காட்டும், களிப்புக்குரிய விழாவாகக் கருதுகிறோம்.

விழா, பலவகை, வீழ்ந்து வணங்கும் விழா, வியந்து வணங்கும் விழா, கூவி மகிழும் விழா, கும்பலில் கூடுவிழா, கொஞ்சி மகிழும் விழா எனப்பல உண்டு. திருவிழா, பலன் கோரிப் பரமனை வேண்டுவதற்குப் பயன்படுத்தப்படுகிறது. மன்னரின் பொருட்டு நடைபெறும் விழாவில், மக்களில் ஒருவன் எனினும் நமக்கெல்லாம் மன்னனானான்! அவன் பொன்னாடையைப் பாரீர்! பட்டத்துக் குதிரையின் புதிய சேணம் காணீர்! பவனி அழகைப் பாரீர், என்று வியந்து கூறி., கோல்கொண்டோனுக்கு மரியாதை காட்டுவது, சட்டதிட்டம் என்பதனால், வணங்குவது நடைபெறுகிறது. வீரன, வெற்றிபெற்று நாடு திரும்பும்போது, களம் காணாதருங்கூட, வர இருந்த ஆபத்தை ஒழித்தான், வாகை சூடினான் நாட்டின் பெருமையை நிலைநாட்டினான் என மகிழ்ந்து, அவன் புகழினைக் கூவிடும் விழா நடைபெறுகிறது. மணவினையிலே கும்பலில்கூடி மகிழ்கிறோம். கொஞ்சி மகிழ்கிறோம், காதல் கை கூடியதால் ஏற்படும் விழாவில்! கவிஞருக்குக் காணிக்கை செலுத்தும் விழா, இவை அத்தனையையும் மிஞ்சிடும் அளவுக்கு நெஞ்சில் இடம் பெறுகிறது! வெற்றி களிப்புத் தரும், ஆனால், பல உயர் பறிகொடுத்து, பலர் உறுப்பிழந்து, பிறகு கிடைத்தது வெற்றி என்பதானல், அந்தக் களிப்புக்குப் பிறகு கவலையும் உண்டு! முற்றும் மகிழ்ச்சி என்பதில்லை! உசனைத் தொழுது விழாக் கொண்டாடி, மகிழ்வோம், ஆனால் மோசக்காரன் வாழவும் நல்லவன் நாசமாகவும் காண்கிறோ மானதால், விழாவின் போது, சித்தத்தைச் சிவன்பாலோ அவர் பொருட்டு ஏழும் சத்தத்தின் பாலோ விட்டோமெனினும், பின்னர், மிக விரைவிலே, சித்தத்தைச் சலிப்புச் சிறை கொள்கிறது. மன்னர் பொருட்ப்ழும் விழாவிலே, மகிழ்ச்சி உண்டு. ஆனால், அதனுடன் அச்சமும் கிளம்பும்! மணவினையிலே, மனத்தாங்கல் ஏழுவதுண்டு, மார்பில் பூசிய சந்தனம் உலராமுன்னம், மனையிலே சினமும் சிறு சச்சரவும் பிறப்பதுண்டு. காதல் வாழ்விலே, கண்மூடித் திறப்பதற்குள் “எடல்” உண்டாகும்! அவ்விழாக்களிலே, மகிழ்ச்சி நிச்சயம் உண்டு, ஆனால் முற்றும் மகிழ்ச்சி

என்று துணிந்துரைக்க முடியாது. கவிஞர் விழா, தனி இன்பம் நல்குவது.

கோரிக்கொள்ளாமல் கிடைத்த பலன், கோல் காட்டாது செலுத்தும் அரசு, மனைதோறும் நடைபெறும் மணவிழா, கவலையற்ற காதல் விழா! பலவகை விழாக்களிலே உள்ள இன்பங்கள் இதிலே உண்டு, அவைகளிலே காணப்படும் குறைகள் கிடையாது! மாற்றுக் குறையாத பசும்பொன், மாசு இல்லாத மணி, கவிஞர் விழா!

நமது நாட்களிலே, இத்தகைய விழா நடைபெறுவதும், அதிலே பங்கு கொள்ளும் வாய்ப்புக் கிடைத்திருப்பதும், உண்மையிலேயே ஓர் பேறு.

அறிஞரை மறந்து, வீரரை ஆகழ்ந்து, கவிஞரைக் கவலையில் ஆழ்த்தி, கலையைப் படுகுழியில் வீழ்த்தி, வைதிகத்தை வாழ்க்கைக்குத் துணையாகக் கொண்ட, வாடிய மலரோ, பட்டர்ந்து போகும் விளக்கோ, விழியற்ற வனிதையோ, என்று பலரும் தமிழகத்தைக் கண்டு மனவேதனை அடைந்தனர். இல்லை என்று தமிழ்நாடு கூறுகிறது! துயில் இல்லை! பண்பை இழக்கவில்லை! கவிஞரைக் கைவிடவில்லை! காரிருளைப் போக்கிடக் கலையைப் பணித்திடும் செயலைச் செய்யப் பின்வாங்கப் போவதில்லை! என்று தமிழகம் முழக்கமிடுகிறது. தமிழகம், புரட்சிக் கவிஞர் பாரதிதாசனுக்குத் தரும், இருபதனாயிரம் வெண்பொற்காசுகள், ஒவ்வொன்றும் பாடும் சிந்து இதுவே!

அருள் மழை பொழிபவர், அம்பிகை உபவாசி, ஆறுமுகன்மீது அகவல் இயற்றியவர், நாவிலே திரிசூலக்குறி பொறிக்கப்பட்டவர், நாகத்தைக் காகமாக்கியவர், நரியை நாமாவளி பாடச் செய்தவர், என்பதல்ல, இவருக்கு விழா கொண்டாடுவதற்குக் காரணம்.

தில்லை மூவாயிரவர் திருநீற்று மகிமையோ, எல்லைக் காளிக்கு ஏழுசீரடியில் நூலோ, இயற்றினதற்கல்ல, அவருக்குத் தமிழகம் விழா கொண்டாடுவது.

வட்டிநாட்டு வேந்தரோ, பித்தபுரி பூபதியோ அல்ல, அவருக்கு வெண்பொற்காசுகள் வழங்குவது.

நாட்டு விடுதலைக்கான போர் ஆர்வம் என்ற சூழ்நலையில் உள்ளவர் எனபதல்ல தமிழகம் பாராட்டுவதற்குக் காரணம்.

மக்களில் ஒருவராக இருந்து, மக்கள் புரிந்து கொள்ளக்கூடிய வகையில், மக்கள் முன்னேற்றத்துக்கான கருத்துக்களை, மக்களுக்கு மகிழ்ச்சியும் மனஎழுச்சியும் மலரும் வண்ணம், மக்கள் மன்றத்திலே மக்கள் கவிதையை மழையெனப் பொழிந்ததற்காக, மக்கள் காட்டும் மரியாதை, மக்கள் தெரிவிக்கும் மகிழ்ச்சி, மக்கள் வழங்கும் பொற்காசு! நான்கணா நல்கிய நண்பர்களையே நாம் முதலிலே பாராட்டுகிறோம், நடுக்கடலிலே நாவாயில் பணிபுரியும் ஏழைத் தமிழன் நான், என்று அன்பு மொழியுடன் கலந்து ஒரு ரூபாய் அனுப்பிய நண்பர்கள் பால், நெஞ்சம் நெகிழ்ந்து செல்கிறது, கிடைத்தது எட்டணா, எனினும் பெறுக, என்று கூறி அனுப்பியவர்கள், ஆகியோரை மிகவும் பாராட்டுகிறோம். அவர்களின் தொகையின் அளவு சிறிது ஆனால், எவ்வளவு ஆழ்ந்த அன்பு அவர்களை அதனையேனும் அனுப்பித்தீர வேண்டும் என்று எண்ணச் செய்தது என்பதை நோக்கும்போது, மகிழ்ச்சியால் நமது அகமும் முகமும் மலர்கிறது. வண்டு மலர் தோறும் மொண்டு வரும் தேன், துளித்துளியாகத்தான்! தமிழர் தந்த பணமும் அத்தகைய முறையிலேயே அமைந்திருக்கிறது. பெருமைக்குரிய பொற்கிழி இதுவே.

தமிழகத்திலே, சாதாரணமாக ஒரு பொற்கிழி தயாரிக்கப் படுகிறதென்றால், ராஜா சர் அண்ணாமலையாரின் புன்னகையும், சர். அழகப்பாவின் அருளும், குமாரராஜாவின் குளிர்பார்வையும், கோலாகலச் சிற்றரசர்களின் சிரிப்பும், இருந்தாக வேண்டும் என்று ஓர் நிலை இருந்தது, அது, இதுபோது குலைந்தது. இவர்கள் யாரும் இதிலே பங்கு கொள்ளவில்லை! எதிர்பாராத இன்பம்! வரலாற்றிலே இடம்பெறத் தக்க வெற்றி!

இந்நிதி விஷயத்திலே மற்றுமோர் வெற்றியும் கிட்டியது, இதிலே கட்சிக் கட்டுகள் உடைபட்டுப் போயின!

இந்த மகத்தான வெற்றி, எதனைப்பாடி? ஐத்தி ஐத்தித் தொழுவோம் யாமே! பார்த்திபன் கனவில் பாவையும் நின்றாள்! என்று பஜனை பாடியல்ல! வெள்ளைப் பரங்கியை விரட்டிடக் கூடிடுவீரே! என்று தேசியம் பாடி அல்ல! மக்கள் ஏற்கனவே போற்றி வந்த எண்ணங்களையே ஆதரித்துப்பாடி அல்ல! அவர்களை மூக்கின்மேல் விரல் வைக்கச் செய்த கவிபாடி! யார், இக்கவி? என்று புலவர் குழாம் கோபித்துக் கேட்கும் தன்மை வாய்ந்த பாடல்கள் பாடி! வெற்றியின் முக்யத்துவம் இங்கேதான் அதிகம்! மக்களுக்கு மதி புகட்டினார் கவி! இதற்கு நிதி தந்தனர்! தமிழகத்தில் மட்டுமல்ல, தரணியில் பல்வேறு இடங்களிலேயும், மதிபுகட்டுபவருக்கு மக்கள் நிதி தரும் வழக்கம் கிடையாத. விரட்டி வதைக்கும் வழக்கமே இருந்தது. இவரிடம் முடியவில்லை! இவர் அதற்கு அஞ்சபவரல்ல என்பதை அவரது விழியும் மொழியும் விளக்கமாக்கிவிட்டன. மறைத்துப் பார்த்தனர், முடியவில்லை! மாற்றுத் தேடினர், கிடைக்கவில்லை! காலத்தின் கூற்று என்றும் நேற்று வந்து நாளை போகும் நேர்த்தி என்றும், கீர்த்திக்குக் காவலராகத் தம்மைத் தாமே தகுதிக் கொண்டோர் எண்ணி அவரை, அலட்சியப்படுத்திப் பார்த்தனர், முடியவில்லை. அவர்களையும் அறியாமல், அவர் பக்கம் சென்று நின்றனர்! வீரன், தனது படைவரிசையிலே இருந்த சோர்வைப் போக்கி எதிரிப்படையினை முறியடித்துப் பெற்ற வெற்றி போன்றது, பாரதிதாசன், தமிழகத்தின் பாராட்டுதலைப் பெற்றுள்ள சம்பவம்.

புரட்சிக் கவி பாரதிதாசனுக்கு தமிழகம் தனது அன்பினைத் தெரிவிக்கப் பொற்கிழி அளிக்க முனைந்தது கேட்டு, போரினால் தாக்கப்பட்டு ஜப்பானிய ஆட்சியினால் நசுக்கப்பட்டு பஞ்சமும் பிணியும் வாழ்க்கையை வாட்ட, தாயகத்தைப் பற்றிய ஐக்கம் தூக்கத்தைக் கலைக்கத்

துயருற்றுக் கிடந்தநிலையிலும், மலாய் வாழ் தமிழர்கள் தமிழ்க் கவிஞரைத் தாமும் போற்ற, பாராட்டக் கடமைப்பட்டிருப்பதை எண்ணி, துள்ளி எழுந்து, வெண் பொற் காசுகளை முன்வந்து வழங்கினர்.

25-11-45ல் சிங்கப்பூர், கிள்ளாங் வீதியில் உள்ள தமிழ் நூல் நிலையத்தில் தோழர் பழனிவேல் அவர்கள் தலைமையில் நிறுவப்பட்ட வசூல் கமிட்டியார், வாங்கிய அன்பளிப்புக்கு நமது நன்றியதிலை தெரிவித்துக் கொள்கிறோம். குறிப்பிடத்தக்க மற்றோர் உதவி, சக்தி நாடக சபை உரிமையாளர் தோழர் டி.கே. கிருஷ்ணசாமி அவர்கள் மூலம் கிடைத்தது. நாடக வசூல் தொகையாக ஓராயிரத்துக்குமேல் அனுப்பி வைத்த அன்பரை நாம் பாராட்டுகிறோம். காஞ்சி தங்கவேலர், கவிஞருக்குப் பொன்னாடை அளித்திட முன்வந்துள்ளதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்வதுடன், அவருக்கும் நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

இத்தகைய வெற்றி விழாவிலே, அவருடைய மாண்புகளையும், அவர் போற்றும் கருத்துகளையும் அது போன்ற கருத்துக்களைப் பரப்பிய பண்பினரைப் பற்றிய குறிப்புகளையும், தொகுத்து இந்த இதழை நமது காணிக்கையாக, விழாக் கொண்டாடும் தமிழ் நாட்டுக்குத் தருகிறோம். வாழ்க பாரதிதாசன்! வாழ்க திராவிடம்!

(திராவிட நாடு - 21.7.46)

# ஒப்பற்ற கவி!

பாரதிதாசன் கவிதைகள் என்னும் புத்தகம் தமிழ் நாட்டுக்கு ஒரு சிறந்த பொக்கிஷமாகும். இது, படிப்போருக்குக் கவியா வசனமா என்று மலைக்கும்படியான ஓர் அற்புதக்கவித் திரட்டு என்றுதான் சொல்ல வேண்டும்.

கவிதைகளின் அமைப்புப் பெருமை இங்ஙனமிருக்க, கவிகள் கொண்ட கருத்துக்களோ முற்றிலும் சமூக சமய சீர்திருத்தக் கருத்துக்களேயாகும். சிறப்பாக மூட நம்பிக்கை களை யகற்றும் தன்மையில் புரோகிதம், பார்ப்பனியம், கடவுள்கள், பெண்ணடிமை, விதவைக் கொடுமை, ஜாதிபேதம், பொருளாதார உயர்வு தாழ்வு ஆகியவைகளைக் கண்டித்தும், மறுத்தும், அவைகளிலுள்ள சூழ்ச்சிகளையும் புரட்டுகளையும் வெளியாக்கியும், மிகமிகப் பாமர மக்களுக்கும் பசுமரத்தில் இணி அறைந்ததுபோல், விளங்கும்படியும், பதியும்படியும் பாடப்பட்டிருப்ப துடன், கவி நயமோ புலவர்களுக்கு ஓர் நல்ல விருந்தாகவும் அமைந்துள்ள அரும்புத்தகமாகும்.

தோழர் பாரதிதாசன் அவர்கள் தமிழ்நாட்டிற்குப் புதியவரல்ல. அவர் சென்ற 10 ஆண்டுகளாகச் சுயமரியாதை இயக்கத்தில் தீவிரமாய் உடுபட்டு வருகின்றார். மனித சமுதாயத்தின் ஒற்றுமைக்கும், இன்றயமையாத புரட்சியான பல சீர்திருத்தங்களை ஆதரிப்பது மட்டுமின்றி, அவைகளை ஜனசமூகத்தில் பல வழிகளிலும் பரப்பவேண்டுமென்ற ஆசையைக் கொண்டவர். சிறப்பாகவும், சுருக்கமாகவும் கூறவேண்டுமானால் பாரதிதாசன் அவர்கள் சுயமரியாதை இயக்கத்தின் ஒப்பற்ற கவி என்றுதான் கூற வேண்டும்.

பெரியார் இராமசாமியின் பெரும்படையின் முன்னணி வீரர் பாரதிதாசன் பெரியார் பெரும்படை பல களங்களிலே, போரிடுவது, அரசியல் அரங்கம் அதிலே மிகச்சாதாரணக் களம், சமுதாய, மத, பொருளாதாரக் களங்களிலேயே,

வேலை அதிகம். ஆனால் இவை அத்தனையையும், ஒருங்கே மயக்கி, கள்ளங் கபடமற்றவரைச் சூறையாட, கலைத்துறையிலே புகுந்தனர் கெடுமதியினர், அவர்தம் அகவலும் வெண்பாவும், புராணமும் இதிகாசமும், பாடலும், கதையும், கூத்தும பிறவும், முன்னேறிச் செல்லும் தமிழரைத் தள்ளுவதற்காக வெட்டப்பட்டு, பச்சிலையால் மூடப்பட்ட, படுகுழிகளாயின. சாதிச்சனியன் தொலைய வேண்டும் என்ற சண்டமாருதப் பிரசாரம் ஒருபுறம் நடைபெறும், மற்றோர் பக்கமோ, கலை என்ற பெயர்கூறிச் சாதியை நிலைநாட்டுவர் கபடர்கள். கலைத்துறை தமது ஆதிக்கத்தில் இருக்குமட்டும், பாடுபாடும் தமிழரின் கண்ணில் மண்தூவிக் காரியத்தைச் சாதித்துக் கொள்ளலாம் என்ற நம்பிக்கை நயவஞ்சகர்கட்கு இருந்தது. தன் மதிப்பு இயக்கம், தத்தளித்துக் கொண்டிருந்தது. இந்தத் துறையிலே இருந்து வேகமாக வெளிவந்த கணைகளைத் தங்கமாட்டாமல், ஒரே ஒரு மார்க்கமே இருந்தது கலையை வெறுத்து ஒதுக்குவது, அல்லது கலையின் நிலையை நிந்திப்பது, கலை சுயநலமிகளின் வலை என்று கண்படிப்பது. இது, ஏற்கனவே ஏஅகு உள்ளம் கொண்டவர்களுக்குப் போதுமானதாக இருந்தது. ஆனால் புதியவர்கள், பாதையின் ஓரத்தில் நிற்பவர்கள், தீர்மானத்துக்கு வராதவர்கள் ஆகியோருக்கு, வெறும் பிரச்சாரம் போதவில்லை. அவர்களை, நேர்வழியிலிருந்து திருப்பிவிட கலை இருந்தது. முற்போக்காளரின் எதிரிகளிடம் பொன்னை உருக்கி வார்த்தது போலிருந்தது, என்ற கலைமெருகு காட்டி ஐயருக்குத் தட்சணை கொடுத்துத் தாளில் வீழ்ந்திடும் கட்டத்துக்குக் கலை, தமிழரை இழுத்துச் சென்றது. தமிழ்மொழியிலே ஆர்வம் அதிகரிக்க அதிகரிகக், இந்த ஆபத்தும், உடன் வளரலாயிற்று. ஆரியத்தோடு தன்மான இயக்கம் தொடுத்த போரின் பயனாகக் காளிதாசன் கம்பனுக்கு இடமளிக்க நேரிட்டது பவபூதி இளங்கோவடிகளுக்கு வழிவிட்டு விலகினார், வடமொழிப் புலவர்கள் அவர்தம் காவியங்கள் முன்வரிசையிலிருந்து நீக்கப்பட்டு, தமிழ்புலவர்கள் இங்கு அமர்ந்தனர். தன்மான

இயக்கத்தவரின் கண்ணும் கருத்தும், களிப்படைந்தன, காட்சி மாறுவதை கண்டு, செந்தமிழ் தழைத்தது. மகா ஜனங்களே! மறைந்துவிட்டது, பெருங்குடி மக்களே! வந்தது. அக்ராசனாதிபதி அவர்களே என்ற வார்த்தை மறைந்து தலைவர் அவர்களே என்ற தமிழ் வந்தது. விவாஹ சுபமுகூர்த்தம், திருமணமாயிற்று, வதூவரவர்கள், மணமக்களாயினர், நமஸ்காரம், வணக்கமாயிற்று, புஸ்தகம், நூல் என்ற தமிழ்மணம் பெற்றது, புஷ்பம் மலராகி ஸ்ரீமதி திருவாட்டியாகி, எங்கும் தமிழ்மணம் பரவிற்று. ஆனால் அகமகிழ்ச்சிக்குக் காரணமாக இருந்த இதே மாறுதல், ஆபத்தையும் கொண்டு வந்து சேர்த்தது, கலை ஆர்வம் பிறந்தது, அந்த ஆர்வத்தை ஆரியம் தனக்குச் சாதகமாக்கிக் கொண்டது. என்ன செய்வது? பூங்காவை அமைத்தோம், ஆனால் புன்னமர நிழலிலே நச்சுப்பூச்சிகள் உலவுகின்றன! குளம் வெட்டினோம், முதலை குடியேறி விட்டது! தமிழ் தழைக்க உழைத்தோம்! அதனுடன் சேர்ந்து பழமையை நுழைத்தனர் தமிழ்ப பகைவர்கள் ஒன்று அடியோடு கலையை வேறுத்துத் தள்ளவிடவேண்டும் அல்லது கலைக்கு வயப்பட்டுத் தன்மானக் கருத்தை இழந்து பாழ்படவேண்டும், இந்நிலையிலே, ஐக்கமுற்றிருந்த போதுதான், கனகச்பபு ரத்தினம் சஞ்சீவி பர்வதத்தின் சாரல் பக்கம் நம்மை அழைத்துச் சென்றார். கலை, ஒரு கருவி, அதனை நாம், நற்கொள்கைகளுக்காகப் பயன்படுத்த முடியும், என்று நமக்குரைத்தார், கலைக்களம் புகுந்தார், கவிதைகளை வீசினார் திறமையுடன் வெற்றி பெற்றார். இதோ நமக்கு ஓர் மாவீரர் கிடைத்தார், ஆவரிடம் கலைப்பகுதியை ஒப்படைப்போம், கவலையைவிட்டு, நம்பிக்கை பெற்று, வெற்றி நிச்சயம் என்ற உறுதியுடன், என்று பெற்று, வெற்றி நிச்சயம் என்ற உறுதியுடன், என்று தன்மான இயக்கத்தவர் கூறினர். “அந்த உவமை” என்று பழைமை விரும்பி, பெருமூச்சுடன் கூறுவார், யாரோ ஓர் கவியை நினைவிலே கொண்டு, “கண்ணாடிக் கன்னத்தைக் காட்டி ஏன் உள்ளத்தைப் புண்ணாக்கிப் போடாதே! போ! போ! மறைந்துவிடு” என்று இரண்டடி எடுத்து விடுத்தால், கலை உள்ளம் படைத்தவர்,

கண்களிலே புத்தொளியுடன், நம்பக்கம் திரும்பி, “தம்பி! யார் ஆக்கவி!” என்று கேட்பார், அப்போது நாம், பெரியார் சொன்னவண்ணமே, “அவரா? அவர், சுயமாரியதை இயக்கத்தின் ஒப்பற்ற கவி. புதுவை புரட்சிக் கவிஞர்” என்று கூறுவோம், பூரிப்புடன்.

புரட்சிக் கவிஞரின் தோற்றம், தன்மான இயக்கத்தின் வரலாற்றிலே முக்கியமான கட்டம், கள்ளி காளானையும், முள்ளையும் கல்லையும், உழைப்பெனும் ஏர்கொண்டு, பெயர்த்தெறிந்த பெரியாருக்கு, உறுதுணைபுரிய, கவிதை மழைபொழிந்து, வயலை வளமாக்கியவர், பாரதிதாசன், கரம்பு வயலானது ஈரோட்டு வீரரால், வயல் வளமானது, புதுவை வீரரால்! ஒரு கொள்கையின் வளர்ச்சிக்கு, நீதி, அதனைத் திறம்பட எடுத்துரைக்கும் திறமை, அந்தத் திறமையை விடாது பயன்படுத்தும் பண்பு, இவை மட்டும் போதாது, இவைகள் யாவும் சேர்ந்தாலும், வைரம் ஒளிவிட்டுக் காட்ட, நன்கு தீட்டப்பட வேண்டுவதே போல, அந்தக் கொள்கைக்கு கலை அழகு ஏற வேண்டும். அதனைத் தந்தவர், பாரதிதாசன்! நாம் நுழைய முடியாதோ என்று ஐயத்துடன் இருந்த களத்திலே, தன்னந்தனியே சென்று தருக்கரும் தலை கவிழும் வண்ணம், வெற்றிபல பெற்றவர், பத்து ஆண்டுகளுக்கு முன்பே, பெரியாரன் பாராட்டுரையைப் பெற்றார். கலைத்துறையிலே தன்மான இயக்கம் வெற்றிமுரசுடன் நுழைந்தது.

(திராவிடநாடு 21-7-46)

# கனவில் கவிதா மண்டலம்!

அறிமுகம்

என்னை, நானாகவே உங்களுக்கு அறிமுகப்படுத்திக் கொள்கிறேன். உங்களுக்குக் கொஞ்சம் ஆவலாக இருக்குமல்லவா, யாரப்பா இவன் கனவிலே கவிதா மண்டலத்தைக் கண்டவன் என்று தெரிந்து கொள்ள! சொன்ன உடனே, “ஓ! நீயா!” என்று நீங்கள் தெரிந்து கொள்ளக்கூடிய, மேல்நிலைகட்காரனல்ல! இவர்தான் எட்டுக்குட்டி மிட்டாதாரர் என்று, யாரையாவது அறிமுகப்படுத்தினால், உடனே முகத்திலே, ஒளிவிடும், கைகூப்பும், கனிவு வழியும், முன்னாலே அவரைப் பற்றிக் கேள்விப் பட்டிராவிட்டால் கூட, “ஆஹா! ஆனேக காலமாக, மிட்டாதாரரைப்பற்றிக் கேள்விபட்டிருக்கிறேன் என்று கூறத்தோன்றும் சகஜம், நானோ அப்படி ஒரு மேட்டுக் குடியினனல்ல, நான் ஒரு சாமான்யன் என்னை நீங்கள் காணவேண்டுமானால், சிரமப்பட வேண்டியதில்லை. நிலக்கண்ணாடி எதிரேபோய் சற்றே நில்லுங்கள் - கண்ணாடியிலே தெரிகிறதல்லவா உருவம்! - அது நான்தான்!!

தூங்குமுன்

கனவு கண்டேன் என்றால் தூக்கத்தில்தான்! தூங்குமுன் என்ன செய்தேன்? என்ன செய்கிறோம்? ஏதேனும் வேலை, வாழ்வை நடத்த ஒரு தொழிலில் உடுபடுகிறோம். அதுபோலிருந்த நான், அன்றோர்நாள், ஒய்வு பெற்றேன், நண்பர் சிலர் கொடுத்து புத்தகங்களைப் படித்தேன், மாலையிலே கொஞ்சம் உலவவும் சென்றேன், உள்ளம் களிப்படைய அதுவே வழி என்று எண்ணினேன், வீடு திரும்புபோதோ, விசாரம் என்ற பெரிய பாரத்தைச் சுமந்து கொண்டுவந்தேன், சாய்ந்தேன், புரண்டேன், தூங்கினேன் நெடுநேரத்துக்குப் பிறகு, நித்திரையில் கண்டேன், கவிதா மண்டலத்தை.

விசார மூட்டை

உலகமென்றால் நமது அரண்மனை உத்யானவனம் போலத்தான் இருக்கும் என்று எண்ணிக்கொண்டிருந்த

சித்தார்த்தருக்கு உள்ளத்தை உருக்கும் துக்கக்காட்சிகள் தெரியவே, அவர் துறவு பூண்டார் என்று கூறுகிறார்களே, அதுபோல அல்ல, ஏன் நிலை அப்படி இருந்தால்தான் புத்தராகி இருக்கலாமே! உலகிலே உள்ள கஷ்டங்கள் தெரியும், என்பாடும் அதுதான், ஆனாலும் அன்று என்னவோ அந்தக் கஷ்டங்கள் அவ்வளவும் உருண்டு திரண்டு ஒருருவாகி ஏன் எதிரே நின்று மிரட்டுவது போலாகிவிட்டது. எங்கு பார்த்தாலும் உழைப்பு! யாரைப் பார்த்தாலும் உழைப்பு! வேலை! வேலை! ஐதோதோ செய்து கொண்டே இருக்கிறார்கள், ஓய்வின்றி, இவ்வளவு ஆலைச்சலும், எதற்கு? வாழ்வதற்காம்! என்ன வாழ்க்கை, அவர்களுக்கு!

ஒரு மாது, அறைக்கிறாள், ஒரு மாது சுமந்து செல்கிறாள், ஏதோ அவன் மண்பாண்டங்கள் செய்கிறான், மற்றொரு மாது ஏதோ இடித்துக் கொண்டிர்ககிறாள், அங்கொருவன் கூடைமுறம் முடைகிறான், மற்றொருவன் அங்கத்தை வளர்க்கப் பிச்சை எடுத்துப் பங்கப்படுகிறான், இடுப்பில் குழந்தையுடன் எதையோ பாடிக் கொண்டு, பிச்சை எடுக்கும் பிழைப்பை நடத்துகிறாள், மற்றோர் மாது, எங்கும் வேலை மயம், எல்லாம் வாழ்வதற்காம்! என்ன வாழ்க்கை இது!

கொட்டும் மழை, நடுக்கும் குளிர், கருக்கும் வெயில், எதுதான் பாடுபடுபவனைத் தடுக்க முடியும்! பருவத்தின் கர்வச்சேட்டையை அவன் பயத்தோடு பார்ப்பதில்லை. வாடை வீசினால் என்ன! அவன் இயற்கையின் கோபத்தைக் கண்டு அடங்கு வதில்லை! ஓயமாட்டான், உழைப்பான்! ஒய்ந்தால் சாய்ந்தான்! வேலை செய்தாக வேண்டும், மூச்சு இருக்குமட்டும், மூச்சு இருக்க!

இரவின் இனிமைக்கண்டு சொக்குவானா? இல்லை! நிலவின் ஓயில், அவனை நிறுத்துமா? இயற்கை எனும் உல்லாசிக்கு, கவியும் வீரனும், ஓவியனும் அடிமையாவர்! அவன், உழைப்பாளி! அடிமையானவன்! இவ்வளவு வேலைக்குப் பிறகும் அவன் காண்பதென்ன?

வேலை! வேலை! வேலை!!
என் வேலைக்கு ஒய்வுமில்லை, ஒழிவுமில்லை.
ஆனால் என் வேலைக்குக் கூலி என்ன?
வைக்கோற்பாய் - ரொட்டித்துண்டுகள்
கந்தல் உடை - ஓடிந்தபீடம்
ஒழுக்குக்கூரை - ஒன்றும் விரியாத்தரை
வெறுஞ்சுவர் - சித்திரமும் இல்லை
சிற்சில சமயம் சுவரில் ஏன்நிழல் விழும்
அதுதான் சித்திரம்! அதுதான் ஆறுதல்!

என்று, நான் முன்பு படித்த ஒருகவிதை நினைவிற்கு வந்தது. விசாரம் பெரும்பாரமாயிற்று வீடு திரும்பினேன், படுத்தேன், புரண்டேன், கனவிலே கவிதா மண்டலம் சென்றேன்.
ஏழுப்பினார்

பாடுபட்டு அலுத்தவர்கள் தூங்கிக் கொண்டிருக்கக் கண்டேன் ஏன் முதுகைக் தட்டிக் கொடுத்தார் ஒரு முதியவர் ஆச்சரியத்தை என்னென்பது கவி அரசர் இக்பால் என்னைத் தட்டியவர்.

“தூங்குகிறார்கள்” என்றார் அவர். ஆமாம் என்றேன் நான், என்னைச் சுட்டுவிடுவதுபோல் பார்த்துவிட்டு, மறுகணம், முகத்திலே கேலிப்புன்னகை தோன்ற நின்றார்.

“முதலாளியிடம் இரத்தினம் இருக்கிறது” என்றார். இக்பால், ஆமாம்! இருக்கிறது!! என்று கூறிக்கொண்டே பாட்டாளி படுத்திருந்த இடத்தில் கிடந்த கற்களைக் கண்டேன், வெட்கமும் துக்கமும் பிடித்தாட்டின.

“அந்த இரத்தினம், எப்படிச் செய்யப்படுகிறது தெரியுமா?” என்று கேட்டார் கவி எப்படி? என்ற ஏன் விழி கேட்டது அவரை.

இந்தத் தொழிலாளியின் இரத்தத்தைக் கொண்டு என்றார் இக்பால் ஏன் இருதயத் துடிப்பே நின்றுவிடும் போலாகி விட்டது அந்த ஆழ்ந்த பொருள்ள வார்த்தையைக் கேட்டு உண்டான அதிர்ச்சியால் தொழிலாளியைப் பார்த்தார்

இக்பால், என்னை நோக்கினார், பண்ணை முதலாளி பயிரிடும் பாட்டாளியின் வாழ்நாளைப் பாழாக்குகிறான்! மணிமுடி தரித்த மன்னன் இந்த ஏழைகளைக் கட்டிப்போகிறான், நுகத்தடியில்! என்றார். ஆமாம் என்றேன் நான் பெருமூச்சுடன் அட்டூழியத்திலே தள்ளப்படுகிறார்கள் இந்த மக்கள் என்றார். உண்மைதான் என்றேன் நான், கண்ணீர் புறப்பட்டு விட்டது. ஒரு கேலிச்சிரிப்புடன் இக்பால் இவர்கள் தூங்குகிறார்கள் என்றார் கன்னத்திலே சுரீல் என்ற, கண்ணீர் சூடாகி வழிந்ததால் அருகே சென்றார், தட்டி ஏழுப்பினார் தரித்திர கொட்டிலிலே தத்தளிக்கும் அந்த மக்களை எழுந்திடு என்றார், எழுந்தனர், கண்களைத் துடைத்தவண்ணம் நின்றனர்.

பாமரமனிதன்
பாராளும் காலமிது
பழங்காலச் சின்னங்களைப்
பாரிலே யகற்றுங்கள்!
வயலிலே விளையும் உணவு
விவசாயிக்கு உரிமையில்லை என்றால்
அவ்வயலிலே நிற்கும்
அவ்வளவு கதிர்மணியையும்
அழித்துப் பொசுக்குங்கள்.

என்றான் இக்பால், வீரமுழக்கம் செய்தார். ஒரு நிமிடம் திகைத்துப்போய் நின்றனர் ஆம்மக்கள். பிறகு, மெள்ள, ஆனால் சோகத்துடன் அவரைப் பார்த்துக் கூறினர், ஐயனே! நாங்கள் பலமற்றவர்கள் என்று இக்பால் முகம் கோபத்தால் சிவந்தது, பலமற்றவர்கள்! நீங்களா? சரி சில சமயங்களிலே பலமற்றவர்களின் உடலிலேயே சிம்மத்தின் இரத்தம் ஓடுவதுண்டு. நீர்த்துளியிலே நெருப்பின் தன்மை பிறப்பது உண்டு. எழுந்திடுக! என்றார். எழுந்தனர், அவரைப் பின் தொடர்ந்தனர் நானும் உடன் சென்றேன்.

***

இடித்துரைத்தார்

கவியரசர் இக்பால் முன்னால் செல்கிறார், பின்னே நடக்கிறது பாட்டாளிக் கூட்டம், உடன் செல்கிறேன் நான், உலவிக்கொண்டிருக்கிறார் ஷெல்லி, பாட்டாளிக் கூட்டத்தைக் கண்டார், முகத்திலே இருந்த பொலிவு கோபக்குறியாக மாறிவிட்டது. கவி இக்பால், அவர்களை, ஷெல்லியின் எதிரே நிற்கவைத்தார், சுட்டிக் காட்டினார் அவர்களை புருவத்த நெறித்தார் ஷெல்லி. இம் என்பவர் போல் தலையை ஆசைத்தார் இக்பால், விசாரணை ஆரம்பமாகிவிட்டது.

“செல்வான்களால்தானே நீங்கள் சீரழிக்கப்படுகிறீர்கள்?” என்று கேட்டார் ஷெல்லி, மிருதுவான குரலில் இம் என்றனர் பாட்டாளிகள்.

அப்படிப்பட்டவர்களுக்காக ஏன் நீங்கள் உழவு வேலை செய்கிறீர்கள்? உங்களைத் துன்புறுத்துபவருக்கு இடை நெய்து தருவது ஏன்? என்று சற்று உரத்தக்குரலில் கேட்டார் ஷெல்லி, அவர்கள் வாய்மூடிக் கிடந்தனர்.

இவ்வளவு, அவர்களுக்காக உழைக்கிறீர் களே, உங்களிடம் நன்றி காட்டினார்களா? என்று ஷெல்லி குரலை மேலும் உயர்த்திக் கேட்டார். இல்லையே! என்னர் ஐக்கத்துடன் அப்படிப்பட்ட நன்றிகெட்டவர்களுக்கு நீங்கள் இயுட்காலம் வரை பாடுபடுகிறீர்கள்! ஏன்? என்று முழக்கமிட்டார் ஷெல்லி.

அவனிடம் ஆயுதமிருக்கிறது, எங்களை அடக்க முடிகிறது. அவனிடம் விலங்கு இருக்கிறது எங்கள் மேல் அதனைப் பூட்டுகிறான் என்றனர் பாட்டாளிகள்.

உடலைவாட்டி உழைத்து உற்பத்தி செய்கிறீர்கள் பொருளை. அவன் அப்பொருளைப் பறித்துக் கொண்டு போகிறான். அதற்காகவே, ஆயுதங்களையும் விலங்குகளையும் வைத்துக் கொண்டிருக்கிறான் என்று ஷெல்லி விளக்கமுரைத்தார். தலையை ஆசைத்தனர் பாட்டாளி மக்கள். உங்கள் பொருளைப் பறிக்க, ஆயுதங்களையும் விலங்கையும் உபயோகிக்கிறார்களே அந்த முதலாளிகள், அந்த ஆயுதங்களையும்

விலங்குகளையும் செய்து தந்தவர்கள் யார்? என்று கேட்டார். ஏன் நாடி நரம்பு அவ்வளவிலும் தேள் கொட்டினது போலாகிவிட்டது. பாட்டாளிகள் தலையைத் தொங்கவிட்டுக் கொண்டனர்.

இதோ பார் அப்பா! இப்படி உழைக்கிறீர்களல்லவா? உணவு உண்டா? ஒய்வு? குடி இருக்க இடம் உண்டா? சுகம்? சமாதானம்? காதலைக் கண்டது உண்டா? பயந்து பயந்து பாடுபடுகிறர்களே இப்படிப் பாடுபட்டுப் பெறுகிற பொருள் என்ன? எதைப் பெற்றீர்கள்? என்றார் ஷெல்லி எனக்கு மட்டுமல்ல எதிரே நின்ற ஏழைகள் கூட்ட்மே விம்மலாயிற்று வேகமாக முன்னேறினார் கவி.

“நீங்கள் விதைக்கிறீர்கள் - ஆயலான் ஆறுக்கிறான்! நீங்கள் நெய்கிறீர்கள் - அவன் அணிந்து கொள்கிறான்! நீங்கள் உற்பத்தி செய்ய, அவன் அனுபவிக்கிறான் என்று மளமளவென நிலைமையை விளக்கினார். நீர்வழியும் விழியுடன் நின்றனர் பாட்டாளிகள். ஒரு பெரிய கேலிச் சிரிப்புடன் கூறினார், இவ்வளவுதானா? உணவு உடை இவைகளை மட்டுந்தானா நீங்கள் உண்டாக்கி அவனிடம் தருகிறீர்கள்? உங்கள் மீது அவன் உபயோகிக்கும் ஆயுதங்களைக்கூடத்தான் நீங்கள் செய்து அவர்களிடம் தருகிறீர்கள்! என்றார்.

“ஆமாம்! ஆனால் நாங்கள் என்ன செய்வது? அவன்தான் கொள்ளை கொள்கிறான் நாங்கள் உற்பத்தி செய்த பொருள்களை என்றனர் பாட்டாளிகள். அது தெரிகிறதல்லவா? சரி! இனி விதையுங்கள், ஆனால் அவனை ஆறுக்கவிடாதீர்! ஆயுதம் செய்கிறீர்களா, செய்து அவனிடம் தராதீர்கள்! என்றார் ஷெல்லி. அந்தப் புரட்சிகரமான பேச்சைக் கேட்டுத் திடுக்கிட்டு நின்றனர் தொழிலாளிகள். ஓஹோ! மீண்டும் தயக்கம் வந்துவிட்டது தொழிலாளர்களிடையே என்பதைப் புரிந்து கொண்டார் கவி. உடனே, மறுபடியும், அவர்களுக்கு அவர்தம் நிலைமையைக் கவனப்படுத்திவிட வேண்டும் என்று தீர்மானித்து விட்டார் போலிருக்கிறது. உடனே கூறலானார், நீங்கள் கட்டிய மாளிகையிலே, அவர்கள்

வாழ, நீங்ள் குடிசைகளிலே குமுறுகிறீர்கள். நீங்கள் செய்த விலங்கை நீங்களே பூட்டிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் செய்து தந்த வேல், உங்கள் மீதே பாய்கிறது என்றார். தொழிலாளர்கள் துயருடன், வெட்கமடைந்து நின்றனர். ஷெல்லியின் முகம் கோபாத்தால் ஜொலித்தது. என்ன செய்வதய்யனே! என்று கேட்டனர் ஷெல்லியை நோக்கி ஷெல்லி கேலிச் சிரிப்புடன், என்ன செய்வதா? மண் வெட்டி இருக்கிறதல்லவா உங்களிடம் என்று கேட்டார். இருக்கிறது என்றனர். நான்கூடக் கொஞ்சம் பயந்து போனேன். ஷெல்லி சவக்குழி தோண்டி அதிலே அக்ரமக்காரரைப் போட்டுப் புதைக்கச் சொல்லிப் பாட்டாளிகளை ஏவிவிடுகிறார் போலும் என்றெண்ணி தொழிலாளர்களும், என்னைப் போலவே கொஞ்சம் திகைத்துப் போயினர் என்று தெரிந்து கொண்டேன். ஷெல்லி. பேசலானார், என்னைத் தூக்கிவாரிப் போட்டது அந்தப் பேச்சு உங்களுக்குச் சவக்குழியை நீங்களே வெட்டிக் கொள்ளுங்கள்! உங்கள் பிணத்தின்மேல் மூடுவதற்குச் சல்லாத் துணியையும் நீங்களே நெய்து கொள்ளுங்கள் என்றார் கவி. உலகிலே எல்லாவிதமான ஒலி, ஒளியாவும் அசைவற்று நின்றவிட்டது போலாகிவிட்டது அந்தப் பேச்சினால் நீங்கள் பிறந்த நாடு இருக்கிறது இங்கு உங்களுக்குச் சுடுகாடு கிடைக்கும், கவலைப்படாதீர் என்றார். வாழ்வு இல்லை! வதைகிறீர்கள்! வதைக்கப்படுகிறீர்கள் யார் வதைக்கிறார்களோ அவர்களின் வாழ்வுக்காகவே உழைக்கிறீர்கள். இந்த வாழ்வுதான் உங்கட்கு என்றால் சாவுமேல் அல்லவா? சித்திரவதையைப் பொறுத்துக் கொண்டிருப்பதைவிட, தற்கொலை நல்லதல்லவா! பிறருக்குப் பயன்பட்டு, வாழ்வுகெட்டு இருக்கும் மக்களே! ஏன் உயிருடன் இருக்கிறீர்கள், மாண்டு தொலையுங்கள்! நாடு சுடுகாடு தரும், சுக வாழ்வு தராது! ஷெல்லியின் மொழி, இவ்வளவையும் இதற்கு மேலாகவும் தெரிவித்தது. பாட்டாளியின் முகம், பயம், சோகம், வெட்கம், திகைப்பு எனும் பல்வேறு உணர்ச்சிகள் கூடிப் போரிடும் களமானது கண்டார் ஷெல்லி தன் சொல் வேலை செய்யத் தொடங்கிவிட்டதைத் தெரிந்து

கொண்டார் இடித்துரைத்தோம், இவருக்கு வீரமும் உறுதியும் வருமளவு என்ற கண்டு கொண்டார். விம்மல், குமுறல் முணுமுணுத்தல், இடையிடையே இவேசக்குரல் சூளுரைபோன்ற ஒலிகள் கிளம்பின, பாட்டாளிகளின் கூட்டத்திலேயிருந்து, முடியுமா? என்ற கேள்வி எல்லா ஒலிகளையும் மீறிக் சந்தேகப்படுகிறீர்கள் என்று ஆதிக்காரரின் பிடியிலிருந்து விலக முடியுமா? அவர்களை எதிர்க்க முடியுமா? அவர்கள்.. என்று இழுத்தார்போல் பேசினர் பாட்டாளிகள்.

கொடுங்கோலர்கள், என்னென்ன செய்து விடுவாரோ என்றுதானே யோசிக்கிறீர்கள்? குத்தட்டும், கொல்லட்டும், வெட்டட்டும், அறையட்டும், அரியட்டும், இஷ்டம்போலச் செய்ய இடமளியுங்ள் என்றார். என்ன நேரிடுமோ பிறகு என்ற கவலைப்படுகிறீர்களா? வெட்கப்பட்டுத் திரும்பி ஓடுவர் கொடுங்கோலர்கள் என்றார் கவி.

“அடிமைத் தளைகள் சிதறும், உடலில் ஒட்டிய பனித்துளி சிதறுவதுபோல” என்று வீரமொழி புகன்றார். அதுகேட்டு இவேச உணர்ச்சி உண்டாயிற்று, ஆனால், தீர்மானம் செய்து கொள்ளும் நிலை பிறக்கவில்லை. எப்படி அது சாத்தியமாகும்? கொடுங்கோலரை விரட்ட அவர்கள் கொல்ல வந்தாலும், சரி என்று சாவையும் வரவேற்று நிற்க, பிறகு அடிமைத் தளைகளை உடைத்தெறிய நம்மால் எப்படி முடியும்? என்ற சந்தேகமே, பாட்டாளிகளன் பரிதாபகரமான முகத்திலே இருந்திடக் கண்டேன் கவி அதனைக் கண்டார். அவ்வளவு சந்தேகத்தையும், திகைப்பையும் ஓர நொடியில் போக்கக் கூடியதும், உலகின் கொடுங்கோலரின் எண்ணத்தைத் தவிடுபொடியாக்கக் கூடியதுமான வாசமொன்று சொன்னார் நீங்கள் பலர், அவர்களோ சிலர்! என்றார். கண்டறியதான கண்டேன், கேட்டறியா அவ்வுரை கேட்ட மக்கள், உலகே எதிர்ப்பினும் சரி, என்ற உறுதியுடன் நிற்கக் கண்டேன்.

எங்கும் போர் ஒலி

பற்பல பக்கங்களிலிருந்தும் போர் ஒலி கிளம்பிவிட்டது. அந்தப் பாட்டாளி மக்களின் உள்ளத்தைக் கிளறும் விதமாக.

ஒயோ! கடவுளே! ஏன் உணவு இவ்வளவு அதிக விலையாக இருக்கிறது? மனிதனின் சதையும் இரத்தமும் ஏன் இவ்வளவு மலிவு? என்றார் ஒரு கவி, பட்டினிச்சாவு, தற்கொலை, இவைகளுக்கு என்ன பொருள் என்பது அப்போதுதான் எனக்கு விளங்கிற்று. உலகம் என்ற இந்தக் கொடிய மார்க்கட்டிலே உணவின் விலை, மனிதனின் உயிரின் விலையைவிட அதிகம்! ஏன்? என்று கேட்டார் ஒரு கவி, ஏன்? என்று கேட்டனர் பாட்டாளிகள் ஏன்? என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன் ஏன்? என்று உங்களைக் கேட்கிறேன்! உலகாள்பவர்களை நோக்கிக் கேளுங்கள்! ஏன், என்று உலகின் முதல்வனையே கேளுங்கள்.

“ரோஜா மடிந்திட முட்கள் வாழ்வது ஏன்?” என்ற கேட்டார் மற்றோர் கவி. இந்த ஒலிக்கு இடையே ஒரு கீச்சுக்குரல் கேட்டது.

“ஆண்டவனைத் தொழலாம் வாரீர். அவர் நமது விண்ணப்பத்தை ஏற்றுக் கொள்வார்” என்று யாரோ கூறினார்.

“இரும்புச் சக்கரங்களின் இறைச்சலில் எங்கள் விண்ணப்பம் இறைவன் செவியில் ஏறுமோ என்று கேட்டார் கவி.

“எல்லாம் சரி! இம்சைக்கு ஆளானோம். உண்மை! நாம் பலர் அவர்கள் சிலர். உண்மை! நாம் உழைக்கிறோம், அவர்கள் வாழ்கிறார்கள். உண்மை! ஆனால் ஏன் நாம், இந்த நலையில் வந்தோம். ஏன் இந்தக் கொடுமையை ஏற்றுக் கொள்ளநேரிட்டது? எப்படி நாம்? ஏமாளிகளானோம்? என்று கேட்டான் ஒரு பாட்டாளி. இக்பால், ஷெல்லி மற்ற பல கவிவாணர்கள், அப்போது அங்கு இல்லை! பாட்டாளிகள், தங்களின் நிலைமைக்குக் காரணம் என்ன என்பதைக் கண்டறியத் துடித்தனர்.

சுற்றுமுற்றும் பார்த்தனர், நானும் அதே சந்தேகத்தால் தாக்கப்பட்டு, நின்றேன் ஒரு உறுதியான குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன், புரட்சிக் கவிஞர்ம பாரதிதாசன் பண்ஆசைத்துக் கொண்டுவரக் கண்டேன். பாடுபட்டீர்கள், பருக்கை இலாதொரு, பட்டியின் மாடென வாழ்கின்றீர் என்றார் கவிஞர். அதைத்தான் இப்போது தெரிந்து கொண்டோம்! ஆத்திரமும் அடைந்துள்ளேம் என்றனர் பாட்டாளிகள் புரட்சிக் கவிஞர் மேலும் பாடினார்.

"மதக் கேடர்கள் காலினில் வீழ்கின்றீர்
ஒண்ட வீடும் இலாமலே தாழ்கின்றீர்"
என்றார். ஆமாம், ஒண்டக் குடிசையும் இல்லை இழிவான நிலைமைதான். ஆனால், எங்களுக்குப் புரியவில்லை, மற்றவர்கள் கூறவும் இல்லை. எங்கள் சக்தி, அது பிறரால் சுரண்டப்படும் விதம், அவர்கள் எதிர்க்க வேண்டியதன் அவசியம், எதிர்த்தால் வெற்றி கிட்டும் என்ற உறுதிமொழி, இவைகளைப் பலரும் கூறவிட்டனர், ஆனால் எங்கள் மனதைக் குடைகிறது ஒரு சந்தேகம், அதை தெளிவாக்க வேண்டும். நாங்கள் ஏன் இந்தக் கதிக்கு ஆளானோம்? என்ன காரணம், எங்கள் ஏமாளித்தனத்துக்கு, என்று கேட்டனர்.

ஏழையின் துயருக்குக் காரணம், பாடுபட்டும் அதன் பலனை அவன் பெற ஒட்டாதபடி பிறர் சுரண்டுவது இது புரிந்துவிட்டது, எனக்கும் முதலைக்காலைப் பிடித்து இழுத்துக் கொண்டு போயிற்று, ஆள் இறந்தான். ஆனால் முதலை, எப்படி இவனைப் பற்ற முடிந்தது! இவன் அது உலவும் ஓடையிலே இறங்கினான்! அதுபோலக் கொடுங்கோலர்களால் கொடுமைப்படுத்தப்பட்டதால் ஏழை துயருறுகிறான். புரிகிறது! ஆனால், ஏன், அந்த ஏழை, கொடுங்கோலருக்கு இடமளித்தான், தலை சாய்த்தான்? புரியவில்லை!

பாட்டாளிகள், அதனைத்தான் கேட்டனர், பாடுபட்டீர்கள் பட்டியில் மாடென உள்ளீர் என்று பண்பாடிய பாரதிதாசனைப் பார்த்து.

“மத ஓடத்தில் ஏறிய மாந்தரே!

பலி பீடத்தில் சாய்ந்தீரே!”

என்று பதிலிறுத்தார் பாரதிதாசன். மின்னாசர வேகத்திலே உண்மை பாய்ந்தது, எங்கள் நெஞ்சிலே ஆமாம்! ஐதோ ஓர் இடம், பாவக்கடலைத் தாண்ட இதிலே ஏறிக் செல்வோம் வாரீர் என்று முன்பு ஓர்நாள் அழைத்தனர். ஏறிக் கொண்டோம். தன்னலம் என்ற தீவிலே கொண்டு வந்து தள்ளிவிட்டனர். அங்கு முதலாளித்துவ பலிபீடம் அமைக்கப்பட்டிருக்கிறது. அந்தப் பலிபீடத்திலேதான் சாய்ந்தோம். இந்தப் பழங்கதையை மறந்து, ஏதேதோ எண்ணி நொந்தோமல்லவா! ஆம்! மத ஓடத்தில் ஏறினோம்! பலிபீடத்தில் சாய்ந்தோம்! உண்மை புலப்பட்டு விட்டது. உறுதி பிறந்து விட்டது.

கவிஞரே! என்ன செய்யச் சொல்கிறீர். கட்டளையிடுக! என்ற பெருமுழக்கம் கிளம்பிற்று. அந்தப் பேரொலியை அடக்கிக் கொண்டு கிளம்பிற்று கவிஞரின் குரல்.
“கொலை வாளினை ஏடடா!
மிகுகொடியோர் செயல அறவே!” என்றார், என்ன நேரிட்டது! புரட்சி! புலம்பிக்கிடந்த மக்களின் போர்! படை வரிசை முன்னேறிச் செல்லும் பண்ணும் பாடினார் பாரதிதாசன்.

“வலியோர்சிலர், எளியோர்தமை வதையேபுரிகுவதா?

மகராசர்கள் உலகாளுதல் நிலையாம் எனும் நினைவா?

என்றார். கொலைவாளினை ஏடடா என்று ஆர்ப்பரித்தது அப்பெரும்படை! புரட்சி கிளம்பிவிட்டது போர் மூண்டு விட்டது.

## பிணம் சிரித்தது

அந்தப் பயங்கரமான சண்டை எங்கும் நிகழ்ந்தது. ஆதிக்காரர்களின் ஆணவமும் குறையவில்லை பிடி! சுடு! விலங்கிடு! வெட்டு என்று கொடுங்கோலர் காட்டுக் கூச்சலிட்டனர். சில பாட்டாளிகளைப் பிடித்தும்

கொண்டனர். இரத்தம் தோய்ந்த பாதையிலே, பாய்ந்தோடி வந்தார். ஹரிந்திரநாத் சட்டோபாத்யாயா, பட்டாளியின் படைவரிசை குலையதிருக்கும் வகையான பரணி பாடிக் கொண்டு வெட்டு! குத்து! கொல்லு! என்று கூச்சலிட்ட ஒரு கொடுங்கோலனின் கரத்தைப் பிடித்து இழுத்துக் கவ்வி. அவன், அந்தத் துணிவு கண்டு கொஞ்சம் ஆஞ்சினான். ஆனால், அவருடைய பேச்சைக் கேட்டோன் மிரட்சியால் மாண்டே போனான் எனலாம், அவர் கேட்டார்.

“சாவு, சாவு என்ற கூறி மிரட்டுகிறாயே! சாவு வரும் என்று நீ சொல்லும்போது, நாங்கள் சிரிப்பதா இல்லை, ஆச்சரியப்படுவதா? அப்பா! சாவு, சாவு, என்று சொல்கிறாயே, என்னப்பா அது! நாங்கள் எப்போது பிழைத்திருந்தோம்? இப்போது சாகடிக்கிறேன் என்று பேசுகிறாயே, நாங்களும் ஒரு நாளும் வாழ்ந்தது கிடையாதே! என்றார். அவன் திகைத்தான் யாருக்குத்தான் அந்த வார்த்தையைக் கேட்டுவிட்டுத் திகைப்பு ஏற்படாமலிருக்க முடியும்?

“சுட்டு வீழ்த்துவீர்களோ? வீழ்த்தி? உயிரையா காண முடியும்? முட்டாளே! சாவுக்கு அஞ்சமாட்டோம். உங்கள் விலங்குகளுக்கும் அஞ்சமாட்டோம்! எங்கள் நரம்புகள் அத்தனையும் விலங்குகள் என்று அறிவோம். அக்ரமக்காரரே! நாங்கள் உங்கள் அக்ரமத்தைக் கண்டு சிரிக்கிறோம், என்றார் அவன் சாய்ந்தான் கீழே மற்றோர் பக்கத்திலே ஒரு பாட்டாளி பிணமாகிக் கீழே கிடக்கக் கண்டேன். ஹரிந்திரநாத் குறிப்பிட்ட சிரிப்பு, அந்தப் பிணத்தின் முகத்திலே இருக்கக் கண்டேன். சாகுமுன்பு, கொடுமையை எதிர்த்தோம் என்ற சந்தோஷம் அந்த முகத்திலே இருந்தது.

தேவ நீதி

“வருகிறாயா, கடவுளின் கொலுமண்டபம் போகலாம்?” என்று கூப்பிடும் குரல் கேட்டுத் திரும்பிப் பார்த்தேன், ஆஸ்கார் ஓயில்ட் எனும் கவிஞர் நிற்கக் கண்டேன், சம்மதம் என்றேன். இருவரும் இறைவனில்லம் சென்றோம். அங்கே மனிதனை விசாரித்துக்

கொண்டிருந்தார் கடவுள், கவனி. அவன் நமது இனம்! என்றார் ஆஸ்கார் ஓயில்ட் குற்றச்சாட்டுகளுக்கு அவன் மறுப்புரைக்கவில்லை. ஒப்புக் கொண்டான் தேவன் தீர்ப்புக் கூறினார்.

உன்னை நரகலோகத்தில் தள்ளப் போகிறான் என்றார் கடவுள். அந்த மனிதன் உம்மால் முடியாது என்று கடவுளிடம் கூறினான்.

முடியாதா? என்ன சொன்னாய்? உன்னை என்னால் நரகத்துக்கு அனுப்ப முடியாது என்றா சொல்லுகிறாய்? ஏன் முடியாது? என்று இறைவன் கொஞ்சம் கோபத்துடனேயே கேட்டார். பூலோகத்திலேயே, கோர்ட்டை ஆவமதிப்பது குற்றமாயிற்றே, இந்த மனிதன் தேவநீதி சபையிலே, ஆவமதிப்பாக நடந்து கொண்டால் கடவுளுக்குக் கோபம் வராமலிருக்குமா? ஆகவேதான் கடவுள் கோபமாகவே கேட்டார். ஏன் உன்னை என்னால் நகரத்துக்கு அனுப்ப முடியாது என்று கடவுளே கலங்கும்படிப் பதில் கூறினான் அந்த மனிதன்.

“ஜனா? கடவுளே! நான் நரகத்தில்தானே எப்போதும் வசித்து வருகிறேன். இனி என்ன தாங்கள் புதிதாக அனுப்புவது! அதனால்தான் தங்களால் என்னை நரகத்துக்கு அனுப்ப முடியாது என்று கூறினேன் என்றான், என்ன யோசித்தாரோ இறைவன், நானறியேன் மறுபடி பேசினார், சரி! நரகத்துக்கு அனுப்ப முடியாது என்று வைத்துக் கொள்வோம். என்னால் நிச்சயமாக உன்னைச் சுவர்க்கத்துக்கு அனுப்ப முடியும் என்று கூறினார்.

போக்கிரித்தனமான மனிதன், அதற்கு சும்மா இல்லை. உம்மால் அதுவும் முடியாது! என்றான். ஏன் என்றார் இறைவன். சுவர்க்கம் என்றால் எப்படி இருக்கும் என்று எனக்கு எப்போதும் தெரிந்ததில்லையே அப்படி இருக்க, நீர் என்னை அனுப்புகிற இடம் சுவர்க்கம்தான் என்று நான் எதைக் கொண்டு நிச்சயப்படுத்திக் கொள்வது. ஆகவேதான் என்னைச் சுவர்க்கத்துக்கு அனுப்பவும் உம்மால் முடியாது என்று சொன்னேன் என்றார்

ஆம்மனிதன். தேவநீதி மன்றத்திலே பேச்சில்லை. ஆஸ்கார் ஒயில்ட் என்னைச் சீண்டினார். அவன் எனது மாணாக்கன் என்றார். ஓஹோ! அதனால்தான், கடவுளே சரி என்று ஒப்புக்கொள்ளக்கூடிய விதமாகப் பேசினான் என்றேன்.

அழிவு, புதுமை

உலகம் அழிந்துவிட்டது என்ற ஓலம் கேட்டது நாங்கள் இருவரும் வேகமாக தெய்வ சபையை விட்டு வெளியேறினோம், உலகிலே எங்கு பார்த்தாலும் புகைமயமாக இருக்கக்கண்டோம்! ஆடடா! கடைசியில், உலகையே அழித்துவிட்டார்களே என்றுகூறி நான் விசாரித்தேன். ஒரு கணந்தான். மறுகணம், மதுரமான பண் செவியிலே வீழ்ந்தது, புரட்சிக் கவிஞர் பாடுகிறார்.

புதியதோர் உலகு செய்வோம்.

விழித்துக் கொண்டேன்

என்னங்க இது, புதிய உலகம் பழைய உலகம்னு கூவுகிறீர்கள் என்று கேட்டாள் மனைவி, ஏன்துயிலையும் கனவையும் கலைத்துவிட்டு கண்ணே! நான் கவனவிலே கவிதாமண்டலம் சென்று வந்தேன் என்றேன். அவள் என்னைப் புரிந்து கொள்ளவில்லை. அது அவள் குற்றமுமல்ல அவள் மட்டுமா, நம்மிலே எவ்வளவு பேர்களுக்கு இக்பாலும், ஷெல்லியும், பைரனும், பாரதிதாசனும், ஆஸ்கார் ஒயில்டும், ஹரிந்திரரும் தெரியும்! நமக்கெல்லாம் இவர்களுடைய கவிதை உலகில் உலவ நேரம் இல்லையே! இன்னமுந்தான் நாம் முத்தைத்தரு பத்தித் திருநகை அத்திக்கிறை சத்திச் சரவணச் சிந்துகளிலேயே காலத்தைக் செலவிட்டுக் கொண்டிருக்கிறோம். புத்துலகக் கவிகளைக் காண நேரம் எது.

(திராவிடநாடு - 25.5.47)

# கண்டேர்கார்!

கலை என்றால், வானவில்லிலே தோன்றி மறைந்திடும் அழகை எப்போதும் மக்கள் கண் எதிரே கொண்டு வந்து நிறுத்தும் ஒரு மாயாஜாலத் தந்திரம் என்றும், எனக் கண்ணுக்குப் புலப்படாத உருவ அழகுகளைக் கலைக் கண் கொண்டு கண்டறிந்து, மற்றவரின் பார்வைக்குக் கொண்டு வரும் மந்திரவாதியின் வேலை என்றும் கூறி, கலையைச் சாதாரண மக்களுக்குச் சம்பந்தமேயற்ற அதியற்புதப் பொருôளாக்கினர். கலையை ரசிப்பதற்கே தனியானதோர் பண்பு வேண்டும் என்றனர். இவ்வளவு சுற்றுச்சுவர் ஏழுப்பி, இவர்கள் வளர்த்த கலை, எதற்குப் பயன்பட்டு வந்தது என்று கவனித்தால், சுகபோகிகளின் சுந்தரிகளை வர்ணிக்கவும், சூரர்களைப் பாராட்டவும் மற்றும் இயற்கை எழில், செயற்கை அழகு என்பன போன்றவைகளை விளக்கவும் பயன்பட்டதேயன்றி, வாழ்வுக்குப் பயன்படவில்லை.

கலையிலே திறம், கலையின் நிலையிலே உயர்வு, கலையிலே பல வகை என்று கூறுவதிலும், கலை கலைக்காகவே என்று பேசுவதிலும், பூரிப்பும் பெருமையும் அடைந்தனர். கலை, நோக்கமற்ற நேர்த்தியாகக் கருதப்பட்டது. கலை, வெறும் அழகு விளக்கமா? என்ற கேட்டால், இல்லை என்பர். கலை, மன எழுச்சிக்குக் சாதனமா என்று கேட்டால், அதுமட்டுமல்ல என்பர், கலையை விளக்குங்கள், அதன் தன்மை எப்படி இருக்க வேண்டும்? அது பயன் கருதும் செயலா? அல்லது விளைவு இல்லாததா? என்று கேட்டால், கலை, மணம்போல், அழகுபோல், உண்மைபோல், முழுவதும் விவரிக்க முடியாத வியக்கத்தக்க சக்தி என்பர். அழகு, சுவை, மணம் இவைகளால் பயன் உண்டே, அதுபோல் கலையினால் பயன் உண்டன்றோ! அங்ஙனம், கலையினால் பயன் உண்டு என்றால், யாருக்குப் பயன்தருவது கலை எனக் கருதப்படவேண்டும் என்ற கேட்டு விட்டாலோ, கலாரசிகர்களுக்கு முகம் கடுக்கும். கலை, கலைக்காக என்பர்.

காண்டேர்கார், கதாசிரியர் மட்டுமல்ல, கலாசிரியர். அவர் கருத்து, கவிஞர் பாரதிதாசனின் கருத்தப் போன்றதே. கலை, கலைக்காக என்று பேசுபவர்களின் பகட்டுரை அவருக்குப் பிடிக்காது. கலைக்காக வாழ்கிறேன் என்ற பொருளற்ற பேச்சுக்காரரல்ல காண்டேர்கார் புரட்சிக்காரர் கவிகைளில் கூறுவதைக் காண்டேர்கார், உரைநடையில், கதைவடிவிலே கூறுகிறார். புரட்சிக்கவிஞர் போலவே, காண்டேர்கார், முற்காலத்தவர் கட்டுப்பாடுகள், விதிமுறைகள் ஆகியவ்றப் மீறுபவர். கலை, வாழ்வுக்காக! வாழ்வு செம்மைப்பட, மக்கள் வாழ்வை அனுபவிக்க வாழ்வு கருகும் நிலை பெறாமல் மலர்ந்து மணம் பரப்புவதற்குக் கலை பயன்படவேண்டும் என்ற கொள்கையினர் தென்றல் போன்ற இனிமையும், சிறுதூறலுகுள்ள ஜிலுஜிலுப்பும், ஆசைக்கு உள்ள எழுச்சியும் மக்களுக்கு, வெறும் மாளிகைவாசி களுக்கு மட்டுமல்ல, உழைத்து அலுக்கும் மக்களுக்குப் பயன்படவேண்டும் என்பது காண்டேர்கார் கொண்டுள்ள கொள்கை, அவருடைய கதை அமைப்பு முறை, கதைகளிலே கூறப்படும் நிகழ்ச்சிகள், கதையைக் தீட்டிச் செல்லும்போக்கு ஆகியவற்றிலே, கலைவாழ்வுக் காக என்பதனைக் காண்டேர்கார் அழகுபட விளக்கியிருக்கிறார். செல்வான்கள், சுகபோகிகள், கொண்டுள்ள கலை உணர்ச்சி, கலப்படம் நிறைந்தது. அந்தக் கலாரசிகர்கள் ஏழைகளை உறிஞ்சி, இன்பம் பெற்று ஆறுமாந்து கிடப்பவர்கள் என்பதை நன்கு உணர்ந்து, சமுதாயத்திலே எதை எதையோ கூறி, என்னென்ன காரணமோ காட்டி உழைக்கும் கூட்டத்தைப் பாடுபடாத கூட்டம் ஏய்து; வந்தது போலவே, கலையையும் இந்தச் சுரண்டும் காரியத்துக்குச் சுகபோகிகள் பயன்படுத்துகிறார்கள் என்பதை வெட்ட வெளிச்சமாக்குகிறார் காண்டேர்கார்.

கலைத்துறையிலே, நடைபெற்றுவரும் புரட்சியிலே, காண்டேர்காரின் முயற்சிக்கு ஓர் முக்கியமான பங்கு உண்டு.

காண்டேர்கார், மராட்டிய சுயமரியாதைக்காரர், சமதர்ம நோக்குடையவர். அவருக்கு மற்றவர்களிடம் மட்டற்ற அன்பு மட்டுமல்ல, வற்றாத நம்பிக்கை இருக்கிறது. கொடுமைகளைக் களைய வீரர்கள் வாள் எடுத்துக் களம் புகுவது போலக் காண்டர்கார், பேனாவைக் கருவியாகக் கொண்டு, சுகம் எங்கே? இருதுருவங்கள், கருகிய மொட்டு, வெறுங்கோயில் முதலிய பல ஏடுகள் மூலம் நாட்டுக்குப் பணிபுரிந்து வருகிறார்.

கலை, கோயிலுக்கு, இல்லையானால அரண்மனைக்கு, என்ற நிலை மாற்றிய பாரதிதாசன் போலவே கதை மூலம், கலையை, நாட்டுநிலையை விளக்கவும், அதனைத் திருத்தவும், காண்டேர்கார், உபயோகிக்கிறார், கலை கலைக்காக அல்ல, கலை மக்களுக்காக, மக்களின் வாழ்விலே மணம் பரப்புவதற்காக சிக்கலை ஆறுக்க, கலை ஓர் கருவி, கால வேகத்தையும் மீறக் கூடியது, அதனை நாட்டுப் பெருங்குடி மக்களின் வாழ்வுக்கு ஆர்ப்பணிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு, திட்டத்தோடு, வேலை செய்கிறார், இந்தக் கலாசிரியர். ஆகவேதான் இவருடைய கதைகளிலே ஜீவசக்தி ததும்புகிறது, எழுச்சிக்கு வழிகாட்டும் எழிலுடை ஏடுகளாக உள்ளன.

கதை, வெறும் பொழுது போக்குக்காகக் கட்டப்படுமட், சில நிகழ்ச்சிகளின் தொகுப்பு என்பதை மட்டுமல்ல, காண்டேர்கார் மாற்றியது, புதுக்கருத்துக்களைத் தாங்கும் புரட்சி ஏடுகளை இக்கதைகளின் மூலம் தந்திருக்கிறார். கதைகளிலே, அவர் காட்டும் பாத்திரங்களின் பண்புகள் அவ்வளவும், வாழ்க்கப்யிலே நமக்கு ஏற்படும் மனப்போராட்டங்களை விளக்கும சித்திரங்களாக உள்ளன. காதலால் உருகிய கன்னியர், கட்டுக்கு அடங்காத காளை, கபடத்தால் உயிர் வாழ்பவன் என்று பலவகையானர்களை எத்தனையோ, கதாசிரியர்கள் தத்தமது ஏடுகளிலே, காட்டியுள்ளனர். அவைகளைப் படிக்கும்போது ஏன் பத்மா இப்படிப் பதைத்தாள்? சேகர் ஏன் இவ்வளவு சஞ்சலப்பட்டான்? குமாருக்கு இவ்வளவு குரூர

குணமா? என்று கேள்விகள் படிப்பவர் மனதிலே ஏழுமேயொழிய, அந்தச் சூழ்நிலையிலே யார் இருப்பினும் இப்படித்தான் நடந்தேறி இருக்குமோ என்ற எண்ணம் தோன்றுவது இல்லை. காண்டேர்கார், சூழ்நிலை, நமக்கு உண்டாக்கும் எண்ணங்கள் உள்ளனவே, அவைகளையே, பாத்திரங்களாக்கிக் காட்டுவதால், கதை உண்மையில் கருத்தோவியமாகின்றது.

காண்டேர்கார் புதுமையை விரும்புபவர், புதுமையின் பளபளப்பை அல்ல, அதன் ஆழ்ந்த பாடத்தை, அவருடைய முயற்சி அவ்வளவும், திறமை முழுதும், முன்னால் ஏற்பட்ட எண்ணங்கள், ஏற்பாடுகள், முறைகள், ஆகியவற்றை முறியடித்து, மனிதத் தன்மையின் மேன்மையை உணர்த்த வேண்டும் என்பதுதான். அவருடைய கதாநாயகிகளின் கண்ணீர் காலடியிலோ அல்லது பூஜா பாத்திரங்களிலோ பெரும்பாலும் விழுவதில்லை, இணின் ஆணவம் என்னும் தீயை ஆணைக்கவே, சிந்தப்படுகிறது. பிரபஞ்சம் மாயை என்று கூறும் பழைமை வாதிகளைக் கண்டிப்பவர் பொதுவாகவே சமூக அமைப்பு முறையிலே, மிகப் புரட்சிகரமான மாறுதல் வேண்டும் என்பதற்கான போர்முரசு, காண்டேர்காரின் கதைகள்.

சுகம் எங்கே? என்று கேட்டால் ஏழை செல்லவான், உயர்ஜாதி தாழ்ந்த ஜாதி என்ற பேதங்கள் ஒழிந்து, ஆண், பெண்ணை அடிமை கொள்ளும் பழக்கம் ஒழிந்து, மக்கள் நிம்மதி ஆடைகின்ற தன்மை இருக்கிறதே, அதுவே சுகம்! பெண்களின் வாழ்க்கையை, குடும்பப் பெரியவர்கள் சிக்கலுள்ளதாக்குவதைக் கண்டேர்கார் மிக வன்மையாகக் கண்டித்திருக்கிறார். மராட்டிய நாட்டிலே, இவருடைய மறுமலர்ச்சி தரும் ஏடுகள் போற்றப்படுவது போலவே தமிழ்நாட்டிலும், இவருக்குப் பாராட்டுதல் வளர்ந்து வருகிறது.

வாழ்க்கை! இது, மதவாதிகள், வேதாந்திகள் மட்டுமல்ல கலைவாதிகளும் மறக்க வேண்டிய ஒன்று என்பது, ஓர் வைதீகக் கோட்பாடு, ஆனேகருடைய ஆபூர்வமான

திறமை, வாழ்க்கையைப் பரீக்க, ஊதாசீனப்படுத்த, அதன் மாய்கை, மோசம், நிலையாமை ஆகியவற்றை வற்புறுத்தவே பயன்பட்டது. காண்டேர்கார், புரட்சி எழுத்தாளர் கூட்டத்தைச் சேர்ந்தவர், உரைநடை பார்திதாசன், ஆகவே அவர் வாழ்க்கை யைப்பற்றி விளக்க, அதிலே வரக்கூடிய சிக்கல்களைத் தெரிவிக்க, அந்தச் சிக்கல்களின் காரணத்தை அறிவிக்க, அவைகளைப் போக்கும் மார்க்கத்தைத் தீட்டத் தமது திறமையைப் பயன்படுத்தகிறார்.

வாழ்க்கை என்பது ஒரு புஷ்பம். அந்தப் புஷ்பத்தின் உயர்வு எது? வண்டைக் காணப்பொழுது மயங்க வைக்கும் மதுத்துளியா? செ! அது அல்ல! ஒவ்வொரு விநாடியும் காற்றலை மீது குதித்து ஓடும் மதுரமான நறுமணம் என்று காண்டேர்கார், ஏரி நட்சத்திரம் எனும் நூலில் எழுதி இருக்கிறார்.

வண்டை மயங்க வைக்கும் மதுபோன்றது வாழ்விலே மக்கள் கொள்ளும் பிரேமை - இது வேதாந்திகள் கூற்று, வாழ்வை வெறுக்க வேண்டுமென்று உபதேசிக்கும் போக்கு, மலரிலே மது இருப்பது போல, வாழ்விலே, மயக்கமூட்டும் தன்மை மட்டுமே இருப்பதாக வேதாந்திகள் கூறுவர். மலரின் முழுப்பயனையும் கண்டறியாதது போலவே வாழ்வின் முழுத் தன்மையையும் அவர்கள் கண்டறியாது போலவே வாழ்வின் முழுத் தன்மையையும் அவரகள் கண்டறியா கூறிய பேச்சு அது. அவர்களின ஊரை, மேதைகளின் மதிமொழி என்று கருதப்பட்டு, கவிதை கதை, கூத்து, எதுவாயினும் இதே கருத்தினையே பலரும் தீட்டித் தீட்டி, வாழ்வு, வெறுக்கப்பட வேண்டுவதொன்று என்ற எண்ணத்தை மக்கள் மனதிலே பதியச் செய்துவிட்டனர். காண்டேர்கார், இந்த எண்ணத்தை எப்படிச் சாடுகிறார், பாருங்கள் மதுவா, புஷ்பத்தின் உயிர்? செ! அது அல்ல! என்கிறார். மயக்கமூட்டும் தன்மைதானா வாழ்வின் நோக்கம் விளைவு? செ! அது அல்ல!

வேறு என்ன? காண்டேர்கார் கூறுகிறார். ஒவ்வொரு விநாடியும காற்றலைமீது ஓடும் மதுரமான நறுமணம் புஷ்பத்தின் உயிர்.

பலருக்கு இன்பம் தரும் காரியமாற்றும் தன்மை, சக்தி, வாழ்வுக்கு உண்டு. அதனைச் செய்தலே, வாழ்வின் நோக்கம் என்பதை ஆழகாக விளக்கிவிட்டார். வாழ்வு ஓர் சுமை அல்ல, வாழ்வு ஓர் சந்தர்ப்பம் - பயன்படுத்திக் கொள்ள வேண்டிய சந்தர்ப்பம் காண்டேர்கார், இந்தக் கருத்தைப்பல இடங்களிலே வலியுறுத்தி இருக்கிறார். வாழ்வு பெரிதல்ல, கலைதான் பெரிது என்று பேசுபவர்களுக்குக் காண்டேர்கார், நிலமும் இகாயமும் என்ற ஓர் உவமை மூலம் அறிவுறுத்தும் தன்மை, ரசமாக இருக்கும் அவர் கேட்கிறார்.

“வாழ்க்கை என்றால் நிலம். கன்னங்கரிய மேடும் பள்ளமுமான சத்தையும் கூளமும் நிரம்பிய நிலம். ஆனால் அதிலிருந்துதான் தானியம் விளையும், கலை என்பது இகாயத்தைப் போன்றது. இகாயத்தில் நட்சத்திரங்கள் பிரகாசித்தாலும், பழங்கள் பூமியில்தான் பழுக்கின்றன.

ஆனால், அவைகளைப் பழுக்க வைப்பது எது? இகாயத்திலிருந்து மழையே பெய்யாவிட்டால்?

இகாயத்துக்கு மழை எங்கிருந்து போகிறது? பூமியிலிருந்து தானே? என்ன பதில் கூற முடியும், வறட்டு வேதாந்தக்கார்கள்!!

வாழ்க்கையைப்பற்றி முக்யத்துவம் கொடுத்துப் பேசலாம், எழுதலாம் ஐயா! ஆனால் வாழ்க்கை இன்பம் சூழ்ந்ததாக இருக்கவேண்டுமே, அதற்கு என்ன வழி? வாழ்க்கையிலே எப்படி இன்பம் வரச் செய்வது, என்று கேட்வர்கள் உண்டல்லவா, அவர்களுக்குக் காண்டேர்கார், வாழ்க்கைக் கீதத்தை விளக்குகிறார், ஓரிடத்தில்.

“வாழ்க்கைச் சங்கீதம் இரண்டு கம்பிகளின் இன்னிசையால் நிறுவப்படுகிறது. ஒன்று தொண்டு,

மற்றொன்று அன்பு, தொண்டு உலகத்தைக் களிக்கச் செய்கிறது, அன்பு மனத்தைக் களிக்கச் செய்கிறது.”

இந்தத் தொண்டும் அன்பும்தான், வாழ்க்கைக் கீதத்தின் நரம்புகள், புஷ்பத்தின் உயிர், நறுமணம், வாழ்வின் மேன்மையும், அன்பு தொண்டு ஆகியவற்றிலே இருக்கிறது எவ்வளவு ஆழ்ந்த பொருள் உள்ள கருத்து.

வாழ்க்கைக் கீதத்தை விளக்கிவிட்டு, வெறும் இலட்சியவாதியாக இருந்துவிடவில்லை. காண்டேர்கார் இன்றைய சமூகத்தின் நிலை அவருக்கு விளங்காமற் போகவில்லை இன்று சுகம் அனுபவிப்பவர்கள் யார் என்பதையும் அவர் தெரிந்து கொள்ளாமல் இல்லை. நொந்த மனதுடன், நீங்களும் நானும், வாழ்க்கையின் ரசத்தைப் பருகும் வீணர்களைப் பற்றி என்ன கூறுவோமோ அதனைக் காண்டேர்கார் அழகுபட சுகம் என்பது ரசவாதிகளின் ரசக குளிகையைப் போல், கிடைப்பதற்கு அரிய ஒரு பொருள். அது கேவலம் கவிதையின் கற்பனையில்தான் கிடைக்கக்கூடியது. இவ்வுலகில் மனிதத் தன்மைக்கும் சுகத்துக்கும் சம்ப்நதமே இல்லை. இவ்வுலகில் சுகமாக இருக்கவேண்டுபவன் புலியைப் போல மற்றவர்களின் ரத்தத்தைக் குடிப்பதையே ஆனந்தமாகக் கருதவேண்டும். நியாயம், தியாகம் கடமை, மனிதத்தன்மை, நாணயம், நம்பிக்கை ஆகிய சொற்களை மறக்க முடியாதவன் இந்த உலகத்தில் சுகம் அனுபவிக்கத் தகுந்தவனல்ல! என்று கூறுகிறார். ஆஹா! எவ்வளவு சரியான சவுக்கு, பிறர் உழைப்பிலே சுகம் தேடுபவர்களுக்கு.

வாழ்க்கை, ஏழை மக்களுக்கு, பாட்டாளிக் குடும்பங்களுக்கு, எப்படி இனிப்பாக இருக்க முடியும்? சுகம் எது? சுபீட்சம் எது? நெஞ்சுருக்கும் அந்த நிலைமையைக் காண்டேர்கார் படம் பிடிக்கும் திறமையைப் பாருங்கள். ஒரு குடிசை வாசலில் காலியான மண்ணெண்ணெய்ப் புட்டியை வைத்துக் கொண்டு ஒரு ஸ்திரிி உட்கார்ந்திருந்தாள், விளக்கு ஏரிப்பதற்குக்கூட அவளிடம் எண்ணெய் இல்லை.

மற்றொரு மண் வீட்டின் ஆசுத்தமான முற்றத்தில ஒரு குழந்தை தட்டிலிருந்த ரொட்டித் துண்டொன்றைக் கடித்துக் கொண்டிருந்தது. அதைச் சாப்பிட்டபின்பு தாய் அதற்குத் தண்ணீர் கொடுத்தாள். தட்டில் வேறு ஒன்றும் மிச்சமில்லை. தாய் தண்ணீரைக் குடித்துத் தன் வயிற்றை நிரப்பினாள்.

மூன்றாவது இடத்தில் பாதையில் விழுந்து கிடந்த வாழைத் தோலுக்காக இரண்டு குழ்நதைகள் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. கடைசியில் பெரிய மனிதர்களும் வந்து சண்டையில் கலந்து கொண்டனர். அந்தச் சண்டையைத் தீர்ப்பதற்குள் எனக்குப் போதும் என்றாகி விட்டது.

மற்றொரு வீட்டில் ஒரு குழந்தைக்குக் கொதிக்கும் ஜ÷ரம். அதன் பெற்றோர்கள் ஆண்டவனை நோக்கிக் கைதொழுது கொண்டும், கலகலவென்று கண்ணீர் வடித்துக் கொண்டும் இருந்தனர்.

ஒருநாய் ஓர் எச்சிலையை வாயில் கவ்விக் கொண்டு போயிற்று. ஒரு பிச்சைக்காரன் அதைத்துரத்திக் கொண்டு ஓடினான். அந்த நாய் பாவம், ஆலையைப் போட்டுத் தாவி ஓடியது. பிச்சைக்காரன் அந்த ஆலையிலிருந்த எச்சிற் பருக்கையை வாயில் போட்டுக் கொண்டான்.

இவை சுதேசி சினிமா! நாம் நித்தம் காண்பது இவைகளுக்குக் காரணம் என்ன? கலாவாணர்கள் ரோஜா, மலருவதற்குக் காரணம் கண்டுபிடிக்க முனைந்தனர், அந்திவானமே! உனக்கு அழகு தந்தது யார், என்று கேட்க முனைந்தனர். எச்சில் ஆலை நாயோடு போராடும் மனிதனே! நீ இந்தக் கதிக்கு ஆளானது ஏன் என்று கேட்க மறுத்தனர். கேட்கக் கூடாதாம், கேட்டுவிட்டால் கலைகெட்டு விடுமாம், கேவலம், பிரச்சாரமாகி விடுமாம்! இந்தக் கலவாணர்களுக்குக் காண்டேர்கார், சரியாக்க கசையடி தருகிறார்.

அப்பா கலைவாணா! இப்படி வா! உன் கலை இருக்கிறதே, அது எங்கே இருந்து வந்தது? என்று கேட்டுப் பதிலும்

கூறுகிறார். கலை கலை என்று கூவுபவர்கள் நாணும்படி.

“தொழிலாளிகளின் வாழ்க்கையில் பாலியம், இளமை, மூப்பு என்ற படிகளே இல்லை. கை, கால்களை ஆசைக்கத் தெரிந்ததோ இல்லையோ உடனே ஒவ்வொரு ஜீவனும் வேலை செய்ய ஆரம்பித்துவிட வேண்டும், இந்த வேலை கைக்கால்களில் ஆசைவு நிற்கும் வரையில் நடக்க வேண்டியது, செக்கைப்போல உழைக்க வேண்டியது. இந்தச் செருக்கிலே எருதுகள் உழைப்பதோடு போவதில்லை. இட்டும் கொப்பரைக்கும் எருதுகளைப் போலவே இரத்தமும் மாமிசமும் உண்டு. இதிலிருந்து இடி எடுத்த எண்ணெய் எதற்குத் தெரியுமா? கலை என்ன, சாஸதிரம் என்ன, தர்மம் என்ன, கலைப்பண்பு என்ன - இவற்றை எல்லாம் பற்றிச் சிந்தனைகள் செய்து செய்து கொதித்துப்போன உயர் வகுப்பாரின் மூளையைச் சாந்தமாக்குவதற்கு அந்த எண்ணெய் வேண்டும்.

கூழுக்கே தாளம்போடும் இடத்திலே கலை எது? கல்வி எது? குழந்தைகள் முதல் கிழவர்கள் வரையல் வேலை செய்துங்கூடச் சாப்பாட்டு நேரத்துக்குத் தகறாருதான். ஆகவே, பணம் செலவழித்துக் கல்வி கற்கும் சக்தி எத்தனை பேரிடம் இருக்கும்? இப்படிக் கோடிக்கணக்கான னங்கள் மிருகங்களைப் போலக் காலம் தள்ளுவதால்தான் உயர் வகுப்பினரின் கலையும் சுகபோகங்களும் நடக்கின்றன. சில நோ;யகிளல் நோயாளியைப் பிழைக்க வைப்பதற்காக ஜனங்கள் தம் ரத்தத்தைக் கொடுப்பது உண்டு. தொழிலாளி வர்க்கம் தலைமுறை தலைமுறைகளாக உயர் வகுப்பாருக்கு இந்த இரத்தத்தை வேண்டிய மட்டும் கொடுத்து வந்திருக்கிறது. ஆனால் அப்படி இரத்தத்தைக் கொடுத்துக் கொடுத்து இப்போது இதுவே சாவை நீட்டிவிட்டது அல்லவா?

பாட்டாளிகளின் இரத்தமப்பா, உன் காவியம், சிற்பம், ஓவியம் என்பன போன்றவை! கலையின் நலைபற்றிக் களிப்புடன் பேசுகிறாயே, அந்தக் கலைக்குத் தண்ணீர், பாட்டாளியின் பச்சை இரத்தம், பரம்பரை பரம்பரையாக

அந்த இனம் கொட்டிய குருதியிலே உன் கலை, முளைத்தது, தெரிந்து கொள் என்று எச்சரிக்கிறார்.

கலாரசிகர்களுக்கு, இதவன் உதயம், நிலவின் எழில், மலரின் அழகு போன்றவைகளிலதானே பிரேமை. அதே, காட்சிகளையே காண்டேர்கார் காட்டுகிறார், அவர்களுக்குப் பாடம் கற்பிக்க, சுகந்தப் புஷ்பங்களைக் காட்டிக் கூறுகிறார்.

“தொழிலாளிகள் யாவருமே இந்த ஸø÷ரங்கி மொட்டுக்களைப் போன்றவர்களே அல்லவா? உலகில் பிறப்பதும் யாருக்காவது தன் உடலிலுள்ள ரத்தத்தைக் கொடுத்துவிட்டுச் சாவதுமே அவர்கள் வாழ்க்கை பூவின் வாழ்விலுள்ள ஆனந்தம் இந்த மொட்டுக்களுக்குக் கணநேரமாயினும் கிடைத்திருக்கமா?

படி ஓரணா விலைக்கு இந்த மொட்டுகள் யார் மடியிலும் போய்விழும். நாளைக்கு இவற்றிலிருந்து அத்தர் இறங்கியதும், அதை வாங்குவன் இஹஹா! அத்தரின் மணம் எவ்வளவு நேர்த்தி! என்று போற்றுவான். அவனுடைய அந்தப் போற்றுதலினால், பலியான இந்த மொட்டுக்களுக்கு என்ன உபயோகம்?

பிறருக்குப் பயன்பட்ட பரம்பரையல் உதித்த பாட்டாளிகளுக்குத் தங்கள் சக்தி தங்களுக்கே தெரியவில்லை அல்லவா? காண்டேர்கார் கூறும் இந்த வாசகங்கள், அவர்களை விழிப்பும் எழுச்சியும் பெறச் செய்யுமல்லவா! புரட்சி வாடை வீசும் செற்கள், காண்டேர்காரின் ஏடுகளிலே ஏராளம். அவை பாட்டாளிகளின் வெற்றிக்குத் தேவையான புது முறுக்குத் தரும் சக்தி வாய்ந்தவை.

உயர் வகுப்பினரின் வாழ்க்கை நிலவுபோலத்தானே இருக்கிறது? இந்த நிலவு பார்ப்பதற்கு எவ்வளவு ஆழகாக, எவ்வளவு சாந்தமாக இருக்கிறது ஆனால், சூரியனே இல்லாவிட்டால் சந்திரனுக்கு ஒளி எங்கிருந்து கிடைக்கும்? ரத்தத்தை நீராக்கும் தொழிலாளிகள் இல்லாமற் போனால் உயர் வர்க்கத்தினரின் சுகபோகங்கள்

நடக்குமா? கலை சௌந்தர்யம், கலைப்பண்பு இந்த பொற்சகலசம் பார்ப்பதற்கு அழகுதான் ஆனால் கீழே கோயில் முழுவதும் உறுதியும் கரடு முரடுமான கற்களாலேயே கட்டவேண்டி இருக்கிறது. அந்தப் பொன்னைப் போலவே - இன்னும் கேட்டால் அதையும்விட அதிகமாக - இந்தக் கற்களையும் கவனிக்க வேண்டியதுதான், என்று கூறுகிறார், பாட்டாளிகளின் உழைப்பின்மீதே உன்னதமானத என்று பலரும் போற்றும் கலை கட்டப்பட்டிருக்கும், உண்மையை புரட்சிக் கவிஞரின், கவிதை மணம், காண்டேர்காரின் உரைநடையிலே தவழ்கிறது என்று கூறலாம்.

தொழிலாளி என்றால் உயிருள்ள ஒரு யந்திரம்! இந்த உயிருள்ள யந்திரத்துக்கு உயிரில்லாத யந்திரத்துக்குப்படும் அவ்வளவு அக்கரைகூட யாரும் எடுத்துக் கொள்வதில்லை அவனுடைய சாப்பாடு துணிமணிகள் வைத்தியம் மருந்துகள் எல்லாம் எவ்வளவு மோசமானவை. ஏழைமை பரம்பரையாகத் தொடர்ந்து வரும் நோய். இந்த ஒரு நோயிலிருந்து துர்ப்பழக்கம், திருட்டு, துர்ப்புத்தி முதலிய 72 வகையான நோய்கள் உண்டாகின்றன.

பணம் இல்லாதவன் மிருகம் - பணம் படைத்தவன் ராட்சதன் உலகத்தில் உண்மையான மனிதன் கண்ணுக்குத் தென்படுவதான் அரிதாக இருக்கிறது. குடி, கூத்தி, பந்தயம், போட்டி, இவ்வெல்லாத் துர்ப்பழக்கங்களுக்கும் வேர் இந்தப் பணவிசனமே. வேறுபாட்டுக்குக் காரணம் பணம், தன்னலத்துக்குக் காரணம் பணம், உலகத்திலுள்ள எல்லாத் துன்பங்களுக்கும் காரணம் விரல்விட்டு எண்ணக்கூடிய சில பேர்களின் கையில் உருளும் பணந்தான். இன்றயை உலகத்திலள்ள பணம் சிறு குட்டையில் தேங்கிய நீரைப்போலல்லவா இருக்கிறது? குடிப்பதற்கு இந்த நீர் உபயோகம் இல்லை. மாடுகளுக்கு உபயோகம் இல்லை, ஊர் வந்து செல்லும் சதுசதுப்பான விஷக் கிருமிகளின் முட்டைகள் மட்டுமே இதில் நன்றாக வளர்கின்றன. இந்தக் கிருமிகள் பரவிய உடனே, இதன்

அக்கம்பக்த்திலுள்ள ஜனங்கள் நொடி நேரத்தில் பொட்டுப் பொட்டென்று சாவில் வியப்பு எது? என்று கேட்கிறார் காண்டேர்கார். மனிதனல்ல, யந்திரம் பிறருக்குப் பயன்படும் யந்திரம் என்று பாட்டாளி உலகுக்கு அறிவித்து, அவர்களைப் புரட்சி உருவனராக்கும் பணியினை அருமையாகச் செய்கிறார் . வாழ:வு பொய்யல்ல, நிஜம்! வாழ்வு மாய்கையல்ல, நல்லது பெறச் சந்தர்ப்பம், வாழ்வுக்கு இரு நரம்புகள், ஒன்று தொண்டு மற்றொன்று அன்பு, இவை இரண்டு மீட்டப்படுவதால் வாழ்க்கைக்கீதம் கிளம்பும் ஆனால் அந்த இன்னசபியை அனுபவிக்க முடியாதபடி, சமூகத்திலே இருபரம்பரைக்ள, இருதுருவங்களிலே இருப்பதால், வாழ்வு வெறுங் கோயிலாகி, களிப்பு கருகிய மொட்டாகிய விடுகிறது, மக்கள் சுகம் எங்கே? என்று தேடி அலைகிறார்கள், எங்கும் ஏரிநட்சத்திரமே காண்கின்றனர், புயலும் படகும் போல, சுயநலமும் இலட்சியமும் போதுவது காண்கின்றனர் - இதுவே காண்டேர்காரின் கருத்து. உஷா ஆனந்தன் முத்தண்ணா, கருப்பன் என்று பலப்பல காதபாத்திரங்களை நம் முன்கொண்டுவந்து நிறுத்தி வைத்து அவர்களபக் கொண்டு கூற வைக்கும் கருத்து, இவைகளே கதாபாத்திரங்கள் அவ்வளவும், காண்டேர்கார் அமைக்கும், மேடைமீது ஏறி நின்று, புரட்சி முழக்கம் செய்யும் பிராசகரகர்கள்!

இவ்வளவு கொடுமைகள் இருந்தும், ஏன் இந்த மக்கள், பிறரால் சுரண்டப்பட்டு, சுருண்டுபோகிறார்கள்? ஏன் புரட்சி உணர்ச்சி தோன்றவில்லை? இதே கேள்விகள் நமக்குப் பல தடவை தோன்றுகின்றதல்லவா? இதுவரைக் கலைத் துறையின் காவலர்களாக இருந்தவர்கள், இதெல்லாம் கர்மம் என்றனர், சிலர், வெறும் மனப்பிராந்தி என்றனர், புரட்சிக்கவி பாடினார் பாரதிதாசன் அவ்விதமே உரைநடையில் கூறுகிறார் காண்டேர்கார்.
புரட்சி செய்ய வேண்டியதுதான், கொடுமைகள் பொடிபட, புது உலகு தழைக்க ஆனால், அவர்களால் முடியாது என்று காண்டேர்கார் உள்ளம் உருகும் முறையிலே எடுத்துக்கூறி அவர்களால் டியாது என்பதானல், கைகட்டிக்

கொண்டு வாய்பொத்திக் கொண்டு நீ இராதே, இந்தப் பணி உன்னுடையது, மகத்தான வேலை உன்முன் இருக்கிறது, என்று நமக்கெல்லாம் அறிவுறுத்தும் முறையில் கூறுகிறார்.

புரட்சி செய்வதற்கும், போரும் சச்சரவும் நிகழ்த்தி அதில் வெற்றி பெறுவதற்கும் வேண்டிய தைரியம் இவர்களிடம் ஏது? தம் வேலைக்காரர்கள் பயங்கொள்ளிகளாக இருப்பதற்கு வேண்டிய முயற்சிகளையே எஜமானர்கள் எப்போதும் செய்து வருகிறார்ள். கஷ்டப்பட்டு வாழும இந்த மனிதர்களுக்கு எழுதப்படிக்கத் தெரிவதில்லலை. மனிதனின் விதி அவனுடைய தலை எழுத்தில் இல்லை. அவனடைய மனோபலத்தில்தான் இருக்கிறது என்ற விஷயம் இவர்களுக்குப் புரிவதில்லை. ஆண்டவனுக்கு எப்போதாவது நம்மீது இரக்கம் பிறக்கும் என்ற பைத்யக்கார ஆசையும் இவர்களை விட்டு விலகுவதில்லை. அப்படி இருக்க, எந்தச் சமுகத்துக்காக நாம் செத்துச் சுண்ணாம்பு ஆகிறோமோ அந்தச் சமூகம் நாம் உயிர் வாழ்வதற்குரிய சாôரணமான சுகங்களைக் கூட நமக்கு அளிப்பதில்லை, என்பதைப் பற்றிக் கிளர்ச்சி செய்யும் அறிவு எங்கிருந்து வரும்?

மிதிப்பட்ட ஜனங்களை விழிக்கச் செய்வது, மனிதரக்ள் என்ற முறையல் அவர்கள் தமக்கு உரிமையானவற்றைப் பெறுவதற்காக்ச் சச்சரவும் நெருக்கடியும் போரும் விளைவிக்கவும், சந்தர்ப்பங்களுக்குத் தகுந்தாற்போல், அப்போர்களிலே, தங்கள் உல்களைக் காப்பாற்றிக் கொள்ளவும் அவர்களைத் தயார் செய்வது, எவ்வளவு பெரிய வேலைகள், நம் தலைமுறைக்கு இருக்கின்றன. என்று கூறுகிறார்.
இவ்வளவு விளக்கமாக கூறினாலும், நம் நாட்டு மேதைகள் கல்வி பரவினால், எல்லாப்பிணியும் ஆகலும், என்று கூறுகிறார்களல்லவா! காண்டேர்கார் அவர்களையும் விடவில்லை, கல்வி வரட்டும் என்று காத்திருந்து பயன்இல்லை, கல்வி வராதபடி ஒரு தடை இருக்கிறது என்று காட்டுகிறார்.

கல்வி என்பது தண்ணீர்! அதைச் சமூக விருட்சத்தின் வேரில் ஊற்றினால் நம்வேலை ஆகிவிட்டது என்று நினைத்தேன். ஆனால் இந்த மரத்தின் வேரிலுள்ள ஜாதித் துவேஷமும், பேதபுத்தியும் பணத்துக்கு அடிமைத்தனமுமாகிய புழுக்களா அதை வளரவிடப் போகின்றன? இந்தப் புழுக்கள் சாகவேண்டும். அவற்றைக் கொல்ல வேண்டும் என்று கூறுகிறார். இனி என்ன வேண்டும், காண்டேர்கார் மராட்டிய பாரதிதாசன், உரைநடைப் பாரதிதாசன் என்று உவகையுடன் கூற.

(திராவிடநாடு - 21.7.46)

# ஏகாதிபத்தியம் ஒழிக!

ஏகாதிபத்தியத்தின் முகத்தில் அசடு சொட்டுகிறது! அமெரிக்கா தந்த இரவல் சோபாமீது, ஏகிப்து நாட்டுப் பஞ்சினால் தயாரிக்கப்பட்ட மெத்தையை அமைத்து அதன்மீது "இந்தியப் பட்டு" போட்டுச் சாய்ந்து, கொண்டு, ஜாவா சுருட்டுக் குடித்துக் கொண்டு "இந்திய விவகாரம் முடிந்துவிட்டது, அங்கே உள்ள பிரச்சார பலம் பொருந்திய ஸ்தாபனமான காங்கிரசைச் சரிப்படுத்திக் கொண்டோம் அதிலே, மக்களின் மனத்தை வசியம் செய்யும் மகாத்மா இருக்கிறார். தீப்பொறி பறக்கப் பேசும் ஜவஹர் இருக்கிறார். இரும்பு மனிதர் இருக்கிறார். தங்கக் கோட்டையில் உலவும் சீமான்கள் உள்ளனர். ஆலை அரசர்கள் உள்ளனர் டாட்டாவும், பிர்லாவும், டால்மியாவும், பஜாஜும் உள்ளனர். அவர்களும் நாமும் கூட்டுத் தர்பார் நடத்தத் திட்டம் போட்டுவிட்டோம். இனி நமக்குக் கவலை இல்லை என்று ஆறுமாந்து கிடந்த ஏகாதிபத்தியம், திடுக்கெட்டெழுந்து, பேந்தப் பேந்த விழிக்கிறது. அதன் செவியினால் ஜனாப் ஜின்னாவின் போர்முரசு கேட்கிறது.

பிரிட்டிஷார் நம்மை ஏய்த்துவிட்டார்கள் - காட்டிக் கொடுத்துவிட்டனர். அவர்களின் வாக்குறுதிகளை இனி நாம் நம்ப முடியாது என்று, லீகின் தலைவர் முழக்கமிட்டார்.

பிரிட்டிஷ் தூதர்கள் தயாரித்து, லீகினால் முன்பு ஒப்புக் கொள்ளபட்ட திட்டத்தை இனி ஏற்றுக் கொள்ள முடியாது என்று தெரிந்துவிட்டார்.

பிரிட்டிஷார், சட்டத்திட்டத்துக்கு அடங்கிய கிளர்ச்சிக்கு மதிப்புத் தருவதாக இல்லை என்பதைக் கண்டுகொண்ட ஜனாப் ஜின்னா, "சட்ட சம்பிரதாய ஒழுங்கு முறைப்படி நடப்பது என்ற போக்கை இன்றுமுதல், முஸ்லீம் லீக் கை விட்டுவிட்டது. என்று கூறிவிட்டார். முஸ்லீம் லீக் தனது குறிக்கோளானா பாகிஸ்தானுக்காகப் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துடன் நேரடியான நடவடிக்கை எடுத்துக்

கொள்ளாத தீர்மானித்துவிட்டது என்று பரணி பாடினார். பிரிட்டிஷார் அளித்த "பட்டங்களை" முஸ்லீம் லீகினர் விட்டுவிட வேண்டும் என்று தீர்மானம் நிறைவேற்றினார். "சேலம்" செய்தார் ஆனால், சேலத்தைக் கண்டு ஓலமிட்டு ஓடிவிட்டார்களே நமது கட்சியின் ஒய்யார புருஷர்கள், அதுபோலவா அங்கு நடந்தது? நடக்குமா?

வைசிராய் நிர்வாக சபையில் அங்கம் வகித்திருந்தா சர். பிரோஜ்கான்நூன், தமது சர் பட்டத்தை அறுத்தெடுத்து, ஏகாதிபத்தியத்தின் முகத்திலே வீசினார். இந்தச் செய்தியை, திராவிட இனத்துதித்த சர். இராமசாமி முதலியார், திவான் சோபாவில் சாய்ந்துகொண்டு படிப்பார் போலும்!
சர். நஜிமுதீன், சர். இதயத்துல்லா, போன்ற பிரபல தலைவர்கள, அங்கேயே அப்போதே "பட்டங்களை வீசி எறிந்தனர் பட்டங்களை வீசி ஏறியும் வேலை மும்முரமாக நடக்கிறது. இனி ஒரு பத்து நாளிலே பரங்கியிடம் பட்டம் பெற்றவர் முஸ்லீம், லீகில் இருக்கமுடியாது!

இந்தப்போர் முழக்கம், நாம் எதிர்பார்த்தது சென்ற கிழமை, டாக்டர் ஆம்பேத்காரின் கிளர்ச்சி பற்றி நமது கருத்தைத் தெரிவிக்கும் போது, டாக்டர். பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துடன் ரேநடியான போர் தொடுக்கத் திட்டமிட வேண்டும் என்று எழுதினோம். ஷெட்யூல்டு வகுப்புத் தலைவர்கள் இனியும், பிரிட்டிஷாரின் பட்டத்தைத் தாங்கும் சுமை தாங்கிகளாக இருக்கக்கூடாது என்று எழுதினோம். சென்னையில் கூடிய, ஷெட்யூல் வகுப்பு நாட்டினரும், இதே முடிவு செய்திருப்பது கண்டு களிக்கிறோம், பாராட்டுகிறோம்.

பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு ஏன்றைக்கும் இல்லாத அளவு எதிர்ப்பு இன்று தேவை ஏனெனில், அரை நூற்றாண்டாக எந்த ஸ்தாபனம் இந்தக் காரியத்தைச் செய்து வந்ததோ அதனைச் சரிப்படுத்திவிட்டதாலும், அந்த ஸ்தாபனம், என்ன, நேரிடுவதானாலும், சரியே, முஸ்லீம்களுக்கு ஆணங்கக்கூடாது. ஆட்சியின் ஏகபோக உரிமை தம்மிடமே இருக்க வேண்டுமென்று

தீர்மானிப்பதாலும் அந்த ஆசையைக் கிளறிவிட்டு, அந்தக் காங்கிரஸ் தீர்மானித்துவிட்டபடியால், இனிப் பழங்குடி மக்கள் முஸ்லீம்கள் ஆகியோரை, ஏகாதிபத்திய எதிர்ப்பினை நடத்தவேண்டும் - நடத்தமுடியும். இந்தச் சமயத்தில், ஏகாதிபத்தியம் தந்திரமாகக் காங்கிரசை, முஸ்லீம்கள், பழங்குடி மக்கள் ஆகியோர் மீது மோத விட்டுவிட்டுப், பின்புறமிருந்து புன்னகை புரியும். இந்தச் சூட்சமத்தைத் தெரிந்துகொண்டு, காங்கிரசின் போக்கைப் பற்றி கவலைப்படாமலும், காங்கிரஸ் மீத போர் தொடுக்கவேண்டும் என்ற எண்ணம் கொள்ளாமலும், நேரடியாக ஏகாதிபத்தியத்தைத் தாக்க வழி கண்டுபிடித்தாகவேண்டும். காங்கிரசும் லீகும், அல்லது காங்கிரசும் திராவிடர் கழகமும், அல்லது காங்கிரசும், ஷெட்யூல் வகுப்பும், மோதிக் கொள்வதிலே, இங்கு மாச்சிரியம் வளருவது தான் பலனாக முடியுமேயொழிய, பிரச்சனைகள் தீராது. அதற்குப் பதிலாகக் காங்கிரசின் போக்கை மக்களிடம் விளக்கிவிட்டு, ஏகாதிபத்திய எதிர்ப்பு வேலையை நாம் மேற்கொள்ள வேண்டும்.

இந்தக் கருத்து முஸ்லீம் லீகில், பலருக்கு இருக்கக் கண்டு மகிழ்கிறோம். நமது வாழ்நாளிலே ஓர் முறையேனும், ஏகாதிபத்தியத்தை தாக்கும் வாய்ப்பும், ஏகாதிபத்தியத்தின் தாக்குதலால், ஏற்படும் தழும்பும் கிடைக்கட்டும், என்று முஸ்லீம், திராவிட, பழங்குடி வாலிபர்கள், துணிய வேண்டும். ஆசையால் துடிக்க வேண்டும். எவ்வளவு தவறுகள், தன்னலங்கள், கொள்கை மாற்றங்கள் இருந்தபோதிலும், காங்கிரசின் பலம் மக்களால் வளர்க்கப்படுவதற்குக் காரணம், ஏகாதிபத்தியத்தைத் தாக்க, காங்கிரஸ் பெற்ற “தழும்புகள்” என்பதை வாலிபர்கள் மறக்கக்கூடாது. இந்த எண்ணத்துடனேயே, நாம் முஸ்லீம் லீகின் “போர்க் கோலத்தைக்” களிப்புடன் வரவேற்கிறோம். சரியான சமயத்திலே இந்த “நிலைமை” ஏற்பட்டதாக மகிழ்கிறோம். ஏகாதிபத்தியம் புதிய முறையிலே பழைய சுரண்டல் வேலையைச் செய்யும் சமயம் இது. எனவேதான், இந்த நேரத்தில்

ஏகாதிபத்தியத்துக்கு எதிர்ப்பளிக்கும் சக்தியாக முஸ்லீம் லீக் மாற்றமடைவது கண்டு மகிழ்கிறோம்.

***

கவர்னர்கள் இதுபோது கிராமங் கிராமமாகச் சுற்றுகிறார்கள். ஏன்?

உழவனின் கையைப் பிடித்துக் குலுக்கி "உபயக்ஷேமம்" விசாரிக்கிறார்! ஏன்?

குடிசைக்குள் நுழைந்து பார்க்கிறார்! குடி இருக்க நான் இடம் தருகிறேன் வாரீர் என்ற மந்திரிமார்களை அழைத்துப் பேசுகிறார்! பவனி நடத்திய வண்ணம் இருக்கிறார்! பாட்டாளிகளின் நிலையைக் கண்டறியத் துடிக்கிறார்! ஏன்?

இப்போது கவர்னராக இருக்கும் நை துரை மட்டுமல்ல இவருக்கு முன்பு இங்குக் கவர்னராக இருந்த சர். ஆர்தர் ஹோப்பும் இதைத்தான் செய்தார்! ஏன்?

இங்கே உள்ள கவர்னர் மட்டுமல்ல மற்ற மாகாணங்களிலே உள்ள கவர்னர்களும், இது போன்றே நடந்து கொள்கிறார்கள்! கவர்னர்கள் மட்டுமல்ல, வெள்ளைக்கார அதிகார வர்க்கம் பூராவுமே, இப்போது ஏழை எளியவரைக் காணவும், இனிய மொழி பேசவும், எங்கும் உலவிக் குறை என்ன என்று கண்டறியவும், மிக மிக ஆவல் கொண்டு வேலை செய்கின்றது ஏன்?

***

கையிலே என்ன? ஜெபமாலையா? அடெ! உன்னிடமா? நெற்றியிலே நீறு, உச்சரிப்பு ஓங்காரத்தைப் பற்றி! - என்னப்பா அதிசயம்! எவ்வளவு அற்புதமான மாறுதல்! உன் முறைப்பு, களைப்பு, அமுல் அட்டகாசம் எங்கே? ஏன் உருட்டி, உருட்டி மிரட்டி ஊரைப்பழித்து வந்தவன், இப்போது "ஓம் மாகாளியில்" இறங்கிவிட்டாய்? என்று ஏரே அதிசயித்துக் கேட்கிறது, பொக்கரித்து வந்த போக்கிரி, சாதுவேஷம் பூண்டு, சத்காரியத்திலே உடுபட்டு

வருவது கண்டு மாறுதலுக்குக் காரணம் என்ன? பழையமுறை பலிக்கவில்லை, ஊர் உருட்டல் மிரட்டலுக்கு அடங்கிவிடும் நிலை மாறிவிட்டது, யாரடா அவன்? என்று கேட்டால், நீ யார் அதைக் கேட்க? என்ற கேள்வி பிறந்துவிட்டது, அடித்தால் தெரியுமா? என்று மிரட்டினால், அடடே இவர்தான். அம்பிளே சிங்கம்! நாமெல்லாம் பொம்மைகள்! என்று கேலி பிறக்கிறது, இந்த நிலைவந்த பிறகு, ஆறுமாப்பு மறையத்தானே செய்யும். அது மறைந்ததும் அடக்க ஒடுக்கம், பரிவு பாசம் தேவைதானே! அந்த முறையிலே, போக்கிரி சாதுவாகிறான் - சாதுவாக நடிக்கிறான்.

பிரிட்டிஷாரின் மன மாறுதலைப் பற்றிப் பலரும் பேசிக் கொண்டிருக்கிறார்கள் காந்தியார் இப்போதெல்லாம், “பிரிட்டிஷாரின் நல்லெண்ணத் தைச் சந்தேகிப்பதே பாபம்” என்று உபதேசம் செய்கிறார். வெள்ளைக்காரர்களும் இப்போது பழைய “துரை” தர்பாரை மாற்றிக் கொண்டு, அன்பராய், நண்பராய், தோழராய்க் காட்சி அளிக்கிறார்கள். முன்பெல்லாம் முறுக்கு மீசை சிற்றரசர்கள், நறுக்கு மீசை ஜெமீன்தாரர்கள் ஆகியோருக்கு மட்டுமே தரிசனம் தருவார்கள். இப்போதோ, களத்துமேட்டிலே உள்ள காத்தான், குளத்தோரம் செல்லும் செல்வான், ஆகியோர்களைப் பேட்டி காண்கிறார்கள்! திருக்கோயில்களிலே உள்ள திருவாபரணங்களை மட்டுமே பார்க்க வருவார்கள் முன்பெல்லாம், இப்போது, வரண்ட ஏரிகள், வெடித்துக்கிடக்கும் வயல்கள், சரிந்த கூரையுள்ள குடிசைகள் ஆகியவற்றைக் காண ஓடுகிறாரக்ள். மகாராஜாதி ராஜாக்களுடன் மான் வேட்டையாடச் செல்வார்கள். மாட்சிமை தங்கிய மன்னர்பிரான் சர்க்காரின் பிரதிநிதிகள் முன்பெல்லாம். இப்போது, பங்கீட்டுக் கடைகளிலே சென்று, பச்சை அரிசிக்கும் புழுங்கலுக்கும் உள்ள வித்தியாசம் என்ன என்று கேட்டுத் தெரிந்து கொள்கிறார்கள். இந்த அற்புதமான மாறுதல் ஏற்படக் காரணம் என்ன? போக்கிரி சாதுவானதற்குத் காரணம், ஊர் நிலை மாறினது. போக போக்கியத்தோடு வாழ்வதற்காகவே சுரண்டும்

முறையைக் சூக்ஷமமாக அமைத்துக்கொண்ட ஏகாதிபத்திய சுகபோகிகள், மாறினதற்குக் காரணம், உலக நிலையிலே மாறுதல், உரத்த குரலிலே ஊராள்பவனை மக்கள் எதிர்த்து விரட்டும் காலம் இது.

எனவே, உரத்த குரல், உபத்திரவத்தை வாங்கித் தர உதவுமேயொழிய, ஆட்சிக்கு அரணாக அமைவதில்லை. எனவே, குரலை மாற்றிக் கொண்டார்கள், குணாளர்களாகக் காட்சி தருகிறார்கள். புன்னகை தவழ்கிறது! ஊரார் திகைப்புடன், இந்தத் திடீர், மாறுதலைக் காண்கின்றனர். புரியவில்லை இந்தப் புன்னகை! புரிந்து கொண்டவர்களுக்குத் தெரியும். இந்தப் புன்னகை, பழைய முறைப்பை விட ஆபத்தானது என்பது. காட்டுப்பன்றி உறுமும், பார்ப்பதற்கும் பயங்கரமாக இருக்கும். ஆனால், அதனால் ஏற்படும் உயிர்ச்சேதத்தைவிட, பளபளப்பான தோல்கொண்டு, நாதம் ஆசைத்து வரும், நாகத்தால் உயிர்ச்சேதம் அதிகம். உருட்டிமிரட்டும், அந்நியனால் உரிமைக்குக் கேடு விளைவிதைவிட, புன்னகையுடன் உலவும் அந்நியனிடம் ஆட்சி இருந்தால், உரிமைக்குக் கேடு அதிகம்.

வெள்ளை ஏகாதிபத்தியத்தின் கேடுகளை இப்போது விளக்குவதென்றால், கொஞ்சம் சிரமமான காரியம் என்றுகூடச் சொல்லலாம். “கெவனர்துரை ரொம்ப நல்லவர் எங்க குடிசையிலே நுழைந்து மணிலாக் கொட்டையை எடுத்துத் தின்று பார்த்தார். கெவனர் சம்சாரம், ஏன் கொழந்தையின் கன்னத்தை முத்தமிட்டாங்க! வெள்ளைக்காருங்க கெட்டவங்கன்னு சொல்றாங் களே, அது தப்புங்க. ஆவங்க ரொம்ப நல்லவங்க!” என்று நமது கிராமவாசி கூறுவான் இப்பப்ôது பொதுமக்களின் பிரதிநிதி என்று கூறிக்கொள்ளும் மந்திரி ஒருவரும் வந்தார், அதே தினத்திலே வெள்ளைக்காரக் கவர்னரும் வந்தார். ஒரு ஊருக்கு ஜனங்கள் மந்திரிக் கூட்டத்தில் குறைவு கவர்னர் காட்டிய புன்சிரிப்பு அதிகம். மகஜர் கொடுத்த மக்களிடம் மந்திரியார் கோபித்துக்கொண்டுதான் போனார். மறுதினம் மக்கள்,

கெவனர் ரொம்ப நல்லவர், மந்திரி ரொம்பக் கோவக்காரர் என்று கூறினர்.
***

ஏகாதிபத்தியத்தின் புதிய கோலம் ஆபத்தானது என்பதை அறியாத அரசியல்வாதிகள். பிடாரி பணிந்துவிட்டது என்று எண்ணி ஏமாறுகிறார்கள் பிடாரி பணியவில்லை, சிரித்துப் பேசி நம்மைக் கொண்டே தனக்குச் சாதகமான காரியத்தை நடைபெறச் செய்து கொள்கிறது முன்பாவது, அட்டகாசம் செய்ய வேண்டி இருந்தது இப்போது அந்தச் சிரமமும் இல்லை, புன்னகையாலேயே சாதித்துக் கொள்ள முடிகிறது.

புதிய கோலம், புதிய பாஷை, புதிய நிலை, இது புரிந்து கொள்ள வேணடிய முக்கிய விஷயம். ஏனெனினல், இது புதிய ஆபத்தின் தொடக்கம் இனிப்புப் பூச்சு, அபின் கலந்தது! கூட்டுக் கம்பெனி சரக்கு! பிரிட்டிஷ் பினயா ஒப்பந்தத்தின் விளைவு, இந்துஸ்தான் பத்து மோட்டார் போல, சீமைச் சாமான், இந்தியப் பங்காளி, இலாபம் சமம், ஏழைக்கல்ல, பண மூட்டைகளுக்கு! இதன் விளைவாக இன்று நாம் காண்பது, விசித்திரமான காட்சி, அற்புதமான மாறுதல், அதுவே ஏகாதிபத்தியத்தின் புன்னகை. புன்னகை புரியும் கவர்னர்கள் தமது கருணையின் அறிகுறியாகப் பத்து ரூபாய் குறைத்துக் கொண்டார்களா சம்பளத்தில்? சிவ.சிவா அவர்கள் ஒன்றும் அந்தப் பாவம் செய்யவில்லை! நம் மந்திரிமார்களாவது, சம்பளத்தைக் குறைத்துக் கொள்ளும்படி கேட்பார்களா? எப்படி ஸ்வாமி அது சாத்தியமாகும்? ஆவாளே தங்க்ள சம்பளத்தை இரட்டிப்பு இக்கிண்டவா! ஆகவே ஏகாதிபத்தியம், எப்போதும் போல இலாபம ஆடைகிறது. ஆனால் அதற்கு இருந்து வந்த எதிர்ப்பு, புன்னகையினால் குறைந்துவிட்டது - குறைந்து வருகிறது - குறைத்துக்கொண்டு வருகிறார்கள் இந்தியாவிலே அமைதி, என்று நிரூபித்து வைப்பது, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்துக்கு இலாபம். அமெரிக்காவிலே அப்போது கடன் கிடைக்கிறது. இந்தியத் தேசியத்

தலைவர்கள், முதலாளிமார்கள் ஆகியோரின் அபிமானம் பிரிட்டனுக்குக் கிடைப்பதிலே மகத்தான இலாபம் ஏகாதிபத்தியத்துக்கு எவ்வகையில் என்றால், ஏகாதிபத்தியத்தை எந்த உருவிலும் இருக்கவிடக்கூடாது என்று கங்கணம் கட்டிக் கொண்டுள்ள சோவியத் துக்கு, எதிர்ப்பாளர்களை இலவசமாகப் பெறமுடிகிறது.

இவ்வளவுடன் இன்னுமோர் வேடிக்கை, வெள்ளையனே வெளியே போ என்று மக்கள் முழக்கமிட்டனர், இப்போதோ, வெள்ளைக்காரக் கவர்னர்கள், வேலி வயல்களிலெல்லாம் உலவி, கிராம மக்களாலும் வரவேற்கப்படுகிறார்கள். வெளியே போகவில்லை, உள்ளே அதிகமாக உலவுகிறார்கள். இவ்வளவு அற்புத மாறுதலுக்கும் காரணம் பொருளாதாரத் துறையிலே, பிரிட்டிஷ், வடநாட்டு முதலாளிமார்கள் கூட்டு ஆதிக்கத்தை ஏற்படுத்திக் கொண்டதுதான் இந்தப் புதிய நிலைமையை உணரச் சில காலம் பிடிக்கலாம். ஆனால், உணர்ந்து தீருவர் மக்கள், உணர்ந்ததும், மக்களின் உள்ளம் வேதனை அடையும். இப்போது நாம் சொல்லும்போது கோபம் வரும்.

(திராவிட நாடு - 4.8.46)

# வாய்ப்பூட்டு

"ஜாதி இந்துக்களின் பிணத்தைக் கொளுத்தவதற்கு என்று தனியாக உள்ள இடத்திலே, ஆதித்திராவிடரின் பிணத்தை எரித்தற்காக, மதுரையில் இரு ஆதிதிராவிடர்கள் தண்டிக்கப்பட்டது உண்மையா?"

"ஆமாம் இரு ஆதித்திராவிடர்களுக்குத் தண்டனை தரப்பட்டது."

"அவர்கள் பிறகு, மந்திரி சபையினரால் விடுவிக்கப்பட்டனரா."

"ஆமாம்."

"அப்படித் தண்டிக்கப்பட்டது தவறு என்பதற்காகவா, அவர்களை மந்திரி சபை விடுதலை செய்தது?"

"அவர்களுக்கு அளிக்கப்பட்டது, கடுமையான தண்டனை என்பதற்காக, விடுதலை செய்யப்பட்டனர்."

மதுரையில் நடைபெற்ற சம்பத்தைப் பற்றி, சட்டசபை அங்கத்தினர், கேட்ட கேள்விக்குச் சட்ட மந்திரியார் தந்த பதில் இது. சட்டசபைத் தலைவர் தோழர் சிவசண்முகம், மந்திரி கூர்மைய்யா, மந்திரிக்குக் காரியதரிசியாக உள்ள இளைஞர் பரமேஸ்வரன் ஆகிய அன்பர்களின் முகம், இந்தப் பதிலைக் கேட்டபிறகு எப்படி இருந்திருக்கும் என்பது நமக்குத் தெரியாது. ஆனால் சட்ட மந்திரியாரின் பதிலைப் படித்ததும் நமது கண்களிலே நீர் கசிகிறது. ஆதித்திராவிடர்கள், அரிஜனங்கள் காந்தியாரின் கருணாவிலாசத்துக்குப் பாத்திரமாயினர். இதனினும் பெரும்பேறு வேறு என்னவேண்டும் என்று ஆனந்தக் கூத்தாடும் சகஜானந்தரின் உடன்பிறந்தோர்களுக்கு, சுடுகாட்டிலேகூட, நரியும் பிறவும், கழுகும் காகமும் வட்டமிட்டுவரும் பிணபுரியிலுங்கூட, சமஉரிமை கிடையாது, சம உரிமை இருப்பதாக எண்ணிக்கொண்டு அதன்படி காரியம் ஆற்றுவது சட்ட விரோதம், சட்ட விரோதமாக நடந்ததற்கு அவர்கள் தண்டிக்கப்பட்டனர், அதுவே முறை, இவைகளை மந்திரி சபை.

"ஏழை என்னும் அடிமை என்றும்
ஏவனும் இல்லை ஜாதியில்
இழிவுகொண்ட மனிதர் ஏன்போர்
இந்தியாவில் இல்லையே"

என்று தேசிய கீதம்பாடித் தேர்தலில் மக்களின் ஆதரவை நாடிய நண்பர்களின் மந்திரிசபை, கண்டிக்கவோ, மறுக்கவோ இல்லை. உரிமையை நிலை நாட்டுவதற்காகவே பேதத்தை ஒழிப்பதற்காகவே, அந்த ஆதித்திராவிடர்களை விடுதலை செய்ததாக மந்திரியார் கூறவில்லை. சட்ட மந்திரியாரின் பதில் தெளிவாக இருக்கிறது. கொடுக்கப்பட்ட தண்டனை, கடுமை, ஆகவே, பச்சாதாபப்பட்டு, பரிதாபத்தால் தூண்டப்பட்டு, இரக்ககுணம் காட்டாமற் போனால், இரக்கமெனும் ஒரு பொருளிலா ஆரக்கன் என்று பழி வருமோ என்றெண்ணி, பெருந்தன்மையைக்காட்ட, தண்டனையைக் குறைத்து, அவர்களை மந்திரியார் விடுதலை செய்தார், அதைத் தெளிவாக்கியும் விட்டார். தமது பதில் மூலம். ஆகவே, இன்னமும் பிணமானாலும் சரியே, ஆதித்திராவிடருக்கு, இடம் வேறுதான்! அத்துமீறிப் பிரவேசிப்பவருக்குத் தண்டனைதான் கிடைக்கும். தண்டனை கடுமை என்று மந்திரிகளுக்குத் தோன்றினால், அவர்களின் மனம் இளகி, தயவு பிறந்து, தண்டனை குறைக்கப்படும். சாஸ்திரமும் அதை ஓட்டிச் செய்யப்பட்ட சட்டமும், அப்படியேதான் இருக்கிறது. அதிலேமாற்றம் இல்லை! மாற்ற வேண்டுமென்ற மனப்போக்கு மந்திரிமார்களுக்கு இல்லை! அதிலேகூட ஆச்சரியம் நமக்கில்லை, மாற்றும்படி வற்புறுத்தத் தைரியம் இல்லையே, ஆதித்திராவிட அங்கத்தினர்களுக்கு! ஏன்னே அவர் தம் நிலை! உரிமைப்போர் முழக்கமிடத் தெரியாவிட்டாலும் நந்தனார் கீர்த்தனை மெட்டிலாவது, "காலில் வெள்ளெலும்பு முளைத்தநாள் முதலாய் அடிமைக்காரன் ஒயே" என்ற பஜனை முறையிலாவது பாடிக் கேட்கக் கூடாதா! ஏன் தோன்றவில்லை அந்த எண்ணம்? 1946ம் ஆண்டிலே மதுரையிலே, ஜாதி இந்துவுக்கென்று உள்ள பிணம் சுடும் இடத்திலே, ஒரு ஆதித்திராவிடத் தோழன்

தன் குழந்தையின் பிணத்தைச் சுட்ட குற்றத்துக்காகச் சிறையில் தள்ளப்பட்டான்.

அதுபோதுதான், ஆதித்திராவிட மக்களில் ஒருவரான தோழர் சிவசண்முகம் சென்னை சட்டசபைக்குத் தலைவராகக் கொலுவீற்றிருந்தார்.

கூர்மைய்யா எனும் மற்றோர் ஆதித்திராவிடர் மந்திரியாக இருந்தார்.

இந்தச் "செய்தியை" எதிர்காலத்திலே படித்திடும் வாலிபர்களின் உள்ளம் எப்படிக் கொதிப்படையும்! எங்கே இருக்கிறது, அந்த இன உணர்ச்சி ஆற்றவர்களின் கல்லறை, காட்டுங்கள்..." என்றல்லவா ஆத்திரத்துடன் கேட்பர். மந்திரியாரோ, மற்றவர்களோ, மதுரைச் சம்பவத்தைப் பற்றி, மனம் உருகிப் பேசினரா? இல்லை! சுடுகாட்டிலுமா ஜாதி பேதம்? என்று இடித்துரைத்தனரா? இல்லை! பாடுபடும் கூட்டத்தை, பிறருக்காகவே பாடுபட்டுப் பாடுபட்டு மேனி கருத்துப் போன இனத்தை நாகரிகம் பெருகி, அறிவு வளர்ந்து, ஜனநாயகம் தாண்டவமாடும் நாட்களிலேயுமா பேதம் காட்டி இழிவுபடுத்தி வருவது, இந்தக் கொடுமை இனியும் நடக்கலாமா, இதைச் சகித்துக் கொண்டிக்க முடியுமா என்று பேசினரா? இல்லை வேறே என்ன பேசினர்! ஒயோ! பாவம்!! என்பதற்காக, அந்த ஆதித்திராவிடர்களை விடுதலை செய்தனராம் - அதைக் கூறினார் மந்திரியார்! சாட்டை அடி பலமாகி மாட்டின் முதுகிலே புண் ஏற்பட்டு, புண்ணிலே உ மொய்த்துக் கொண்டு இருப்பது கண்டு, வண்டிச்சக்கரத்தில் உள்ள மையை எடுத்துப் புண்ணின்மேல் பூசுகிறோமல்லவா, அதுபோல சாஸ்திரம கொடுத்த அடி, பேதமென்ற புண்ணை உண்டாக்க, அதன்மீது சட்டமும், அதன்பேரால் தரப்படும் தண்டனை எனும் உயும் உட்காரும்போது சட்டமந்திரியார் உயை ஓட்டிவிட்டு தண்டனையைக் குறைத்து விடுதலை செய்தோம் என்ற மையைப் பூசிக்காட்டினார். இது 1946ல்! ஆதோ ஆப்பிரிக்காவில், ஸ்மட்ஸ்துரையின் பேதத் திட்டத்தை எதிர்த்து நமது நண்பர்கள் போரிடும்

நாட்களில்! நமக்கே இது பற்றி விரிவாக எழுத வெட்கமாகத்தான் இருக்கிறது. இப்படிப்பட்ட நாட்களிலே வாழ்கிறோமே என்று துக்கமாகவும் இருக்கிறது, அதே போது, இது பற்றிய சிந்தனையற்று ஒரு ஆதித்திராவிடர் சபாநாயகராகவும் மற்றொருவர் மந்திரியாகவும் இருந்துகொண்டு, இந்த இழிவைத் துடைக்கத் தமது சிறுவிரலையும் அசைக்காமலிருக்கின்றனர்! எந்த இனத்துக்குப் பிரதிநிதிகள் என்று கூறிக்கொண்டு, ஆட்சி மன்றத்திலே இவர்கள் அமர்ந்திருக்கிறார்களோ, அந்த இனம் இழிவுபடுத்தப்படுகிறது. இவர்கள் அதுகண்டு மனம் பதறாமலிருக்கின்றனர். கோழியும் தன்குஞ்சுகளைக் கொல்ல வரும் பருந்துடன் போரிடும் என்றார் பாரதிதாசன்! இதோ இவர்கள், கூடப்பிறந்தவர்கள் சமூகக் கொடுமைக்கு ஆளாகும்போது, வைதிக சட்டத்திட்டத்துக்கு இறையாகும்போது, பார்த்துக் கொண்டு வாய் திறவாது உள்ளனர்! பேசத் தெரியாததால் அல்ல! பேசச்சொல்லுங்கள், டாக்டர் ஆம்பேத்காரை எதிர்த்து. சாளரத்திலிருந்து விழும் நீரோசைப்போல் இருக்கும், பேச்சு! தன் இனத்தின் தன்மானம் பறி போகிறதே அதுபற்றிப் பேசச் சொன்னால் மட்டுமே, வாய்மூடிவிடும்! இந்த வாய்ப்பூட்டுக்கு இலாபம் கிடைக்காமல் போகவில்லை. மாதாமாதம் ஆயிரத்து ஐந்நூறு! ஏசுவைக்காட்டிக் கொடுத்து ஜூடாசு பெற்றதுபோல முன்னூறு மடங்கு அதிகம் பெற்று மகிழ்கிறார்கள்! இம் ஜூடாசுக்குக் கிடைத்த பழிச்சொல் போல முன்னூறு மடங்கு அதிகமான பழிச் சொல்லுக்கு இலாயக்குள்ளவராகிறார்கள். இன்று இல்லை பழிச்சொல், ஆனால், நாளை? ஒவ்வொரு மாதமும், பணம் பெறும்போது, அவர்கள் சிந்திக்க வேண்டும் இந்தப் பணம் பெறுகிறோம், நமது இனத்தின் இழிவுதுடைக்கும் பணியை மறந்து, என்பதை!

(திராவிட நாடு - 18.8.46)

# குற்றவாளி - கூண்டில் இல்லை!

பொன்மலையில் இரயில்வே தொழிலாளர்கள் வேலைநிறுத்தம் செய்வதாக உள்ளனர்.

பல நகரசபைகளிலே, தோட்டி வேலை செய்பவர்கள் வேலைநிறுத்தம் செய்கின்றனர்.

“சர்க்கார் சிப்பந்திகள்” வேலை நிறுத்தம் செய்யக் கிளம்புகின்றனர்.

அல்லலைக் தாங்க மாட்டாமல், பள்ளிக்கூட ஆசிரியர்கள் வேலை நிறுத்தம் செய்ய முடிவு செய்துள்ளனர்.

பல ஆலைகளிலே இதே நிலை.

போக்குவரத்து ஸ்தாபனங்களிலே இதே நிலை.

கிராôதிகாரிகளின் குறைகளும் அவர்களை அதே நிலைக்குக் கொண்டுவந்து விடுகிறது. வயலிலே பாடுபடும் உழவனும், கலப்பை மீது கண்ணீர் சிந்திச் சிந்திப் பார்த்துவிட்டு, இதே நிலைக்கு வருகிறான்.

இத்தனை வேலை நிறுத்தங்களும் விளையாட்டுக்கும் பொழுது போக்குமா நடத்தப் படுகின்றன!
“பசியுடன் பாடுபடும் தபால்காரன்” என்று பாட்ஜ் அணிந்து கொண்டு தபால்காரர் சென்றனர்.
“குறைந்த சம்பளம் பெற்றுக் குமுறும் சர்க்கார் குமஸ்தாக்கள்” என்று சர்க்கார் சிப்பந்தி பாட்ஜ் அணிகிறார். அவை, விளையாட்டா? ஏழ்மையை மறைத்துக் காட்டவும் பசித்தாலும் எப்படி அதனை அலஜ்ஜையின்றி வெளியே எடுத்துச் செல்வது என்று எண்ணி மறைத்தும் தமது வறுமையைக் கூறி, ஏன் மற்றவர்களுக்குச் சங்கடத்தை ஏற்படுத்தவேண்டும் என்ற பெருந்தன்மையுடனும் நடந்து வந்தவர்கள் இன்று.

எங்கள் வாழ்வு குறை உடையது
போதுமான வருமானம் இல்லை.
பசியார உணவுக்கு வழி இல்லை

வறுமையால் வாடுகிறோம்.

என்று பகிரங்கமாகக் கூறுகிறார்கள். அவர்கள் எவ்வளவு குமுறிக் குமுறியிருந்து விட்டுக் கூறத் தொடங்கினர் என்பதை எண்ணிப் பார்க்கும் எவரும், அவர்களால்பால் பரிவு காட்டாமலிருக்க முடியாது.

குறை கூறிக்கொண்டே இருந்தவர்கள், புதிதாக ஒருகுறை கூறினர், என்பது அல்ல இப்போது உள்ள நிலைமை.

எவ்வளவு குறைகளையும் தாங்கும் சக்தி பெற்றிருந்தவர்கள், அந்தத் தாங்கும் சக்தி போய்விட்டதால், வெட்கத்தை விட்டு வெளியே சொல்லியாவது, நமது குறைகளைத் தீர்த்துக் கொள்ளலாம் என்றல்லவா, முன்வந்துள்ளனர். இவர்கள் மீதா சீறிவிழுவது? இவர்களின் நிலைமையை அறிந்து, பரிவு காட்டுபவர்களை எல்லாம், காங்கிரசின் எதிரிகள் என்று ஒரே, வாய்வீச்சினால் சாய்த்துவிடுவதா! காங்கிரசின் எதிரியார்? படுகிற பாட்டுக்கு ஏற்ற அளவு பணம் கேட்கிறர்வர்களை, சக்திக்கு ஏற்ற அளவு.

வேலைசெய்கிறோம் (சக்திக்கு மீறிய அளவுகூட) தேவைக்கு ற்ற அளவு வசதிகள் தரவேண்டும் என்று கேட்கிறவர்களை ஆதரிப்பவர்கள் அத்தனை பேரும், காங்கிரசின் எதிரிகள் என்றால், நாளாவட்டத்தில், மந்திரி சபை தவிர (பார்லிமெண்டரி காரியதரிசிகளைக் கூடச் சேர்த்துச் சொல்ல முடியாது) மற்றவர்கள் அத்தனை பேரும், காங்கிரஸ் எதிரிகள் பட்டிக்குத்தான், போய்ச் சேரவேண்டி நேரிடும், இது நியாயமுமல்ல, நல்லதுமல்ல!

இந்த மாகாணத்தில் 1,20,000 ஆசிரியர் உள்ளனர். இவர்களின் 60,000 ஆசிரியர்களுக்கு மேலாகவே, மாதம் 30 ரூபாய் சம்பளம் பெறுகிறார்கள். 40,000 ஆசிரியர்கள் 31 ரூபாயிலிருந்து 50 ரூபா வரை சம்பளமாகவும் 2000 ஆசிரியர்கள் 100 ரூபாயும் அதற்கு மேற்பட்ட தொகையும் பெறுகிறார்கள்.

இந்த நிலையில் உள்ள ஆசிரியர்களுக்கு “நீங்கள் புனிதமான தொழிலிலே ஈடுபட்டவர்கள், கேவலம் பணம் உங்கள் குறியாக இருக்கக் கூடாது. புண்ணிய காரியம், பிள்ளைகளுக்குக் கண்திறப்பது. எழுத்தறி வித்தவன் இறைவனாகும் என்று புகழ்மாலை சூட்டிவிடுகிறோம். புண்ணியகாரியத்திலே ஈடுபட்டுள்ள போதிலும் இவர்களுக்கும் பசி தாகம் ஏற்படுகிறது! குடும்பப் பொறுப்பு இருக்கிறது! ஆசிரியர்களிடம் தரப்படும் ரூபாய்க்கு ஆணா பதினாறுதான் கிடைக்கும். இந்நிலையில் 30 ரூபாய் சம்பளம் பெற்றுக்கொண்டு, எப்படி, 60,000 ஆசிரியர்கள் வாழ்வை நடத்த முடியும்? லோகல் போர்டு பள்ளிக்கூட ஆசிரியர்களின் சம்பள விகிதம் 1934-இம் வருஷம் ஏற்பட்டது. அதாவது ஆளவரிசி வரும் என்று மக்கள் கனவுகூடக் கண்டிருக்கமுடியாத நாளில், கள்ளமார்க்கெட், கொள்ளை இலாபம், வங்கப் பஞ்சம், கோதுமைச் சத்தும் ஆவுன்சு உணவும், என்ற சொற்கேளே நடமாடாத நாள்களிலே, போர்வாடைக்கு முன்பு ஏற்பட்ட சம்பள முறை.

1934-1946! எவ்வளவு மாறுதல்! ஏத்துணைப் புதுப்பிரச்சினைகள்! எவ்வளவு நெருக்கடிகள் வாழ்க்கைச் செலவு. இந்த 12 வருஷ காலத்திலே எவ்வளவு உயர்ந்துவிட்டது. 1934ல் சம்பள விகிதம் நிர்ணயித்தபோதே, “இது மிகக் குறைவு” என்றனர். 12 - ஆண்டுகளாக இதே சம்பளம். விலைவாசிகள் விஷம்போல் ஏறின! சம்பளம், “கல்லுப் பிள்ளையாராகவே” இருந்தது - இருக்கிறது. என்ன செய்வார்கள் ஆசிரியர்கள்? இவர்களைக் கிளர்ச்சி செய்யும்படி யார் தூண்ட வேண்டும்?

இங்கே மட்டுந்தானா ஆசிரியர்கள், சம்பள உயர்வுக்காகப் போரிடுகின்றனர். சென்னையை முந்திக் கொண்டது ஒக்கிய மாகாணம். அங்கு 40,000 ஆரம்பப் பள்ளி ஆசிரியர்கள் பத்துப் பதினைந்து நாள்கள் வேலைநிறுத்தம் செய்து, பிறகு, குறைந்தது 25 ரூபாயாவது சம்பளம் தரப்படும் என்ற வரம்பெற்றனர் காங்கிரஸ் மந்திரியிடம்.

இங்கே பிரதம மந்திரி பிரகாசம், எர்வலமாகச் சென்று தமக்கு உற்ற குறையைக் கூறிய ஆசிரியர்களை, மனம் புண்படும்படிப் பேசினார் என்று பத்திரிகைகளிலே பார்த்தோம், ஒக்கிய மாகாணக் கல்வி மந்திரியும் ஆசிரியர்கள் மீது சீறித்தான் விழுந்தாராம்!

செகண்டரிகிரேட் ஆசிரியருக்கு, சர்க்கார் பள்ளிக்கூடமாக இருந்தால் மாதம் 30 ரூபாய், போர்டு பள்ளிக்கூடமானால் 24, சரக்கார் உதவிபெற்று நடத்தப்படும் பள்ளிக்கூடமானால் 18.

ஹையர்கிரேட் ஆசிரியருக்கு சர்க்கார் பள்ளியில் 23, போர்டு பள்ளியில் 20 சரக்கார் உதவிதரும் பள்ளிக்கூடம் 14 - ரூபாய் தருகிறது! (இதிலே 100க்கு 15 ரூபாய் மானேஜ்மெண்ட் செலவுக்குப் போய்விடும்)

இந்த நிலையிலே உள்ள ஆசிரியர்கள், எர் உலகம் அறியாதர்களல்லர்! இவர்களû யார் கிளப்பிவிட வேண்டும்? அதிகவேலை, போதுமான போஷாப்பு இல்லை! என்ன விளைவும் இதனால்? உடலைத் தேய்த்து உயிரைத் தேயவைக்கும் இருமல்! ஒட்டிய உடல்! குழிவிழுந்த கன்னம்! ஒளி இழந்த கண்கள்! கிழிந்த கோட்! வீட்டில் வேதனை! வெளியே நடமாடும்போது வெட்கம்! வகுப்பில் உட்காரும்போது ஆலுப்பு! ஆலுப்பினால் இத்திரம்! இத்திரத்தை ஓரளவுக்குக் குறைத்துக்கொள்ள, கொஞ்சம் பிரம்பு வீச்சு! - இதுதான் ஆசிரியர் நிலை - அறிவளிக்கும் பேருபகாரிய்ன பிழைப்பின் அலட்சணம். கூனிக் குமுறிக்கொண்டு தள்ளாடி நடந்து பள்ளிக்குச் செல்லும்போது, ஆசிரியர் பார்க்கிறார். போதையை மிரட்டும் பூஜாரி தன்னைவிட நன்றாக வாழ்வதை! திதி நடத்தும் வாத்தியார் திவ்யமாக வாழ்வதை இவரை, யார் கிளப்பிவிடவேண்டும்! ஒவ்வொர் இருமலும் அவரைக் கிளப்பிவிடுகிறது - காங்கிரசின் எதிரிகளா தூண்டவேண்டும்! இப்போது, ஆசிரியர்கள், இதழ்களில் பார்ப்பார்கள். சென்னை நகரத்தோட்டிகள், தினம் 2 ரூபாய் கூலிகேட்டு வேலை நிறுத்தம் செய்கிற செய்தியை யார் தூண்டிவிட வேண்டும்!

1934க்கும் 1946க்கும் இடையே, வாழ்க்கைச் செலவு பலப்பல மடங்கு அதிகரித்துவிட்டது என்று பொருளாதார நிபுணர்கள் கூறுகிறார்கள். ஆசிரியர்களின் சம்பளமோ 1934ல் இருந்த நிலைமையிலேதான்! இது நியாயமா? முறையா? கல்வியை வளர்க்கும் வழியா? அறிவுக்கு அரணா?

1934ல் சர்க்கார் மக்களிடமிருந்து பெற்ற பணம் வரியாக, 14 கோடி. 1946ல் 48 கோடி ரூபாய் சர்க்காருக்கு மக்கள் தருகின்றனர். ஆனால் ஆசிரியர்களுக்குச் சர்க்கார், அந்த 1934ல் போட்ட சம்பளமேதான் தருகிறார்கள். என்றால், ஆசிரியர்களைக் கிளர்ச்சி செய்யும்படித் தூண்ட இள் வேறு வேண்டுமா என்று கேட்கிறோம்.

யார், கிளர்ச்சி செய்தாலும், வேறு யாரோ தூண்டிவிடுகிறார்கள் என்று சமாதானம் கூறுவது, நல்லதுமல்ல, நியாயமுமாகாது.

ஆலைத் தோழனா? இரயில்வே தொழிலாளியா? தபால் தோழரா? கிராமாதிகாரியா? ஆசிரியரா? தோட்டிமார்களா? யாராக இருந்தாலும் சரி, இவர்களெல்லாம். யாராலோ கிளப்பி விடப்படுகிறார்கள். யாரோ தூண்டிவிடுகிறார்கள். என்று கூறுவது பொறுத்தமற்ற சொத்தை வாதம், மட்டுமல்ல, முதலமைச்சர் (தம்மையும் அறியாமல்) நாடு பூராவிலும் பாட்டாளி உலகெங்கும், காங்கிரஸ் எதிரிகள் ஆதிக்கம் செலுத்துகிறார்கள் என்று, கூறுவதாக முடியும்! பாட்டாளி உலகு, காங்கிரசல்லாதாரிடம் இருக்குமானால் - பிரகாசம் மந்திரிசபையிலே இருள் நிச்சயம் ஏற்படும்! தூண்டி விடுகிறார்கள். வேண்டுமென்றே கிளப்பி விடுகிறார்கள் என்றே வைத்துக்கொள்வோம் வாதத்துக்காக என்ன செய்ய வேண்டும் மந்திரியார்? தூற்றியவர்களைத் தூற்றிவிட்டால் போதுமா? தூக்கிலிட்டு விட்டால் தொல்லை போய்விடுமா? நாட்டு மக்களிடையே குமுறல் இருக்குமட்டும் வேலை நிறுத்தம் நடந்தபடிதான் இருக்கும். பிரகாசம்காரு, தூண்டி விடுபவர்கள் வெட்கத்தால் தலையைத் தொங்க விட்டுக் கொள்ளும்படி, தொழிலாளர்களின் குறைகளைத்

தீர்த்துவிட்டு, "யாராக இருந்தாலும் சரி, உங்கள் சாமர்த்தியத்தை எல்லாம் காட்டுங்கள். எங்கே ஒரு தொழிலாளர் தகறாரையாவது காட்டுங்கள் பார்க்கலாம்? உண்டாக்குங்கள் பார்க்கலாம்! முடியாது! நீங்கள் தலைகீழாக நின்றாலும் அது நடவாது. ஏன் ஆட்சியிலே பாட்டாளி உலகு பரிபூரணத் திருப்தியுடன் வாழ்கிறது" என்று கூறுவதுதானே.

"சட்டத்தையும் ஒழுங்கையும் நிலைநாட்டச் சர்க்கார் சகல சக்தியையும் உபயோகிக்கும்" என்கிறார் முதலமைச்சார். பூ! இதென்ன பிரதாபம்! சக்திகள் இருக்கும் இடத்திலே, யாரை உட்காரவைத்தாலும் சொல்லலாம் அதுபோல செய்யவும் முயலலாம்! இதைச் சொல்ல, செய்ய, போக்துரை போதுமே, காங்கிரஸ் மந்திரிசபை வேண்டாமே!

உண்மையிலேயே, தூண்டிவிட்டவர்கள், கிளப்பிவிட்டவர்கள் யார் என்று அறிய முதலமைச்சர் அவாக்கொண்டால், நாம், அந்தக் குற்றவாளிகளைக் காட்டத் தயாராக இருக்கிறோம். அவர்கள் நெடுந்தூரத்திலும் இல்லை!

"இப்போதுள்ள காலமாறுதலின் பயனாக, விலைவாசிகள் ஏறிவிட்டன. வாழ்க்கைச் செலவு அதிகமாகிவிட்டது. போருக்கு முன்பு 500 ரூபாய் சம்பாதித்துக் குடும்பம் நடத்தியவரால், அவர் தேசபக்தராக தேசியவீரராக, இருந்தாலும் இப்போது குறைந்தது 3 மடங்கு அதிகமாகப் பெற்றுதான், வாழ்க்கையை நடத்த முடியும்" என்று காங்கிரஸ் தலைவர்கள், சட்டசபையிலே தெளிவாகக் கூறிவிட்டனர். மந்திரிமார்கள், காரியதரிசிகள் மெம்பர்கள் ஆகியோர் இந்த "வாதத்தின்" துணைக்கொண்டு தத்தமது சம்பளத்தை அதிகப்படுத்திக் கொண்டனர்.

சொல், செயல், இரண்டின் மூலமாகவும், "தனக்கென வாழாப் பிறர்க்குரியாளர்" "தன்னலம் மறுத்தோர்" இந்த நாள்களிலே சம்பளம் உயர்த்தினால் ஒழிய வாழ முடியாது என்பதை நாட்டுக்கு எடுத்துக் காட்டிவிட்டனர்.

“தூண்டுதல்” இதனைவிட வேறு வேண்டுமா? “உச்சி மீது வானிடந்து வீழுகின்ற போதிலும்” அச்சமில்லாத அரும்பெரும் தலைவர்களே, அரிசி ரூபாய்க்கு இரண்டுபடி தானே ஐயா! எப்படி, இந்தநாளில் நாங்கள் வாழமுடியும், ஆகவே சம்பளத்தை உயர்த்திக் கொள்கிறோம் என்று கூறிவிட்டனர். இவர்களே குற்றவாளிகள்! இதிலே நானுமல்லவா இருக்கிறேன் என்று பிரகாசம்காரு கேட்பார். “இஹா! பந்தலுகாருவும் இரக்கத்தான் செய்கிறார்!”

தாமாக முன்வந்து செய்திருக்க வேண்டியதைத் தொழிலாளர், தீயின் மத்தியில் நின்று கேட்டும் செய்ய மறுத்துப் பாட்டாளி உலகின் நிலையைக் குலைக்கிறார்கள் என்று குற்றம் சாட்டுகிறோம்.

தொல்லை பொறுக்க மாட்டாமல், பொமக்கள் சர்க்காரின் செவியில் ஏழையின் அழுகுரல் விழும் என்ற நம்பிக்கையுடன் பாட்டாளிகள் கிளர்ச்சி செய்வதை, யாரோ தூண்டிவிடுகிறார்கள், அவர்கள் காங்கிரஸ் விரோதிகள் என்று கூறி, மக்களின் கருத்தைத் தவறான பாதையிலேயே திருப்ப முயற்சிக்கிறார்கள் என்று குற்றம் சாட்டுகிறோம்.

ஏழைகள் தலையில் 3512 அலட்ச ரூபாய் வரியாகவும், பணக்காரர் மீது 548 அலட்சம் வரியும் ஏற்றும்படியான “பூர்ஷ÷வ” (முதலாளித்வ) பட்ஜட் தயாரித்தனர் என்று குற்றம் சாட்டுகிறோம்.

எனவே கொந்தளிப்பும் குமுறலும், கிளர்ச்சியும் வேலை நிறுத்தமும் அதன் விளைவுகளான வேதனைகளும், யாரோ கிளப்பிவிட்டதல்ல தூண்டிவிட்டதல்ல!

கிளப்பிவிடுவது, தூண்டிவிடுவது, என்ற வார்த்தைகளைத் தாராளமாகப் பலர் உபதேசித்து விடுகின்றனர். குற்றச்சாட்டிலே ஒன்றாகக் கருதவும்படுகிறது. தூண்டிவிடும் செயல்.

பிரிட்டிஷ் ஆட்சியின் கீழ் இருப்பதால் ஏற்படும் கேடுகளையும் அவமானத்தையும் அறிந்துகொள்ளாமல்

இந்திய உபகண்டத்து மக்கள் உணர்வற்றுக் கிடந்தபோது காங்கிரசானது, மக்களிடம் ஆன்னிய ஆட்சியின் கேடுகள், அடிமைத் தனத்தால் வரும் இழிவுகள் ஆகியவற்றை எடுத்துக்கூறி உணர்வு பிறக்கச்செய்து, ஆன்னிய ஆட்சியை எதிர்க்கும் துணிவு உண்டாகச் செய்தது. அதற்காக அவர்களுக்கு மக்கள் சிலைகள் அமைத்தனர். கவிகள் சிந்துபாடினர், கன்னியர் இரத்தி எடுத்துனர். எழுத்தாளர் புகழோவியம் தீட்டினர்.

ஆனால் இந்தக் காரியமாற்றியவர்களைப் பிரிட்டிஷார் என்ன கூறினார்?

தூண்டிவிடுகிறார்கள்! கிளப்பி விடுகிறார்கள்!! என்றுதான். ஏனோ, தங்கள் திருவாயிலிருந்தும் அதே சொற்கள் கிளம்பிவிட்டன என்று முதலமைச்சரைக் கேட்க விரும்புகிறோம்.

தூண்டிவிடுகிறார்கள்!
கிளப்பிவிடுகிறார்கள்!

இம்! அவை, பழைய சொற்கள்! மிகமிகப் பழைய வார்ததைக்ள, மாளிகையிலே இருந்துவந்த மமதை நிறைந்த மன்னன் மனோகரியின் இதழிலே மதுகண்ட சீமான், உலகிலே ஏமாந்தவர்கள் எங்கெங்கு உண்டு என்று புள்ளி விவரக் கணக்கெடுத்துச் சளைக்காமல் சுரண்டும் ஏகாதி பத்தியக் காவலர். இவ்வளவு பேர்வழிகளும் இந்த இரண்டே சொற்களை உபயோகித்தனர். தூண்டிவிடுகின்றனர்! கிளப்பிவிடுகிறார்கள்! என்றே அவர்களும் கூறினர். தாங்களும் கூறினீர்! ஏனோ?

வேலை நிறுத்தத்தைக் கிளப்பி விடுபவர்களைக் காங்கிரசின் எதிரிகள் என்கிறார் பிரகாசம். யார், கிளப்பி விடுகிறார்கள்?

தொழிலாளி வீட்டிலே உள்ள

உடைந்த பாண்டம்
அவன் குடி இருக்கும்

ஓட்டைக் கூறையுள்ள குடில்
அவன் உடலை மூடிக்கிடக்கும்
கந்தல் சட்டை
அவனுடைய
நோயாளி மனைவி
அவனுடைய
தேய்ந்துபோகும் குழந்தைகள்
தொழிலாளர்கள், குறைந்த சம்பளம் பெறும் அதிகாரிகள் ஆகியோருக்கு வேலைநிறுத்தம் விளையாட்டுமல்ல, வீம்புமல்ல. வேதனை தாங்கமுடியாத வேதனை. அவர்களை இந்நிலையில் இருக்கச்செய்து விட்டுப் பொதுமக்கள் சர்க்கார் என்ற புகழுரையையும் ஒட்டவைத்துக் கொண்டு, கிளர்ச்சி செய்தால் ஒடுக்கிவிடுவோம் என்று கூறுவது குடியரசுக் கோட்பாட்டையே உதறித் தள்ளும் குற்றமாகும்! ஆனால் அந்தக் குற்றவாளிகள் - கூண்டில் இல்லை. பவனி வருகிறார்கள், மற்றவர்களைத் தூற்ற!

(திராவிடநாடு - 18.8.46)

# கோவா கிளர்ச்சி

சிங்கம், பங்கப்பட்ட நேரத்திலே செந்நாய் ஒன்று எளையிடுவது போன்றதோர் சம்பவம் நடைபெறுகிறது. பலம் பொருந்திய பிரிட்டிஷ் ஏகாதிபத்யம் பணிந்துவரும் இந்த நாளிலே, சின்னஞ்சிறு, போர்ச்சுக்கல், தன் அதிகாரத்தை இங்கு நடத்திக்கொண்டே இருக்க முடியும் என்று எண்ணுகிறது. அடக்குமுறை மூலம், தன் இதிபத்தியத்தை நிலைநாட்ட முடியும் என்று கனவு காண்கிறது. அதன் அடக்குமுறை, ஜ÷ரவேகத்தில் துவங்கவிட்டது, அங்குள்ள அதிகாரிகள் வெறி போல் பேசுகின்றனர்.

இந்தப் போர்ச்சுகீசியர் இப்போது நாட்டு விடுதலைக்காகப், பேச்சுச் சுதந்திரத்துக்காப் போராடிய தோழர் குன்ஹாவைத் தூக்கி கொண்டு போகின்றனர். கடல் கடந்து, நெடுந்தூரத்திலே உள்ள இப்பிரிக்காவிலே சிறை வைக்க - எட்டு ஆண்டுத் தண்டனை, குன்ஹாவுக்கு ஏன்? பொதுக்கூட்டத்தில் பேசிய குற்றத்துக்காக. இந்தப்போக்கு போர்ச்சுகல் சர்க்காரின் மட்டரகமான அறிவைத்தான் அகில உலகுக்கும் எடுத்துக் காட்டுகிறது.

கடல் ஓநாய்களின் இரத்த வெறிக்குத் தென் அமெரிக்கா முதற்கொண்ட சிங்களத்தீவு வரையிலே பல்வேறு நாடுகள் பலியாயின. இவர்கள் பணம் திரட்டிய பிறகு பெரிய மனிதர் களாயினர்! இந்தப் பெரிய மனிதர்கள் பிறகு தத்தமது நாடுகளிலே, வியாபாரக் கோமான்கள் இக்கப்பட்டு, ஆங்காங்கு இருந்த அரசர்களுக்கு ஆசைகாட்டி, பல கம்பெனிகளை உண்டாக்கச் செய்து அவைகளை, இந்திய உபகண்டத்தின் மீது ஏவினர். அங்ஙனம் இங்கு புகுந்த கூட்டத்திலே, ஒன்று இந்த போர்சசுகீசியர் பூர்வாஸ்ரமம் இப்படி! இப்போது பேசுவதோ சர்வதேச நீதி நியதிபற்றி!

போர்ச்சுகலை இரண்டாம் ஜான் என்ற மன்னன் ஆண்டு கொண்டிருந்த போது, வாஸ்கோடிகாமா என்பவனைக் கடலிலே புதுமார்க்கங்களும், புதிய தேசங்களும்

உள்ளனவா என்று பார்த்துவர அனுப்பினார். வாஸ்கோடகாமா, 1498ல் இப்பிரிக்காவைச் சுற்றிக்கொண்டு, கீழ்நாடுகளுக்கு வரக்கூடிய கடல் மார்க்த்தைக் கண்டுபிடித்தான். இப்பிரிக்கத் தென்முனைக்கு அவனிட்ட பெயர், நம்பிக்கை முனை என்பதாகும். அவன் கடல் மார்க்கத்தைக் கண்டுபிடித்தான். பிறகு, அதுவே சுரண்டிப் பிழைக்கும் மார்க்கமாயிற்று பல்வேறு வெள்ளை இனத்தவருக்கு.

காமா காலத்தில், முதன் முதலாகப் போர்ச்சுகீசியர், கள்ளிக் கோட்டையில் காலடி வைத்தனர். கைலாகு கொடுத்து வரவேற்றார் ஜாமொரின்! மாப்பிள்ளைமார் எதிர்த்தனர். படுகொலை செய்தனர் (முஸ்லீம்) மாப்பிள்ளை மார்களை போர்ச்சுகீசியர்.

ஆரம்ப முதலே, போர்ச்சுகீசியரின் திட்டம், முஸ்லீம் செல்வாக்கை அழிப்பதாகவே இருந்தது. ஏனெனில் கடலிலும், வியாபாரத்திலும், ஏகிப்து முதல் கள்ளிக்கோட்டை வரையில் முஸ்லீம்களுக்கே அதுபோது ஆதிக்கம். ஒரோப்பாவிலேயே முஸ்லீம்களின் செல்வாக்கு நிலைத்துவிடக்கூடுமோ என்று வெள்ளை வர்க்கத்தவர் பயந்து கொண்டிருந்த காலம் அது. அந்தச் சமயத்திலே, கள்ளிக்கோட்டையில் காலடி வைத்துனர் போர்ச்சுகீசியர். முதல் வேலை முஸ்லீம்களை அழிப்பதாக இருந்தது.

1502ல் மீண்டும் வந்தான் வாஸ்கோடகாமா, கொச்சி மன்னனுடன் குலவினான். கொச்சி, கண்ணனூர் ஆகிய இடங்களிலே வியாபாரத் தலங்களை அமைத்தான். அன்றுதொட்டு இன்று வரை இருந்து வருவதும் இந்த உபகண்டத்தை உருக்குலைத்துமான, பிளவும் மாச்சரியமும் அன்று போர்ச்சுகீசியருக்கு உதவியாக இருந்தன.

கொச்சி ராஜாவுக்கும் ஜாமோரியனுக்கும் சச்சரவு, ஜாமோரின் முதலிலே போர்ச்சுகீசியரை வரவேற்ற மகானுபாவன், ஜாமோரின் என்ற வார்த்தையைக்

சொல்லியனுப்புங்கள்” என்பதாக, அம்மன்னன் சமணர்களுக்குக் கூறியிருக்கவேண்டும்; அதுவே முறை. ஆனால், கதை அப்படி அமையவில்லை. சம்பந்தர் தங்கியிருந்த மடத்தைத் தீயிட்டுக் கொளுத்துவதே முறையென்று சமணர்கள் கூறியதற்கு, அம்மன்னனும் உடந்தையாக இருந்தான் என்பதே கதையிற் கூறப்பட்டுள்ளது. அதாவது: -

“.........சிறுமறையோன் உறைமடத்தில், வெந்தழற் பட
விஞ்சை மந்திரத்தொழில் விளைத்தால்,
இந்த நன்னகரிடத்திரான் எழும் என்று இசைந்தார்”
என்று சமணர்கள் கூற, அதற்கு,

“ஆவதொன்றிது வேயாகில் அதனையே விரைந்து செய்யப் போவதென்ற வரைப் போக்கி.................”

என்று மன்னன் கூறியதாகச் சேக்கிழார் பாடியுள்ளார். எனவே, மன்னனும் இக்கொடுமைக்கு உடந்தையாகவே இருந்தான் என்பது, சேக்கிழாரின் பாடல்களில் இருந்து தெரியவருகிறது.

இனி, இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளை எடுத்துக்காட்டி, ‘இவை தமிழ்மக்களை இழிவுபடுத்துவதற்காக வேண்டுமென்றேபாடப்பட்டன’ என்று நாம் கூறினால், நம்மீது சீறி விழுகின்றனர் சிலர். கூறப்படும் கருத்துகளை எண்ணிப் பார்ப்பதற்குக்கூட நேரமில்லாமல், சேக்கிழார் என்ற சொல்லைச் செவிமடுத்தவுடனே - கம்பர் என்ற சொல் காதில் பட்டவுடனே, சேக்கிழாரைச் சிறுமைப்படுத்துவதா? கம்பரைக் காய்வதா? என்றெல்லாம் எம்மீது சரந்தொடுக்க முற்பட்டு விடுகின்றனரேயல்லாமல், அவர்களால் கூறப்பட்டவை காலத்திற்கும் கருத்திற்கும் ஒவ்வாதவை என்று நாம் எடுத்துக்காட்டும் ஆய்வுகளை ஆரஅமர இருந்து முடிவு செய்வதில்லை. எதனையும் எண்ணிப்பார்த்து முடிவுகட்டும் இயல்பு நம்மவர்க்கு உண்டாக வேண்டுமென்பதற்காகவேதான் இத்தகைய

ஆராய்ச்சிகளை நாம் அடிக்கடி எழுதி வருகின்றோம் என்பதனைக்கூட அவர்களால் உணரமுடிவதில்லை.

சம்பந்தர் மதுரைக்கு வந்தார்! ஏன் வந்தார்?

சமணர்களோடு வாது செய்ய! இதனை அறிந்தனர் சமணர்! மன்னனிடம் கூறினர்! என்ன கூறினர்?
சம்பந்தர் தங்கியிருக்கும் மடத்தில் தீயிடவேண்டுமென்றனர்! மன்னன் அதற்கு மறுசொல் கூறாமல் இசைந்தான்!

சண்டைக்கு வந்தவனோடு சண்டையிடுவது; அல்லது முடியாது, வந்தவனிடம் படைபலம் மிகுதியென்றால் சமாதானம் பேசுவது அல்லது சரணடைவது, அல்லது வந்தவன் எப்படிப்பட்ட பலம் பொருந்தியவனானாலும், அவனுடன் சமாதானம் பேசுவதோ, சரணடைவதோ கூடாதென்று நினைப்பவர் அவனோடு போரிட்டு மடிவான்: இப்படித்தானே ஒரு மன்னன் நடந்து கொள்வான் - நடந்து கொள்கிறான் இதுபோலவே, வாதிட வந்தவனோடு தாமும் வாதிடுவதே முறை; வாதிடும் வல்லமை இல்லையென்றால், வந்தவனோடு வகையாகப் பேசி அனுப்பி விடவேண்டும்; அல்லது வாதிட்டுத் தோல்வியடைய வேண்டும். இங்ஙனமன்றி, வாதிட வந்தவனை நெறிதவறிய முறையில் நெருப்பிட்டுப் பொசுக்குவதும், அதற்கு அம்மன்னனின் உடன்பாடும் கிடைத்ததாம்! ஒரு மன்னன், அவன் எப்படிப்பட்டவனாயினும் இந்தக் காரியம் செய்ய இசைந்திருப்பானா என்பதையாவது எண்ணிப் பார்க்கவேண்டாமா!

இனி, இங்ஙனம் வாதிடவந்த ஒருவனைத் தீயிட்டுக் கொளுத்த வேண்டுமென்று எவரேனும் கூறினால், அதனைக் கேட்டவன் என்ன நினைத்திருப்பான்? “வாதிட்டு வெல்லும் திறமை இவர்கட்கு இல்லைபோலும்! அதனாலேதான் இவர்கள் அவனை நெருப்பிட்டுப் பொசுக்கவேண்டுமென்கிறார்கள். இவர்களுடைய சமயமும் சமயக் கோட்பாடுகளும் வாதிட

வந்தவனுடைய சமயத்தையும் சமயக்கோட்பாடுகளையும் விட எந்த விதத்திலும் மேம்பாடுடையதன்று” என்றுதானே நினைத்திருப்பான். நினைப்பது மட்டுமல்ல, உடனே அந்தச் சமயத்தையும் சமயக்கோட்பாடுகளையும் கைவிட்டிருப்பான். ஆனால், இங்குப் பேசப்படும் மன்னன்,

‘ஆவதொன்றிதுவேயாகில் அதனையே விரைந்து செய்ய”

என்று கூறியதாகவே சேக்கிழார் பாடியுள்ளார். அதாவது, நெருப்பிடுவதைத்தவிர வேறு வழியில்லையாகில், அதனையே செய்யுங்கள் என்று பாண்டியன் சமணர்களுக்குக் கூறினான் என்பது இதன்பொருள்.

இனிப் பாண்டியன் இக்கொடுமைக்கு ஒருபோதும் உடன்பட்டிருக்கவே மாட்டான் என்பதும், அவன் எதனையும் நடுநின்று உணர்ந்து கடைப்பிடிப்பவன் என்பதும் அவனைப் பற்றிக் கூறப்படும் பல நிகழ்ச்சிகளிலிருந்து நன்று புலனாகின்றது. பாண்டியனுடைய தூய்மைக்கும் நேர்மைக்கும் உரிய சான்றுகளைப் பின்னால் ஆராய்ந்துவிளக்குவாம். இங்குச் சேக்கிழார், சம்பந்தருக்கு உயர்வு கொடுக்கவும், பாண்டியனுக்கு இழிவு கற்பிக்கவும் கையாண்ட முறையையே எடுத்துக்காட்டுகின்றோம். இங்ஙனம் பாண்டியனை இழிவுபடுத்திய சேக்கிழார் எப்படிப்பட்டவர்? ஓர் அரசனால் அமைச்சராக இருந்து அரசியலை ஒழுங்காக நடத்தியவர் என்று சொல்லப்படுபவர்! அரசியல் அறிவுபெற்ற சேக்கிழாரே, ஓர் அரசன் முன்பின் யோசனையின்றி - விசாரணையின்யின்றி, ஒருவன் தங்கியிருக்கும் இடத்திற்கு நெருப்பிடுங்கள் என்று கட்டளையிட்டான் என்பதாகக் கூறுகிறார் என்றால், அதனை எப்படி ஒப்புக்கொள்ளமுடியும்? ஒருக்கால், அரசன் அங்ஙனம் செய்யும்படி கட்டளையிட்டது உண்மையென்று வரலாற்றில் காணப்பட்டாலும், அதனை அரசியல் அறிவுபெற்ற சேக்கிழார்,

“இப்படி ஓர் அரசன் செய்திருப்பானா?

இது அரசியல் நெறிமுறைக்கே மாறன்றோ!

என்றாலும், வரலாற்றில் அப்படித்தான் காணப்படுகின்றது, அதன்படியே நான் புராணத்தைப் பாடுகின்றேன்; இதனைப் படிப்பவர்கள் என்மீது குற்றம் சாட்டுதல் கூடாது"
என்றாவது ஒருபாடல் பாடியிருந்தால், சேக்கிழார் மீது நாம் எவ்விதக் குற்றமும் சுமத்துவதற்கில்லை. பெரியபுராண மூலத்தில் காணப்படாத எத்தனையோ நிகழ்ச்சிகள், சேக்கிழாரின் 'கைச்சரக்காகப் பாடப்பட்டிருக்கும் போது, பொறுப்பும் தேவையுமுள்ள இடங்களில் மட்டும் சேக்கிழார் தம்கைச் சரக்கைப் பயன்படுத்தாத காரணம் என்ன? என்பதையாவது எண்ணிப்பார்க்க வேண்டாமா? ஒரு சமயத்தையும் அதன் ஆசிரியர்களையும் உயர்வுபடுத்தும் உற்சாகத்தில் சமுகத்தையும் அதன் உயரிய நற்பண்புகளையும் இழிவு படுத்தும் முறை, பெரியபுராணத்திற்போல வேறெந்த நூலிலும் மிகுதியாகக் காண்டல் அரிது,
இனிச் சம்பந்தர் தங்கியிருந்த மடத்தில் மந்திரத்தீ இடுவதற்கு மன்னனும் உடந்தையாக இருந்தான் என்ற பகுதிக்குப் பெரியபுராண உரையாசிரியர் ஒருவர், "மந்திரத்தீ சுடாதென மன்னன் கருதினான் போலும்"

என்று பொருள் விரித்துள்ளார், மந்திரத்தீ சுடாது என்பது எவராலும் எளிதில் ஒப்புக் கொள்ளப்படக்கூடியதாகும். இதனை ஓர் உரையாசிரியர் தம்முடைய புலமையின் வாயிலாக அளந்து கூறவேவேண்டியதில்லை இதனால், அவருடைய புலமைக்கு ஏற்றமோ மதிப்புமோ ஏற்பட்டும் விடாது. மந்திரத்தீ சுடாது என்று மன்னன் கருதியிருந்ததால், அந்தக் கருத்தைச் சமணர்கள் கூறிய அதே விநாடியிலேயே அவன் தன்னுடைய கருத்தையும் வெளியிட்டிருப்பான். சமணர்கள் அங்ஙனம் செய்யமுற்படுவது பயனற்ற காரியம் என்று கூறித் தடுத்துமிருப்பான். அன்றியும், மந்திரத்தீ சுடாது என்பதை மன்னன் உண்மையாகவே நம்பி அங்ஙனம் கூறினான் என்பதும் தினைத்துணையும் பொருந்தாப் போலியுரையாம். எப்படியென்றால், சமணர்கள் அந்தக் கருத்தை வெளியிட்ட உடனே மன்னன், அவர்களை நோக்கி, "மந்திரமாவது மனையைக் கொளுத்துவதாவது!

மந்திரத்தால் ஒன்றைச் சுட்டெரிக்கலாமென்றால், சுடுந்தன்மை வாய்ந்த இயற்கைப் பொருளான நெருப்பு என்பதாக ஒன்று தனியாக இருப்பானேன்? சுடவேண்டிய எல்லாப் பொருள்களையும் மந்திரத்தால் சுட்டுவிடலாமே! தண்ணீர் வெந்நீராக வேண்டும் . அந்த அளவுக்கு ஒரு மந்திரம்; வீடு வெந்து சாம்பலாகவேண்டும் - அது வேகுமளவுக்கு ஒரு மந்திரம், இங்ஙனம் சுடப்பட வேண்டிய பொருள்களுக்கு ஏற்றவாறு மந்திர ஒலியின் அளவும் கூட்டியும் குறைத்தும் உச்சரித்தால் போதுமே! இதற்காக உலகம் நெருப்பும் விறகும் தேடி அலைய வேண்டியதில்லையே! என்று கூறியிருப்பான். அதுமட்டுமன்று! மந்திரத்தீ சுடாது என்று மன்னன் கருதியிருந்தால், அதனைக் கூறிய சமணர்களையும் சமண சமயக் கொள்கைகளையும் ஒப்புக்கொண்டு, அச்சமயவழி நின்றிருக்கமாட்டான். ஆனால், மன்னன் அங்ஙனம் நடந்தான் என்பதற்குப் புராணத்திற் கருவியில்லை.

இனி, ஒருக்கால், மந்திரத்தீ சுடாதென்பது உரையாசிரியரின் கருத்தாக இருந்து, அதனை அவர், மன்னன் பால் ஏற்றிக் கூறியிருக்கலாம்; இதில் என்ன தவறு என்றும் சிலர் கேட்பர். உண்மை. ஒருக்கால் இது உரையாசிரியரின் கருத்தாக இருந்திருக்கலாம் என்பதை நாமும் ஒப்புக்கொள்கிறோம். ஆனால், இந்தக் கருத்தை உரையாசிரியரின் சொந்தக் கருத்தாகக் கொள்வதற்கும் இல்லையே! எப்படியென்றால், சமணர்களால் சம்பந்தரின் மடத்திற்கு இடப்பட்ட நெருப்பைச் சம்பந்தர் தம்முடைய தேவாரத்தின் துணைக்கொண்டு வெப்பு நோயாக மாற்றி அதனைப் பாண்டியன்பால் அனுப்பி அவனை வெப்பு நோயால் வருந்தும்படி செய்தார் என்று சொல்லப்படும் பகுதிக்கும் இவ்வுரையாசிரியர் பொருள் எழுதியுள்ளார். ஆனால் இங்கு, அவர் தம்முடைய “மந்திரத்தீ சுடாது” என்ற கருத்தைத் தழுவி உரை எழுதியதாகக் குறிப்பு எதுவும் காணப்படவில்லை. மற்று, மந்திரத்தீ சுடும் என்பதை வலியுறுத்தும் முறையிலேயே அவருடைய உரை இங்கு விரிந்து நிற்கின்றது. எப்படியென்றால்,

சமணர்கள் தங்கள் மந்திரத்தால் தீயிடும் முயற்சி வெற்றி பெறாது போகவே, நெருப்பைக் கையிற்கொண்டு மடத்திற்குத் தீயிட்டனர் என்று சொல்லப்படும் பகுதியில், சம்பந்தர், அந்த நெருப்பை வெப்பு நோயாக மாற்றிப் பாண்டியனைத் துன்புறுத்தும்படி செய்தார் என்பதற்கு இவ்வுரையாசிரியர் மறுப்பேதும் கூறவில்லை. மந்திரத்தீ சுடாதென்பது இவ்வுரையாசிரியரின் கருத்தாக இருந்ததென்றால், இங்ஙனம் அதனை வலியுறுத்தியிருக்கவேண்டும். ஆனால், இங்கு மந்திரத்தீயின் மகிமையைப் பெரிதும் ஆதரித்தே உரை எழுதியுள்ளார். அதாவது, சம்பந்தரின் தேவார மந்திரபலத்தால் நெருப்புத் தன்னுடைய உண்மையான, வடிவத்தை மாற்றி, அதன் குணமான வெப்பத்தோடு மட்டும் சென்று பாண்டியனை வருத்திற்றாம். அதிலும் "அவ்வெப்பம்" சம்பந்தர் சொல்லியபடி 'பையவே' சென்று பாண்டியனை அடைந்ததாம்.

சமணர்களின் மந்திரத்திற்குக் கட்டுப்படாத நெருப்புச் சம்பந்தரின் மந்திரத்திற்குக் கட்டுப்பட்டது மட்டுமன்று; அவர் சொல்லியபடியெல்லாம் ஆடிற்றாம். இந்த இடத்தில் உரையாசிரியரின் மறுப்பு எதுவும் பொறிக்கப்படவில்லை. மந்திரத்தீ மன்பதையை (உலகத்தை) ஒன்றும்செய்யாது - செய்யமுடியாது என்பது உரையாசிரியரின் கருத்தென்றால், இங்கும் அதனை வலியுறுத்தியிருக்க வேண்டும். அங்குச் சமணர்களின் மந்திரத்தீ சுடவில்லை. இங்குச் சம்பந்தரின் மந்திரத்தீ சுட்டது மட்டுமன்று, அவர் ஆணையிட்டபடியெல்லாம் மெதுவாகவும், விரைவாகவும் வடிவம் மாறியும் வேலை செய்திருக்கிறது. அதுமட்டுமன்று; பாண்டியனுக்கு ஏற்பட்ட வெப்பு நோயைச் சம்பந்தர் தம்முடைய மந்திரபலத்தால் மாற்றிய பொழுது, பாண்டியனுக்கிருந்த வெப்பம் அன்றே நீங்கி, அவனுடைய உடம்பின் ஒரு பகுதி பொய்கைபோல் குளிர்ந்துவிட்டதாம். சம்பந்தரின் மந்திரபலம் இதோடு நிற்கவில்லை. இன்னும் கேளுங்கள் வியப்பை! பாண்டியனுடைய உடம்பின் இன்னொரு பகுதியை அவ்வெப்பம் இருமடங்காக வருத்திற்றாம்.

அதாவது? பாண்டியனுக்கேற்பட்ட வெப்பு நோயை மாற்றுவதற்குச் சம்பந்தரும் சமணர்களும் போட்டியிட்டுச் சம்பந்தர் வலப்பாகத்தையும், சமணர்கள் இடப்பாகத்தையும் எடுத்துக்கொண்டு தத்தம் மந்திரத்தை ஏவினராம். அதில், சம்பந்தரின் மந்திரபலம் பாண்டியனின் வலப்பக்க உடம்பைப் பொய்கை (குளம்) போல் குளிரும்படி செய்துவிட்டுச் சமணர்கள் எடுத்துக்கொண்ட இடப்பக்கத்தில் போய்ப் பாண்டியனை,

“அழலென மண்டு தீப்போல், இருபுடை வெப்புங்கூட இடங்கொளா தென்னப் பொங்க”

என்று சேக்கிழார் கூறுகின்றபடி பெரிதும் வருத்திற்றாம். இவ்வளவு பலம் பொருந்திய மந்திரத்தைத்தான் உரையாசிரியர்,

“மந்திரத்தீ சுடாதென்று மன்னன் கருதினான்போலும்”

என்று மிக எளிதாகக் கூறிவிட்டார். இனி, ஒருக்கால், சமணர்களின் மந்திரம் பலிக்காது; சைவர்களின் மந்திரம்தான் பலிக்கும் என்று உரையாசிரியர் கருதி அங்ஙனம் சொன்னார் என்று கொள்வதற்கும் இல்லையே! அவர், பொதுவாக ‘மந்திரத்தீ சுடாது’ என்று கூறினாரேயன்றிச் சமணர்களின் மந்திரத்தீ சுடாது,’ சைவர்களின் மந்திரத்தீ சுடும் என்று வலிந்து பொருள்கொள்ளக் கூடிய முறையிலேனும் சொல்லவில்லையே! ‘மந்திரம்’ என்ற சொல்லைப் பொதுவாக வைத்தன்றோ அதற்குச் ‘சுடுந்தன்மை’ இல்லையென்று அடித்துக் கூறியிருக்கின்றார்.

இனிச் சமணர்களால் இடப்பட்ட மந்திரத்தீ சம்பந்தரின் மடத்தைச் சுடவில்லை என்பதற்குச் “சம்பந்தரும் சிவனடியார்களும் அங்குத் தங்கியிருந்தார்கள், எனவே, சமணர்களால் ஏவப்பட்ட தீமந்திரம் அங்குச் செல்ல முடியவில்லை” என்பது, நூலுரை ஆசிரியர்களின் கருத்தாகச் சொல்லப்படுகின்றது அல்லது கொள்ளப்படுகின்றது. சமணர்கள், தங்களுடைய மந்திரபலத்தால் தீ மூட்டமுடியாதென்று

நினைத்திருந்தால், ஒரு போதும் அந்த முயற்சியில் இறங்கியிருக்க மாட்டார்கள். மந்திரத் தீ மூட்டும் முயற்சியைக் கைவிட்டுக் 'கைத்தீ' வேலையையே மேற்கொண்டிருப்பார்கள். ஒருக்கால் அரசனிடம் மந்திரத்தீ மூட்டுவதாக உரைத்திருந்தாலும், தீமூட்டும் போது அந்த முயற்சியை ஒருபோதும் மேற்கொண்டிருக்கவே மாட்டார்கள்.

இனிச் சைவமெய்யன்பர்கள் அங்குத் தங்கியிருந்த காரணத்தால்தான் சமணர்கள் இடம் மந்திரத்தீ மடத்தைச் சுடவில்லை என்பது உண்மையானால், சமணர்கள், கையில் தீக்கோல் கொண்டு சுட்டதுமட்டும் எப்படி அந்தச் 'சிவ' மடத்தைப் பொசுக்கிற்றோ? நெருப்பைப் பொய்கைபோலக் குளிரும்படி செய்யும் அருளாற்றல் பெற்ற சிவ மெய்யன்பராம் சம்பந்தர் அங்கிருக்கும்போது, சமணர்களால் இடப்பெற்ற 'கைநெருப்பு' மட்டும் தன்னுடைய வேலையைச் சரிவரச் செய்தது என்பதை எப்படி ஒப்புக் கொள்ள முடியும்? ஒரு விநாடியிலேயே திரிபுரங்களையும் சுட்டெரிக்கவல்ல நெருப்பைத் தன்னுடைய நெற்றிக் கண்ணுக்குள்ளேயே வைத்திருப்பதாகச் சொல்லப்படும் சிவன், தன்னுடைய அடியவரான - திருவிறக்க (அவதார)மான சம்பந்தரின் மடத்தில் தீப்பற்றவிட்ட காரணம் என்ன? ஏன் அதை அவர் தடுக்கவில்லை? மடத்தில் தீப்பற்றும்
போது சிவன் வேறு வேலையில் இருந்ததால் அதைக் கவனிக்கவில்லையென்றாலும், அடியவர்களின் அலறல் கேட்ட பின்னராவது, தீயை அணையும்படி செய்திருக்கலாமே! அதுவும் செய்யவில்லையே! மடத்தில் படுத்திருந்த அடியவர்களன்றோ தீயை அணைத்ததாகச் சேக்கிழார் கூறுகின்றார்!

".....மறுகிப் பரிசனத் தவர்பதைப்பொடுஞ்சிதை த்தது நீங்கி"

என்பது சேக்கிழார் வாக்கு. அதாவது சமணர்கள், மடத்திற்கு நெருப்பிட்டதை அறிந்து சிவனடியார்கள், அங்கும் இங்கும் ஓடி அலைந்து - சுழன்று நெருப்பை அணைத்தார்கள் என்பதே இதன் பொருள்.

சிவப்பெருந்தகையின் திருவருள்போலும், நெருப்பணைக்கவல்ல (ஊடிணூாஆ ஊடிஞ்டtணுணூண்) சிவனடியார்கள் சிலரைச் சம்பந்தருடன் இருக்கும்படி செய்தது! இல்லையேல் சம்பந்தர் வெந்து சாம்பலாகி இருப்பார். எப்படியென்றால், மடத்தில் தீப்பற்றிய செய்தி அடியவர்கள் சொல்லித்தான் சம்பந்தருக்குத் தெரிந்ததென்று சேக்கிழாரே கூறியுள்ளார்,

“கழுமலபதிக் கற்பகக்கன்றைத் தொழுது நின்று அமண் குண்டர் செய்தீங்கினைச் சொன்ன பொழுது” அப்படியா?

“மாதவர் துயிலும் இத்திரு மடப்புறம்பு, பழுது செய்வதோ! பாவிகாள்!”

என்று சம்பந்தர் கூறியதாகச் சேக்கிழாரே பாடியுள்ளார். எனவே, சம்பந்தர் தப்பியது தம்பிரான் (சிவன்) புண்ணியந்தான்! இது கிடக்க.

இனிப் பாண்டியனுக்கு வெப்புநோய் ஏற்பட்டுவிட்டதென்பதை அறிந்த மங்கையர்க்கரசியாரும் குலச்சிறையாரும் பாண்டியனை அடைந்து, மணிமந்திர - ஔடத முறைகளை முறைமுறையாகச் செய்தனர்; நோய் நீங்கவில்லை; நோய் முன்னிலும் அதிகமாக முறுகி எழுந்தது என்றும் சொல்லப்படுகின்றது. ‘பாவிகளான’ சமணர்களின் மந்திரம்தான் பலிக்கவில்லையென்றால், புண்ணியவான்களான குலச்சிறை - மங்கையர்க்கரசி ஆகியோரின் மணி-மந்திர-ஔடதம் எதுவுமே மன்னனின் நோயை நீக்க முடியவில்லை என்று சேக்கிழார் கூறுவது, ‘சைவமுறைப்படி’ பெரிதும் வருந்தத் தக்கது - வெட்கப்படக்கூடியது. மதுரை, சமணமயமாக மாறிய போது, மங்கையர்க்கரசி - குலச் சிறை ஆகிய இருவருமன்றோ சைவத்தின் உயிர்நாடியைக் கையில் பிடித்து வைத்துக் காப்பாற்றிக் கொண்டிருந்தவர்கள்! இப்படிப்பட்ட ‘அப்பழுக்கற்ற’ சைவ மெய்யன்பர்களால் கொடுக்கப்பட்ட மணி - மந்திர - ஔடதங்கள் எதுவும் மன்னனுடைய நோயைப் போக்க முடியவில்லையாம்! ஏன் இந்த நிலை ஏற்பட்டது? அவர்களின் சைவப்பற்றில் ஏதேனும் இழுக்கா? இருக்க முடியாதே! அவர்களுடைய சைவப்பெரும் பற்றையும் அதனை அவர்கள் உறுதியாகப்

பிடித்துக் கொண்டிருக்கும் உரத்தையும் பாராட்டிச் சம்பந்தரே பாடியிருக்கும்போது, அவர்களது சைவப்பற்றில் குற்றம் இருக்க இடமில்லை. பின், ஒருக்கால் அவர்களால் கொடுக்கப்பட்ட மணிமந்திர - ஔடதங்களில் ஏதேனும் பழுதுண்டோ என்று எண்ணுவதற்கும் சேக்கிழார் இடந்தரவில்லை.

“மருத்து நூலவர் தங்கள் பல்கலைகளில் வகுத்த, தொழில் யாவையுஞ் செய்யவும் மேன்மேல், உருத்தெழுந்த வெப்பு” என்று சேக்கிழார் கூறியிருப்பதால், மணி-மந்திர-ஔடதங்களில் யாதோ கோளாறு இருந்தது. அதனால்தான் நோய் நீங்கவில்லை என்று சொல்வதற்கும் இல்லையே! ஒருக்கால், நோயறிந்து மருந்து கொடுத்த மருத்துவர்பால் இக்குற்றத்தை ஏற்றலாமோ என்றால், மருத்துவர்களைப் பற்றிச் சேக்கிழார் கூறியிருப்பதைப் பார்க்கும்போது, அவர்கள் மருத்துவத் துறையில் பல்கலை பயின்ற நிபுணர்கள் என்றே சொல்லப்
பட்டுள்ளது. ஒருவேளை, பாண்டியனுக்கு ஏற்பட்ட வெப்புநோய் எதனால் - எப்படி உண்டாயிற்று என்பதை அந்த மருத்துவர்களால் கண்டறிந்து கூறமுடியவில்லை என்று கொள்வதானால், இங்கும் சேக்கிழார் தமிழ் மருத்துவர்களை இழிவுபடுத்துவதையே தம் தொழிலாகக் கொண்டவர் என்பதைத் தவிர, வேறு சமாதானம் எதுவும் கூறுவதற்கில்லை - கூறவும் முடியாது. பாண்டியனுக்கேற்பட்ட நோயை அறிந்து மருந்து கொடுக்க வந்த மருத்துவர்கள், அவன் உடம்பைச் சோதித்து, நோய்க்கு மூலம் இது, என்று சொல்லமுடியாமற்போனார்கள் என்றால், அவர்களைப் பல்கலை தெரிந்த மருத்துவர்கள் என்று கூறுவது பொருந்தாதன்றோ! பாண்டியனுக்கேற்பட்ட நோய் உடற்கோளாறினால் ஏற்பட்டதா? வேறு, ஏவலினால் ஏற்பட்டதா என்பதைக்கூட அறியமுடியாத மருத்துவர்க்குப் “பல்கலை தெரிந்த மருத்துவர்” என்ற பட்டத்தைக் கொடுப்பதும், பின், அவர்களால் கொடுக்கப்பட்ட மருந்தினால் நோய்தீர வில்லை என்று கூறுவதும் மருத்துவர் குலத்திற்கே ஒரு இழிவை

உண்டாக்குவதற்காக அங்ஙனம் கூறப்பட்டதே என்று பொருள் கொள்ளாமல், வேறு எந்தவகையில் இதற்குத் தணிவு (சமாதானம்) கூறலாம் என்பதற்குச் சேக்கிழாரைக் காரணமின்றித் தாக்குவதாக எம்மீது குற்றம் சாட்டும் அன்பர்கள்தான் விடைகூறவேண்டும்.

இனி ஒருவனுக்கு நோய் உண்டாவதென்றால், அவனுடைய உடற்கோளாறினால் ஏற்படுமேயன்றி, யாதாயினும் ஒரு ஏவலினாலோ வேறு சூழ்ச்சிகளினாலே ஒருவனுக்கு நோய் ஏற்படுவதில்லை என்பதை நன்குணர்ந்ததால்தான், பாண்டியனுக்கு ஏற்பட்டதாகச் சொல்லப்படும் வெப்புநோயை நீக்க வந்த மருத்துவர்கள், அவ்வெப்பு நோய்க்கு ஏற்ற மருந்தைக் கொடுத்தார்கள் என்று கொள்ளலாமேதவிர, வேறு விதமாகக் கொள்வதற்கு யாதும் இல்லை என்று ஒழிக.

இனிப், பாண்டியனுக்கேற்பட்ட வெப்புநோய் சம்பந்தரின் ஏவலினால் உண்டானதென்று கூறுவதன்வாயிலாகச் சேக்கிழார் மிகவும் இழிவான மூடப்பழக்க வழக்கங்களைத் தமிழ் நாட்டில் உண்டாக்கி வைத்த குற்றத்திற்கும் ஆளாகிறார். எப்படியென்றால், சமணர்கள் சம்பந்தர் தங்கியிருந்த மடத்தைப் பொசுக்குவதற்கு இடப்பட்டதாகச் சொல்லப்படும் தீயைச் சம்பந்தர் பாண்டியன்பால் ஏவிவிட்டார் என்று சொல்லப்படுகிறது. நல்லவேளையாக, இந்த “ஏவல்” வேலையை ஒரு தமிழன் செய்தான் என்று சொல்லாமல் ஒரு பார்ப்பனன் செய்தான் என்று சொன்னாரே சேக்கிழார், அதுவரைக்கும் அவருக்கு எமது நன்றி! என்றாலும், சம்பந்தரால் கையாளப்பட்ட இந்த ‘ஏவல்’ தொழிலை இன்றும் பல தமிழ் மக்கள் தங்கள் தொழிலாக வைத்து, நாட்டில் மூடப்பழக்க வழக்கங்களைப்பரப்பி வருவது கண்கூடு . ஏவல் - பில்லி - சூனியம் - பேய் - பிசாசு என்று பலவிதமான, பயனற்ற - பொருளற்ற கொடிய தொழில்களை நம்மவரிற் பலர் கற்றுக்கொண்டு, மக்களை அறியாமைக்கும் மூடப்பழக்க வழக்கங்களுக்கும் ஆளாக்கி, அதனால் பொருள் அழிவையும் மானக்கேட்டையும் உண்டாக்கி

வருகின்றனர். இவற்றிற்குக் காரணம், பெரிய புராணம்போன்ற சமய நூல்களும் அவற்றின் மூலவர்களான பார்ப்பனருமே தான் என்று நாம் ஆராய்ந்து கூறினால், நம்மை மதத்தின் பகைவன் - பார்ப்பன விரோதி என்றெல்லாம் நாக்கடிக்கப்பேசு கின்றனர். ஏவல் - பில்லி - சூனியம் முதலிய மனித அறிவுக்கும் - தேவைக்கும் பொருந்தா – வேண்டப்படா மூடப்பழக்க வழக்கங்களை மக்கட்குப் புகுத்தும் ஒரு நூலுக்குப் பெயர் பெரியபுராணம்! அதன் மக்கள் பக்தி சிரத்தையுடன் படிக்க வேண்டுமாம்! குறைகூறக்கூடாதாம்! என்னே, இவர் தம் அறியாமை!!

இனி, இத்தகைய உண்மைகளை நாம் ஆராய்ந்து கூறும் போது, சிலர் 'இல்லாத குற்றத்தை ஒரு நூலின் மேலேற்றி, அந்தக் குற்றத்துக்காக அந்த நூலை ஒழித்திட வேண்டுமென்று கூறுவதாக எம்மீது குற்றம் சுமத்துகின்றனர். ஒரு நூலில் இல்லாத குற்றம், அதனைப்படிக்கும்போது எப்படி உண்டாகும் என்பது எமக்கே தெரியவில்லை. எடுத்துக் காட்டாக, ஏவல் - பில்லி - சூனியம் முதலியனவற்றைச் சைவ மெய்யன்பர்களோ வேறு சமய மெய்யன்பர்களோ ஒப்புக்கொள்ள மாட்டார்கள். அவை நாட்டில் நடைமுறையில் இருப்பதையும் விரும்பார்கள். அவற்றை உண்மையென்றும் நம்பார்கள். அவற்றால் மக்களுக்குக் கெடுதலேயன்றி நன்மையாதும் இல்லை என்பதையும் ஒப்புக்கொள்வார்கள். ஆனால், அவர்களால் போற்றிப் பேணப்படும் பெரிய புராணத்தில் ஏவல் தொழில்முறை கற்பிக்கப்பட்டிருக்கிறதே - தேவாரம் அந்த ஏவல்தொழிலுக்கு மந்திரமாக அமைந்திருக்கிறதே! என்று கூறுபவர்களாக இல்லாததை வலிந்து புகுத்தி ஒன்றின்மீது குற்றம் சுமத்துபவர்கள்? சம்பந்தர், தம்பால் வந்த தீயைப் பாண்டியன் பால் ஏவினார் என்ற செய்தியைப் படிக்கும்போதே, ஏவலும் அதனையொட்டிய 'பில்லி - சூனியம் - பேய் - பிசாசு ஆகிய எல்லாமே நினைவுக்கு வந்துவிடுகின்றனவே! ஒரு நிகழ்ச்சியைப் புராணத்தில் படிக்கும்போது, அதிலும் புராணங்களிலுள்ளவற்றை ஆராய்ச்சியுணர்வோடு

படிக்கும் போது, அந்நிகழ்ச்சியை ஒட்டிய - தழுவிய பல நிகழ்ச்சிகள், படிப்பவனுடைய நினைவுக்கு வராமல் இருக்கமுடியுமா? அங்ஙனம் வரும்படி படிப்பதுதவறா? அன்றிவருவனவற்றை மறைப்பது முறையா? என்பவற்றிற்குச் சைவமெய்யன்பர்கள் தான் விடைகூறவேண்டும். அங்ஙனமின்றி, ஒரு நாயைக் கொல்லவிரும்பும் ஒருவன், அதற்குக் கெட்ட பெயரை வேண்டுமென்றே உண்டாக்கி அதனைத் தூக்கிலிட்டுக் கொல்லுவது போன்ற முறையை ஒரு நடுநிலை ஆராய்ச்சியாளன் எப்பொழுதுமே - எந்தக் காரணத்தைக் கொண்டும் கையாளவே மாட்டான் என்பதை அறிவுள்ள எவரும் ஒப்புக்கொண்டே தீருவர். எனவே, நாம் ஒன்றைப்படிக்கும்போது, அதில் இல்லாததையோ ஆராய்ச்சியிற்பட்டு ஐயம் உண்டாக்காததையோ வேண்டுமென்றே விரித்துக்கூறும் வழக்கினர் அல்லர் என்பதை, இனிமேலாவது அத்தகைய எண்ணங்கொண்டோர் கைவிடுவார்கள் என்று நம்புகிறேன்.

இனி, ஒருக்கால், சம்பந்தர்கையாண்ட ஏவல்முறைவேறு; இஞ்ஞான்றை மக்கள் கையாளும் ஏவல் முறை வேறு; அதனையும் இதனையும் ஒன்றுபடுத்திக் கூறி, அதனை இதற்கு ஒப்புவமை கூறலாமோ என்றும் சிலர் கேட்பர். விலங்கு, பொன்னாலானால் என்ன? இரும்பாலானால் என்ன? இரண்டும் விலங்கிற்குரிய தொழிலைச் செய்தே தீரும் என்ற மேற்கோளையே அத்தகையினர்க்கு எடுத்துக்காட்ட விரும்புகின்றேன். அன்று செய்யப்பட்ட ஏவல், சம்பந்தர் செய்தார் என்பதனாலோ, அதற்குப் பயன்பட்ட மந்திரம் தேவாரம். என்பதனாலோ அதனை உயர்ந்ததாகவும், இன்று செய்யப்படும் ஏவலை, ஒரு சாத்தான் செய்கிறான் என்பதனாலோ, இதற்குப் பயன்படும் மந்திரம் ஓம்மலையாளபகவதி என்பதனாலோ தாழ்ந்ததாகவும் கருதப்படமாட்டாது. செய்பவனும் செய்யப்படுவதற்குக் கையாளப்படும் கருவியும் வெவ்வேறாதல் பற்றி, செய்யப்படும் காரியத்தையும் வேறு என்று கூறுவது கருத்திழந்தோர் செயலேயாகும்.

குடியிருக்கும் வீடு, ஓட்டு வீடாய் இருந்தால் என்ன? ஓலை வீடாய் இருந்தால் என்ன? சம்பந்தர், தனக்குத் தெரிந்த தேவாரத்தை மந்திரமாகப் பயன்படுத்தி,

‘ஏவல் தொழிலைச் செய்தார்; சாத்தான், தனக்குத் தெரிந்த ஓம்மலையாளபகவதி என்ற மந்திரத்தால் அந்தத் தொழிலைச் செய்கின்றான். இதில் தவறென்ன காணமுடியும்?

இனி, இந்த ஏவல்-பில்லி-சூனியம்-பேய்-பிசாசு ஆகிய தொழில் முறையினால் உண்மையான பயன் யாதாயினும் ஏற்படுகின்றதா? ஏற்பட முடியுமா என்பது குறித்து நாம் ஈங்கு ஆராயவில்லை. இது பற்றி ஒரு தனி ஆராய்ச்சி செய்து, அதன் மண்டையில் அடிக்க வேண்டுமாதலால், இங்கு எடுத்துக் கொண்ட பொருள் பற்றிச் சிறிதுகூறி இதனை முடிப்போம்.

இனிச், சம்பந்தர், பாண்டியன் பால் ஏவிய நெருப்புக்குப் ‘பையவே சென்று பாண்டியர்க் காகவே”
என்று கட்டளையிட்டு அனுப்பினாராம். இதற்குச் சேக்கிழார் கூறும் காரணம், “மங்கையர்க்கரசியாரது மங்கல்நாணைப் பாதுகாக்கவும், குலச்சிறை நாயனாரது அன்பை முன்னிட்டும் மன்னவன்பால் உற்றபிழை கருதியும், அவன் மீண்டுஞ் சிவநெறி அடையப்போதலை நினைந்தும், “பையவேசென்று” என்று பாடிதாகச் சொல்லப்படுகிறது. விஞ்ஞான முறையில், மெதுவாகவும் விரைவாகவும் ஓட்டப்படும் பொறி (இயந்திரங்களைப் போலச், சம்பந்தரும் தம்முடைய மந்திரப் பொறியை ஓட்டுவதில் ‘தயவு’ காட்டி மெதுவாக ஓடும்படி செய்து, மங்கையர்க்கரசி - குலச்சிறை - பாண்டியன் ஆகியவர்களைக் காப்பாற்றியது குறித்து யாரும் வியப்படையாவிட்டாலும், “இன்று, ஏதேதோ பொறிகளாம்! மின்சாரமாம் அவற்றை வேண்டியபடி மெதுவாகவும் விரைவாகவும் ஓட்டக்கற்றுக் கொண்டனராம்! இது ஒரு வியப்புக்குரிய செயலா? அன்று, நம் சம்பந்தர், மந்திரத்தையே தாம் விரும்பியபடி

மெதுவாகவும் விரைவாகவும் ஓட்டியிருக்கிறார். அந்தக் காலத்து விஞ்ஞானத்
துக்கு, இந்தக்கால விஞ்ஞானம் எந்த வகையில் குறைந்தது, கூறுமின் பார்ப்போம்" என்று கூறி எக்காளமிடும் புராண விஞ்ஞானி கண்டுதான் வியப்படையவேண்டும்.

எனவே, இதுகாறும் கூறியவற்றால், கொல்லா விரதத்தை மேற்கொண்ட சமணர்கள் இந்தக்கொலைப் பாதகத்தை ஒருபோதும் செய்திருக்கமாட்டார்கள் என்பதும், பாண்டியன் தீ வைக்கும் கொடுமைக்கு உடந்தையாக இருந்திருக்கமாட்டான் என்பதும் புலப்படுவதோடு, வஞ்சனையில் மிகுந்து - 'ஏவல்' தொழிலை மேற்கொண்டு தகாக்காரியங்களைச் செய்த அக்காலச் சைவக்கூட்டமே இக்கொடுமையைத் துணிந்துசெய்து, பின்னர், அக்குற்றத்தைச் சமணர்களால் ஏற்றிப் பாண்டியனையும் ஏனையோரையும் சூழ்ச்சியால் தம்வழி திருப்பிச் சைவத்தை நிலைநாட்டினர் என்பதும் விளங்கும். ஆகையால், தீயிட்ட திருவிளையாடலை இவ்வளவில் நிறுத்தி, அடுத்த கட்டுரையில், நெருப்பில் இட்ட ஏடு வெந்து சாம்பலாகாமல் பச்சென்றிருந்தது பற்றியும், ஆற்றிலிட்ட ஏடு எதிர் சென்றது பற்றியும், அவற்றிற்கு அக்காலச் சைவமெய்யன்பராய்ச் சம்பந்தர் கையாண்ட முறைகள் பற்றியும் சமணப் பெருமக்களைக் கழுவில் ஏற்றிக் கொலை புரிந்த கொடுமை பற்றியும் ஆராய்வாம்.

13.10.1946

# பயங்கரப் பாதை

ரோம், பிரிட்டனை ஜெயித்தது - அடிமைப்பட்ட பிரிட்டனிலே, ரோம் நாட்டவர், தூக்குமரங்களை அதிகமாக அமைக்கவில்லை - ஆனால், ரோம் நாட்டிலே ரோம் நாட்டவர், தங்களிடம் வேலை செய்து வந்த ஏழைகளை, அவர்கள், “எஜமானர்களை எதிர்க்கத் துணிந்தனர்” என்ற ஒரே காரணத்துக்காகப் படுகொலை செய்திருக்கிறார்கள் - சமரிட்டு அழித்தனர் ஏராளமான அடிமைகளை - அவர்கள் போக - சரணடைந்த, பிடிபட்டவர்களை, பாதை நெடுகத் தூக்குமரங்களை அமைத்து, அவர்களைத் தூக்கிலிட்டுக் கொன்றனர் - ஒரு நூறு, ஓர் ஆயிரம் அல்ல - ஆறு ஆயிரம் ஏழைகள் !

ரோம் கலையை வளர்க்கத் தவறவில்லை இந்தப் படுகொலை செய்த காலத்திலேயும்! அந்த நாட்டிலே நளினிகளுக்குக் கீதம் பயிலுவிக்கும் இசைவாணர்கள் இருந்தனர். சிற்றிடையாளின் சேல்விழி பேசுகிறது பாரீர் என்று வியந்துகூறி, ஒரு சீமான் மற்றொரு சீமானிடம் காட்டி மகிழும்விதமான ஓவியம் தீட்டித்தர ஓவியர்கள் இருந்தனர். எல்லாம் இருந்தன - ஏழைக்கு மட்டும், உழைக்க வேண்டிய நிலைமையும், உரத்த குரலிலே இது அக்கிரமமல்லவா? என்று கேட்டால், தொங்குவதற்குத் தூக்குமரமும் இருந்தது. எதிர்க்கத் துணிந்தவர்கள் 6000 பேர், பாதை ஓரத்திலே, தூக்கு மரத்திலே தொங்கினர். கண்முன் கொண்டுவந்து பாருங்கள்! பயங்கரக் காட்சியல்லவா!

பயங்கரப்பாதைதான், பாட்டாளி விடுதலை விரும்பினால், உரிமைக்காகப் போரிட்டால், காண வேண்டும். அந்தப் பாதையைக் கண்டு கலங்கா நெஞ்சம் ஏற்பட்டாலொழிய, விடுதலை கிட்டாது.

நாம் கூறும் இந்த ஆறு ஆயிரம் அடிமைகளின் பிணங்கள் பாதையிலே தொங்கிய சம்பவம், கதையல்ல – காவியமல்ல - வரலாறு. நிழல்தரப் பாதை ஓரத்திலே நல்ல மரங்களை வைத்து வளர்க்கிறார்கள் இன்று - அன்று கூடத்தான். ஆனால், ரோம் நாட்டவர், ஆறு ஆயிரம்

தூக்குமரம் அமைத்தனர், பாதை ஓரத்தில். பரந்த சாம்ராஜ்யம் - சட்டத்துக்குப் பிறப்பிடம் - கிரேக்கக் கலாச்சாரத்தை மெருகிட்டு வழங்கிய இடம்

இந்த ரோம்; ஆனால், பாட்டாளிக்குக் கிடைத்தது தூக்குமரந்தான்.

போரிலே தோற்றுவிட்டவர்கள், பிழைப்புக்காகத் திண்டாடுபவர்கள் ஆகியவர்களை ரோம் நாட்டு ஜமீன்தாரர்கள் - பண்ணை முதலாளிகள் - வேலைக்கு அமர்த்திக் கொண்டனர் - இவர்கள் 'அடிமைகள்" வேலை செய்ததால் மட்டுமல்ல, அந்தப் பெயர் - சட்டத்திலேயே அவர்களுக்குத் தரப்பட்ட அந்தஸ்து அவ்வளவுதான்.

தொழிலாளி - கூலிக்காரன் - அடிமை; மூன்றுவிதமான பெயரும், ஏழைதான் பெற முடியும்; மூன்றுவிதமானவர்களும் ஏழைகள் - உழைத்தே பிழைக்க வேண்டியவர்கள் - ஆனால், மூவருக்கும் நிலைமை வேறு வேறு. தொழிலாளி - தனக்கு விருப்பமில்லாவிட்டால் வேலைக்குவர மறுக்கும் நிலைமையையும், தன்னைக் காரணமின்றி வேலையிலிருந்து நீக்கினால், ஏன் என்று கேட்கும் நிலைமையையும், கேட்கும் உரிமையையும், உழைப்புக்கேற்ற ஊதியம் தந்தாக வேண்டும் என்றும் கிளர்ச்சி செய்யவும் சட்டப்படி உரிமை பெற்ற நிலை பெற்றுள்ளவன்.

கூலிக்காரன், இதற்கு ஒரு படி மட்டம் - கிளர்ச்சிக்கு வழி வசதி கிடையாது - ஆனால், இவனையும் வேலை செய்தாக வேண்டும் என்று கட்டாயப்படுத்த முடியாது. தேவையானால் கூலிக்காரனை உடைமைக்காரன் ஏதோ வேலை செய்யச் சொல்வான் - இஷ்டமிருந்தால் கூலியாள் வேலை செய்வான் தொடர்பு அவ்வளவுதான்.
அடிமைநிலை அதுவல்ல - அவன் வேலை செய்தே ஆக வேண்டும் - ஏன் என்று கேட்க முடியாது - எவ்வளவு அளவு வேலை என்று கேட்கமுடியாது - என்ன பணம் தருகிறாய் என்று கேட்கக் கூடாது - அவனை எஜமானன் அடிப்பான், சட்டம் குறுக்கிடாது - அவனைப் பட்டினி போட்டுச்

சாகடிப்பான், சகஜம் என்று சர்க்கார் சும்மா இருந்துவிடும் - உண்மையில் அவன் கால்களில் சங்கிலியும் உண்டு.

இத்தகைய அடிமைகள், கேவலம் வயிற்றுச் சோற்றுக்காக, மாடென உழைக்க வயல்கள் செழிக்க, அதன் பயனை உறிஞ்சிடும் ரோம் நாட்டுப் பண்ணை முதலாளி கொழுத்து வந்தான்.

இந்த அடிமைகளுக்கு அதிருப்தி, நெடுங்காலமாக - ஆனால், வெளிக்குக் காட்டும் வழிவகை கிடையாது. இவர்கள் எதுவும் எதிர்த்துச் செய்ய முடியாதவர்கள் என்ற எண்ணம் வலுப்பட்டுவிட்டது முதலாளிக்கு! எனவே, காடுகளிலே சென்று தம் கால்நடைகளை மேய்த்துக் கொண்டு வருவதற்காக இந்த “அடிமைகளை” அனுப்பும்போது கையில் ஆயுதம்கூடக் கொடுத்தனுப்புவர் - துஷ்ட மிருகங்களைக் கொல்வதற்கு.

குமுறும் மனம்! கையிலே, வெடிமருந்து ஆயுதம்!!

இந்த நிலையிலும் அவர்கள் எதிர்ப்புச் செய்யவில்லை.

ஜூலியஸ் சீசர் எனும் மாவீரன் காலத்துக்குக் கொஞ்சம் முந்தைய காலம். ரோம் நாட்டு ரணகளச் சூரர்களாக, மாரயஸ், சல்லா என்பவர்கள் விளங்கிப் பல நாடுகளிலே ஜெயக்கொடி நாட்டிய காலம். அவர்களில், சல்லாவுக்கு நண்பன் ஒருவன் கிராஷஸ் என்பவன் ரோம் நாட்டு முதல் கோடீஸ்வரன் இந்த கிராஷ் - இன்றைய ராக்பெல்லர் - மார்கன் - பிர்லா போல வியாபாரத்தால் பொருள் திரட்டி ரோம் நாட்டிலே ஏராளமான ஜமீன்களை வாங்கிக் கோடீஸ்வரனானவன். இவன், சல்லாவுக்குச் செல்வாக்கு ஏற்படும்படி தன் பணத்தைக் கொண்டு வேலை செய்தான் - சல்லாவுக்கு அப்படியே அதிகாரம் கிடைத்தது. அதிலே கிராஷஸ், தன் பங்கு பெற்றான். அதாவது இவனும் அரசாங்கத்தினாலே ஒரு செல்வாக்குள்ள மனிதனானான்.

பாடுபட்டுப் பாதி உயிரினராகப் பல்லாயிரம் அடிமைகள் ஒரு புறம். பணத்தைக் காட்டி அரசியலில் செல்வாக்குத் தேடிக் கொண்ட கிராஷல்ஸ் ஒருபுறம்.

கொடுமைக்காளாகி குமுறிக் கொண்டிருந்த அடிமைகளுக்கு ஒரு தலைவன் கிடைத்தான் - அவன் சீமான்களின் பொழுதுபோக்குக்காக குத்து குஸ்தி முதலிய வித்தைகளைக் காட்டி வாழ்ந்து வந்தவன் - அவனும் அடிமைதான் - எப்படியோ எஜமானிடமிருந்து தப்பித்துக் கொண்டான் - அவன் தன் இனத்தவரை - அதாவது அடிமைகளை விடுதலைக்கான கிளர்ச்சி தொடக்கும்படி தூண்டினான். குமுறல், வெடிக்கத் தொடங்கிற்று.

மாரயஸ், சல்லா போன்ற வீரர்கள், வெளிநாடுகளை வென்று மாவீரர்கள் என்று புகழப்பட்டவர்களல்லவா - கிராஷசும் அத்தகைய கீர்த்தி பெற விரும்பினான் - அரசாங்கத்திலேயோ செல்வாக்கு அவனுக்கு - எனவே, அவன் படைத் தலைவனாக்கப்பட்டான். ஒரு பித்தியேகப்படை - நாற்பதாயிரம் வீரர்கள் கொண்டது - வேற்று நாட்டின் மீது பாய அல்ல - உணவு கேட்ட, உரிமை கேட்ட ஏழைகளின்மீது பாய ஒரு படை, அதற்கு இந்தக் கோடீஸ்வரன் தலைவன்.

பயங்கரமான சண்டை-படுகொலை-கிளர்ச்சி அழிக்கப்பட்டது - களத்திலே மாண்டவர் போக - சிக்கியவர்கள், சரண் புகுந்தவர்கள் - ஆகியவர்கள் ஆறாயிரம் மக்கள் - அவர்களைத் தான் பாதைநெடுகத் தூக்குமரம் நாட்டித் தொங்கவிட்டான் - பாதகன் - பாதகனா! சே!! கோடீஸ்வரன்!!!

பயங்கரப்பாதை! அடிமைகள் விடுதலைபெற - தொழிலாளர்கள் உரிமைபெற – ஏழைகள் ஈடேற - இருக்கும் பாதை, சமான்யமான சங்கடம் நிறைந்ததன்று - பயங்கரமான விளைவுகள் கொண்ட பாதை - இன்று நேற்று அல்ல இந்த நிலைமை, ஏசு பிறப்பதற்கு நூறு ஆண்டுகளுக்கு முன்பு நேரிட்ட நிலையைக் கூறினோம். ஏசு வந்தார்; சுவிசேஷம் உரைத்தார் - ஆலயபூஜை மாறித் தொழுகை மண்டபம் எழும்பிற்று - ஆனால், இன்றும், உரிமைக்காகப் போரிடப் பாட்டாளி கிளம்பினால் பயங்கரப்பாதைதான் - அதிலே மாற்றம் இல்லை -

தூக்குமேடைக்குப் பதிலாகச் சுழல் துப்பாக்கி வந்தது - மாறுதல் இந்த வகையில்தான்!

இப்படி, விடுதலைக்கு மார்க்கம், பயங்கரமானதாக இருக்கும் என்பதைத் தெரிந்தும் ஒரு மாவீரனின் சொல்லால் மன உரம் பெற்ற மக்கள் நடத்திய மாபெரும் புரட்சியே நவம்பர் புரட்சி. அந்தப் புரட்சி, வெற்றியையும் தந்தது - வெற்றி நிலைத்தும் விட்டது - வளர்ந்தும் வருகிறது - பயங்கரப் பாதையிலே போகவேண்டிய அவசியமுமின்றிப் பல்வேறு நாட்டுப் பாட்டாளி மக்கள் உரிமைபெறும் சூழ்நிலைகூட, அந்தப் புரட்சி உண்டாக்கி வைத்திருக்கிறது.

(திராவிடநாடு - 17.11.1946)

# லெப்டினன்டு ஜெனரல்
**சர்.சி.பி. இராமசாமி ஐயருக்கு**,
190 **திருவாங்கூர் துர்ப்பாக்கியர்கள் அளிக்கும் பிரிவுபசாரப் பத்திரம்!**

திருவிதாங்கூர் திவான் சாகேப்!
பிரம்மகுல ரட்சகரே!
பெருங்கண்ணரே!
ஏகாதிபத்தியத்தின் செல்லப்பிள்ளையே!
அக்கிரகாரமாக்கிய தீரரே!
'அமெரிக்கன் மாடல்' கர்த்தாவே!
அன்னையின் புகழையும் தனயனின்
தீரத்தையும் தெரிவிக்கும் ஒலிபரப்பியே!
மயிலை வாசியின் விசுவாசியே!
பொது உடைமைக்காரரைப் பொசுக்கிடக்கிளம்பிய புலியே!

ஆலயமும் அரண்மனையும், ஆசிரியருக்குப் பதுங்குமிடம் என்று, திராவிடர் கழகத்தார் கூறுவார்கள். அவை அர்த்தமற்ற வார்த்தைகள் என்று நாங்கள் எண்ணிக்கொண்டிருந்தோம் - தாங்கள் திருவிதாங்கூருக்குத் திவான் ஜீயாக வருகிறவரையில், வந்தபிறகே கண்டோம், அந்தக்கட்சியினர் கூறிய மொழி உண்மை என்பதை.

பிரம்மகுல ரட்சகா! இந்த நாட்டிலே, காந்தியாரிடம் செல்வாக்குப் பெற்றவர்கள் சிலர் உண்டு, சிலருக்குச் சர்க்காரிடம் இருக்கும்; இருஇடத்திலும் ஏககாலத்திலே செல்வாக்குப் பெறுபவர்கள் கிடையாது. ஆரிய! உமக்குத்தான் அது முடிந்தது. உம்மை, விலிங்டன் வைசிராயின் ஸ்வீகாரம் என்பார்கள்! அதுபோலத்தான் இருந்தது செல்வாக்கு. அதேபோது காங்கிரசிலும் உமக்குச் செல்வாக்குத்தான். எங்களுக்கு இது ஆச்சரியமாக இருந்தது. எப்படி நமது திவான் ஜீயால், டில்லி வார்தா ஆகிய இருபீடங்களிலும் மாலை மரியாதை பெற முடிகிறது என்று ஆச்சரியப்பட்டோம். திராவிடர் கழகத்தார் விளக்கினார் அந்த இரகசியத்தை, சர்வம்பிரம்மமயம்ஜகத்! - டில்லியிலும் அது தான் -

வார்தாவிலும் அதேதான் என்றார்கள். உண்மையாகத்தான் இருக்கிறது நீர் ஓர் ஆரியர் என்ற காரணத்தாலேதான் உமக்கு இரு இடங்களிலும் செல்வாக்கு கிடைத்தது.

“காந்தியாரே! திருவாங்கூர் வராதீர்! வந்தால் கைதுசெய்வேன்!” என்று முன்பு ‘கபர்தார்’ கூறினீர். நாங்களெல்லாம் அப்படிப்பட்ட பிரிட்டிஷ் ஏகாதிபத்தியமே நடுநடுங்குகிறது நமது மகாத்மாவிடம், இந்தப் பஞ்சாங்கக்காரப் பிராமணரின் மிரட்டலுக்கா, காந்திமகான் பயப்படுவார் என்று எண்ணினோம். இதோ வருவார், நாளை வருவார், வந்ததும், இந்த சர்.சி.பி, மயிலைநோக்கி ஓட வேண்டும் பார் என்றெல்லாம் மனப்பால் குடித்தோம். ஆனால், உம்முடைய அறிக்கை வந்தபிறகு, காந்தியார் திருவாங்கூர் வரவில்லை. ஏகாதிபத்தியத்தாக்குதலுக்கு அஞ்சாத காந்தியார், பிராமண கோபத்துக்கு அவ்வளவு பயந்தார்.

அவர் மட்டுமல்லவே! அவருடைய ‘வாரிசு’ - சர்வதேசிய நோக்குடைய, சண்டமாருதப் பிரசங்கப் பண்டித ஜவஹர், திருவாங்கூர் காங்கிரஸ் - திருவாங்கூர் கம்யூனிஸ்டு கட்சி - தொழிலாளர் ஸ்தானபங்கள் ஆகியவை உமது தாக்குதலால் இம்சைக்காளானபோது வாய் திறக்கவில்லையே - திருவாங்கூர் பக்கமே வரவில்லையே!

நேற்று காஷ்மீர் ராஜாவை மிரட்டினார் - திருவாங்கூரில் நீர் பகிரங்கமாக லெப்டினன்டு ஜெனரல் பட்டத்தைச் சூட்டிக்கொண்டு, இராணுவ ஆட்சியே நடத்திக் காட்டினீர் - பண்டிதர் ஒரு வார்த்தை பேசவில்லையே!! பேசமுடியவில்லையே!

மயிலை வாசிகளைத் திருவாங்கூருக்குக் கும்பல் கும்பலாக, ஜட்ஜுகளாகவும், சங்கீதவித்வான்களாகவும், அதிகாரிகளாகவும், வியாபாரிகளாகவும் குடிவரச்செய்து, சமஸ்தானத்தை, சதுர்வேதி மங்கலமாக்கினீர். யாரால் தடுக்க முடிந்தது? கொச்சிக்குக் கோவை சண்முகம்

திவானாவதா, இந்தக் கொடுமையைக் கண்டும் நாட்டுமக்கள் சும்மா இருக்கின்றனரே என்று எழுதிய 'இந்து' உம்முடைய பிரவேசத்துக்குப் பாராட்டியதோடு இல்லையே, பழனிமுருகனைப் பூஜித்துக்கொண்டிருந்த பக்தரை, பிரதம நீதிபதியாக்கி, சமஸ்தானத்துக்குக் கொண்டுவந்தீர் - அவர் ஆரியர் உமது இனம் - மயிலை - இந்து பாராட்டித்தான் எழுதிற்று.

அடக்குமுறை - பத்திரிகை ஜாமீன் - எடுத்ததற்கெல்லாம் 144-ஊர்வலம் நடத்தாதே - பொதுக்கூட்டம் போடாதே - வேலை நிறுத்தம் செய்யாதே - முழக்கம் செய்யாதே - என்று, திவானாக வந்தநாள் தொட்டு அமல் நடத்தித்தான் வந்தீர். இவ்வளவும், "அக்கிரமம் - அநீதி, கொடுங்கோன்மை -" என்று கண்டிக்கப்பட்டு, இவற்றுக்குக் காரணமாக இருப்பவரின் பெயர் நாறிப்போயிருக்கும் வேறு இடத்திலோ - அல்லது திருவாங்
கூரிலேயே ஆரியரல்லதார் யாரேனும் திவானாக இருந்திருந்தாலும், கண்டனம் பிறந்திருக்கும் - பொதுமக்களின் கோபப்
பார்வையிலே அந்த அமல் பொசுங்கிப் போயிருக்கும். உமக்கு அப்படி ஏதும் இல்லை - ஜாம் ஜாமென இங்கு அடக்குமுறையை வீசுவீர் - அல்லோலகல்லோல மாகும் சமஸ்தானம் - அடுத்த வாரத்திலேயே, சென்னைப் பத்திரிகைகள் சகலமும், சச்சிவோத்தமர், சர்.சி.பி. இராமசாமிஐயரின் படத்தை சர். சிவசாமிஐயர் திறந்து வைத்தார்; சர் அல்லாடி கிருட்டிணசாமி ஐயர் தலைமை வகித்தார்; அரியக்குடி ராமானுஜமய்யங்கார் பாடினார்; அலமேலு ஜெயராமய்யரும் பிரசன்னமாகி இருந்தார்கள் என்று அல்லவா எழுதும்! உமது அமலினால் இங்கே எம் மக்கள் பட்ட தடியடியால் ஏற்பட்ட தழும்பின் கனத்தை நாங்கள் கண்டு கலங்கிக் கொண்டிருப்போம், அந்தச் சமயத்திலே, உமது அகன்ற, நீண்ட, ஆழத்தையும் கூர்மையை ும் விளக்குகின்ற பெருங்கண்ணின் பேரொளியைப் பற்றியல்லவா, சென்னைப் பத்திரிகைகள் புகழ்ந்து புகழ்ந்து எழுதிக்கெண்டிருக்கும்.

திருவிதாங்கூர் சட்ட மறுப்பின்போது, தலைவர்கள் தொண்டர்கள் மட்டுமா, கல்லூரி மாணவர்கள், மாணவிகளையும், தண்டித்தீர் - அந்தக் கொடுமையை, “மக்களின் மடமை” என்றல்லவா அந்தப் பத்திரிகைகள் எழுதின.

பட்டாளத்தார் பவனி வந்து உமக்கு “ஜே” போட்டனர் - மக்கள் சபித்தனர் . அப்போதும், உமது புகழைப் பரப்பவே, பத்திரிகைகள் பாடுபட்டன.

சமஸ்தானத்துக்குள்ளே உள்ள பத்திரிகைகள் அடக்கு முறையால் வாய் மூடிக் கிடந்தன. சென்னைப் பத்திரிகைகளோ, இனப் பாசத்தால், உமது கடுமையான நடவடிக்கைகளைக் கடுகு எழுத்திலும், உமது புன்சிரிப்பு - உமக்கு அன்னையின் ஆதரவும் தனயனின் தயவும் கிடைத்ததன் காரணம் - உமது பெருங் கண்ணிலேயிருந்து சொட்டும் கலை ரசம் இவற்றைப் பற்றியல்லவா புகழ்ந்து எழுதிக் கொண்டிருந்தன.

சமஸ்தானக் காங்கிரசின் கிளர்ச்சியை அடக்க, எவ்வளவு கொடுமையான முறைகளைச் கையாண்டீர். துப்பாக்கிப் பிரயோகம் செய்யச்செய்தீர். நெய்யாற்றங் கரையருகே, குண்டடி பட்ட மக்களுக்காக ஒரு சொட்டுக் கண்ணீர் விட்டவர் யார்? ஆலப்புழை, கோட்டயம், முதலிய பகுதிகளிலே ‘வேட்டு’ மூலம், உமது ஆதிக்கத்தை நிலை நாட்டிக் கொண்டீர். யார், இந்தக் கொடுமையைக் கண்டித்தனர்.

அகில இந்தியக் காங்கிரசும் உம்மை அசைக்கவில்லை, பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம் உம்மை வாரி அணைத்துக் கொண்டது.

மக்களின் மனத்திலே திகில் எழச் செய்தீர் - மயிலை வாசிகளின் மனத்திலே மகிழ்ச்சி பெறும் படியாக, உத்தியோகங்
களை வாரி வழங்கினீர்.
பட்டம் தாணுப் பிள்ளை,
பெரேரா,

க. நாணு,
பூதலிங்கம் பிள்ளை,
இ.கேசவன்,
சங்குப் பிள்ளை,
பத்மனாப பிள்ளை.
வெட்கமா? துக்கமா? அச்சமா?

“மஹாநதிக்”கரையை அடுத்துள்ள இடத்திலே, ஒரிசா மாகாண சர்க்கார், நிலக்கரியிலிருந்து பெட்ரோல் தயாரிக்கும் தொழிற்சாலையும், யந்திரக்கருவிகள் தயாரிக்கும் தொழிற்சாலையும், உழவுக்கான விஞ்ஞானக்கருவி தயாரிக்கும் தொழிற்சாலையும், தொடக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். இந்தத் தொழிற்சாலைகளை அமைப்பதற்கான உதவிகளையும், யோசனைகளையும், ஒரிசா சர்க்கார், பிரிட்டிஷ், அமெரிக்கா, ஜெர்மன், தொழிற்சாலை நிபுணர்களிடமிருந்து பெறுகிறார்கள், என்று ஒரு செய்தி பத்திரிகைகளில் வெளிவந்திருக்கிறது.

ஆனால், அதே நேரத்தில், சென்னை மாகாணத்தின் இயற்கைச் சக்திகளை விஞ்ஞான முறைப்படி பயன்படுத்தி, பொதுச் செல்வத்தை வளர்க்கும் திட்டம் ஏதும் தொடக்கப்படவில்லை.

சேலம் மாவட்டத்திலே இரும்புச் சுரங்கம் இருக்கிறது; தென்ஆற்காடு மாவட்டத்திலே, பழுப்புநிற நிலக்கரிச் சுரங்கம் இருக்கிறது; என்ற அறிக்கைகள், வெளியாகி, ஆண்டுகள் இரண்டுக்கு மேலாகின்றன.

அந்தச் சுரங்கங்கள் வளமுள்ளவை, கிடைக்கக்கூடிய பொருளும் தரமானவை, என்று கூறப்படுகின்றது.

இந்த இயற்கைச் சக்தியைப் பயன்படுத்திப் புதிய, பெரிய தொழிற்சாலைகளைத் தொடக்கினால், மாகாணத்தின் செல்வம் வளரும் என்று நம்பிக்கையூட்டப்படுகிறது.

இதற்கான திட்டமே தயாராக இருப்பதாக, ஆசையூட்டப்படுகிறது.

இதுபற்றி, டில்லி சர்க்காருக்குத் தகவல் தரப்பட்டிருக்கிறது; யோசனை கோரப்பட்டிருக்கிறது; அனுமதி எதிர் பார்க்கப்படுகிறது என்றெல்லாம் அமைச்சர்கள் அடிக்கடி பேசி ஆவலைக்கிளறியபடி உள்ளனர்.

இனி, மேலும் மேலும் வரி போடுவதன்மூலம், சர்க்கார் வளர்ந்து, கொண்டுவரும் செலவைச் சமாளித்துப் பொதுமக்களுக்கு நலன்தரும் பணிபுரிய முடியாது; புதுச் செல்வம் வளர வழி கண்டாகவேண்டும்; வாழ்க்கைத்தரம் உயர்ந்தாக வேண்டும்; அதற்குத் தொழில்வளம் பெருக வேண்டும்; என்று அறிவுரை வழங்கப்படுகிறது தாராளமாக.

திராவிடநாடு, வடநாடு என்று பேசுவது, 'விஷங்கலந்தது என்று, நியாயம் பேசும் பெரிய மனிதர்கள் கூடத் தென்னாட்டிலே போதுமான அளவு தொழில் வளர்ச்சி இல்லை என்பதை உணர்ந்து, பேசவும் செய்கிறார்கள்.

இயந்திரத் தொழில் துறை நிபுணர்களான, சர். விஸ்வேஸ்வரய்யா போன்றவர்கள், இந்தியாவிலே, பெரிய தொழிற்சாலைகள் ஒரே பதிகுதியிலே, குவிந்திருப்பது, சரியல்ல என்பதையும், பொருளாதார நிலை, செம்மைப்பட வேண்டுமானால், தொழிற்சாலைகள், நாடு முழுவதும் பரவி இருக்க வேண்டும் என்பதையும், எனவே, தென்னாட்டிலே ஒரு புதிய தொழில் திட்டம் தயாரிக்கப்படவேண்டும் என்பதையும் வற்புறுத்தி வருகிறார்கள்.

எனினும், இதுவரையிலே, இயற்கைச்சக்தி தூங்கியபடிதான் இருக்கிறது - புதிய பெரிய தொழிற்சாலைகள் தொடக்கப்படவில்லை.

இரும்பு, நிலக்கரிச் சுரங்கங்களைப் பயன்படுத்தி, இரும்புத் தொழிற்சாலையை, இந்த மாகாணத்தில் தொடக்கவேண்டுமென்று, சென்னை சர்க்கார் கோரியதற்கு, டில்லியிலிருந்து இன்னமும் சாதகமான பதில் கிடைக்கவில்லை. ஏன்?

திராவிடநாடு - என்று சொல்வது தீது என்று கருதும் திவ்யபுருஷர்களைக் கேட்கிறோம், இந்த நிலை, சென்னை மாகாணத்துக்கு இருப்பது சரியா? முறையா? வாழ்வை வளமாக்குமா?

என்ன பரிகாரம் கண்டுபிடிக்க உத்தேசித்திருக்கிறார்கள்! ஏன், கண்மூடி மௌனியாகி உள்ளனர்?

ஒரிசா போன்ற சிறுமாகாணங்கள் கூடப் பெரிய தொழிற்சாலைத் திட்டங்களைத் தொடக்கத் திறனும் துணிவும் கொண்டு, டில்லி சர்க்காரின் அனுமதியையும் உதவியையும் பெற முடிந்தபோது, சென்னைக்கு ஏன் சீரழிவு இருக்கிறது! மாற்றாந்தாயிடம் வளரும் மகவாக இருப்பானேன்? இந்தநிலை மாற, என்னவழி? திராவிடர் கழகத்தாரின் திட்டத்தைத்தான், தீது என்று ஏறுகிறார்கள் - சரி - விளங்கும்போது விளங்கட்டும் - இப்போது, இவர்கள், இந்த நிலைமையைப் போக்க, என்ன வழி கண்டுபிடிக்கப் போகிறார்கள்? வாய் திறவாத காரணம் என்ன? வெட்கமா? துக்கமா? அச்சமா?

சென்னை மாகாணம், வெறும் விவசாயத்தையும், சிறு குடிசைத் தொழில்களையும் மட்டும் கொண்ட பட்டிக்காடு ஆகிவிடட்டும் - வடநாடு சீமையாகட்டும், என்று கூறிவிடுகிறார்களா?

சென்னையிலே, புதிய தொழில் வளத்துக்கான வசதியே கிடையாது என்று எண்ணுகிறார்களா?

சென்னை மாகாணத்திலே, புதிய தொழிற்சாலைகள் தொடக்குவது, வடநாட்டுத் தொழில் துரைமார்களுக்குக் கோபமூட்டும், அவர்களின் போட்டியைச் சமாளிக்க முடியாது என்று பயப்படுகிறார்களா?

அல்லது அந்தப் பிரச்னையை வலியுறுத்தினால், விளக்கினால், பிறகு திராவிடர்கழகப் பிரசாரத்துக்கும், தங்கள் பேச்சுக்கும் அதிக வித்தியாசமில்லை என்று டில்லி கூறிவிடுமோ என்று திகில்கொள்கிறார்களா?

தென்னாட்டுத்தொழிலபிவிருத்தி, வடநாட்டுத் தொழில் அவிபிருத்தி என்று பாகுபாடுபடுத்திப் பேசுகிறீரே, ஐயா! இதேதான் நாங்கள் இவ்வளவு காலமாகப் பேசிவரும் திராவிடநாடு பிரச்னை, என்ற எங்கோ, நாங்கள் கூறுகிறோமோ, என்று வெட்கப்படுகிறார்களா!

அல்லது, டில்லியின் பிடி, மிகப் பலமாக இருக்கும் இப்போது, இந்தப்பிரச்னையைப் பேசுவது, ஆபத்து என்று எண்ணி, காலம் வரட்டும் என்று காத்துக் கொண்டிருக்கிறார்களா?

பணிந்துவிட்டார்களா? பதுக்கிக் கொண்டுள்ளனரா? பயமா? வெட்கமா? இங்கு இரும்பையும் நிலக்கரியையும் தூங்கவைத்துவிட்டு, தரித்திரத்தைத் தொட்டுக் கொண்டிருக்கக் காரணம் என்ன?

8-12-1946

# அந்தக் கரம்

“அதோ வெகுதூரத்தில் அந்த நதிக்குப்பின்னால், அந்த மலைகளுக்கும் காடுகளுக்கும் அப்பால் தமது புண்யபூமி கிடக்கிறது. நாம் உதித்த மணல். நாம் திரும்பவும் சென்றடையப்போகும் நிலம். உற்றக் கேள்! இந்தியா அழைக்கிறது நம் நாட்டு நாற்பது கோடிமக்கள் அழைக்கின்றனர். இரத்தம் இரத்தத்தைக்கூப்பிடுகிறது. எழுங்கள் வீண்பொழுது போக்க இது நேரமன்று. உங்கள் ஆயுதங்களை எடுங்கள்! அதோ உங்கள் முன்னால் நம் முன்னோர்கள் கட்டிய பாதை இருக்கிறது. அந்தப்பாதை வழியாக நாம் அணி வகுத்துச் செல்வோம். எதிரிப் படைகளின் நடுவே நாம் ஊடுறுவிச்செல்வோம்.

நமது கடைசியில் நமது ராணுவத்தை டில்லிக்கக் கொண்டு செல்லும் பாதையை நடத்திடுவோம் டில்லிசெல்லும் பாதையே சுதந்திரப் பாதை சலோ டில்லி!”

வங்கச் சிங்கம், சுபாஷ் சந்திர போசின் வீரஉரை இது. தேசிய ராணுவம் என்று அழைக்கப்படும் அமைத்த காலை அவராற்றிய ஆற்றலுறை - அனைவருக்கும் அந்த அழைப்பை அனுப்பினார் - தமிழரே ஏராளம் அந்த விடுதலைப்படையில்.

அவர் அமைத்த விடுதலைப்படை வெற்றி பெற்று, எந்த டில்லியில் பவனி வரவேண்டும் மென்று விரும்பினாரோ, என்று டில்லியைக் காண அவரும் அவர் அமைத்த படையினரும் ‘இரத்த ஸ்நானம்’ செய்தனரோ, அதே டில்லியிலே, நடைபெறுகிறது, அரசியல் நிர்ணயசபை. ஆனால் சுவாஷின் இன்பக்கனவு நனவாகி இருந்திருப்பின், இதுபோன்றா நடைபெற்றிருக்கும்! சபையிலே ஒரு பகுதியில் ஆட்களில்லை. சமஸ்தானாதிபதிகள் சலசலப்பு மற்றோர்புறம். வெள்ளையரின் ராஜதந்திராயுத வீச்சு வேறோர்புறம். தொகுதியா, கூட்டா? கட்டாயத் தொகுதியா என்ற விவாதம் ஓர்புறம்! அ.நி. சபை, வீரர்களின் அறிவிப்புக்கு இடமளிக்குமிடமாக இருக்கவில்லை - வக்கீல்களின்

சங்கமாகிவிட்டது! ஏன்? பிரட்டிஷார் வகுத்ததிடட்ம், அப்படிப்பட்டது. எழுத்துக்கெழுத்து, சச்சரவு மூட்டக்கூடிய விதமாக; சட்டச்சிக்கல், வியாக்கானச் சிக்கல் கொண்டதாகத் திட்டம் தீட்டி, அதிர்ப்திநிறையவளர்ந்த பிறகு அதனைத் தந்தனர். இன்று அ.நி. சபையிலே தெரிகிறது. வெள்ளைக்காரனிடம் “குண்டு” மட்டுமல்ல இருக்கும் ஆயுதம் என்று. ஒருதிட்டம், ஒருபட்டாளத்தால் கூடச்சாதிக்க முடியாத காரயித்தைச் செய்து விடுகிறது நாட்டுவிடுதலை முயற்சியைக் கெடுத்து வருகிறது.

திட்டத்திலே ஒருபகுதியைக் காட்டி, ‘ஐயா! இதற்கென்ன பொருள்?” என்று கேட்க வேண்டிய நிலையை, ஏன் பிரிட்டிஷார் உண்டாக்க வேண்டும். தெளிவான, சந்தேகத்துக்கு இடமேயில்லாத, சாப்ரூ ஜெயகர் தேவைப்படாத, சட்டச் சருக்கலில்லாத பதங்கள் இல்லையா? ஏன், திட்டத்திலே, பாவனைக்கு ஏற்றபடி பொருள் கொள்ள கூடிய மதங்கள் உள்ளன? நமக்குள், விவகாரம்’ முற்றுவதற்குத் தான்! இல்லையானால், எங்காவது கேள்விப்பட்டதுண்டா, திட்டத்திலே ஒருபகுதிக்கு, தீட்டியவர். ஒரு அர்த்தம் சொல்லி விட்டு, வேண்டுமானால், கோர்ட்டுக்குப்போ, என்று பேசியதை! மத்யஸ்தம், சமரசம், என்று எந்தப்பெயரிட்டாலும் சரியே, மத்யஸ்ததாரனாகவே பார்த்து, நான் இதற்கு இப்படிப் பொருள்கூறுகிறேன், வேண்டுமானால் கோர்ட்டுக்கும் போய்க்கேள் என்று சொல்லலாமா? நமது ஓட்டல் சாப்பாடு வெகு நேர்த்தி - அரிசி முதல்தரம் - சமயல் முறையும் மேலானது - எதற்கும் அடுத்த வீதியிலே டாக்டர் இருக்கிறார் அவரிடமும் சென்று, மருந்து பெற்றுக்கொள்ளுங்கள் இஷ்டப்பட்டால் என்று கூறுபவரை, என்ன என்று கூறுவோம். பிரட்டிஷார் பேச்ச இதைவிட மோசமான விபரீதப்போக்கில் இருக்கிறது. ‘வேண்டுமானால் கோர்ட்டுக்குப்போ! ஆனால் கோர்ட்டாடிரின் முடிவுக்குக் கட்டுப்படமுடியாது. நான் கூறும் பொருளின் படித்தான் பாரியம் நடைபெற வேண்டும்” என்று கூறுகிறார்கள்.

விடுதலை விரும்புபவர்களை விளையாட்டுப் பிள்ளைகளாக்க விரும்புகிறார்கள். ஏன்? அவர்கள் நன்கு அறிந்து கொண்டுவிட்டார்கள், இங்கே, இனங்களுக்குள், அவநம்பிக்கையும், மாச்சரியமும் வளர்ந்துவிட்டதை எனவேதான் வெளிப்படையாகவே பேசவும் ஆரம்பித்துவிட்டார்கள்.

வேளைக்கேற்றபடி, ஆளுக்கேற்றபடி பேசுவதும், சமயத் துக்குத்தக்க 'ரூபம்' எடுப்பதும் பிரிட்டிஷாரின் பிறவிக் குணம் என்றாலும், இம்முறை அவர்கள் தங்கள் திறமையின் உச்சஸ்தானத்தை அடைந்துவிட்டார்கள். அவசரமாக படிக்கிறார்கள்! கிரிப்சுக்கு, வீரபாகம் - பெதிக்லாரன்சுக்கு சோகபாகம் - சர்ச்சிலுக்கு கோப பாகம் - இப்படி அவர்களுக்குள் வேஷங்களை அமைத்துக் கொண்டு, நாடகம் நடத்துகிறார்கள்.

இந்தியா ஒரே ஆட்சியில் இருக்கவேண்டும் - இது காங்கிரஸ் கேட்டது.

இந்தியாவில் இருராஜ்யங்கள் - இது லீக் கேட்டது.

லீக் தனது பிரசாரபலத்தை அதிகப்படுத்தும் வரையில் பிரிட்டிஷார், செய்துவந்த தந்திரம், இந்தியா ஒருநாடு - அதைப் பிரிக்கலாமா? என்று உருக்கமாகப் பேசியதுதான். அமெரியின் அந்த நாள் வசகத்தை நினைவில் கொள்ளவோர் இதனை அறிவர். இந்தியா முதலில் (ஐணஞ்டிச்ஹூடிணூண்t) என்று இந்தியாவை அடிமை கொண்ட ஏகாதிபத்யத்தின் ஏவலர், 'தேசியம்' பேசியகாலம் அது. என்ன அதன்பொருள்? ஏனு" அந்தப் போக்கு கொண்டனர்? காங்கிரசுக்கு ஒரு கோப்பை கருப்பஞ்சாறு! காங்கிரசுக்கு இனிப்பு தரவேண்டும் என்ற நோக்கத்தோடு அல்ல, அதைக்கண்டு, லீகுக்குக் கொஞ்சம் ரோஷம் - கோபம் வரவேண்டும்எ ன்று. லீக்பல மானதும், பிரிட்டிஷார் "இந்தியா ஒன்றுதனன் என்றாலும்"... என்று இழுத்துப் பேசினர். காங்கிரஸ் - லீக் பேதம் வளர வளர, பிரிட்டிஷாரின் பேச்சிலே மேலும் மேலும் தேன் ஒழுகலாயிற்று.

"சுந்திரமா தேவை! அன்பு மிக்க இந்தியப் பெருங்குடி மக்களே! அதனைத் தரவே துடிக்கிறோம், பெற்றுக்கொள்ள!" என்று கவிதை பொழியலாயினர். ஜாலியன்வாலா நடத்தியவரின் வாயிலிருந்து இந்த அன்புரை வரக்காரணம் என்ன? பேதம், உள்நாட்டிலே வளருகிறது எனவே நாம் சுதந்திரம் தருவதாகச் சொல்வது, சச்சரவை அதிகப்படுத்திவிடும், அந்தச் சச்சரவையே பிறகுநமக்குச் சாதகமாக்கிக்கொள்ளலாம், என்ற தந்திரப்போக்கு அது.

பாகிஸ்தான் கேட்டனர் முஸ்லிம்லீகினர்.

பாகிஸ்தானா, அது கூடாதே, என்றது ஏகாதிபத்யம். கூடாது அல்ல கூடாதே அதாவது, தரமுடியாது என்று உறுதியாகக் கூறவில்லை - அது ஏன், என்று உருக்கமாக உரைத்தனர். திட்டத்தின் படியோ, இந்திய உபகண்டத்தை அ.ஞ.ஞி என்ற மூன்று பிரிவுகள் கொண்டதாக்கினர். கேட்டது ஒரு பாகிஸ்தான் - அதை மறுத்துவிட்டு, பாகிஸ்தானைப் பாகிஸ்தான் செய்தனர்! இந்தியாவை, இந்துஸ்தான் பாகிஸ்தான் என்று பிரித்திருக்கலாம் - அந்தப் பாகிஸ்தானில், எல்லைஎப்படி இருக்கவேண்டும், எந்தெந்த மாகாணம் இருக்க வேண்டும் என்ற விவரத்தை விளக்கி இருக்கலாம் - அப்போது அதிலே அசாம் இருக்க முடியுமா, கூடாதா, என்ற பிரச்னைகளைத் தெளிவாக்கி இருக்கமுடியும். "இதிலிருந்து இதுவரை" என்று லீக் கேட்க, வேண்டாம் இதிலே இருந்து இதுவரை மட்டுமேதான் பாகிஸ்தானாக இருக்கவேண்டும் என்று சமரசம் கமிட்டி கூறியிருக்கலாம், இந்தநேரம் பிரச்னை தீர்ந்துபோயிருக்கும்.

லீகினரின் விருப்பத்தைப் பூர்த்தி செய்துவிட்டதாகக் காங்கிரஸ் கருதவேண்டும் - காங்கிரசின் விருப்பத்தைப் பூர்த்திசெய்ததாக லீக் எண்ணிக்கொள்ள வேண்டும் - இப்படித் தவறான எண்ணம், மாறிமாறி இரு கட்சிகளுக்கு மிடையிலே ஏற்பட்டபடி இருக்கவேண்டும், இதனைச் சாக்காகக் கொண்டு, சர்வ வல்லமை உள்ளசாமராஜ்யம் என்ற பெயருக்கேற்ற சக்தி போய்விட்ட இந்த

நாட்களிலும், சாம்ராஜ்யாதிபதியாக வாழவேண்டும். இது பிரிட்டிஷ் நோக்கம். இதற்கே நாடகம்.

எனவேதான், இந்த அமைப்பை, அட்லி நிர்ணயசபை என்று அழைத்தோம்.

பண்டித நேரு, வீர உரையாற்றினார், அ.நி. சபையில். வெள்ளையன் காதிலே விழவேண்டிய பேச்சுத்தான். ஆனால் அவரையும் என்ன பாடுபடுத்தி வைக்கிறது பாருங்கள் ஏகாதிபத்யம். அ.நி. சபையிலே அதிதீவிரமாகப் பேசிய அதே நேருவை, கல்கத்தா வெள்ளை வர்த்தகர் சங்க விழாவுக்கு அழைத்தனர் பேச. அங்கு சென்ற நேரு, பழய பல விஷயத்தை மறந்து பிரிட்டனுடன் நேசமாகவே வாழ நாங்கள் விரும்புகிறோம் என்று பேசவேண்டி நேரிட்டது. அ.நி. சபையிலே, அவர், தேசவிடுதலை வீரர் மொழி பேசினார். வெள்ளையர் மத்தியில், குழைவு மொழி பேசலானார். இவ்வண்ணம் ஒரு தனி மனிதரை மட்டுமல்ல, பலரை மட்டுமல்ல, கட்சிகளையே தன் இஷ்டப்படி ஆடச் செய்கிறது, ஏகாதிபத்யம்.

சுதந்திர இந்தியக் குடிஅரசுத் தீரமானத்தைப் பண்டித நேரு பிரேரேபித்திருக்கிறார். அதனை இப்போது நிறைவேற்ற வேண்டாம், லீகும், சமஸ்தானாதிபதிகளின் சார்பில் வருவோரும் கலந்துகொள்ளட்டும், பிறகு நிறைவேற்றுவோம், என்று டாக்டர் ஜெயகர் கூறுகிறார். அது பற்றிய விவாதமும், விளக்கமும், மறுப்புரைகளும், எழுச்சிப்பேச்சும், எல்லாம் சேர்ந்து, உலகுக்கு எதை எடுத்துக் காட்டுகிறது என்று கூர்ந்து கவனித்தால், சுதந்திரம் கோரும் இந்தியாவில் பலமான கருத்து வேற்றுமை இருக்கிறது என்பதைத்தான்.

இந்த மகத்தான தீர்மானம், அரை நூற்றாண்டாக, எந்த இலட்சியத்துக்காக, ஆயிரமாயிரம் இளைஞர்கள் தியாகத் தீயிலே குளித்தனரோ, அந்த இலட்சியத்தை அடைவதற்கான தீர்மானமாகும். இதுபற்றிவிவாதம் நடக்கும்போது, நமக்குள் இருக்கும் உட்பகையைக் கண்டு, வெள்ளைக்காரன், கடலுக்கு அப்புறமிருந்து கேலி

செய்யும் காட்சியைக் காண்கிறோம். இதுவே இன்று, உண்மை நிலையுணர்வோரின் உள்ளத்தை வாட்டுவது.

அ.நி. சபையிலே, லீகினர் கலந்துகொள்ள வேண்டாம் என்று ஜனாப் ஜின்னா கூறிவிட்டார்.

இதிலே கலந்துகொள்ளாவிட்டாலும், தொகுதி பற்றிக் கூடும் சபைகளில், ஞ.ஞி. சபைகளில், லீகினர் கலந்துகொள்வர், என்றும், அந்த இரு தொகுதிகளைப் பற்றிய திட்டங்களை அவர்கள் தயாரிப்பர் என்றும் தெரிவிக்கப்படுகிறது.

இதற்கோர் புதுச் சிக்கல் உண்டாகிவிட்டது.
அசாம் மாகாணக் காங்கிரஸ் தலைவருக்குக் காந்தியார் ஒரு யோசனை கூறிவிட்டார். வங்காளமும் அசாமும் சேரந்து ஞி. தொகுதி. இதிலே இருக்க இஷ்டமில்லை என்று அசாம் கூறுகிறது. அப்படியானால், ஞி. தொகுதிக்கான சபை நடைபெறும் போது நீங்கள் கலந்துகொள்ளாதீர்கள் என்று அறிவித்துவிட்டார்.

மொத்தமாக அ.நி. சபை கூடுகிறபோது லீகினர் கலந்து கொள்ளவில்லை.

தொகுதிகள் பற்றிய சபை நடவடிக்கைகளிலே, காங்கிரஸ் கலந்துகொள்ளவில்லை.

இப்படி ஒரு நிலைமை வளர வழி உண்டாகிவிட்டது.

மெஜராடி பலத்தைக் கொண்டு முஸ்லீம்கள் விரும்பாத அரசியலைத் திணிப்பதற்காகவே இந்த அ.நி.சபை. இதிலே நாங்கள் கலந்துகொள்ள மாட்டோம் என்று லீகினர் கூறுகின்றனர்.

ஞ.ஞி. தொகுதிகளிலே, முஸ்லீம் லீகினரே மெஜாரடி. அந்த மெஜாரடி பலத்தைக் கொண்டு, அந்தத் தொகுதிகளில் சேர விரும்பாத எங்களைக் கட்டாயமாகச் சேர்க்க விரும்புகிறார்கள் - எனவே நாங்கள் அந்தத் தொகுதி சபைகளிலே கலந்து கொள்ள மாட்டோம் என்று

அசாம், எல்லை, எனும் இரண்டு மாகாணக் காங்கிரஸ் தலைவர்களும் கூறுகின்றனர்.

மொத்த இந்தியாவில் சேர்த்து விடாமல், தனி அரசாக, எல்லை, பஞ்சாப், சிந்து, வங்காளம், அசாம் ஆகிய ஐந்து மாகாணங்களைப் பாகிஸ்தான் ஆக்கவேண்டும் என்று லீக் கோருகிறது.

பிரிட்டிஷார், இந்த ஐந்தை இரண்டு பிரிவாக்கினர். எல்லை, பஞ்சாப், சிந்து ஒரு தொகுதி. அசாம், வங்காளம், மற்றோர் தொகுதி என்ற முறையில். இந்தத் தொகுதிகளில், மெஜாரடிபலம், லீகுக்கு. எனவே இதிலே கலக்கக் காங்கிர1" சார்பினர் விரும்பவில்லை. ஆக லீக் வராததால், அ.நி. சபை பூரண பிரதிநிதித்வம் வாய்ந்ததாகவில்லை; அசாம், எல்லை ஆகியவைகளிலே உள்ள காங்கிரசார் கலந்து கொள்ளாததால், தொகுதிகள் சபையும் பூரண பிரதி நிதித்வம் வாய்ந்ததில்லை.
இஷ்டப்படாத பகுதியினர் மீது திட்டத்தைத் திணிக்க மாட்டோம் என்று பிரட்டிஷார் கூறுகின்றனர்!

ஏன், அ.நி. சபையினர் தயாரித்த திட்டத்தை அமுலுக்குக் கொண்டுவரவில்லை என்று காங்கிரஸ் கேட்டால், லீகினரின் ஆதிக்கத்திலுள்ள பகுதி ஏற்க மறுப்பதால், நாங்கள் அதனைத் திணிக்கவில்லை என்று பிரிட்டிஷார் சுலபமாகப் பதில் கூறுவர்.

ஏன், ஞ. ஞி. தொகுதிகளின் திட்டத்தை அமுலுக்குக் கொண்டு வரவில்லை என்று லீக் கேட்டால், அசாம் ஏற்றக் கொள்ளவில்லையே, எல்லை ஏற்றுக் கொள்ளவில்லையே என்று அதற்கும் சுலபமாகக் கூறிவிட முடியும்.

இந்த நிலையை நீடிக்க விடுவதா, என்பதே நமது கேள்வி.

ஒன்று தெளிவாகத் தெரிகிறது - டில்லி - சுபாஷ் பாபு காண விரும்பிய விதமாக இல்லை. ஆங்கில ஏகாதிபத்யம், எத்தகைய டில்லியைக் காண விரும்புகிறதோ, எவ்விதமான டில்லியைக் கிளைவ் கண்டு கிளத்தானோ,

அதே டில்லிதான் தெரிகிறது. அதே குழப்பம் - அதேவிதமான ஒற்றுமைக்கேடு - அதேபோன்ற மாச்சரியம், ஏறக்குறையய பிளாசிவாடை அடிக்கிறது.

“அழிந்துவிட்ட, இனி அழியப் போகும் சாம்ராஜ்யங்களின் சுடுகாடு டில்லி” என்று கிருபளானி பேசினார். இடமும் அப்படிப் பட்டதுதான்! சூழ்நிலையும் அவ்விதமே இருக்கிறத. எனவே, இப்போது செய்யவேண்டியது, இந்தியா சுதந்திரக் குடி அரசு விரும்புகிறது, அக்குடி அரசுக்கான திட்டம் தயாரிக்க விரும்புகிறது - என்ற தீர்மானத்தை நிறைவேற்றவிட்டு, சபையைக் கலைத்துவிட வேண்டும், அல்லது ஓராண்டு ஈராண்டு ஒத்திவைத்த விட வேண்டும்; அந்த இடைக் காலத்தில், பிரிட்டிஷ் திட்டப்படி அல்ல, சகல கட்சியினரும் கூடிக் கூடிப் பேசி, ஒருவருக்கொருவர் விட்டுக் கொடுத்துப் பேசி, வெளியாள் கண்டு நகைக்கிறானே என்ற வெட்கக்கேட்டுக்கப் பயந்தாவது பேசி, மொத்தமாக ஏகாதிபத்யத்திடம் அடிமையாக இருப்பதை விட, நமக்குள்ளே ஒருவருக்கொருவர், கொஞ்சம் அதிகச் சலுகையோ, சலுகைக் குறைவோ, பெற்றுக்கொள்வதைப் பொருட்படுத்தாமல், ஒரு சமரசத்துக்கு வரவேண்டும் - அந்தச் சமரசம், சுய நிர்ணயத்தை - அதாவது இன அரசை - அடிப்படையில் கொண்டதாக அமையவேண்டும் - அந்த ஏற்பாட்டுக்கு ஒப்புதல் கிடைத்தவுடன், அ.நி. சபை உண்மையான உரிமைச் சபை கூட்டி, விடுதலை விழா கொண்டாட வேண்டும்.

இதற்கான சூழ்நிலையை உண்டாக்கிப் பணியாற்ற வேண்டும்.

இது பொது யோசனை. இதே பிரச்னையே, நமது பிரச்னை தொக்கிக் கிடக்கிறது. திராவிட கழகத்தாராகிய நாம் இந்த சபையிலேயோ, இதற்குத் திட்டம் தந்த மந்திராலோ சனையிலேயோ கலந்து கொள்ளவுமில்லை - கவனிக்கப்படவு மில்லை- நாமும் என்னம் செலுத்தவுமில்லை. நமது கோரிக்கை, வடநாட்டுத் தொடர்பு கூடாது என்பது. ச்.ஆ.ஞ்ரி. எனும் தொகுதிகள்

போதா. ஈ. தொகுதி வேண்டும் என்பது. நமது நியாயத்துக்குக் முறையில்லை - வலிவு பெறவில்லை ...................

அ.நி. சபைக்கு. ஆனால், நமது நாட்டிலிருந்து, காங்கிரசாரால் நாட்டிலிருந்து, காங்கிரசரரால் அனுப்பப் பட்டிருக்கும் பிரதி நிதிகளைப் பற்றியும், அவர்களைத் தேர்ந்தெடுத்த முறை பற்றியும், கோபமும் அதிருப்தியும், வளர்ந்துவிட்டது - வளருகிறது - திராவிடர் கழகத்தவரல்லாத பலரிடையே.

குலபாசத்தைக் கவனித்தே அ.நி. சபைக்கு, சென்னை மாகாணக் காங்கிரசர் பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுத்தனர் இது கொடுமை, என்று கொதித்து எழுதிற்று "ஜனநாயகம்" என்ற பத்திரிகை. ஈரோட்டிலிருந்தல்ல, மலாய் நாட்டிலே இருந்து.

அரசியல் நிர்ணய சபைக்கு சென்னை சர்க்கார் பொறுக்கியிருக்கும் அங்கத்தினர்களைப் பார்த்து, நியாய புத்தியுள்ள எவரும் அதிருப்தி கொள்ளமலிருக்க முடியாது. அங்கத்தினர்களைப் பொறுக்கி எடுக்கும் விஷயத்தில், தியாகத்தையும் தேச சேவையையும் அவ்வளவு தூரம் கவனியாது சட்ட முனையும், நிர்வாகத் திறமையுமுள்ள நபர்கள் தேர்ந்தெடுக்கப்பட வேண்டும். அதோடு பல பிரிவுகளுக்கும் பிரதித்துவமும் அளிக்கப்பட வேண்டும். இந்த அடிப்படையில்தான் மற்ற மாகாணங்களில் அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டது. ஆனால், சென்னையப் பொறுத்த வரையில் வேறு மாதிரியாகத் தான் அமைந்திருக்கிறது. சில குறிப்பிட்ட தலைவர்களுக்கு அவர்களத செல்வாக்கை பொறுத்த விகிதாசாரம் அங்கத்தினர்கள் "கோட்டா" அளிக்கப்பட்டிருக்கிறது. தலைவர்களோ, தங்கள் தங்கள் பின்தாங்கிகளை பொறுக்கியிருக்கிறார்கள்.
அங்கத்தினர்கள் வரிசையிலே சர்.என். கோபாலசுவாமிகள், சர். அல்லாடி கிருஷ்ணசுவாமி, பொப்பிலி ராஜா, சர்.எ. முத்தையா செட்டியார், இவர்கள் நமது விசேஷ கவனத்திற்கு ஆளாகிறார்கள். முதல்

இருவரும் காங்கிரஸ் மேலிடத்தால் சிபார்சு செய்யப்பட்டவர்கள். சட்டம், நிர்வாகம் நன்கு தெரிந்தவர்கள் பின்னுள்ள இருவர்களும் செல்வந்தர்கள். ஜஸ்டிஸ் கட்சியைச் சேர்ந்தவர்கள் தியாகம், கேசசேவை இவைகளில் நால்வரும் ஒரே பள்ளிப் பிள்ளைகள் தான்! இந்நால்வருக்கும், அரசயில் நிர்ணய சபையில் காங்கிரஸ் சிபார்சின் மீது இடங்கிடைத்தது என்றால், உலகப் பிரசித்தி பெற்ற சர்.ஏ. ராமசுவாமி முதலியார். சர்.ஆர்.கே. ஷண்முகம் செடடியார், என். சிவராஜ் இவர்களுக்கும் என் இடம் அளித்திருக்க கூடாது என்பது தான் தெரியவில்லை. பொப்பிலி ராஜாவையும், முத்தையா செட்டியாரையும் விட இவர்கள் எந்த விதத்திலும் ஒதுக்கப்பட வேண்டியவர்களல்லவே; ஒரு வேளை இவர்கள் அரசியல் நிர்ணய சபைக்குள் வந்துவிட்டால் தென் இந்தியாவிலேயே "எங்களுக்குத்தான் மூளையுண்டு" என்று டமாரம் அடித்துவரும் ஒரு கும்பலின் சாயம் வெளுத்துவிடும் என்பதைத் தவிர இவர்களை ஒதுக்கப்படுவதற்கு வேறு காரணமேயில்லை. இது நியாயமா? சிந்தனை செய்து கொள்ளுங்கள்."

இது, நாகர் கோயிலிலிருந்து வெளிவரும். 'சுடர்' எனும் இதழிலிருப்பது. சுடர், "தேசீய" இதழ்தான்.

"இப்போது தமிழ்நாட்டின் சார்பாக அ.நி. சபையில் கலந்துகொண்டுள்ளவர்களின் தேசபக்திக்கு நாம் மதிப்புக்கொடுக்கிறோம். ஆனால், அவர்கள் தேசிய இந்தியாவின் சுதந்திர உணர்ச்சிக்குப் பிரதிநிதிகளேயொழிய தமிழ் இனத்தவரின் தனிப்பட்ட லட்சியங்களுகுப் பிரதிநிதிகளல்ல. ஏனெனில் தமிழ் நாட்டின் எல்லை, தமிழர்களின் அரசியல் பொருளாதார உரிமைகளைப் பற்றிய எந்தத் திடடத்தின் மீதும் அவர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களல்லர். ஏகாதிபத்யத்தின் ஆக்கிரமிப்பில் இந்தியா இருக்கும்வரை தனி இனத்தின் நலன்களைப் பற்றிப் பேசுவது பாவமென்று சொல்லப்பட்டது. எனவே தமிழ்நாட்டுப்பிரதிநிதிகள் தாங்கள் ஓர் தணி இனத்தின் பிரதிநிகள் என்ற

எண்ணத்துடன் சுயமாகச் சிந்தித்துச் சுதந்தரமாக நடந்துகொள்வார்கள் என்று எதிர்பார்க்கமுடியாது,"

இது, 'தமிழ் முரசு' ஆசிரியர் தோழர் ம.பொ. சிவஞானம் அவர்கள் கருத்து.

"தமிழ்நாட்டுப் பிரதி நிதிகளே! உங்கள் இனத்தின் உரிமையைப் பறிகொடுக்காதீர்கள்!" இதுவும் அவர்.

"இந்தியாவின் சுதந்திரத்தைப் பிரகடனம் செய்து ஏகாதிபத்யத்தை வெளியேற்றத் திட்டமிடுவதோடு இந்த சபையின் ஆயுளை முடித்துவிட முயலுங்கள்." அவர் உரைதான். நாமும் அதனை ஆதரிக்கிறோம், ஒருதிருத்தத்துடன் - சுதந்திர பிரகடனத்திலே, சர். கோபாலசாமி, சர். அல்லாடி, ராஜா பொப்லி, குமாராஜா, போன்ற கையொப்பங்களல்லவா இருக்கும் இன்றைய நிலையில், இதிலே இவர்களா கையொப்பமிட வேண்டியவர்கள்? சர்க்காரின் முறிச்சீட்டிலே கையொப்பமிட்டுக் கரையேறிய கரத்தைப் பிடித்துக் குலுக்கு கிறீர்களே, பெரியாரின் கரம், வேண்டாமா? - அந்தக்கரம், சுதந்திரம், சமத்துவம், சகோதரத்துவம் என்ற மூன்று மணி மொழிகளைப் பொறித்த கரமல்லவா, அவருடைய கையொப்பத்தைப் பெற வேண்டுமென்று நண்பர் சிவஞானம், தமது உரையில் ஒரு திருத்தப் செய்துகொள்ள வேண்டும்.

அந்தக்கரம், வெள்ளைக்காரன் "விஷ்ணு அம்சம்" என்று எழுதினதில்லை.

அந்தக்கரம், ராஜவிஸ்வாசப் பத்திரத்திலே ஒப்பம் எழுதின தில்லை.

அந்தக்கரம், சர்க்காரிடம் பெற்றுக்கொண்ட மாதச்சம்பளம் ரூபா 6000 என்று எழுதினதில்லை.

அந்தக்கரம், சுதேமன்னர்களுக்கு ஸ்ரீமுகம் அனுப்பின தில்லை. பட்டம் பதவிப்பத்திரங்களிலே அந்தக்கரம் பட்டதில்லை. அடிக்கடி, சிறைச்சாலை ரிஜிஸ்டரில்

பட்டகரம்! அது பிடிக்கவில்லை ஆனால் காலமெல்லாம், ஏகாதிபத்தின் காலைவருடிக் கொண்டிருந்த கரம், பிடிக்கிறதே! இதனை எப்படி நாங்கள் மறக்கமுடியும். சுபாஷின் போக்குக்கும், தமிழ்நாட்டுத் காங்கிரசை நடத்திச் செல்வோர், அவர்களை நடத்திச் செல்லும் வடநாட்டுத்தலைவர்கள் ஆகியோரின் போக்குக்கும் உள்ள மகத்தான, மனதை வாட்டக் கூடிய வித்யாசத்தைக் காண வேண்டுகிறோம். விடுதலைப்படை அமைத்த அந்த வீரன், விரும்பி வரவேற்றார், வெறும் காங்கிரஸ்காரர்களை மட்டுமல்ல, தமிழகத்திலிருந்து மலாய் சென்றுவாழ்ந்திருந்த, சகலரின் கரத்தையும் பிடித்துக் குலுக்கினார். எனவே தான் இன்று அனைவரின் உள்ளத்திலும் அவர் சூடிகொள்ள முடிந்தது. இங்கோ, காட்டிக் கொடுத்தவரின் கரத்தைக் குலுக்கவும், கனபாடிகளின் கரத்தைக் குலுக்கவும், மனம் இருந்ததே ஒழிய, நாட்டு மக்களின் நல்வாழ்வுக்காகப் போராடிய பெரியாரின் கரத்தைப் பிடித்து தோழமை கொள்ள மனமில்லை. ஆக, அந்த வகையிலே, அ.நி. சபை, தக்க வரை மதிக்கத்தவறிய குற்றத்துக்கு உள்ளாகிறது. அதைக் கூறுவில்லை, நண்பர். இன்று இன்னமும் நாளை கூறக்கூடும். இன்று மனதில் எண்ணத்தான் செய்வார். தமிழ் வளம்வளரும். அதிலே நமக்குத் தளராத நம்பிக்கை உண்டு.

நாம் குறிப்பிடும் அந்தக்காரணத்தைக் காட்டாவிட்டாலும் வேறு காரணத்தை, அதாவது இன்று தமிழ்நாட்டின் சார்பிலே, அ.நி. சபைக்குப் போயிருப்பவர்கள் உண்மைத் தமிழ்இனத்தின் பிரதிநிதிகள் அல்ல, என்று கூறி இன்றைய அ.நி. சபையின் ஆயுள் விரைவில் முடியவேண்டும் என்று உருக்கமாகக் கேட்டுக் கொள்கிறார் நண்பர் சிவஞானம்.

“உங்களுடன் சிறை புகுந்து சிப்பியேந்திச் சீரழிந்த ஒருவன் என்ற முறையில் சிரமேற்கரங் கூப்பி நான் செய்யும் வேண்டு கோள் நான் செய்யும் வேண்டுகோள் இது” என்று நண்பர் எழுதுகிறார்.”

அந்த வாசகம், காங்கிரஸ் தலைவர்களின் இதயத்தைத் தொடுகிறதா என்று பிறகு பார்ப்போம்.

அவர் சொன்னது அது. இதோ வேறோர் குழுவின் கொதிப்பைக் காணுங்கள்.

“அ.நி. சபைக்கு, இந்து மாகாணத்திலிருந்து 49 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப் பட்டனர். பிரிட்டிஷ் மந்திரிகள் திட்டத்தின்படி, பத்து இலட்சம் மக்களுக்கு ஒருபிரதிநிதி என்ற அளவு முறை கூறப்பட்டது. அதன்படிப் பார்த்தால், வன்னிகுல க்ஷத்திரியர்களாகிய எமக்கு. 5-ஸ்தானங்களாவது தரப்பட்டிருக்க வேண்டும். நாங்கள் வகுப்புவாரிப் பிரதி நிதித்வ மோகம் கொண்டவர்களல்ல. என்றாலும், சமுதாயத்தில் திருப்தியும் ஒற்றுமையும் ஏற்படவேண்டுமானால், அவரவர்க்குஉரிய ஸ்தனாம் தரப்பட வேண்டும் என்பதற்காகவே இதைக் கூறுகிறோம். பின்னணியிலுள்ள சமூகத்தாருக்குப் பாதுகாப்பளிக்கப் படும் என்று தேர்தலின் போது காங்கிரஸ் வெளியிட்ட அறிக்கையும், சின்னாட்களுக்கு முன்பு காங்கிரஸ் தலைவர்கள் வெளியிட்டஅறிக்கையும், பேச்சளவிலிராது, செயலளவில் கொண்டு வரப்பட்டு, எமக்கு நீதி வழங்கப் படவேண்டும் மென்று கேட்டுக் கொள்கிறோம்”

இப்படி எழுதினர், வன்னிகுல க்ஷத்திரிய மக்கள் சார்பில். அவர்கள் 63 இலட்சம் பேர் உள்ளனர்.
ஆசிரியருக்கு எழுதியகடிதமல்ல - ஆளவந்தார்களுக்கு எழுதிய மகஜர் இது. முதலமைச்சர் பிரகாசம், தமிழ்நாடு காங்கிரஸ் தலைவர், ஆச்சாரியார், ஆகமூவருக்கும் அனுப்பப் பட்டமகஜர்.

யாரோ ஊர்பேர் தெரியாதவர்கள் அனுப்பிய மகஜரல்ல - காங்கிரஸ் காட்டிய பாதையிலே நடந்தறியாதாரின் மகஜரல்ல - தியாகத் தீயிலே நின்றவர்களின் மகஜர், ஆட்சி மன்றத்திலே அங்கம் பெற்றவர்களின் மகஜர் ஆறு ஆடவர், ஒரு அம்மையார் ஆக ஏழு M.ஃ.ச்.க்கள் அனுப்பிய மகஜர் இது.

சேலம் ச்.சுப்பிரமணியம், M.L.A.

ங. கோவிந்தராஜ நாயகர் M.L.A..
ங. பொன்னுசாமி M.L.A.
M.கன்னியப்பன் M.L.A.
அஞ்சலை அம்மாள் M.L.A.
கு.பரமானந்தன் M.L.A.
ணீ.கீ. சீனுவாச படையாச்சி M.L.A.

இவ்வளவு M.L.A.க்கள் மகஜர் அனுப்பிச் சாதித்துக் கொள்ள முடியாத காரியத்தை பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தின் செல்லப் பிள்ளைகளாக இருந்த, சர். கோபாலசாமி போன்றார், மகஜர் போட்டல்ல, மனதால் நினைத்த மாத்திரத்திலே சாதித்துக் கொள்ள முடிந்தது!

சிறையிலே நண்பர் சிவஞானமும் சேலம் சுப்பிரமணிய மும்சிப் பியேந்திச் சிரமப்பட்டபோது சர். கோபாலசாமி எங்கே. என்ன செய்துகொண்டிருந்தார்? காஷ்மீரில் திவான் வேலை பார்த்துக் கொண்டிருந்தார்! இன்று அவரும், அவர் இனத்தவர் பலரும் அ.நி. சபையிலே இருக்கிறார்கள், இங்கே M.ஃ.ச்.க்கள் மகஜர் அனுப்புகிறார்கள், அதுவும் பலனளிக்கவில்லை.

ஆக, இந்த சபை, ஒன்றுபட்ட மனம், சமரசமணம், இவற்றினைக் கொண்டதுமல்ல. நீதிக்கும் நேர்மைக்கும் மதிப்பு, தியாகத்திற்கு மதிப்பு, மக்களின் உரிமை முறைக்கு இடம், தரப்பட்ட இடமுமல்ல. ஆகவே தான் இதன் ஆயுளை விரைவில் முடியுங்கள் என்கிறார் நண்பர். அவசியமான காரியம். ஆங்கில ஏகாதிபத்தியத்துக்கு இறுதி அறிவிப்பு தெரிவித்து விட்டுச் சபை கலையட்டும் - பிறகு நாம் துவக்கத்தில் கூறியபடி, நமக்குள் உள்ள உட்பகையை, வெளியார் தலையீடின்றி ஒழித்து, ஒன்று பட்டு, இனங்களின் இலட்சியங்களுக்குச் சிதைவு ஏற்படாத வகையில் அரசுத்திட்டம் அமைத்து, ஆங்கிலர் முன் நீட்டு

வோம். அப்போது அதனை எக்காரமேனும் கூறி, ஏகாதிபத்யம் மறுக்குமானால், நமது மக்களின் வீரத்தின் உச்சிநிலை எதுவென்பதைக் காட்டுவோம், என்ற

மனப்போக்கு கொள்ளவேண்டும். விடுதலைப் பாதை அதுதான்! விடுதலைப் போருக்குத் தேவையான கரத்தைத் தேடிப் பிடிக்க மறந்து, கனபாடிகளின் கரதøக் குலுக்கிக் கொண்டிருக்கும் காங்கிரஸ் தலைவர்கள் இருக்கட்டும் ஒருபுறம், காங்கிரசிலுள்ள வீர இளைஞர்களே! குலப்பாசம் கொண்டு குறும்பு செய்வோரின் கொட்டத்தை அடக்கும் திறமுடையோரே! உண்மை ஊழியரை மறக்காத உள்ளம் உடையோரே! அதோ அ.நி. சபை நடவடிக்கைகளைத் காண்கிறீர்! உழைப்பு அல்ல மாவதைக் காண்கிறீர்! உட்பகை மேலும் மேலும் வளரக் காண்கிறீர்! அவை, விந்தியத்தோடுநிற்கட்டும். நருமதைக்கு இப்பாலுள்ள நாம் ஒன்றுபடுவோம் வாரீர். நம்மில், தியாகத்திற்குத் தயாராக உள்ள, தமிழ்ப்பண்பினர் எல்லாம்' விடுதலை விரும்பிகள் எல்லாம், ஏகாதிபத்ய எதிர்ப்புணர்ச்சியுடன், சமூக அநீதிகளையும் வெட்டி வீழ்த்த வேண்டுமென்ற வீரஉணர்ச்சி கொண்டோரெல்லாம், ஒன்று கூடுவோம் வாரீர்! வெற்றிபெற உழைப்போம் சேரீர்! என்று, அன்புடன் மட்டுமல்ல, நம்பிக்கையுடன், திராவிடர் கழகம் அழைக்கிறது? அந்தக்கழகம், சர், சீமான், ஜெமீன் தாரன், பதவிப்பிரியன், வர்ணாஸ்ரமி. ஆகியோரின் கரத்தில் அல்ல - தியாகத் தழும்பேறிய பெரியாரின் கரத்தில் இருக்கிறது. அந்தக்கரமும், காங்கிரசில் தமிழ் இன உணர்ச்சி கொண்டு, வடநாட்டாரின் பொருளாதார ஏகாதிபத்யத்தில் நாம் சிக்கக் கூடாது என்று எண்ணும் வீரர்களின் கரமும் ஒன்றுபட்டால், வெற்றி உண்டு, அந்த வெற்றியிலே, நாட்டுக்கு வாழ்வு உண்டு அந்த வாழ்விலே இனிமை தவழும், சமரசம் குலுங்கும் சமதர்மக்கனி இருக்கும். ஒன்று சேரப்பணியாற்றுங்கள். வேலை நிறைய இருக்கிறது. விடுதலைபெறும் வேலையே கஷ்டமானது, ஆனால் அதை ஒட்டி, வாழ்வு அமைக்கவேண்டிய மாபெரும் வேலையும் இருக்கிறது, இந்த மகத்தான காரியத்தை, சர். கோபாலசாமிகளைக் கூட்டாளியாக்கிக்கொண்டு, நடத்த முடியாது, பெரியாரின் பெரும்படையும், காங்கிரசிலே கனபாடிக்கோ, காட்டுக்கால முறைக்கோ கட்டுப்படாத வீரரும் ஒன்று கூடியே சாதிக்கமுடியும். அந்தக் கூட்டுக் கரம், வேண்டும்,

நம் நாடு விடுதலைபெற்ற நல்வாழ்வு பெற அதற்கு டில்லி அல்ல, இங்கேயே கூடுவோம். அதுவே நாம் காண வேண்டிய அரசியல் நிர்ணய சபை.

(திராவிட நாடு - 22-12-1946)

# திருநாள்! - 2

பொங்கற் புதுநாள், தமிழர் திருநாள்! திருந்திய தமிழரின் திருநாள்! தீதெலாம் களைந்தெரிந்து, நன்மை பயிரிட்டு நற்பயனெனும் அறுவடையைக் குவித்து, குவித்ததைப் பதுக்கிவைக்காமல், குறித்ததைவிட அதிகம்பெற்றுக் கள்ளத்தனத்தால் காசாக்காமல், வேண்டுவோர்க் கீந்திடவேண்டும் என்ற நன்னெறியுடன் மட்டுமல்ல, உழைப்பவர் வாழ்க்கைக்கு உரியதை உடையவர் எனும் புதுமுறை அமைக்கவேண்டும் என்று உறுதிகொண்ட தமிழரின் திருநாள்! அறுவடையின் உவகைதரும் உரை, மனைகள் பலவற்றிலே கேட்கப்பட்டு, இன்முக மாதரும் எழில்முகச் சிறாரும், களித்திடும் ஆடவரும், அனைவரும் அகமகிழ்த்திடும் பொங்கற் புதுநாளன்று இன்பம் பெற்று, இன்பம் இன்று மனத்திலே பொங்குதல் போல் என்றும் தங்கி, வாழ்வே திருநாளாகத் திகழ்ந்திட வேண்டும் என்ற அன்புரை கூறி, "திராவிட நாடு" தமிழரின் இல்லங்களிலே, உவகையுடனும் உரிமையுடனும் உடன் பிறந்தான் என்ற முறையில் வருகிறது - வாழ்த்தும் வணக்கமும் தருகிறது. அன்பும் ஆதரவும் வழங்கப்பெறும் என்ற நம்பிக்கையால் பூரிக்கிறது.

வீணரின் விழாக்கள் பல உண்டு-மதி தேய்ந்ததையும், சூதுச் சிந்தையினரின் வலைதனிலே தமிழர் வீழ்ந்தனர் என்பதனையும் காட்டிடும் வகையிலே விழாக்கள் பல உண்டு - திங்கள் தோறும் உண்டு. திருநாள்கள் என அவற்றைத் 'திராவிட நாடு' கருதுவதில்லை. தமிழரின் வாழ்வின் வளத்தைக் கருக்கிட எண்ணிய, தீயர் தீமூட்டிடும் கெடுநாட்கள் அவை என்று எச்சரித்திடுவதைப் பணி எனக்கொண்டதாகும், நம் ஏடு! நாடு சிறக்க, நற்கருத்துகள் பரவப் பயன்படும் முறையிலேயல்ல; கேடுசூழ, கெடுமதி வெல்ல உழைத்தோர் உழல, எத்தர்வாழ, வகுக்கப்பட்ட வழிகளிலே, பண்டிகை ஒன்று என்று கூறுவோம்.

பொங்கற் புதுநாளை நாம் அத்தகைய 'பண்டிகை' என்றல்ல, படையலுக்காக அல்ல, மாடு விரட்டு அல்ல, அறுபடை விழாவாகக் கருதி, உழவு, நாட்டு மக்கள்

உள்ளம், ஆகிய துறைகளிலே சிந்தனையைச் செலுத்துவதற்கு இதனைக் கருதவேண்டும். பயன்படுத்த வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம். வைதிகர்கள், இந்தத் திருநாளையே போகிப் பண்டிகை-சங்கராந்திப் பண்டிகை- என்ற புராணப் பெயரிட்டழைத்துத் தேவையற்றதும். தீங்கு தருவதுமான கருத்தினையும் செயலினையும் தூவிடுவர். ஏமாறாத தமிழர் மட்டுமே, இதனைத் தமிழரின் பெருவாழ்வுக்கான முறை காணக் கூடிக் கலந்து பேசி, குறைமதியினைக் களைந்திட்டு உழைத்து உரு பயன்பெறுவதற்கான திட்டமிடும் நான்னாளாகக் கொள்வர். இம்முறையிலே, சில ஆண்டுகளாகப் பல்வேறு இடங்களிலே தமிழர் திருநாள் கொண்டாடப்பட்டு வருகிறது-

புது முறையின் முரசொலி அதுவென்போம். மணியோசையும், ஐயருக்குக் காணிக்கை தருவதற்காகக் கொட்டும் காசு ஓசையும், வேட்டும், வெறிக்கூச்சலும் விழாவொலியாக இருந்திடாமல் தமிழரின் வாழ்வு, தமிழர் நாட்டின் நிலைமை, திருத்தும் முறை, ஒன்றுபடும் மார்க்கம் ஆகியவைபற்றி அறிஞர்கள் கூற, அனைவரும் கேட்டு அகமகிழ்வது காண்கிறோம்.

அம்முறையிலேயே இதழை நாம் தொகுத்துமிருக்கிறோம்.

சங்கராந்தி புருடனின் பெருமைகளைக் கூற அல்ல. போகிப் பண்டிகையும் யோகிகளும் என்ற புளுகுரைகளைத் தீட்ட அல்ல - சூரிய பகவானின் தேரிலே பூட்டப்பட்டுள்ள குதிரைகளின் வர்ணம் வயது பற்றி ‘ஆராய’ அல்ல-நாட்டு வளம்-நிலைமை-உழைப்போர்-உளம் உடைந்தோர்-உண்டு களிப்போர்-ஆகியவற்றினை விளக்க ஒரு வாய்ப்பாக்கினோம் இந்த விழாவினை. பொங்கற் புதுநாளன்று தங்கும் இன்பம் மங்காது மறையாது இருப்பதுடன் எங்கும் பரவுவதற்கான மார்க்கத்தை மக்கள் கண்டறியவேண்டும் என்பது நமது ஆவல். அந்தத் துறையிலே மக்களின் சிந்தனையைச்

செலுத்துவதற்கு, இதழ் பயன்படுத்துமானால், நாம் பெருமகிழ் வடைவோம்.

உழவரின் பெருமைக்குரிய நன்னாள் இத்திருநாள். எனவே, இந்நாளன்று அவர்தம் நிலையினையும், உழவுத் தொழிலின் நிலையினையும் ஊரார் அறிந்திட வேண்டுவது அவசியம். அதோ உள்ள கிழங்கும் கீரையும், மஞ்சளும் கரும்பும், செந்நெலும், பாகும், அவரையும் அவன் அளித்த அரும்பொருள்கள்! அவன் பாடுபட்டுக் குவித்த செந்நெல், மாளிகைகளில், மந்தகாச முகவதிகளின் மேனிக்கு மெருகாக அமைகிறது - பிரபுவின் மோட்டாராகிறது - வைரமாக ஜொலிக்கிறது - வழக்கு மன்றத்திலேறி வக்கீல்களைக் கொழுக்க வைக்கிறது - வழக்கு மன்றத்திலேறி வக்கீல்களைக் கொழுக்க வைக்கிறது - ஏரடிக்கும் சிறு கோல்தரும் பெரிய செல்வத்தின் துணைகொண்டு, நாட்டிலே, போக போக்கியங்கள் மலிகின்றன. அவன், இவ்வளவும் தந்தவன், தலைமுறை தலைமுறையாகத் தந்து கொண்டே வருகிறவன், அதோ மண் குடிசையிலேதான் இருக்கிறான். அவனுக்கும் இன்று பொங்கல்தான்! ஆனால் அது, மண் கலயத்தோடு, நின்றுவிடுகிறது- மகிழ்ச்சி அவனுக்கு உண்டு. ஆனால், மாளிகைகளிலே காணப்படும் மகிழ்ச்சி அல்ல அது. உழைத்தவன் அதன் பயனைப் பெறாதிருக்கிறான் - அதனை அறியாமலுங்கூடப் பெரும் பகுதியினர் உளர். அந்த நிலை நல்லதல்ல - நல்லதைத் தராது - தமிழர் திருநாளன்று இதனை மனத்திலே பதியச் செய்து கொள்ள வேண்டும் உழவன் உழைக்கிறான்- உழைக்காதவன் பிழைக்கிறான் - அரிமா பட்டினி கிடக்கிறது; நரி கொழுக்கிறது!! நாடு வளம்பெற, அது அல்ல, கையாளப்பட வேண்டிய அறம்! முறை மாறியாகவேண்டும். இன்பம் பொங்கும் இந்நாள் இதனை எண்ணிப் பார்க்க வேண்டுகிறோம். தூங்கும் கலப்பைத் தொழிலாளர்கள் காலமெல்லாம் பாடுபட்டுக் கையே தலையணையாய், தரையே பஞ்சணையாய், வானமே போர்வையாகக் கொண்டு வதைகிறார்கள். வறுமை, அறியாமை, பிணி, கடன் முதலிய எண்ணற்ற

தளைகளால் கட்டுண்டு கட்டுண்டு கிடைக்கிறார்கள். அவர்களில், யாரும் முழு வாழ்வு வாழ்வதில்லை. அப்படிப்பட்டவர்களைத்தான் உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர் என்று புகழ்ந்து பாடி இருக்கிறார்கள். புகழ்ந்து ஏமாற்றி இருக்கிறார்கள் என்று சொல்வது பொருத்தமாக இருக்கும்!

இந்தியா கிராமங்களே பெருவாரியாக உள்ள இடம்! இந்தியாவின் பண்பாடு தெரியவேண்டுமானால், கிராமத்தைக் காணவேண்டும். இந்தியாவின் இருதயம் கிராமத்திலேதான் இருக்கிறது-என்றெல்லாம் பேசுகிறார்கள். என்ன காண்கிறோம் கிராமங்களில்? பரம்பரை நிலச்சுவான்தார்களின் அட்டகாசத்தை! பாடுபடும் விவசாயியின் அவதியை!!

இந்த முறை ஒழிக்கப்பட வேண்டும். இல்லையானால் விடுதலை உணர்ச்சி வெற்றி பெறாது. நம் நாட்டில் பெரும்பாலும் கிராமங்கள் உள்ளன-உண்மை-அங்குள்ள இந்த முதலாளித்துவ முறை சரிந்தாலொழிய, புது வாழ்வு எப்படி இருக்க முடியும் விடுதலை பெற்ற இந்தியாவிலே! விடுதலை என்றால் என்ன பொருள்? பிரபுவும் புரோகிதனும் பிடித்தழுத்த, பாமரன், அடிமையாய், ஏழையாய், மூட நம்பிக்கைகளின் பிண்டமாய் வாழ்வதா? அது விடுதலை ஆகாது! மேனாடுகளிலே, சகலவிதமான நாகரிக வளர்ச்சியும், இந்த நிலச்சுவான்தாரி முறை ஒழிந்த பிறகே சாரமாயிற்று. இங்கோ, அந்த ஆரம்ப வேலையே நடைபெற வில்லை. இதற்கான முதல் வேலைதான் ஜமீன் ஒழிப்பு என்று கூறவேண்டும் - முடிவானதல்ல. ஜமீன் முறை புண்ணின்மேலே காணப்படும், உலர்ந்த சதைப்பொறுக்கு! அதைக் கிள்ளி எடுத்தானதும், புண் ஆறிவிட்டது என்று அர்த்தமல்ல! புண் தெரியும் கண்ணுக்கு. அதற்குத் தக்க மருந்திட வேண்டும். அதுவும் போதாது, இரத்த சுத்தியும் நடந்தாக வேண்டும். முறைகள் மாறவேண்டும். புதிய திட்டங்கள் வேண்டும்.

பிரிட்டனில், வியாபார மூலம், தொழிற்சாலை மூலம், பலர் புதுப் பணக்காரராயினர், இவர்களின் மீது, பரம்பரைப்

பணக்காரராக, நிலச் சுவான்தாரராக, பண்ணைப் பிரபுவாக இருந்தவர்கள், போர் தொடுத்தனர். "ஆலையிலே, ஏனைய மக்களை ஆறணா கூலிக்கு வேலை வாங்கி, அவர்களின் இரத்தத்தை உறுஞ்சி இவன் பணப்பேயாகிறான். இவனுடைய போக்கைத் தடுக்க வேண்டும். ஏழையின் கண்ணீரைத் துடைக்கவேண்டும். ஆலைகளிலே, வேலை நேரம், கூலி விகிதம் ஆகியவற்றை, நிர்ணயிக்க வேண்டும். தொழிற்சாலை மூலம் கொள்ளை கொள்ளையாகச் சம்பாதித்துக் கோடீஸ்வரர் ஆகும் இவர்களிடம் சர்க்கார் தாராளமாக, வரி வசூலிக்க வேண்டும்" என்று பிரபு பேசினார். பிரபுவுக்கும் பண்ணையாருக்கும் தான் பாராளுமன்றத்திலே செல்வாக்கு!

"அதுசரி! ஆலையிலே மட்டுந்தானா இந்த முறை தேவை? உமது ஜமீனிலே என்ன நிலை? விவசாயியின் கோழி மேய்கிற குப்பைமேட்டுக்குக் கூட வரி கேட்கிற புண்யபுருஷனல்லவா நீ? காட்டிலே உள்ள கள்ளிச் சுள்ளியை ஒடித்தால், ஒடித்தவனின் கையை ஒடித்துவிடும் கருணாமூர்த்தி யல்லவா! சேற்றிலே மீன் பிடித்தால் செலுத்தடா கட்டணம் என்று கேட்பவனல்லவா செல்லாயியின் முகவெட்டு கொஞ்சம் நன்றாக இருந்தால், உன்சேஷ்டைக்கு அவளைக் கருவியாக்க எண்ணும் காமச் செருக்குடையோனல்லவா நீ? உன் ஆதிக்கத்தை மட்டும் அப்படியே விட்டுவைக்க வேண்டுமோ?" என்று ஆலைக்காரன் கேட்டான்.

பழைய பரம்பரைப் பணக்காரனுக்கும் புதிய பணக்காரனுக்கும் இடையே வந்த போரின் மூலம், பாட்டாளிக்குக் கொஞ்சம் வசதி கிடைத்தது பண்ணையிலுஞ் சரி, ஆலையிலுஞ் சரி!

இங்கோ, இந்த இருசாராரும், ஒருசேர நிற்கிறார்கள். அரசியல் கொடி பேதப்பட்டாலும் கட்சிச்சட்டை வேறாக இருந்தாலும், தங்கள் ஆதிக்கத்துக்குச் சம்பந்தப்பட்ட விஷயம் என்று வருகிறபோது, கோடி, புதிதாகி விடுகிறது. பணக்கொடி காட்டுகிறார்கள் இருவகை முதலாளிகளும்.

காங்கிரஸ் கொடிகாட்டிப் பல பண்ணைகள், ஆதிக்கத்தை இன்று நிலைக்கவைத்துக் கொண்டுள்ளன. ஆலைமீது அதுபோலவே கதர்க்கொடி ஏற்றிவிட்டு, கள்ளமார்க்கட் செய்யும் கனதனவான்களும் உள்ளனர்.

பிரிட்டனிலே, இருவகைப் பணக்காரர்களுக்கும் இடையே மூண்ட போட்டியினால், பாட்டாளிக்குச் சில உரிமைகள் கிடைத்தன என்றோம். இங்கு அதற்கு நேர்மாறாக, இருவகையினரும் 'தேசியம்' பேசிக்கொண்டு 'கூட்டுப்படை' அமைத்து, எழையின் அணிவகுப்பைச் சிதறடிக்கிறார்கள். இந்தப் பயங்கர நிலையிலிருந்து, ஏழைகளைத் தப்பவைக்க வேண்டுமானால், புதிய திட்டம் தேவை என்பதை வலியுறுத்த வேண்டும்.

பெரியார் இராமசாமியின் பெரும்படைதான் தமிழகத்திலே முதன் முறையாக ஜமீன்தார் அல்லாதார் மாநாடு லேவாதேவிக்காரர் அல்லாதார் மாநாடுபோன்ற, கொள்கைத் திட்ட, மாநாடுகளை நடத்தின. மீண்டும், திராவிடர் கழகமேதான், இந்தப் புதிய முறைக்கும் போர் தொடுத்தாக வேண்டும்.

1. ஜமீன்முறை ஒழியவேண்டும்.

2. பண்ணைகள் கலைக்கப்பட வேண்டும்.

3. உழுபவனுக்கு நிலம் தரப்பட வேண்டும்.

4. உடனடியாக விவசாய வருமானவரி விதிக்க வேண்டும்.

5. குடும்பத்தேவைக்கு மட்டும் போதுமான நிலம் வைத்துக் கொண்டிருப்பவர்களுக்கு, நிலவரி கூடாது.

6. தரிசு நிலத்தை, உழவர்களுக்குப் பங்கிட்டுத் தரவேண்டும்.

7. அதனைத் திருத்த, வளம்செய்ய, நீண்ட காலக் கடனைச் சர்க்கார் தரவேண்டும்.

8. கூட்டுப் பண்ணைகளை நடத்திப் பார்க்க வேண்டும்.

9. கிராமத்திலே வசதிகள், நகரவாசிகளுக்கு இருப்பது போலவே செய்ய வேண்டும்.

10. கிராமத்திலே வேரூன்றி உள்ள நிலப்பிரபுத்துவத்துக்கு முடிவுகாலம் கட்ட வேண்டும்.

இவையும் தேவையான இவற்றை ஒட்டிய வேறு பலவும் திராவிட கழகத்தின் திட்டம். இவை, பெரியாரின், வேலைத்திட்டத்தினை விளங்கிக் கொண்டவர்கள் அறிவர்.

திராவிடர் கழகம், திராவிடர்களாகிய உழவர்களை, அவர்கள் தம்மைத் திராவிடர் என்று உணர்ந்தாலும் உணராவிட்டாலும், பாதுகாத்து, முன்னேற்றுவதில் ஈடுபட்டே தீரும். திராவிட நாடு திராவிடருக்குத்தான்-ஆனால், தேய்ந்து போகும் உழவரும், தேயவைக்கும் நிலப்பிரபுவும் இன்றுள்ளது போல் இருப்பர் என்றல்ல பொருள். உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார் மற்றெல்லாம் தொழுதுண்டு பின் செல்பவர் என்ற முறையில், நாட்டைத் திருத்தி அமைப்போம். அதுதான் நமது அரசு நல் அரசு என்பதைக் காட்டுவதாகும். தமிழர் திருநாள், இந்தத் திட்டத்தை நாம் கொள்வதற்குப் பயன்பட வேண்டும். பிறகு, வாழ்வே திருநாள்; அட்டியில்லை.

(திராவிட நாடு பொங்கல் மலர் – 1947)

# ஆகஸ்டு பதினைந்து!

ஆகஸ்டு பதினைந்தாம் தேதி, இந்திய சுதந்திர தினம். புதிய இந்திய சர்க்காரின் அமைப்பு நாள்.

ஆகஸ்டு 15ந் தேதி, பாகிஸ்தான் வெற்றி நாள். புதிய பாகிஸ்தான் சர்க்கார் அமைப்பு நாள்.

ஆகஸ்டு 15ந் தேதி, பிரிட்டிஷ் ஆட்சி, இந்தியாவிலும் பாகிஸ்தானிலும் ஒழியும் நாள்.

உலகிலே, பேசப்படும் நாள்.

வரலாற்றிலே எந்நாள் இடம் பெறுகிறது.

அந்த நாளைத் திருநாளாகக் கொண்டாடுவதென, இந்திய சர்க்காரும், பாகிஸ்தான் சர்க்காரும், தீர்மானித்துள்ளனர்.

அந்நாளிலே, எந்தத் துணைக் கண்டத்திலே 200 ஆண்டுகட்கு மேலாகப் பறந்து கொண்டிருந்த பிரிட்டிஷ் ஏகாதிபத்யக் கொடி, பாகிஸ்தான், இந்தியா, ஆகிய இரு அரச வட்டாரங்களிலிருந்தும், கீழே இறங்குவதுடன், இரு இடங்களிலும் சுதந்திரக் கொடிகள் பறக்கவிடப்படுகின்றன.
இந்திய பூபாகத்திலே, பிரிட்டிஷ் ஆட்சி கூடாது, சுயாட்சியும் சுயநிர்ணயமும் வேண்டும் என்பதற்காக, முறையே காங்கிரசும், முஸ்லீம் லீகும், பணிபுரிந்து வந்தன - ஆகஸ்டு 15-ந் தேதி பிரிட்டிஷ் ஆட்சி நீங்குவதால், அந்நாள் வெற்றி நாளாகக் கொண்டாடப்படுகிறது, இரு கட்சிகளால் மட்டுமல்ல - இரு சர்க்காராலும்.

இரு கட்சிகளுக்கும், வெற்றியிலே சிறிதளவு களங்கமும், அதன் பயனாக மனவேதனையும் இருக்கிறது.

காங்கிரஸ் கோரிவந்த, பிடிவாதமாக ஆதரித்துவந்த ஏக இந்தியக் கொள்கை வெற்றி பெறவில்லை. முஸ்லீம்கள் பெருவாரியாக உள்ள பகுதிகளை, முஸ்லீம் ஆட்சியிலே ஒப்புவிக்க, காங்கிரஸ் இணங்கிவிட்டது. அதன் பயனாக,

காங்கிரஸ் கொண்டிருந்த இலட்சியம் முழுவதும் வெற்றி பெறவில்லை. களங்கம் இருக்கிறது.

அதுபோலவே, முஸ்லீம் லீக், பிரிவுபடாத பாஞ்சாலம், துண்டாடப்படாத வங்காளம் இரண்டடையும், தான் விரும்பிற்று - கேட்டு வந்தது - பாகிஸ்தானில், முழுப் பாஞ்சாலம் முழு வங்காளமும் இருக்க வேண்டுமென்று தான் தீர்மானித்தது, கேட்டு, கிளர்ச்சி ்ச்யது வந்தது. கோரியது, முழுவதும், லீகுக்குக் கிடைக்கவில்லை. பாஞ்சாலமும், வங்கமும், சிதைக்கப்பட்டு, பாகிஸ்தானில், ஒரு பகுதி மட்டுமே இணைக்கக்பட்டது. எனவே, லீக்பெற்ற வெற்றியிலும் களங்கம் இருக்கிறது.

எனினும், இரு கட்சிகளும், வெற்றி விழாவாக ஆகஸ்ட் 15ந் தேதியை வெற்றி நாளாக, புதிய சர்க்கார் அமைப்புத் தினமாகக் கொண்டாடுகின்றன.

யாரார் கோரியது எந்தெந்த அளவு கிடைத்தது என்பது ஒருபுறமிருக்க, மொத்தத்திலே, பிரிட்டிஷ் ஆட்சி வாபசாகிறது என்ற அளவில், விடுதலை விழாவாக ஆகஸ்ட்டு 15 கொண்டாடப்படுகிறது.

ஆகஸ்டு 15ந் தேதி, பிரிட்டிஷ் ஆட்சியின் முடிவு நாள் புதிய சர்க்காரின் தொடக்க நாள்.

புதிய சர்க்கார், தத்தமது ஆட்சி வட்டாரங்களிலே, நல்லாட்சி நடத்தியாக வேண்டுமென்று வலியுத்த அதற்காகக் கிளர்ச்சி செய்ய, போராட யாருக்கும் உரிமை உண்டு.

பிரிட்டிஷ் ஆட்சி, அன்றைய தினம், நீங்குகிறது, என்பது மக்களுககுள்ள எந்த உரிமையை ஆதிகப்படுத்துகிறது.

அன்னிய ஆட்சி ஒழிந்து, புதுச்சுதந்திர ஆட்சிகள் ஆரம்பமாகும் இதே ôள், அன்னிய ஆட்சியின் விளைவுகளாக இருந்துவரும் தொல்லைகளையும், அல்லல்களையும், நீக்கி, மக்களுக்கு நலன் ஏற்படும்படியான ஆட்சி நடத்தும்படி, கேட்கும்

உரிமையும், பலமும், வசதியும், மக்களுக்குத் தானாகவே பிறக்கிறது.

அன்னிய ஆட்சியுடன் போரிட்டு விடுதலை பெறுவதற்காக முயற்சி எடுத்துக் கொள்ளபடுவதால் வேறுபல, முக்கியமான, சமூக, பொருளாதார, அறிவுத் துறைகளிலே, மக்களுக்கு ஏற்ற காரியங்களைச் செய்வதற்கு, நேரமில்லை, நினைப்பில்லை, வசதியில்லை, வழி இல்லை என்று கூறி, பிரச்சனைகளுக்கெல்லாம், வாய்தா போட்டு வந்த காலம் ஆகஸ்டு 15ந் தேதியோடு முடிவடைகிறது. அன்று முதல், இங்கு மக்களின் நலன், நாட்டுப் பாதுகாப்பு ஆகியவைகட்குப் பொறுப்பு, இங்குள்ளவர்களிடம் வந்து சேருகிறது. இகவே, இங்குள்ளவர்களிடம் இம்முறையில் நடந்து நல்லாட்சி நிறுவச் செய்யவும், அதற்கு அவர்கள் செவி சாய்க்காமலோ, தகுதியற்றுமோ இருப்பார்களானால், குடியரசு முறைப்படி, அவர்களை ஆளும் இடத்திலிருந்து விரட்டவும், மக்களுக்கு உரிமையும், வழியும் பிறக்கிறது.

திராவிடர் கழகத்தாராகிய நாம், அன்னிய ஆட்சியாகிய ஆங்கில ஆட்சி கூடாதென்பதை வலியுறுத்தி வருகிறோம்.

இந்தி எதிர்ப்புக் கிளர்சசி கடுமையாக நடைபெற்ற நேரத்திலே, சென்னையில், நடைபெற்ற மாகாண (ஜஸ்டிஸ்) மாநாட்டில், பூரண சுயேச்சைத் தீர்மானத்தை நிறைவேற்றி இருக்கிறோம்.

பல வருஷ காலமாகவே, அன்னிய ஆட்சி நீங்கத்தான் வேண்டும், அதான் எமது விருப்பம், ஆனால், ஆங்கில ஆட்சியை ஒழித்துவிட்டு அந்த இடத்திலே ஆரிய ஆட்சியை ஏற்படுத்தவே காங்கிரஸ் முயலுகிறது. அதற்காகவே நாங்கள் காங்கிரசை எதிர்க்கிறோம் - காங்கிரஸ் கையாளும் முறைகள் சரியானவை அல்ல, என்று படுவதால், நாங்கள் அம்முறைகளை ஆதரிக்கவில்லை. நாங்கள் காங்கிரசை

எதிர்க்கிறதாலேயே சுயராஜ்யத்துக்கு விரோதிகளல்ல, அன்னிய ஆட்சியை விரும்புபவர்கள் அல்ல, என்பதை ஆயிரமாயிரம் மேடைகளிலே பேசி இருக்கிறோம்.

“வெள்ளைக்காரனை நீ நாளைக்குப் போ என்று சொன்னால், நாங்கள் இன்றே போ என்று கூறுகிறோம்” - என்று பேசி இருக்கிறோம்.

வெள்ளைக்காரனே, ஆரியத்துக்கு ஆபயம் ஆளித்தான் என்று விளக்கி இருக்கிறோம்.

வெள்ளைக்காரனைக் கண்டிக்கவும், வெறுக்கவும், விரட்டவும், ஆரியர்களுக்கோ, காங்கிரஸ்காரர்களுக்கோ இருக்கும் உரிமையை விட, ஏங்களுக்கே ஆதிக உரிமை இருக்கிறது என்று கூறி வந்திருக்கிறோம்.

கடந்த ஜெர்மன் போர் மூண்டபோது, யுத்தத்திற்கான உதவிகளை நாம் செய்தபோதும், எந்தச் சண்டைக்குப் பிறகு, நிச்சயமாக வெள்ளைக்கார ஆட்சி நீங்கி, சுயாட்சி கிடைக்கும் என்று மக்களுக்கு உறுதி கூறி வந்தோம்.

உலகச் சூழ்நிலை மாறுதலை எடுத்துக்காட்டி, இனி, பிரிட்டிஸ் ஏகாதிபத்யத்துக்கு இங்கு இளவேண்டிய அவசியமோ, அதனால் இலாபமோ இல்லை இகையால், அந்த ஆட்சி விலகிவிடும் என்றும், மக்களுக்கு விளக்கி வந்திருக்கிறோம்.

வெள்ளைக்கார ஆட்சி, எந்நாட்டிலே மனுதர்மத்தின்படி நடக்கும் ஆட்சியாகவே இருந்து வந்திருக்கிறதென்றும், நியாயமான நமது குறைகளைக் கேட்டுக் களையவோ நீதி வழங்கவோ முன்வந்ததிலலை என்றும், எந்நாட்டிலே, ஆரியர்களுக்கே சகல வசதிகளும் கிடைக்கும்படியும், தனக்குப் பிறகு காங்கிரசே, வார்சு இகும்படியும் செய்து வந்திருக்கிறது என்றும் எடுத்துக்காட்டி, வெள்ளை ஆட்சியைக் கண்டித்திருக்கிறோம்.

இக, பிரிட்டிஷ் ஏகாதிபத்ய ஆட்சி ஒழிய வேண்டும், ஒழிக்கப் பாடுபடுவோம், பிரிட்டிஷ் ஆட்சி நமக்குக் கேடு

பல செய்திருக்கிறது. எனவே நம்முடைய வெறுப்புக்கும் கண்டத்துக்கும் ஆளாக வேண்டியதேயாகும், என்பதைப் பன்முறை எடுத்துச் சொல்லி, நம்மை மற்றக் கட்சியினர் ஏகாதிபத்ய தாசர்கள் என்று கூறியது, வீண் பழி என்பதை எடுத்துக்காட்டி வந்ததுடன், போருக்குப் பிறகு, வந்த ஆட்சி தானாகவே விலகும் என்று முன் கூட்டியே கூறிய நாம், அந்த ஆட்சி விலகும் நாளாகிய ஆகஸ்ட் 15ந் தேதியை, மகிழ்ச்சி தரக்கூடிய நாளாகவே, கருத வேண்டும். அதுவே இதுவரை நாம் கொண்ட போக்குக்கும் நமது கொள்கைக்கும் ஏற்றது.

ஒழிந்த ஆட்சி, உண்மையில் ஒளிந்து கொண்டிருக்கிறது என்பதையோ அந்த ஆட்சி இருந்த இடத்தில் வடநாட்டு இட்ச அமருகிறது என்பதையோ, நாம் கூறாமலிருக்க வேண்டியதில்லை. ஆனால் அதற்காக, வெள்ளைக்கார ஆட்சி நீங்கியதனால், ஏற்படும், மகிழ்ச்சியிலும், பெருமையிலும், நமக்கு உரிய பங்கை நாம் இழக்க வேண்டும் என்பதில்லை. ஆகஸ்ட் 15ந் தேதி, அன்னிய ஆட்சி ஒழிந்த நாள், நம்மை நலிய வைத்த வெள்ளையர் ஆட்சி நீங்கிய நாள், ஏகாதிபத்யப் பிடி ஒழிந்த நாள் (மிச்சமிருப்பது பனியா ஏகாதிபத்யம்) என்பதிலே, நமக்கு மகிழ்ச்சியும் பெருமையும் கொள்ளக் காரணமும் அவசியமும் இருக்கிறது.

எந்த ஆட்சியை எதிர்த்து நமது கழகம் பேசியிருக்கிறது என்பது மட்டுமல்ல, இன்று நமது கழகத்துக்குத் தலைவராக உள்ள பெரியார், காங்கிரசில் தலைமை வசிகத்து, எந்த ஆட்சியை எதிர்த்து, கஷ்ட நஷ்டமடைந்திருக்கிறார். இகவே, விடுதலை விழாக் கொண்டாடப் பாத்யதை கொண்டவர்களிலே, அவர் மிக முக்யமானவர் - ஆவருடைய கட்சியினராகிய நமக்கு, உரிமை இருக்கிறது.

அந்த நாள், ஆரம்பமாகிற ஆட்சி, வடநாட்டவரிடம் சிச்கியிருக்கும் உண்மையை, நாம் உணரும் அளவுக்கு, மக்கள் உணர்ரவில்லை. அந்த நிலைமை ஏற்பட்டதற்குக் காரணம், விடுதலைப்போர் நடத்திய யந்திரத்தின் அருகே,

வடநாட்டார் இருந்ததுதான். ஆனால், வடநாட்டவரிடம் ஆட்சி இருக்கும் நிலைமை, நமக்கு திகைப்பையோ, நம்பிக்கையற்ற நிலைமையையோ உண்டாக்க வேண்டியதில்லை. பிரிட்டிஷ் ஏகாதிபத்ய ஆட்சியை ஒழிக்க முடிந்தது போலவே, தென்னாட்டைச் சுரண்டும் வேலையையே, வடநாட்டவர், ஆட்சிப்பீடத்தைப் பிடித்துக் கொண்டு செய்கின்றனர் என்பதை மக்கள் போதுமான அளவிலும், தக்கமுறையிலும் உணரும்படி செய்தால், பிரிட்டிஷ் ஏகாதிபத்ய ஆட்சியைப் போலவே, சுரண்டும் எந்த ஆட்சியையும் நம்மால் ஒழிக்க முடியம்.

எந்த உறுதியை, பிரிட்டிஷ் ஏகாதிபத்ய ஆட்சி ஒழியும் ஆகஸ்டு 15ந் தேதி நாம் பெற முடியும்.

காங்கிரசார், அந்த நாளை விழாவாகக் கருதி, வெற்றி பெற்ற களிப்புப் பெறுவதுடன் நிற்பர் - நாமோ, அந்நாள், வெள்ளை ஏகாதிபத்யம் சென்ற வழியேதான், சுரண்டும் எந்த ஆட்சியும் சென்று தீரும் என்ற உண்மையை உணர்ரச் செய்து, உறுதி பிறக்கச் செய்யும் நாளாகக் கொள்வோம்.

ஆகஸ்டு 15ந் தேதி, ஆறுபது வருஷப் பயிரின் ஆறுவடை என்றும், பட்ட கஷ்டங்கள், சிந்திய இரத்தம், வியர்வை ஆகியவற்றின் வெற்றி என்றும் காங்கிரசார் கூறவும், பெருமைப்படவும், பூரிப்படையவும், உரிமை இருக்கிறது. உவகையின் காரணமாக அவர்கள் முழு உண்மையைத் தெரிந்து கொள்ளாதிருக்கும்போது, 60 ஆண்டுகளாகப் பாடுபட்டு அவர்கள் அடைந்த பலனை ஜனாப் ஜின்னா இறு ஆண்டுகளிலே அடைந்ததை எடுத்துக்காட்டி, ஒரு இனமக்கள், தங்கள் உரிமையைப் பெற உறுதி கொண்டுவிட்டால், வெற்றியைத் தடுக்க யாராலும் முடியாது என்ற உண்மையை எடுத்துக்காட்டி, இன்று வெற்றி பெறாதிருக்கும் திராவிடத் தனி அரசுக் கோரிக்கையும், ஆறுபது ஆண்டுப் பயிராகாது, இறு ஆண்டுப் பயிராகவே கூட இகச் செய்ய முடியும் என்ற நல்ல நம்பிக்கையைக் கொள்ளும் நாளாக, இதே ஆகஸ்டு பதினைந்தாம் நாளை நாம் செய்து கொள்ள முடியும்.

நாட்டு மக்கள், ஆனைவராலும் ஒப்புக் கொள்ளப்படுவதும், மக்களின் பிறப்புரிமையுமாகிய, சுயராஜ்யத்துக்காக, தாங்கள் சரி என்று கொண்ட திட்டங்களின்படி நடந்து அதனால் ஏற்பட்ட கஷ்ட நஷ்டங்களை, சிறைவாசத்தை, தீவாந்திர சிட்சையை, தூக்குமேடையைக் கூட மனமுவந்து ஏற்றுக் கொண்ட தியாகிகளுக்கு, வீரத்தை, தியாகத்தை, கொண்ட கொள்கைக்காக நஷ்டம் ஏற்கவேண்டும் என்ற கோட்பாட்டை, மதிக்கும் திராவிடர் கழகத்தாராகிய நாம், வீர வணக்கம் செலுத்துவேண்டும்.

சுயராஜ்யப் போராட்டம் என்ற உடனே, சூதுமதியினரான சிலர் அந்தச் சூழ்நிலையைத் தமக்குச் சாதகமாக்கிக் கொண்டு சுயநல வேட்டையாடியதும், முரண்பட்ட கொள்கைகள், திடீர் மாறுதல்கள், பண மூட்டைகள், சுரண்டுபவர், ஆகியோர் மட்டுமேதான் நமது கண்களுக்குத் தெரியவேண்டும் என்பதில்லை. நாட்டு விடுதலைக்காக, சிறையிலே வாடியவர்கள், தீவுகளுக்குத் துரத்தப்பட்டவர்கள், குடும்ப சுகத்தை இழந்தவர்கள், தடியடியால் இறந்த குமரன், தூக்கு மேடை ஏறிய பகத்சிங், சொத்தைப் பறிகொடுத்த சிதம்பரம் பிள்ளை, ஆகிய வீரத்தியாகிகள் தோன்றுவர் - தோன்றுவதால் - அவர்களுக்கு வீரவணக்கம் செலுத்த வேண்டுவதே முறை. ஆகஸ்டு 15ந் தேதி, ஆப்படிப்பட்ட எண்ணற்ற வீரர்களின் கனவுகள் நனவான் நாள். அவர்களில் அனேகர், திராவிடத் தனி அரசு என்ற தத்துவம் அறியாதவர்கள். அவர்கள மட்டுமல்ல, நாமே கூடச் சில பல ஆண்டுகளுக்கு முன்புவரை, திராவிட நாடு தனி நாடு என்ற தத்துவத்தைக் கொண்டில்லை. இன்று நமக்கு உயிர்க கொள்கை அது. அந்த வீரர்களின் நாட்களிலே, இன்றுள்ள சூழ்நிலை இருந்ததில்லை - எனவே அவர்கள் - தமது நாட்களில், அடிமைப்பட்டுக் கிடக்கும் நாட்டிலே உணர்சசியுள்ள யாருக்கும் ஏழவேண்டிய தேசபக்தி உணர்ச்சி கொண்டு, பணியாற்றி, பாடுபட்டு, கஷ்ட நஷ்டம் ஏற்றார்கள் என்றால், அவர்கள் இப்போது நாம் கேட்கும் திராவிட நாடு கொள்கைக்காக, அந்தக் கொள்கை பிறக்காதபோது அதற்குப் பாடுபடவில்லை என்ற காரணம்

காட்டி அவர்களை, மதிக்க மறுப்பது தமிழ் மரபுக்கே கேடு இகும். அவர்கள் சிந்திய இரத்தமும், கண்ணீரும், நமது வீர வணக்கத்துக்கு உரியன. அவர்கள் நமக்கு வழிகாட்டிகள். அவர்கள், இரத்தமும் கண்ணீரும் சிந்தினர் நாட்டு விடுதலைக்கு, அவர்களை ஆகஸ்டு 15ந் தேதி நாம் வணங்குவதுடன் நாம் கோரும் இலட்சியமாகிய திராவிட நாடு திராவிடருக்கு என்பதற்காக, அவர்களைப்போல, நாம், வீரத்தியாகத்துக்குத் தயாராக வேண்டும், என்ற உறுதியைப் பெற வேண்டும். அந்த உறுதிபெற, வீரர்களை வணங்குவது முறை, சரி, அவசியம், நீங்காக் கடமையாகும்.

எனவே, ஆகஸ்டு 15ந் தேதியின் முக்யத்துவத்தை உணர்ரவும், அந்நாள், நமது கழகம் என்னவிதமான போக்கு கொள்ளவேண்டும் என்பதைக் கவனிக்கவும், அதற்குப் பிறகு, நமது வேலை முறை ஏப்படி இருக்கவேண்டும் என்பதற்காகவும், நமது கழகத்தின் நிர்வாகக் கமிட்டியோ, முக்யஸ்தர்களோ, கூடி யோசித்திருக்க வேண்டும்.

உலக முழுவதும் கூர்ந்து கவனிக்கும், ஒரு மகத்தான சம்பவத்தை, நமது கொள்கையை மட்டுமே அளவு கோலாகக் கொண்டு ஆளந்து பார்ப்பதோ, உதாசீனம் செய்வதோ சரியாகாது.

அம்முறையில் ஏதும் செய்யப்படவில்லை.

ஆனால் தலைவர், தமது அறிக்கை மூலம், நாட்டுக்கு ஏற்பட்டுள்ள புதிய நிலைமையை விளக்க, 9ந் தேதியிலிருந்து 12ந் தேதி வரையில், பிரசாரம் செய்ய வேண்டுமென்று கூறினார்.

நமது கழகத் திட்டத்தை விளக்கியும், பிரிவினையின் அவசியத்தை வலியுறுத்தியும், அந்த இன்றியமையாத திட்டத்தைக் கவனியாமலே, எதிர்கால அரசு ஆமைக்கப்படுகிறது என்பதை விளக்கியும், நாடெங்கும், ஜ÷லை முதல் தேதிதான் கூட்டங்கள் நடத்தி இருக்கிறோம்.

ஆங்ஙனமிருக்க, சுதந்திர தினம் கொண்டாடப்படுகிற நேரமாகப் பார்த்து, மீண்டும், அது விஷயத்தை விளக்கப் பிரச்சாரக் கூட்டங்களின் பலனாக, ஆகஸ்டு 15ந் தேதிய கூட்டம் நடத்தத் திட்டமிடும் காங்கிரஸ் திராவிடர்களின், மனதுக்கு, ஆனாவசியமான ஏரிச்சலை உண்டாக்கி, அவர்களின் விரோதத்தைக் காரணமின்றிச் சம்பாதித்துக் கொள்தன்றி, வேறென்ன உருவான விளைவு காண முடியும்? காங்கிரஸ் திராவிடரகள் ஆனைவரும், எந்த நாளைத் தாங்கள் பட்டபாடுகளுக்கெல்லாம் பலன் கிடைத்த நாள் என்று கருதிக் கொண்டாடுகிறார்களோ, ஆதே சமயமாகப் பார்த்து, அவர்களின் மனதைப் புண்ணாக்கி விட்டு, பிறகு, காங்கிரஸ் திராவிடர்களை நாம் வருந்தி வருந்தி ஆழைத்தால்தான் அவர்கள் வரச்சம்மதிப்பாரா? நிரந்தரமான விரோத மனப்பான்மையை வளர்க்கும் காரியமாக அல்லவா இது இருக்கிறது? பதினைந்தாம் தேதிக்குப் பிறகோ அல்லது, ஏப்போதும் போல, நாம் நடத்தும் இயக்கப் பிரச்சாரத்தின் மூலமாகவோ, நாம், நமது கொள்கையையும் திட்டத்தையும் வலியுறுத்த முடியாதா - கூடாதா - நாள் இல்லையா? ஏன், அவர்கள் மகிழும் நேரமாகப் பாரத்து, நாம், எந்தக் காரிய்ததை நடத்த வேண்டும்? அவர்களை நமது இயக்கக் கருத்துக்களை உணர்ரச் செய்யவும், ஆவைகளை ஆதரிக்கும்படி ஆழைக்கவும், இதுமுறை அல்ல; நிச்சயமாக இதுவல்ல முறை.

கடைசி வரை, நாமும், காங்கிரஸ் திராவிடர்களம், வேறு வேறு முகாம்களில் இருந்து கொண்டிருக்கச் செய்வதற்குத்தான் இது பயன்படுமே தவிர, இலட்சிய சித்திக்கு வழியல்ல.

கடந்த சிலகாலமாக, நமது கூட்ட நிகழ்ச்சிகள் பற்றிப் பத்திரிகைகளில் குறிப்பிடும்போது, காங்கிரஸ் திராவிடர்களும் வந்திருந்தனர் என்று மகிழ்ந்து ஏழுதுகிறோம். அந்த நிலைமை நல்லது - வளர வேண்டும். ஆனால், இப்போது கழகம் கொள்ளும் றை, குறைந்தது ்ர் இரண்டாண்டுக் காலத்துக்குக் காங்கிரசிலுள்ள

திராவிடர்களை, நம்மை விரோதிகளாகக் கருத வைக்கவும், அதன் பலனாக, நாம் கூறுவதை ஆலட்சியப்படுத்தவும், எதிர்க்கவும் செய்ய வைக்குமே தவிர, நாம் கோருவதும், அவசியமாகவும் ஆவசரமாகவும் தேவைப்படுவதுமான ஒக்ய முன்னணி உண்டாக்க உதவாது.

நாமே உணருகிறோம், நாடும் உணருகிறது, இன்று, காங்கிரசிலே உள்ள திராவிடர்கள், நாம் கூறும் பல கொள்கைகளை ஆதரிக்கும் நிலையை அடைந்து வருகிறார்கள் என்பதை.

காங்கிரசிலே, பார்ப்பன இதிக்கம் கூடாது என்று பேசுபவர்களும், வடநாட்டு இதிக்க் இகாது என்று பேசுபவர்களும், அரசியல் வேலை முடிந்துவிட்டதால், இனி சமூக, பொருளாதார இயல்களைச் செம்மைப்படுத்த வேண்டுமென்று சொல்பவர்களும், சுயமரியாதை உணர்ச்சி இருக்கத்தான் வேண்டும் என்று வாதிடுபவர்களும், வளரும் நேரம் இது. பெரியார், பிராமணர்களை வாயளவில் எதிர்க்கிறார், ஆனால், ஃமந்தூர் இராமசாமி ரெட்டியார், பார்ப்னரை மட்டந் தட்டியபடி இருக்கிறார் - அவர்களைக் கருவேப்பிலை யாக்குகிறார் - ஆவரே பிராமணருக்கு உண்மையான விரோதி என்று “பாரததேவி” கூறும் அளவுக்கு, நிலைமை இருக்கிறது.

இவ்வளவு சாதகமான நிலைமையையும், நாம் ஆகஸ்டு 15; ம்தி பற்றிக் கொண்டுள்ள போக்கு, கெடுத்துவிடும் - வீண் பழியும் அவசியமற்ற விரோதமும் வளரும் - அதன் பலனாக, நமது காரியம் கைகூடுவதற்கு நாமாகவே, கேடுகளை வருவித்துக் கொள்பவராகிறோம். ஜøலை முதல் தேதி நமது கழகம், நடத்திய, பிரிவினை விளக்கக் கூட்டத்துக்கு, வரும்படியும், கலந்து கொள்ளும்படியும், காங்கிரஸ் திராவிடரகளை (தலைவரின் அறிக்கை) அன்புடன் ஆழைத்தும் இருக்கிறோம். ஆனால், அவர்களும் நாமும், எந்நாட்டு மக்கள் யாவரும் சேர்ந்து மகிழ வேண்டிய ஒரு மகத்தான நாளில், கலந்து

கொள்ளக்கூடாது - அது நமக்குத் துக்கநாள் என்று நாம் கூறுகிறோம். சரியா? முறையா? ஒன்றுபடச் செய்யும் திட்டமா? காங்கிரஸ் ஏது செய்தாலும் எதிர்ப்பதே இவர்கள் வேலை என்று நம்மைப்பற்றிக் கூறப்படும் குற்றத்தை நாமே வலியச் சென்று ஏற்றுக்கொள்ளும் செயல் அல்லவா இது?

கும்பலோடு கலந்துவிட்டால், நாமும் அவர்களோடு சேர்ந்து விழா நடத்தினால், பிறகு, நமக்கென்று உள்ள கட்சி, நமக்கென்று உள்ள கொடி, நமக்கென்று உள்ள திட்டம் என்ன இகும்? என்று கேட்கப்படுகிறது. எதில் கலந்தாலும், தனியாக விளங்கக் கூடியதும், ஏப்படியும் நிலைக்கக் கூடியதுமான ஜீவசக்தி நம் கொள்கைக்கு உண்டு என்பதிலே நமக்கு இழ்ந்த நம்பிக்கை இருக்குமானால், நாம், விழாவிலே கலந்து கொள்வதாலேயே, நமது கொள்கையை இழந்து விடமாட்டோம் என்பதிலே நம்பிக்கை இருக்கும்.

அந்த விழா ஒரு குறிப்பிட்ட காரியத்துக்காக உள்ளது. வெள்ளையர் ஆட்சி விலகுவதை உலகுக்கு அறிவிக்கும் விழா, ஆதிலே கலந்து கொள்வதால், நாம் நமது கொள்கையை விட்டு விடுவதாக முடியாது. தொட்டால் துவண்டு விடக்கூடிய, மோதினால் நொறுங்கிவிடக் கூடிய, வலிவற்ற கொளகை அல்ல நாம் கொண்டிருப்பது.

சுதந்திர விழாவிலே கலந்து கொள்பவர்களுக்கெல்லாம், தனிப்பட்ட பிரச்சனைகள், குறைபாடுகள் இலட்சியங்களை ஏல்லாம் அன்றையத்தினம், விட்டு விடுகிறார்கள் என்றா பொருள்.

உவகையுடன் அந்நாளைக் கொண்டாடும், பலரும், பிறகு அவர்களின் குறைகளைக் களைந்து கொள்ளக் கிளர்ச்சிகள் நடத்தவும், போரிடவும், பின்வாங்கப் போவதில்லை. ஏன் நாமும் அதுபோலச் செய்யலாகாது.

நம்மை உதாசீனம் செய்து வந்த, காட்டிக் கொடுத்த, ஆரியருடன் கூடிக்கொண்ட, மனுதர்ம ஆட்சி நடத்திய வெள்ளையர், கொண்டாடிய யுத்த வெள்ளிவிழாவிலே

கூடக் கலந்து கொண்டோம், ஏங்களை நீ கவனிக்காவிட்டாலும் நாங்கள் யுத்தத்துக்கு உனக்கு உதவுகிறோம் என்று கூறி ஆதரவு தந்தோம், எந்தப் போக்கு கொடுத்த பலன் என்ன? ஆகஸ்டு விழாவிலே கலந்து கொண்டால் விளையும் தீமை என்ன? வெள்ளை ஆட்சிக்குப் பதிலாக வேறோர் ஆட்சி வருகிறது, அது வேதனையல்லவா? என்று கேடகப்படுகிறது. இம்! இம்! வேதனைதான்! வேதனை மட்டுமல்ல, வெட்கமும்கூட! ஆனால் அந்த ஆட்சியை வரவிடாது தடுக்க நாம் செய்ய முடிந்தது என்ன? இனி என்றுமே, அந்த ஆட்சியை ஏதும் செய்ய முடியாது என்றா நாம் இன்று எண்ண வேண்டும்? நமது கொள்கையின் மூலம் பலம் கிடைத்ததால், எந்த ஆட்சியையும், ஏதேச்சாதிகாரம் செய்யும் எந்த ஆட்சியும் செல்லும்வழி, போய்த்தானே தீரும். ஆகஸ்டு 15, இதைக்கூட நமக்கு அறிவிக்கும் நாள் ஆயிற்றே! ஏன் அன்று நாம் கலந்து கொள்ளக் கூடாது?

நிர்வாகத் தலைவரின் அறிக்கை, மறுநாளே வெளிவந்தது. ஆதிலே ஆகஸ்டு 15 துக்க நாள் என்று குறிக்கப்பட்டது. அதற்குப் பிறகு, ஆகஸ்டு 15ல் கலந்து கொள்ளக் கூடாது என்று, விடுதலை அறிவித்தது.

எந்தப் போக்கு விளக்கம் தருவதாகவோ, நமது எதிர் காலத்தைச் செம்மைப்படுத்தும் முறையாகவோ தோன்றவில்லை.

நாம், திராவிட நாடு திராவிடருக்கு என்ற கோரிக்கையை, மக்களுக்கு எடுத்துக் கூறும், அளவிலேயே தான் இன்றும் இருக்கிறோம்.

நமக்கு, ஆதரவு பெருகி வருகிறது. ஆனால், போதுமான அளவு என்று கூறமுடியாது.

ஆறுபது வருஷ காங்கிரஸ் பணியை இறு ஆண்டுக் காலத்திலே ஜனாப் ஜின்னா, சிறியதாக்கி விட்டதற்குக் காரணம், எந்த இறு ஆண்டுகளிலே, லீக் வலுத்துவிட்டது, லீகையே முஸ்லீம்களிலே பெருவாரியானவர்கள் ஆதரிக்கிறார்கள் என்பதை விளக்க, உலகுக்கு

மெய்ப்பிக்க, திட்டத்தை விளக்கிச் செய்த பிரசாரத்தை மட்டுமல்ல, காரணமாகக் காட்டியது, முனிசிபல் தேர்தலிலிருந்து, டில்லி சட்டசபை தேர்தல் வரையிலே, லீகுக்கே வெற்றி கிடைத்தது என்பதை இதாரமாகக் காட்டியதால்தான். நாமோ தேர்தலுக்கே நிற்கவில்லை நாட்டுப் பிரிவினைக்காக பிரிட்டிஷார் எடுத்துக் கொண்ட எந்தக் காரியத்திலும் இடம் பெறவில்லை. இடம் பெற்ற காங்கிரஸ் திராவிடருடன் தொடர்பு கொள்ளவும் முயற்சிக்கவில்லை.

ஒரு திட்டத்துக்கு, ஒரு இன மக்களில் பெருவாரியானர்கள் ஆதரவு இருக்கிறது என்பதை, ஜனநாயகமுறைப்படி, ஜனாப் ஜின்னா காட்டியே, வெற்றி பெற்றார்.

அதுபோலவே, காங்கிரசும், சுயராஜ்ய கோரிக்கைக்குச் சகலரும் ஆதரவளிக்கிறார்கள் என்பதை ஜனநாயக முறையான தேர்தல் முறைப்படியும், விடுதலைப்போர் நடத்தியும் காட்டிவிட்டது.

நாம், ஆரம்பக் கட்டத்தில், திட்டத்தை விளக்குவதில் அதற்கு ஆதரவு திரட்டுவதில் இருக்கிறோம். கிளர்ச்சி இல்லை, போர் இல்லை. இன்னமும், நமது உடலிலே, இதற்காக, தியாகத் தழும்பு ஏற்படவில்லை. குமரன் இல்லை, சிதம்பரம் பிள்ளை இல்லை. இந்தி எதிர்ப்புப் போரிலே உயிரைத் தியாகம் செய்த, தாளமுத்து நடராஜன் போன்றவர்களைத் தரக்கூடிய திராவிடச் சமுதாயத்தில், இவர்கள் போன்றார்கள் ஆகவும் தயாராக உள்ள வீரகளைப் படைதிரட்டும் பணியிலேயே இருக்கிறோம். எனவே, துவக்காத போர் - இகவே வெற்றியா தோல்வியா என்ற பிரச்சனைக்கே இடமில்லை. எந்நிலையில், துக்கநாள் அவசியமா?

நமது கொள்கை நியாயமனாது. ஆனால் நியாயத்தை மட்டுமே கவனித்து, எந்த நாட்டிலும், ஆட்சியாளர்கள், நடப்பதில்லை. நியாயத்தை நிலை நாட்ட பலம்

துணையாக இருக்கிறது என்றால் மட்டுமே காரியம் பலிக்கும்.

ஒரு நாட்டை மற்றொரு நாடு ஆளுவது ஆக்ரமம் - எந்த நாடும் சுயாட்சி கேடபது நியாயம். எந்த நியாய்ததை எடுத்துக்கூறின உடனே காங்கிரசை மதித்து சுயராஜ்யம் கொடுக்க, எந்தக் கிரிப்சும், மவுண்ட்பேடனும் முன்வரவில்லை. ஏளனம் பேசும் சர்ச்சில்களாகவேதான் சகல பிரிட்டிஷாரும் இருந்தனர். நியாயத்தின் பக்கபலமாக, தியாகம், கிளர்ச்சி பணபலம், பத்திரிகை பலம், இவ்வளவுக்கும் மேலாக, உலகச் சூழ்நிலையில் மாறுதல், பிரிட்டிஷ் பலச்சரிவு, என்பவைகள் ஏற்பட்டதால்தான், மந்திரிகள் பறந்து வந்தனர் - நியாயம் வழங்க.

இதே முறையிலேதான், நமது நியாயமான கோரிக்கையான திராவிடநாடு பிரிவினையும், தியாகப் பாதையிலே நடக்கும் தீரர்களின், இரத்தம் சிந்தப்பட்ட பிறகே வெற்றி பெற முடியுமே தவிர, கொள்கையை இதாரபூர்வத்தோடு விளக்கி விடுவதால் மட்டும் கிடைத்துவிடாது. விடுதலைப் பாதை, விவேக சிந்தாமணியால் மட்டுமே கிடைப்பதில்லை. மாங்குயில் கூவிடும் பூஞ்சோலை என்னை மாட்டநினைக்கும் சிறைச்சாலை என்று எண்ணற்ற வீரர்கள் கூறிடும் அளவு வீரத்தியாக உணர்ச்சி ஏற்பட்ட பிறகே கிடைக்கும். இவைகளைச் செய்து ஆலுத்து, மனம் நொந்து, வெந்து போன பிறகும் நாம் வஞ்சிக்கப்பட்டால், நமது எண்ணம் உடேறாவிட்டால், போர் பயனற்றுப்போய் விட்டால், துக்கம் கொண்டாடுவது முறையாக இருக்கும். துவக்க நிலையிலே துக்கம் கொண்டாடுவது அவசியமல்ல.

மேலும், அன்னிய ஆட்சியாராகிய வெள்ளை ஆட்சி நீங்கிய உடனே, வடநாட்டார்தான் முதலிலே பீடத்தில் அமருவார்கள் என்பது நாம் அறியாததுமல்ல, எதிர்பாராததுமல்ல. எனவே, இன்று ஆமையும் ஆட்சியைக்கண்டு நாம் திடுக்கடவோ திகைக்கவோ

காரணமில்லை. இப்படித்தான் நேரிடும் என்பது நாம் ஏற்கனவே அறிந்ததுதான்.

எதிர்பாராத தாக்குதல், இணையற்ற போருக்குப் பிறகும் தோல்வி, இவைகளின்போது மட்டுமே ஏற்படக்கூடியது துக்கம். நாம் எதிர்பார்த்த, ஆதைத் தடுக்கும் வலிவை நாம் பெறவில்லை என்பதையும் நாம் அறிந்திருக்கிற நிலையில் ஏற்பட்ட ஆட்சி முறைக்காக, துக்கிக்க வேண்டிய அவசியம் இல்லை.

நம்முடைய, வீர இளைஞர்கள்மீது, இதுநாள் வரையிலே, சுமத்தப்பட்ட பழிச்சொலல், நாம் பிரிட்டிஷாரின் அடிமைகள் என்பது.

அந்தப் பிரிட்டிஷாரின் ஆட்சி முடியும் போது, நாம் துக்கம் கொண்டாடுவது, எந்தப் பழிச் சொல்லை, நாமாகவே நம்மீது சுமத்தும்படி, அவர்களû வற்புறுத்தி ஆழைப்பதாகும்.

நமது வாழ்நாளில், நாம் பிரிட்டிஷ் ஏகாதிபத்ய ஆட்சியை ஏற்க விரும்பாதவர்கள்! அது ஒழிய வேண்டும் என்ற நோக்கமுடையவர்கள், காங்கிரசார் பழி சுமத்தியது போல நாம் பிரிட்டிஷாரின் அடிமைகளல்ல என்பதை விளக்க, நமக்கு இருக்கும் ஒருநாள், கடைசிநாள், ஆகஸ்டு 15, நாம், ஐந் அந்தச் சந்தர்ப்பத்தை இழந்து, ஆழியாத பழிச்சொல்லைத் தேடிக்கொள்ள வேண்டும்.

சுதந்திர தினவிழாக் கொண்டாடப்படும் எந்த நேரத்தில், எந்தத் துணைக்கண்டத்திலே, அதிருப்திகளோ, மனக்குறைகளோ, ஏமாற்றங்களோ, இல்லாமல் போகவில்லை.

கம்யூனிஸ்டு கட்சியின், முக்கயிமான உறுப்பினர்கள் சிறையிலே தள்ளப்பட்டுள்ளனர்.

பி.சி.மில போன்ற இடங்களிலும் வேறுபல இடங்களிலும் உள்ள தொழிலாளர்கள், தொல்லைப்பட்டுக் கொண்டும், ஆடக்குமுறைக்கு ஆளாகியும் உள்ளனர்.

ஆசிரியர்கள், ஆதிகாரிகள், ஆகிய வேறுபலரும், போதாச் சம்பளத் தொல்லையைத் தாங்கிக் கொண்டுள்ளனர்.

போஸ் கட்சியினர், தங்கள், கோரிக்கை நிறைவேறவில்லை என்று அதிருப்திபட்டுள்ளனர்.

மற்றும் பலருக்குப் பலவகை, ஏமாற்றங்கள், மனக்குறைகள் உள்ளன.

ஆனால் இவையாவும், சுதந்திரம் பெற்றவுடன் பிரச்சனையுடன் இணைக்கப்படவில்லை.

நிர்வாகக் கோளாறு, ஆட்சியாளர்களின் கொள்கை, திட்டம் ஆகிய பல்வேறு காரணங்களால் நேரிடும் அல்லல். இகையால், இவைகளைச் சாக்காகக் கொண்டு, ஆகஸ்டு 15ந் தேதியைத் துக்க நாளாகக் கருதும்படி, யாரும் எந்த ஏற்பாடும் செய்யவில்லை.

சுதந்திர தினாவிழாவிலே, போஸ் கட்சி கலந்து கொள்ளக்கூடாது என்று தெரிவிக்கப்பட்டது.

ஆனால் ஒருவாரத்திற்குள் ஆதிலே பிளவு ஏற்பட்டு, ஒரு பகுதியினர் கலந்து கொள்வது என்று முடிவு செய்தனர்.

கலந்து கொள்ளாத பகுதியும், எந்த நாளைத் துக்க நாளாகக் கொண்டாடும்படி, கட்சிக்கு அறிக்கைகளும், பாட்ஜ÷களும் ஆனுப்பிக் கொண்டில்ல.

போஸ் கட்சி, துக்க நாளாகவே, இதனை கொண்டாடுகிறது என்று ஒப்புக்கு ஒப்புக் கொள்வதனாலும் கூட அந்தக் கட்சி, இதுவரையில், சுதந்திரப் போராட்டத்துக்காக, காங்கிரசுடன், காங்கிரஸ் வகுத்த திட்டத்தின்படி, நடந்து கொண்டவர்கள் - காங்கிரசின் ஆகிம்சை கொள்கையையும் தாண்டி, வெளிநாடுகளில் சென்று, இயுதமெடுத்தும் போரிட்டவர்கள். எனவே அவர்களை ஆகஸ்டு 15-ல் கலந்து கொள்ளாவிட்டால்கூட, அதற்காக அவர்களை, பிரிட்டிஷ் ஏகாதிபத்ய தாசர்கள் என்று கண்டிக்கவோ, இழிவாகப் பேசவோ, காங்கிரஸ்கூட முன்வராது.

நமது நிலை ஆவ்விதமானதல்ல. எந்த மகத்தான வித்யாசத்தை மறக்கக்கூடாது.

மேலும், போஸ் கட்சி, எந்து மகாசபை போன்றவைகள், பெரிதும் தலைவர்களால் நிரம்பப் பெற்றவைகள், பொது மக்களின் தொடர்பு ஆதிகம் இல்லாதவைகள். எனவே, அந்தக் கட்சிகள், தவறு செய்தால்கூட, சமாளித்துக் கொள்ள முடியும். நாம் ஆவ்விதமல்ல - 200, 300 கிளைக்கழகங்களும், ஒம்பது ஆறுபதினாயிரம் உறுப்பினர்களும் கொண்ட இயக்கமாகி இருக்கிறோம் - பொது மக்களிடம் தொடர்பு, ஆறுந்துபடாமலிருக்க வேண்டுமென்பதற்காக, நாள் தவறாமல் பிரசாரம் நடத்தி வருகிறோம் - எனவே, நமது போக்கைக் கூர்ந்து கவனிக்கவும், அதன் பலனாக, நம்மைப் பற்றி மதிப்பிடவும், பொது மக்கள் தயாராக இருப்பர் மற்றக் கட்சிகளுக்கு எந்நிலை இல்லை. இதனையும் கவனிக்க வேண்டும்.

போஸ் கட்சியோ, வேறு சில கட்சிகளோ, ஆகஸ்டு 15ந் தேதியைத் துக்கநாளாகக் கொண்டாடுவது, நாம் ஆதே போக்குக் கொள்வதற்குக் காரணமாகவோ, இதாரமாகவோ, இகாது.
ஒரு தவறு, மற்றொரு தவறுக்குச் சமாதானமல்ல - தவறுகள் இரண்டு என்று ஏற்படுமே தவிர வேறில்லை.

எனவே, நாம் மட்டுமல்ல, வேறு சிலரும் கூட, ஆகஸ்டு 15ந் தேதியைத் துக்கநாளாகக் கொண்டாடுகின்றனர் என்று கூறுவது, நியாயமாகாது.

நாம், ஆகஸ்ட் 15-ந் தேதி, ஒதுங்கி இருப்பது, அல்லது, துக்க நாளாகக் கருதுவது என்ற போக்கு, எந்நாட்டிலேயும் துணைக்கண்டத்திலேயும் மட்டுமல்ல, உலகிலேயே, நம்மைப்பற்றித் தவறான கருத்து கொள்ள, நாமாகவே, இடமளிப்பதாக வந்து சேரும். சுதந்திர தின விழாவை ஆசல் காங்கிரஸ் விழாவாக மாறும்படி, நாமே செய்தவர்களாவோம் - அந்த விழாவுக்கு, பாத்யதை கொள்ளக் கூடியவர்கள் காங்கிரசாரே, என்று நாமே

அவர்களுக்குப் பட்டயம் தருவதாகவே முடியும் - அந்த நாளோ உண்மையில், எந்த துணைக்கண்டத்தினர் ஆனைவருக்கும், விடுதலை விரும்பிகள் ஆனைவருக்கும், மகிழ்ச்சி தரும் நாள்.

எந்தக் காலத்திலும், எந்த நாட்டிலும், விடுதலைப் போர் - இரண்டோர் சம்பவங்களுடனோ, இரண்டொரு வெற்றிகளுடனோ முடிந்து விடுவதில்லை - அது, நீண்டதோர் பயணம். விடுதலைப் போரில், பல கட்டங்கள் உண்டு - ஆகஸ்ட் 15ந் தேதி, ஆத்தகைய கட்டத்திலே ஒன்று - ஆரம்பக் கட்டம் - முதல் வெற்றி - முக்கியமான வெற்றி - ஆதைத் திருநாளகக் கொண்டாடி விடு;டு, மற்றவர்கள் பின்தங்கிவிட்டாலும், திராவிடர்கள், விடுதலைப் போரைத் தொடர்ந்து நடத்தி, திராவிடத் தனி அரசு பெறுவதற்குப் பாடுபட முடியும்.

திராவிடர் கழகத்தாராகிய நாம் அடிக்கடி காங்கிரசிலுள்ள திராவிடர்களை, ஆழைக்கிறோம், ஏம்முடன் சேர வாரீர், என்று. முத்தரங்கங்களெல்லாம் கூட எமது முகாமுக்கு வருவர், பாரீர் என்று கூறுகிறோம். ஆவ்விதம் காங்கிரசிலுள்ள திராவிடத் தோழர்கள் நமது, கொள்கையை உணர்ந்து வரவேண்டுமென்றால், அவர்கள் மனதிலே, நம்மைப்பற்றி, ஏற்கனவே உள்ள தப்பபிப்ராயங்களைத் துடைக்க வேண்டியது முறையாயிருக்க, ஆகஸ்டு 15ந் தேதியைத் துக்கநாள் என்று அறிவிப்பதன் மூலம், நாமாகவே காங்கிரஸ் திராவிடர் மனதிலே, நம்மைப் பற்றிவேறோர், தவறான எண்ணம் கொள்ளும்படிச் செய்கிறோம். எந்தப் போக்கு, திராவிடர் கழகத்துக்கும் கொள்கைக்கும், ஆதரவு திரட்டும் காரியமாகாது - காங்கிரஸ் திராவிடர்களின் ஆதரவைப் பெற முடியும் என்ற நம்பிக்கையையை, நமது போக்கினால் நாமே நொறுக்குபவர்கள் இவோம்.

நமது கட்சியின் மீது வீசப்படும் பழிகளைத் துடைக்கும் காரியத்திலேயேவா, நாம் காலம் முழுவதும் செலிவிட வேண்டும்? பலவிதமான பழிச்சொற்களையும் துடைத்து, சேலம் மாகாண மாநாட்டுக்குப் பிறகு, புத்தொளி

பெற்றோம் அதனாலேதான், நாம் நமது திட்டங்களை விளக்குவும் முடிந்தது. இப்போதோ, புதியதோர் பழியை, தந்திரக்காரர்கள் நமது கட்சியின மீது சுமத்தவும் அதற்கு நாம் பதில் கூறவுமான, பழைய, வழக்கமான, வேலை நமக்கு வந்து சேருகிறது. ஆதேபோது, பட்டம் விடும் தீர்மானத்தை மதிக்க மறுத்த தோழர் ஏஸ். முத்தைய்ய முதலியாரும், கட்சித் திட்டத்தை மீறி தேர்தலுக்கு நின்ற டாக்டர் கிருஷ்ணசாமியும் வந்து சேரகின்றனர். எந்த, பழி துடைத்துக் கொள்ளும் காரியத்திலே நாம் இருந்து கொண்டிருந்தால், ஏப்போதுதான், நமது திட்டத்திற்கான ஆதரவை உருவாக்கும் காரியம் செய்வது? ஏன், நாமாக வீணுக்கு, ஒரு வம்பை வாங்குவது? ஆதிலும், பல ஆண்டுகளாக நம்மைப் பற்றித் தவறாகக் கருதிக் கொண்டிருந்த காங்கிரசார் திராவிடர்களிலே ஒரு பகுதியினர், நம்மை அறியவும், மதிக்கவும் ஆரம்பத்திருக்கும் நேரமாகப் பார்த்தா எந்தக் காரியம் செய்வது?

15ந் தேதி, பிரிட்டிஷ் ஆட்சி ஒழிப்பதற்காக நாமும் மகிழ்வோம் - கொண்டாடுவோம் - அது ஒழிந்ததன் உண்மைக் காரணத்தை விளக்குவோம் - அது ஒழிந்ததை யார் பயன்படுத்திக் கொள்ளுகிறார்கள் என்பதையும் விளக்குவோம் - நமது எதிர்காலக் கிளர்ச்சி, ஏதன் பொருட்டு இருக்கும் என்பதையும் விளக்குவோம் - நமது இலட்சியத்துக்காக, நாமும், வெற்றி கிடைக்கும்வரை போராட உறுதி கொள்வோம் என்று காங்கிரசாருடன் கலந்து கொண்டாட்டம் நடத்தியோ தனியாகக் கூட்டம் நடத்தியோ, நிலைமையைத் தெளிவுப்படுத்துவதே முறை.

ஆகஸ்டு 15ந் தேதி இரண்டு நூற்றாண்டுகளாக எந்த துணைக்கண்டத்தின் மீது இருந்துவந்த பழிச்சொல்லை, இழிவை, நீக்கும் நாள். அது திராவிடருக்கும் திருநாள்தான் - துக்கநாள் இகாது.
கட்சியின் முக்யஸ்தர்கள் கலந்து பேசியோ, நிர்வாகக் கமிட்டி கூடியோ, இருந்தால், எந்த நிலை ஏற்பட்டிராது.

தலைவரின் அறிக்கை, நிர்வாகத் தலைவரின் அறிக்கை, விடுதலையில் அறிக்கை, என்ற முறையிலே திடீர் திடீரென வெளிவந்தன. எனவேதான், நான் எனது கருத்தை விளக்கச் சந்தர்ப்பம் ஏற்படவில்லை - ஆதை வெளியிட, ப்திரிகையில் ஏழுதுவது அவசியமாகிவிட்டது.

ஆகஸ்டு 15ந் தேதி பற்றி, ஏற்கனவே, பல அறிக்கைகள் வெளி வந்துவிட்டனவே - இப்போது வேறுவிதமாகக் கருத்தை வெளியிட்டால் என்ன பயன்? ஏப்படி ஏற்கனவே கொண்ட போக்கை மாற்றிக் கொள்வது என்று கேட்கத் தோன்றும். நான் வெளியிடும் விளக்கம், சற்றுத் தாமதித்து வெளிவந்தது என்ஙற போதிலும், இவ்விதமான கருத்து, மத்திய திராவிடர் கழகம், கழகப் பத்திரிகை நிலையம், ஏல்லா எர்களிலுமுள்ள திராவிடர் கழகங்கள் ஆகிய இடங்கட்கு, பொள்ளாச்சி திராவிடர் கழகத்தாரால் ஏற்கனவே அறிவிக்கப்பட்டது.

பொள்ளாச்சியில், திராவிடர் கழகத்தாரை, சுதந்திர விழாவில் கலந்து கொள்ளும்படி, ஆவ்வூர் காங்கிரசார் ஆழைத்தனர். அதுபோன்றே வேறு பல எர்களிலும் ஆழைப்புகள் கிடைத்தன. ஆழைப்புப் பெற்ற பொள்ளாச்சித் திராவிடர் கழகம், ஆகஸ்ட் பதினைந்தை நாம் துக்கநாள் என்று கொள்ளக்கூடாது, உண்மையிலேயே அந்நாள் நமக்கும் மகிழ்ச்சி நாள்தான், என்று தீர்மானம் நிறைவேற்றி, ஏல்லாத்திராவிடர் கழகங்களும் ஆனுப்பி வைத்தது.

அந்த அறிக்கை, திராவிடர் கழகத்திலேயே ஒரு பகுதியினர், ஆகஸ்ட் 15ந் தேதி துக்கநாள் என்று கருதவில்லை என்பதையும், சுதந்திர தின விழாவிலே திராவிடர் கழகம் கலந்து கொள்வது முறையாகும் என்பதையும் கருத்தாகக் கொண்டுள்ளனர் என்பதைக் காட்டிற்று.

அந்த அறிக்கைக்கு விடுதலை இபிசிலிருந்து பதில் தரப்பட்டதாகத் தெரிகிறது.

முறைப்படி நடப்பதானால், அந்த அறிக்கையைப் பரிசீலனை செய்ய, மத்யக்கமிட்டி கூடியிருக்க வேண்டும்.

பொள்ளாச்சித் திராவிடர் கழகத்தார் ஏற்கனவே வெளியிட்டிருப்பதால், இப்போது நான் வெளியிடும் எந்தக் கருத்துக்கள், திடீரென, கழகத்துக்கு வந்துசேருகின்றன என்றும் கூற முடியாது.

இவ்வளவுதூரம், ஆகஸ்ட் 15ந் தேதியைத் துக்கநாள் என்று அறிக்கைகள் மூலம் வெளியிட்டுவிட்டு, இனி ஏப்படி அதனை மாற்றுவது என்று கேட்பதனால், இப்போதும் காலம் கடந்துவிடவில்ல, இனியும் மாற்றமுடியும் என்பதை விளக்க விரும்புகிறேன்.

சில ஆண்டுகளுக்கு முன்பு, கம்பராமாயணத்தைக் கொடுத்துவதற்கெனப் பெரியார் அறிக்கை வெளியிட்டு, விசேஷ மாநாடு சேலத்தில் கூட்டப்பட்டது; நான் தலைமை வகித்தேன். காலை நிகழ்ச்சியிலே கூட, கம்பராமாயணம் கொளுத்தப்பட வேண்டியதன் அவசியத்தை வலியுறுத்தியே சொற்பொழிவுகள் நடைபெற்றன. பிற்பகலிலே,சர். சண்முகம் தந்தி கொடுத்தார், கொளுத்த வேண்டாம் என்று. அதன்படியே, கொளுத்துவது ஆதே இடத்தில், ஆதே நேரத்தில் கைவிடப்பட்டது. அது சரியா, தவறா என்பது அல்ல, இப்போது பிரச்சனை. அந்தக் கடைசி நேரத்திலேயும் செய்ய வேண்டுமென்று கருதப்பட்ட காரியம், வேறு ஒருவரின் யோசனையின்படி கைவிடப்பட்டது.

இகவே, ஆகஸ்ட் 15ந் தேதி பற்றிதிராவிடர் கழகம், தன் கருத்தை எந்த நேரத்திலும் மாற்றிக் கொள்ளமுடியும் - மாற்றிக் கொள்ளலாம் - முறையுங் கூடத்தான் - அதற்குமுன் மாதிரியாகச் சேலம் சம்பவம் இருக்கிறது.

ஆனால் ஒரே ஒரு வித்யாசம். சேலத்திலே கம்பராமாயணத்தைக்கடைசி நேரத்தில் ஒரே தந்தியின் மூலம் கொளுத்த வேண்டாமென்று கூறியவர், ஒரு, சர். நான் ஒரு சாமான்யன். அவர் கட்சிக்காக, ◌ய்வு நேரத்திலும் உழைத்ததில்லை - நான் உழைத்து

ஆலுத்தவன், அவர் இன்று இந்திய சர்க்காரிலே நிதி மந்திரி! நானோ, இதே அறிக்கையின் விளைவாகவே கூட உங்களில் பலராலே கூட, சந்தேகத்துக்கும் நிந்தனைக்கும் ஆளாகக் கூடிய நிலையில் உள்ளவன், ஆனால் நான் கூறுவது, உள்ளத்தில் இருந்து வருபவை.

எனவே இப்போதும், ஆகஸ்ட் 15ந் தேதி பற்றி, திராவிடர் கழகத்தின் போக்கை மாற்றலாம்.

இவ்வளவு கூறும், நான், இதற்கு முன்பு, கழகம் எடுத்தக் கொண்ட, எந்த முக்கியமான திட்டத்துக்கும் வேலை முறைக்கும், கட்டுப்படாமல் இருந்து வந்தவனல்ல. கழகம் நெருக்கடியான கட்டத்திலே இருந்தபோதெல்லாம், விட்டுவிட்டு ஃடினவனல்ல; பட்டம் பதவிகளை வைத்துக் கொண்டு, விட்டுவிடமுடியாது என்று கூறினவனல்ல, தேர்தலுக்கு நிற்கக்கூடாது என்று கட்சி தீர்மானித்தபிறகு, மீறித் தேர்தலுக்கு நின்றவனல்ல; சிறைபுக வேண்டிய திட்டம் வந்தபோது, ஒளிந்து கொண்டவனுமல்ல; அடிக்கடி, கட்சி பலவற்றைத் தேடிக் கொண்டவனுமல்ல; கட்சிக்குள்ளாகவே சேலம் மாகாண மாநாட்டின்போது, செல்வான்களின் மயக்கமொழியில் வீழ்ந்தவனல்ல - இதுவரை வழுக்கி விழுந்ததில்லை - திட்டங்களைக் கண்டித்தோ ஆகற்ற வேண்டுமென்று கூறினதோ - கட்டுக்கு ஆடங்க மறுத்ததோ இல்லை - ஆனால் எந்த ஆகஸ்ட் 15;ந் தேதி பற்றிய பிரச்சனை, உண்மையாகவே, என்போல் எண்ணற்றவர்கட்கு மனவேதனை தரக்கூடிய விதத்திலே, தவறான முறையிலே, திருப்பப்பட்டிருக்கிறது. இகவேதான், ஆகஸ்டு 15ந் தேதியை துக்க நாள் என்று அறிவித்து, அதற்காக அறிக்கைள் வெளியிட்டு வருவது, தவறு என்று தெரிவிக்கலானேன். ஆகஸ்டு 15ந் தேதி நாமும் கலந்து கொண்டாடவேண்டிய, மகிழ்ச்சி தரும்நாள், உலகத்தின் முன்பு நம் மதிப்பை உயர்த்தும் நாள், என்று, நாள் மனப்பூர்வமாக நம்புகிறேன். நம்புவதுடன், ஆகஸ்ட் 15ந் தேதி விழா கொண்டாடுவது, எந்த வகையிலும் தவறோ, துரோகமா அல்ல என்று எண்ணுகிறேன்.

இது கட்சிக் கட்டுப்பாட்டையும் தலைவரின் அறிக்கையையும் மீறுவதாகும் என்று கருதப்பட்டு, என்மீது ஒழுங்கு நடவடிக்கை ஏடுக்க, முன் வருவதானாலும், என் வாழ்நாளில், பிரிட்டிஷ் ஆட்சி கூடாது என்ற கொள்கையைக் கொண்டவனே நான் என்பதை மக்களுக்குக் கூற எனக்கிருக்கும் ஒரே நாளான, கடைசி நாளான, ஆகஸ்ட் 15ந் தேதியின் முக்கியத்துவத்துக்காக வேண்டி கட்சியின் கடுமையான நடவடிக்கைக்கும் சம்மதிக்க வேண்டியவனாகிறேன்.

தலைவரும், கட்சியும், என்போக்கு தவறு என்று கருதி, என்னைக் கட்சியை விட்டு நீக்கினாலும் நான், சமூக சீர்திருத்தம், பொருளாதார சமத்துவம், திராவிடத் தனி அரசு, எனும் அடிப்படைக் கொள்கைகளைக் கட்சிக்கு வெளியே இருந்தாகிலும் செய்து வருவேன் என்பதைக் கூறி, எந்த அறிக்கையை முடிக்கிறேன்.

வணக்கம்

சி.என். அண்ணாதுரை

(திராவிடநாடு - 10-8-47)